# தொல்காப்பியம்

உரைவளம்

# பொருளதிகாரம்

## அகத்திணையியல்




பதிப்பாசிரியர்

ஆ. சிவலிங்கனார்

# தொல்காப்பியம்-பொருளதிகாரம்
# (உரைவளம்)
# அகத்திணையியல்


பதிப்பாசிரியர்
ஆ. சிவலிங்கனார்






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி.டி.டி.ஐ., தரமணி, சென்னை-600 113

தொல்காப்பிய உரைவள
வெளியீட்டுத்திட்டம் - வெளியீடு 21

**Bibiliographical Data**

| | | |
|---|---|---|
| Title of the book | : | Tolkappiyam, Akathinaiyiyal |
| Editor | : | A. SIVALINGANAR<br>International Institute of Tamil Studies<br>T.T.T.I., Tharamani, Madras-600 113. |
| Publisher & Copy Right | : | International Institute of Tamil Studies<br>T.T.T.I., Tharamani, Madras-600 113. |
| Publication Number | : | 153 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 4—3—1991 |
| Paper used | : | 15.2 kg. White Printing |
| Size of the book | : | 21 × 14 cms. |
| Printing Type used | : | 10 Point |
| Number of Copies | : | 1200 |
| Number of Pages | : | XVI + 487 |
| Price | : | Rs. 60/- |
| Printers | : | Aarthi Printing House<br>416-A, Anna Salai, Nandanam,<br>Madras-600 035. |
| Binding | : | Card Board |
| Artist | : | M/s. Sivam Process |
| Subject | : | Grammar |
| Summary | : | Commentaries on Tolkappiyam Akathinaiyiyal |

# முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தொல்காப்பிய உரைவள வெளியீட்டுத் திட்டத்தின் 21 - வது வெளியீடாக இந்த 'அகத் திணையியல்' அமைகின்றது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் முதலியலாகையால் இது தனக்கெனச் சில தனிச்சிறப்புகளைக் கொண்டுள்ளமை இந்நூலில் வெளிப்படுகின்றது.

நூற்பா, ஆங்கில மொழிபெயர்ப்பு, ஒத்த பிறநூற் செய்திகள், மரபுரைகள், தற்கால உரை, உரைவளப் பதிப்பாசிரியர் கருத்துகள் என்பன பிற தொகுதிகளில் போல் இங்கும் தரப்படுகின்றன. தேவையானவிடத்து அடிக்குறிப்பு விளக்கங்களும் அளிக்கப்படுகின்றன. முயற்சி பாராட்டுக்குரியது.

அச்சாகுங்காலை, நூலில் ஏற்பட்டுள்ள பிழைகளைக்களைந்து, அறிஞர் பெருமக்கள் நூலை அணுக வேண்டுகிறோம். 12, 14, 17, 29, 42, 53, 57 ஆகிய நூற்பாக்கள் சூத்திரவடிவில் அச்சிடப்படாத பிழையையும் நீக்கிக் கற்க வேண்டுகிறோம். பக்க மேற்தலைப்பு 83-ஆம் பக்கம் வரை ஒருவகையாகவும், பின்பு வேறு வகையாகவும் அமைவதும் சீர் செய்யப்பட வேண்டியதாகும்.

'பொருட் சுருக்கம்' என்ற பகுதியை எழுதியுதவிய நிறுவன ஆய்வாளர் திரு. தி. மு. கந்தசாமி, எம்.ஏ.,எம்.பில்., அவர்கட்கு நன்றி.

அன்புடன்,

சென்னை-113
4—3—'91

அன்னி தாமசு
இயக்குநர்/பொறுப்பு

## சூத்திர நுவல் பொருள்

# பொருட் சுருக்கம்

எல்லா மொழிகளிலும் எழுத்து, சொல் என்ற இரண்டிற்கே இலக்கணம் அமைந்துள்ளது. தமிழ் மொழியில் மட்டும் எழுத்து, சொல், பொருள் என்று மூன்றுக்கும் இலக்கணம் அமைந்துள்ளது இம்மூவகையான இலக்கண வகைப்பாட்டைப் பற்றி சோமசுந்தர பாரதியார் கூறுகையில் ''எழுத்துஞ் சொல்லும் செய்யுளுக்கு இன்றியமையாத உறுப்புகளாதலின், அவற்றை முறையே முன்னிரண்டு பகுதிகளாக வகுத்துக் கூறின தொல்காப்பியர் புலவர்க்குரிய பொருட்பகுதியை மூன்றாம் படலமாக வகுத்தார். மக்கள் கருத்துக்களை விளக்க வெளிப்படுத்துங் கருவியனைத் தும் செய்யுளெனப்படும் செவ்விதாய உளப்பாடு அதாவது உளத்துறுங் கருத்தைக் கேட்பொருளனைத்துறக் கூறுதற்குரிய சொற்றொடர்களெல்லாம் செய்யுளாகும். பாட்டே செய்யுளென் பது பிற்காலப் பிழைவழக்கு. உரை, பாட்டு, நூல், பிசி, குறிப்பு மொழி, மறைமொழி, பழமொழி எனப் பலவகையானும், பல்வேறு ருவிற்றோன்றி நின்று பொருள் பயப்பனயாவும் செய்யுளேயாம். செய்யுளெல்லாம் பொருள் பற்றியவேயாகலானும் பொரு ளொன்றே மக்கள் குறியாகலானும் அப்பொருள் பற்றியும் அப்பொருட்குக் கருவியாகும் செய்யுள் பற்றியும் அவையிற்றுக் குறிப்பும் துணையுமாவன பிற்பற்றியும் கூறுவனவற்றின் தொகுதி தொல்காப்பியரின் பொருட்படலமாகும்'' (இந்நூல் பக். 14, 15)

பொருளதிகாரம் ஒன்பது இயல்களைக் கொண்டது. அவற் றுள் அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்பன அகத்தோடு தொடர்புடையன. புறத்திணையியல் புறத் துடன் தொடர்புடையது. பிற இயல்களான மெய்ப்பாட்டியல் உவமவியல், செய்யுளியல் போன்றவை இரண்டிற்கும் பொது வானதாகும். மரபியல் தனித்த வகையினது.

பொருள் என்பது மக்களை மையமிட்டது. அது இரண்டு பிரிவுகளாகப் பகுக்கப் பெறும், அவை அகம், புறம் என்பன. நச்சினார்க்கினியர், அகம் என்பதை ''ஒத்த் அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கு ஒருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக்

கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்ப முறுவதோர் பொருள் என விளக்குகிறார். மேலும் இவ்வாறன்றி எல்லாராலும் ஒருங்கு துய்த்து உணரப்படுவதும், இவவாறு இருந்ததெனப் பிறருக்குக் கூறப்படுவது மாகிய பொருளைப் புறம் என்றும் கூறுகிறார் (இ. நூ. பக். 12).

தொல்காப்பிய அகத்திணையைத் தொடர்ந்து, தமிழ் நெறி விளக்கம், வீரசோழியம், களவியல் காரிகை, நம்பியகப் பொருள், மாறனகப் பொருள், முத்து வீரியம் போன்றன அகத் திணைச் செய்திகளைத் தருகின்றன.

அகத்திணை தொடர்பான இலக்கண நூல்களில் மூன்று வகையான முறைமைகள் காணப்படுகின்றன. அவை கூற்று முறை, நிகழ்ச்சி முறை, துறைமுறை என்பனவாம். கூற்று முறைக்குத் தொல்காப்பியத்தை எடுத்துக்காட்டாகக் கொள்ள லாம். நிகழ்ச்சி முறைக்கு நம்பியகப் பொருளை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். துறை முறைக்கு வீர சோழியத்தைக் கொள்ளலாம்.

பொருளதிகாரத்தின் பகுப்பில் அதிகமான இயல்களைக் கொண்டது அகப்பொருள். பொருளதிகாரத்தின் முதல் இயலா கவும் அகத்தொடர்பான செய்திகளை நன்கு உணர்ந்து கொள்ள உதவும் அடிப்படையாகவும் அகத்திணை அமைகிறது.

**அகம்**

அகம் என்பது ஒத்த பண்பு கொண்ட ஒருவனும் ஒருத் தியும் தம்முள் கொள்ளும் அன்பு முறையாகும். அது புணர்தல் பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகியவற்றின் அடிப்படை யில் அமைவது. அது தனித்த ஒருவருக்கு என்று சுட்டிக் கூறாத் தன்மை கொண்டது. உலக மக்கள் யாவர்க்கும் பொதுவானது (57).*

அகத்திணை ஏழு திணைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. அவை : கைக்கிளை, அன்பின் ஐந்திண, பெருந்திணை என்பன வாம் (1).

---

* எண். அகத்திணையியல் நூற்பா எண்.

ஏழு திணைகளுள் கைக்கிளையும் பெருந்திணையும் அகத் திணைக்குரிய கூறுகள் இல்லாமையினால் புறத்திணை சார்ந்தன எனல்தகும். அதனை உறுதிப்படுத்தும் வகையில் புறப்பொருள் வெண்பாமாலையில் கூறிய பன்னிரண்டு புறத் திணைகளுள் கைக்கிளையும் பெருந்திணையும் இடம் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது (58).

### அன்பின் ஐந்திணை

அன்பின் ஐந்திணை என்பது முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்பன. அவ்வன்பின் ஐந்திணை நிலத்தின் அடிப்படையில் பாகுபடும். அந்த வகையில், முல்லையைக் காட் டோடும், குறிஞ்சியை மலையோடும், மருதத்தை நாட்டோடும், நெய்தலைக் கடற்கரையோடும் ஒப்புமைப்படுத்தலாம். பாலை யான நடுவண் ஐந்திணைக்கு நிலம் கிடையாது (2).

பாலையின் நிலத்தைக் குறிப்பிடுகையில்,

முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்

என்று சிலப்பதிகாரம் (11.64-66) குறிப்பிடுகின்றது.

### பாடல்களின் கூறுகள்

பண்டைச் செய்யுட்களை நோக்குகையில் முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் பயின்று வருகின்றன. பாடலில் மூன்று பொருட்களும் பயின்று வருகையில் முதற்பொருளைக் கொண்டும், கருப்பொருளும் உரிப்பொருளும் பயின்று வருகையில் கருப்பொருளைக் கொண்டும், உரிப்பொருள் மட்டும் வருகையில் உரிப்பொருளைக் கொண்டும் திணையை அறிய முடிகின்றது (3).

### முதற் பொருள்

உலகத்தின் இயல்பும் செய்யுளின் இயல்பும் உணர்ந்தவர் முதற்பொருளை நிலம், பொழுது என்று இரண்டு கூறுகளாகப் பகுக்கின்றனர் (4, 19).

**நிலம்**

முதற்பொருளுள் ஒரு கூறு நிலம். அந்நிலத்தை நான்கு வகையாகப் பகுப்பர். அவை : மாயவனின் உறைவிடமாகிய காட்டுப் படுதியும், முருகவேளின் உறைவிடமாகிய மலைப் பகுதியும், இந்திரனின் உறைவிடமாகிய நிலப்பகுதியும், வருணனின் உறைவிடமாகிய கடற்பகுதியும் என்று முல்லை, குறிஞ்சி, மருதம், நெல்தல் என்று பாகுபடுத்தப்பட்டுள்ளன (5). பாலைக்குத் தனித்த நிலமின்மை முன்பு சுட்டப்பட்டது; அதனால் போலும் தெய்வமும் சுட்டப்பெறவில்லை.

**பொழுது**

முதற்பொருளின் மற்றொரு கூறு பொழுது. பொழுதை இரண்டு பிரிவாகப்பகுப்பர். அவை: பெரும் பொழுது, சிறுபொழுது என்பன. பெரும்பொழுதைக் கார், கூதிர், பனி எதிர் அல்லது முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்றும்; சிறு பொழுதை மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு என்றும் பகுப்பர். இவ்விரு பொழுதும் திணை அடிப்படையில் பொருத்தப் பெறுகின்றன. பெரும் பொழுதில் கார் காலமும் சிறு பொழுதில் மாலையும் முல்லைக் குரியன (6); பெரும் பொழுதில் கூதிரும் சிறு பொழுதில் யாமமும் குறிஞ்சிக்குரியன (7); பெரும் பொழுதில் பனிஎதிர் பருவமும் (8) சிறு பொழுதில் வைகறையும், விடியலும் மருதத்துக்கு உரியன (9); எற்பாடு நெய்தலுக்கு உரியது (10); பெரும் பொழுதில் இளவேனிலும், முதுவேனிலும் சிறுபொழுதில் நண்பகலும் பாலைக்கு உரியன (11); பெரும் பொழுதாகிய பின்பனியும் பாலைக்குரியது (12). பாலைக்கு நிலமும் தெய்வமும் கூறப் படாத போதும் காலம் சுட்டப்படுவது குறிப்பிடத்தக்கது.

ஒரு ஆண்டைப் பகுப்பது பெரும்பொழுதாகும். ஒரு பெரும் பொழுது இரண்டு திங்களைக் கொண்டது. கார் காலம் ஆவணி, புரட்டாசி ஆகிய இரண்டு திங்களைக் கொண்டது. (ஆங்கிலத் திங்களில் ஆகஸ்டின் பிற்பகுதி, செப்டம்பர், அக்டோபரின் முற் பகுதி என்பன அமையும்). கூதிர் காலம் ஐப்பசி, கார்த்திகை ஆகிய இரண்டு திங்களைக் கொண்டது. (அக்டோபரின் பிற்பகுதி, நவம்பர், டிசம்பரின் முற்பகுதி). முன்பனிக்காலம் மார்கழி, தை ஆகிய இரண்டு திங்களைக் கொண்டது, (டிசம்பரின்

பிற்பகுதி, சனவரி, பிப்ரவரியின் முற்பகுதி). பின்பனிக்காலம், மாசி, பங்குனி ஆகிய இரண்டு மாதங்களைக் கொண்டது. (பிப்ரவரியின் பிற்பகுதி, மார்ச், ஏப்ரலின் முற்பகுதி). இளவேனில் காலம் சித்திரை, வைகாசி, ஆகிய இரண்டு திங்களைக் கொண் டது. (ஏப்ரலின் பிற்பகுதி, மே, சூனின் முன்பகுதி). முதுவேனில் காலம், ஆனி, ஆடி ஆகிய இரண்டு திங்களைக் கொண்டது. (சூனின் பிற்பகுதி, சூலை, ஆகஸ்டின் முற்பகுதி).

சிறுபொழுது ஒரு நாளின் பகுப்பில் அமைவது. சிறுபொழுது ஆறு பிரிவுகளைக் கொண்டது. அவற்றுள் மாலை என்பது இராப் பகுதியின் முற்பகுதி, யாமம் என்பது இராப் பகுதியின் நடுப்பகுதி, வைகறை என்பது இராப் பகுதியின் பிற்பகுதி, விடியல் என்பது பகற் பொழுதின் முற்பகுதி, நண்பகல் என்பது பகற் பகுதியின் நடுப்பகுதி, எற்பாடு என்பது பகற் பகுதியின் பிற்பகுதி ஆகும்.

### கருப் பொருள்

பாடலுள் பயிலும் பொருட்களுள் ஒன்று கருப்பொருள் அக்கருப்பொருளை எட்டாகத் தொல்காப்பியம் கூறுகின்றது. அவை: தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, செய்தி, யாழின் பகுதி என்பனவாம். 'அவ்வகை பிறவும்' என்று குறிப்பிட்டமை யால் மேலும் ஆறு கருப்பொருளைச் சேர்ப்பர் உரையாசிரியர் (20).

### உரிப்பொருள்

பாடலுள் பயிலும் பொருட்களுள் ஒன்று உரிப்பொருள். புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் அவற்றின் நிமித்தங்கள் என்பன உரிப்பொருள். இவ்வுரிப் பொருள்கள் குறிஞ்சிக்குப் புணர்ச்சியும், பாலைக்குப் பிரிவும், முல்லைக்கு இருத்தலும், நெய்தலுக்கு இரங்கலும், மருதத்திற்கு ஊடலும் என்று பாகுபடுத்தப்பட்டுள்ளன (16).

### மயக்கம்

முதற் பொருளாகிய நிலமும் பொழுதும் ஒரு திணையினின்று மற்றொரு திணைக்கு மயங்கவும் பெறும் (14). அவ்வாறு மயங்கு வதில் முதற்பொருளும், கருப்பொருளும் பங்கு கொள்ளும் ஆனால், உரிப்பொருள் மயங்காது (15).

ஒரு நிலத்திற்குரிய பூவும் புள்ளும் அந்த நிலத்திற்கு வராவிட்டாலும் வந்த நிலத்திற்குப் பயன்பெற்று வரும். அவ்வாறு மயங்கி வருவது திணை மயக்கமாகும் (21).

**பெயர்**

ஒவ்வொரு ஒழுக்கத்தோடும் பொருந்திய முல்லை முதலிய நிலங்களில் வாழும் அகத்திணைக்குரிய மக்கட் பெயர்கள், அந்தந்த நிலத்துப் பெயர்ப்பெயரையும் அந்நிலத்து மக்களின் தொழிலால் அமையும் வினையின் பெயரையும் கொண்டு அமையும் (22).

ஆயர், வேட்டுவர் என்பன ஆண்பால் சுட்டும் முல்லை நில மக்களின் திணை நிலைப் பெயராகும். அந்நிலத்து அகத்திணைக்குரியவர்க்கும் உரியதாகும் (23). ஏனை நிலத்து மக்களையும் ஆய்கையில் அந்நிலங்களுக்கும் அவ்வகையாகவே பெயர்கள் அமைகின்றன. அவை வருமாறு : குறிஞ்சிக்கு, மக்கட் பெயர் குறவன், குறத்தி என்பன; தலைமக்கட் பெயர் மலைநாடன், வெற்பன் என்பன; பாலைக்கு மக்கட் பெயர் எயினர், எயிற்றியர் என்பன ; தலைமக்கட்பெயர் மீளி, விடலை என்பன; மருதத்திற்கு மக்கட் பெயர்; உழவர், உழத்தியர் என்பன; தலைமக்கட் பெயர் ஊரன், மகிழ்நன் என்பன; நெய்தற்கு மக்கட்பெயர் நுளையர், நுளைச்சியர் என்பன; தலை, மக்கட் பெயர் சேர்ப்பன், துறைவன், கொண்கன்என்பன (24)

**கூற்று**

அகம் என்ற பாங்கில் தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், கண்டோர் போன்றவர்கள் பங்கு இடம் பெற்றுள்ளது. இவர்களின் செயற்பாடும் கூற்றும் ஒரு வரையறுக்கப்பட்ட எல்லையில் அமைகின்றன. அவர்களின் வரையறை என்பது. காதல் மாந்தர்க்கும் மற்றப் பாத்திரங்களுக்கும் இடையேயுள்ள உறவு நெருக்கத்தை மையமிட்டதாகும். அந்தவகையில் தலைமகன், தோழி, நற்றாய், கண்டோர் போன்றவர் கூற்றுகள் இடம் பெறுகின்றன.

**தலைவன் கூற்று**

'ஒன்றாத் தமரினும் பருவத்துஞ் சுரத்தும் ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும்' என்பது முதல், 'பிரிந்தோள் குறுகி இரத்தலும் தெளித்தலும்' பதினேழு நிலைகளில்

தலைவன் கூற்று நிகழ்கின்றன. களவு, உடன்போக்கு, கற்பு, பரத்தை போன்ற பலநிலைகளில் தலைவனின் கூற்றைப் பாகு படுத்திக்கூறியுள்ளது (44).

### தோழி கூற்று

'தலைவரும் விழுமநிலையெடுத்துரைத்தல்' என்பது முதல் 'நோய் மிகப் பெருகித்தன் நெஞ்சுகலுழ்ந் தோளை அழிந்தது களையென மொழிந்தது கூறி வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தொடு' என்பது ஈறாக, ஆறு கூற்றுகள் நிகழ்கின்றன. தலைவன் தலைவியின் அன்பு வாழ்க்கை அல்லது காதல் வாழ்க்கைக்குத் துணையாவதும், தேவையானபோது இடித்துரைக் கின்ற தன்மையும் தோழிக்கு உண்டு (42).

### நற்றாய் கூற்று

நற்றாய், தனக்கும் தலைமகனுக்கும் தலைமகளுக்குமுள்ள உறவு முறைகளைக் குறித்தும், நிமித்தங்களைக் (பல்லி போன் றன) குறித்தும், அவர்க்கு ஏற்படும் நன்மை தீமைகளைக் குறித்தும் தோழியிடத்தும் கண்டோரிடத்தும் புலம்புதல் போன்ற வை, நற்றாயின் கூற்றாக அமைகின்றன(39). நற்றாயின் கூற்று அகத்திணையோடு தொடர்புடைய வேறு எந்த இயலிலும் இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### கண்டோர் கூற்று

தலைமக்கள் உடன் போக்கில் கண்டோர் கூற்று நிகழ் கின்றது. அவர், தலைமக்கள் செல்லுகின்ற பாதையின் தன்மையை எடுத்துரைக்கின்றனர். அப்பாதையில் எழும் சிக்கல் கள் அல்லது இன்னல்களை அவர்கள் எதிர் கொள்ளும் முறையை எடுத்துரைக்கின்றனர். அவர் செல்லும் வழியிலுள்ள ஊரையும் அவ்வூராரின் சிறப்பையும் எடுத்தியம்புதல்; அன்பு கொண்ட அத் தலைமக்களின் தன்மையைக் கூறுதல்; அம்மக்களைத் தேடிவரும் செவிலியின் மன நிலையைக் கண்டு அவர்களைத் தடுத்தலும்; அல்லது விடுத்தலும் மேலும் உடன் போக்கிலும், உடன் அழைத்து வருதல் சூழலிலும் கண்டோர் கூற்று நிகழுகின்றது (43).

மேற்கண்ட பகுதிகளில் தலைவன், தோழி, நற்றாய், கண் டோர் போன்றவரின் கூற்றுகள் சுட்டப்பட்டுள்ளன. ஆனால்,

காதல் சூழலின் சரிபங்கு தலைவியாதலின் அப்பாத்திரத்தின் கூற்று அகத்திணையில் இல்லாமை இங்கு நோக்கத்தக்கது. அதனை நிறைவு செய்யும் வகையில் இளம்பூரணர் 'எஞ்சியோர்க்கு மெஞ்சு தல் இலவே' (45) என்ற புறநடை நூற்பாவிற்கு உரையெழுது கையில் பின்வருமாறு சுட்டியுள்ளார்: ''பாங்கர் முதலாயினாரை இச்சூத்திரத்தாற் கூறுப: தலைமகள் கூற்றுத் தனித்துக்கூறல் வேண்டும். இவரோடு ஒரு நிகரன்மையின்'' எனின், ஒக்கும். தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் காலப் பழமையாற் பெயர்தெழுதுவார் விழஎழுதினார் போலும், ஆசிரியர் இச்சூத்திரத் தாலும் பொருள் கொள்ள வைத்தமையின், தலைமகள் கூற்று வருமாறு. தலைமகள் பிரிதலுற்ற தலைமகன் குறிப்புக் கண்டு கூறுதலும் பிரிவுணர்வு கூறுதலும், பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறுதலும், உடன் போவல் எனக் கூறுதலும், இடைச்சுரத்து ஆய்த்தார்க்குச் சொல்லி விட்டனவும், தமர் வந்துற்றவழிக் கூறு தலும், மீளலுற்ற வழி ஆயத்தார்க்குக் கூறிவிட்டனவும், பிரி வாற்றாமையும் ஆற்றுவல் என்பது படக் கூறுதலும், தெய்வம் பராவலும் பருவங்கண்டு கூறுதலும் வன்புறை எதிரழிந்து கூறு தலும் இவையெல்லாம் கூறப்படும் (45).

### உடன்போக்கு

தலைவன் தலைவி ஆகிய இருவரின் குடும்பத்தார்களும் உடன்படாத போது, உடன்போக்கு நிகழும். அவ்வாறு நிகழ் கையில் தலைமகளை விட்டு தலைமகன் பிரிவது, தலைமகளை உடன் அழைத்துத் தமர்வரைப் பிரிவது ஆகிய இருவகையான பிரிவும் பாலைக்குண்டு. இந்தக் கருத்தை மறுக்கும் வகையில், பாரதியாரின் (பிரிதலின் அடங்காமை என்ற) கருத்து அமைந் திருப்பது சுட்டத்தக்கது (18, 17).

தலைவி தலைவனுடன் உடன் சென்ற பிறகு, இச்செய்தியைத் தந்தையும் தன்னையரும் உணருமுன்னர், அவளைத் தேடி தாமே செல்லுவர் தாயர். தாயர் என்று பன்மையில் கூறியதன் வழி, நற்றாயையும் செவிலியையும் உட்படக் குறிக்கும். அவ்விரு வருள் நற்றாய் சேரிக்கும், செவிலி சுரத்திற்கும் தேடச் செல்வர் என்பது நச்சினார்க்கினியர் கூற்று வழி புலப்படுகின்றது (40).

**பிரிவு**

பிரிவு என்பது பாலையின் உரிப்பொருளாகும். ஓதல் காரணமாக, பகை காரணமாக, தூது காரணமாகப் பிரிதல் எனப்பிரிவு மூன்று வகைப்படும் (27). மேற்கூறப்பட்ட மூவகைகளில் ஓதல் பிரிவும் தூதுப் பிரிவும் உயர்ந்தவர்க்கு உரியது. உயர்ந்தவர் என்பவர் அந்தணரும் அரசரும் ஆவர் (28).

பகைவயின் பிரிவு மேற்கொள்ளுதல் அரசர்க்கு உரித்து அவருடன் ஏனோர் தலைவராகயுழி அதனாலும் பிரிவு நிகழும் எனவும் கூறுவர் (29).

முல்லை முதலாக நெய்தல் ஈறாக உள்ள நிலங்களில் ஆள்பவர் நெறிமுறை தப்பிய முறையால் நாடு பிழையாமல் இருக்கவும் தன்னுடைய பழைய நாட்டின் தன்மையைப் பெறவும், பிரியும் பிரிவாகும். இது ஒரு அறம் நிறுத்தல் காரணமாக அமையும் பிரிவாகும் (30). இப்பிரிவிற்குரியவர் நால்வகை வருணத்தாராகிய அரசர். அந்தனர், வணிகர், வேளாளர் ஆகியோர். (31).

மன்னரின் செயல்களுள் காவல் என்பது குறிப்பிடத்தக்க தாகும். அக்காவற்பணிக்கு வணிகரும் வேளாளரும் அடங்குவர் என்பது குறிப்பிடத்தக்கது (32). இங்கு அந்தணர் இடம் பெறாமை குறிப்பிடத்தக்கது

உயர்படிப்பு அல்லது படித்தல் காரணமாகப் பிரியும் பிரிவு உயர்ந்தவர்க்கும் உரியதாகும். உயர்ந்தோராகிய வணிகருக்கும் உண்டு (33). அந்தணர் அரசர் ஆகியவர்களுக்கு உண்டு என்பது முன்பு கூறப்பட்டது.

வேந்துவினையின் இயற்கை, தூதாகும். இத்தூது வணிகருக்கும் வேளாளருக்கு முரித்து (34). பொருள்வயின் பிரிதல், மேற்கூறிய வணிகர் வேளாளருக்கு உரியதாகும் (35).

உயர்ந்தோராகிய அந்தணர் பொருள் வயிற் பிரிதல் ஒழுக்கத்திற்கு உரியது (36).

கலத்தில் பிரிவு அல்லது கடற்பிரிவு தலைமகளுடன் கிடையாது (37), இப்பிரிவு தலைமகனுக்குரிய செயலாகும்.

தொல்காப்பியர் காலத்தில் ஓதல், பகை, தூது என்ற மூன்று வகையான பிரிவு இருந்துள்ளன என்று அகத்திணையியல் கூறுகின்றது. ஆனால் கற்பியலில் காமக்கிழத்தியின் கூற்று தரப்படுகிறது. மேலும், பரத்தை காரணமாக எழும் கூற்றை அகத்திணையியலில் தலைவன் கூற்று தருகிறது. அவ்வாறு காமக்கிழத்தி, பரத்தை ஆகியவர்களினால் ஏற்படும் பிரிவும் இடம் பெறுகின்றமையால், காமம் தொடர்பான பிரிவும் உண்டு. மேற்கூறிய ஓதல் பகை, தூது, பொருள் ஈட்டல் போன்ற பிரிவுகள் தலைமகனுக்குப் பெருமை. ஆனால் காமக்கிழத்தி, பரத்தை தொடர்பான பிரிவால் தலைமகனுக்குச் சிறுமை.

**கைக்கிளை**

'கைக்கிளை' என்பது ஒரு மருங்கு பற்றிய குற்றமற்ற காதலாகும். காமச் செவ்வி அறியாச் சிறுமியிடம் தலைமகன் ஒருவனுக்குத் தன்னலம் மறந்து 'அவள் பொருட்டே வாழ்வு' எனக் கொள்ளும் காதல் கைக்கிளை எனப்படும்.

காமக் குறிப்பிற்கு அமைதியில்லாத இளமைப் பிராயத்தாள் ஒருத்தியினிடத்து, அவளைத் தவிர தன் காமநோய்க்கு வேறு மருந்தில்லை என்று பெருந்துயர் கொண்ட காதலன் ஒருவன், ஆற்றாமையினால் புகழ்வது போலப் பழித்தலும் பழிப்பது போலப் புகழ்தலுமாகக் கூட்டிச் சொல்லி, மறுமாற்றம் பெறாது தன்னுணர்ச்சி தானுரைத்து மகிழ்தல் கைக்கிளையின் குறிப்பாகும் (53).

**பெருந்திணை**

மடலேறுவேன் என்று கூறுவதோடு அமையாது, தலைவன் மடலேறுதலும் இன்பம் துய்த்தற்குரிய பருவம் கழிந்த பிறகும் எழும் இன்ப விருப்பமும் தெளிந்த எண்ணத்தை அழிக்கும் காமமும் காமத்தின் மிகுதியால் தம்மை விரும்பாதவரையும் வலிதிற் புணரும் தன்மையும் என்று கூறப்பட்ட நான்கும் பெருந்திணையின் குறிப்பாகும். இவ்வொழுக்கத்தை இழி வொழுக்கம் என்பர் (54).

முன்பு கூறிய பெருந்திணையின் நான்கு கூறுகளாகிய ஏறிய மடல் திறம், இளமை தீர் திறம், தேறுதல் ஒழிந்த காமத்து மிகு திறம், மிக்க காமத்து மிடல் போன்றவைகள் கைக்கிளைக்கும் உரியன (55).

எல்லாக் குலத்தும், பெண்கள் மடலேறுதல் என்பது கிடையாது (38) ஆனால் பிற்காலத்தில் பெண் மடலேறியமை அறிய முடிகின்றது.

கைக்கிளை என்பது புணராது நிகழும் ஒழுக்கமாகும்' பெருந்திணை என்பது புணர்ந்த பின் நிகழும் ஒழுக்கமாகும்.

பிறருக்குக் குற்றேவல் செய்பவரும் பிறர் ஏவிய தொழிலைச் செய்பவரும் ஆகிய இவ்விரு பிரிவினரையும் அன்பின் ஐந்திணை யிலிருந்து நீக்கும் நிலைமையில்லை. ஆனால், அப்பிரிவுகளைக் கைக்கிளை, பெருந்திணையின் கண் சேர்ப்பர் (25, 26).

## பா அமைப்பு

உலகவழக்கிலும் புனைந்துரை வகையிலும் அகப்பாடல்களை அமைப்பதற்குக் கலியும் பரிபாடலும் என்ற இரண்டு செய்யுள் வகைகள் உரியதாகும் (56).

## உவமை

புலவர்கள் தாம் கொண்ட கருத்தைப் புலப்படுத்தப் பயன் படுத்துகின்ற ஒரு உத்தி, உவமை. தொல்காப்பியம், அகத் திணைப் பாடல்களில் வரும் உவமையை இரண்டு வகையாகப் பகுத்துக் கூறுகின்றது. அவை உள்ளுறை உவமம், ஏனை உவமம் எனபனவாம்(49). உள்ளுறை உவமம் என்பது வெளிப் படக் கூறும் பொருளோடு, உள்ளும் பொருளும் ஒத்து முடியுமாறு; உள்ளத்தின் ஊன்றி நுணுகி உணர அமைந்து முடிவது உள்ளுறை உவமமாகும் (51).

அவ்வாறு அமையும் உள்ளுறை உவமம் தெய்வம் ஒழிந்த உணவு, மா, மரம், புள், பறை, செய்தி, யாழ், மற்றும் பல கருப் பொருட்களை இடமாகக் கொண்டு அமையும் என்பர் இலக் கணிகள் (50).

ஏனை உவமம் எனப்படுகின்ற உள்ளுறை உவமம் ஒழிந்த உவமங்கள், வாசகர் பொருளை நுணுகி ஆராயாமல் தானே வெளிப்படையாக உணரும் பொருளையுடையதாக அமையும் (52). அவ்வமயம் வண்ணம், வடிவு, பயன், தொழில் என்ற பாங்கில் அமைந்திருக்கும்.

— 0 —

# தொல்காப்பியம்-பொருளதிகாரம்

(உரைவளம்)

---

## அகத்திணையியல்

1. கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப. (1)

ஆங்கில மொழிபெயர்ப்பு

இலக்குவனார்.

From 'Kaikkilai' to 'Perunthinai' are the Seven conducts described foremost, say the scholars.

**பிற்கால இலக்கண நூல்கள்:**

**நம்பி அகப்பொருள் : 1**

மலர்தலை யுலகத்துப் புலவோர் ஆய்ந்த
அருந்தமிழ் அகப்பொருள் கைக்கிளை ஐந்திணை
பெருந்திணை எனஎழு பெற்றித் தாகும்.

**இலக்கண விளக்கப் பொருள் : அகத்திணையியல். 4.**

அதுவே கைக்கிளை ஐந்திணை ஏனைப்
பெருந்திணை எனஎழு பெற்றித் தாகும்.

**தொன்னூல் விளக்கம் 190.**

அகப்பொருள் புறப்பொருள் ஆயிரண்டவற்றுள்
பெருகிய கைக்கிளை பெருந்திணை குறிஞ்சி
ஆதிஐந் திணையென அகப்பொருள் ஏழே .........

**முத்து வீரியம் அகத்திணை 1.**

அகப்பொருள் கைக்கிளை ஐந்திணை பெருந்திணை
எனஎழு வகைப்படும் என்மனார் புலவர்.

# தொல்காப்பியம் பொருளதிகாரம்
# (உரைவளம்)
# அகத்திணையியல்

## இளம் பூரணர்

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ எனின், பொருளதிகாரம் என்னும் பெயர்த்து. இது, பொருள் உணர்த்தினமையாற் பெற்ற பெயர்: நிறுத்த முறையானே[1] எழுத்தும் சொல்லும் உணர்த்தினார்; இனிப் பொருள் உணர்த்த வேண்டுதலின், இவ்வதிகாரம் பிற்கூறப்பட்டது.

பொருள் என்பது யாதோ எனின், மேற்சொல்லப்பட்ட சொல்லின் உரணப்படுவது. அது, முதல் கரு உரிப்பொருள் என மூவகைப்படும்[2]

"முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை" (அகத் - 3)

என்றாராகலின்.

முதற்பொருளாவது, நிலமும் காலமும் என இருவகைப்படும்.

"முதல்எனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே." (அகத் - 4)

என்றாராகலின்.

---

1. நிறுத்த முறை : எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என இலக்கண நூலார் வரிசைப்படுத்திய முறை. சிறப்புப் பாயிரத்தில் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி என நிறுத்த முறையும் ஆம். சிறப்புப் பாயிரம் பனம் பாரனார் பாடியதாயினும் தொல்காப்பியர் கூற்றாகவே கொண்டு கூறுதல் உரையாளர் மரபு.

2. "பொருள் ........ மூவகைப்படும்" இதனால் செய்யுளிற் கூறப்படும் பொருளே பொருளதிகாரத்திற் கூறப்படும் என்பதும், பொருளதிகாரம் செய்யுள் பற்றியதே என்பதும் பெறப்படும் - ஆசி.

'நிலம்' எனவே, நிலத்திற்குக் காரணமாகிய நீரும், நீர்க்குக் காரணமாகிய தீயும், தீக்குக் காரணமாகிய காற்றும் காற்றிற்குக் காரணமாகிய ஆகாயமும் பெறுதும்.[3]

காலமாவது - மாத்திரை முதலாக, நாழிகை, யாமம், பொழுது, நாள், பக்கம், திங்கள், இருது, அயநம், ஆண்டு உகம் எனப் பலவகைப் படும்.

கருப்பொருளாவது இடத்தினும் காலத்தினும் தோற்றும், பொருள். அது, தேவர் மக்கள் விலங்கு முதலாயினவும், உணவு செயல் முதலாயினவும், பறை யாழ் முதலாயினவும், இன்ன வான பிறவும் ஆகிப் பல வகைப்படும்.

"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருஎன மொழிப." (அகத் - 20)

என்றா ராகலின்.

உரிப்பொருளாவது, மக்கட்கு உரிய பொருள் 4. அஃது அகம், புறம் என இருவகைப்படும்.

அகமாவது புணர்தல், பிரிதல்; இருத்தல். இரங்கல், ஊடல் எனவும், கைக்கிளை பெருந்திணை எனவும் எழு வகைப்படும்.

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே"

(அகத் - 16)

எனவும்,

---

3. நிலம் முதற்பொருள் என்றால் நீர் முதலிய நான்கும் எதில் அடங்கும் எனின் நிலந்திலேயே அடங்கும் என்பது கருத்து. இந்நான்கும் பொதுவாகக் கூறப்படும் போதே நிலத்தில் அடங்கும் கடல்நீர் யாற்றுநீர் அருவி நீர் எனினும் வாடை, கொண்டல் முதலியவாகக் காற்று கூறப்படினும் பாலை நிலத்தீக் கூறப்படினும் அவ்வவற்றுக்குரிய நிலக்கருப் பொருளாக அமையும்.

4. மக்கட்குரியா பொருள் என்றது மக்கட்குரிய ஒழுக்கத்தை.

"காமம் சாலா இளமை யோள்வயின்
ஏமம் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல் எதிர் பெறுஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே."

(அகத் - 53)

எனவும்.

"ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே."

(அகத் - 54)

எனவும் ஓதினாராகலின்.

அஃதேல், கைக்கிளை பெருந்திணை என்பனவற்றை உரிப் பொருள் என, ஓதியது யாதினால் எனின், எடுத்துக் கொண்ட கண்ணே[5] 'கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்' என ஓதி அவற்றுள் நடுவண் ஐந்திணைக்குரியன இவை எனப் புணர்தல் முதலாக வகுக்கப்படுதலின், முன்வகுக்கப்படாத கைக்கிளை பெருந்திணையும் உரிப் பொருளாம் என்றுணர்க[6].

புறமாவது, நிரை கோடற்பகுதியும், பகைவயிற் சேறலும் எயில் வளைத்தலும், இருபெரு வேந்தரும் ஒரு களத்துப் பொருதலும், வென்றி வகையும், நிலையாமை வகையும், புகழ்ச்சி வகையும், என எழு வகைப்படும். அஃதேல் புறப்பொருளை உரிப் பொருள் என ஓதிற்றிலரால் எனின்,

"வெட்சி தானே குறிஞ்சியது புறனே" (புறத் - 1) எனவும் பிறவும் இவ்வாறு மாட்டேறு பெற ஓதலின், அவையும் உரிப் பொருள் ஆம் என்க. அகம் புறம் என்பன காரணப்பெயர்.

---

5. எடுத்துக் கோடற் கண்ணே என்றிருத்தல் வேண்டும். எடுத்துக் கோடற்கண்- தொடக்கத்தில்

6. நடுவண் ஐந்திணைகளுக்குப் புணர்தல் முதலாக உரிப் பொருள் கூறலால் கைக்கிளை பெருந்திணைகளுக்கும் உரிப் பொருள் உண்டெனக் கோடல் வேண்டும். கைக்கிளை பெருந்திணை என்பனவே உரிப்பொருளாம்.

அகப்பொருளாவது. போக நுகர்ச்சியாகலான் அதனான் ஆய பயன் தானே அறிதலின்[7] அகம் என்றார்.

புறப்பொருளாவது, மறஞ்செய்தலும் அறஞ்செய்தலும் ஆகலான் அவற்றான் ஆய பயன் புலனாதலின் புறம், என்றார்.

அஃதற்றாக, [3]அறம், பொருள், இன்பம், வீடு என உலகத்தோரும் சமயத்தோரும் கூறுகின்ற பொருள் யாதனுள் அடங்குமெனின், அவையும் உரிப்பொருளினுள் அடங்கும். என்னை? வாகைத் திணையுள்,

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்

(புறத் 16)

என இல்லத்திற்கு உரியவும்,

"காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி.
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என நான்கு வருணத்தார் இயல்பும், கற்பு- 51)

"நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்" (புறத்-16)

எனவும்.

"காமம் நீத்த பாலி னானும்" (புறத்-17

எனவும், புறமாகிய வீடுபேற்றிற்குரிய வானப்பிரத்த சந்நியாசிகள் இயல்பும் கூறுதலின், அறமும் வீடும் அடங்கின. வெட்சி முதலாகத் தும்பை ஈறாகக் கூறப்பட்ட பொருண்மையும், வாகையிற் கூறப்பட்ட ஒரு சாரனவும், காஞ்சிப்படலத்து நிலையாமையும், பாடாண் பகுதியிற் கூறப்பட்ட பொருண்மையுமாகிய இவை எல்லாம் பொருளின் பகுதியாதலின், அப்பொருள் கூறினாராம். அகத்திணையிலானும் களவியலானும் கற்பியலானும்

---

7. தானே தன் அகத்து அறிதலின்

8. தானே தன் அகத்தறிவது அகம் எனவும் பிறர்க்குப் புலனாவது புறமாகவும் ஆகுக.

இன்பப் பகுதி கூறினாராம் அஃதேல், பிற நூலாசிரியர் [9]விரித்துக் கூறினாற்போல, அறமும் பொருளும் விரித்துக் கூறாதது என்னை யோவெனின், உலகத்தில் நூல் செய்வார் செய்கின்றது, அறிவி லாதாரை அறிவு கொளுத்த வேண்டியன்றே; யாதானும் ஒரு நூல் விரித்தோதிய பொருளைத் தாமும் விரித்து ஓதுவாராயின், ஓதுகின்றதனாற் பயன் இன்றாமாதலால், முன்னூலாசிரியர் விரித்துக் கூறின பொருளைத் தொகுத்துக் கூறலும், தொகுத் துக் கூறின பொருளை விரித்துக் கூறலும் நூல் செய்வார் செய் யும் மரபு என்று உணர்க. அஃதேல் இந்நூலகத்து விரித்துக் கூறிய பொருள் யாதெனின், காமப் பகுதியும் வீரப் பகுதியும் என்க. இன்பம் காரணமாகப் பொருள் தேடும் ஆகலானும், பொருளானே அறஞ்செய்யும் ஆகலானும், இன்பமும் பொருளும் ஏற்றம் [10]என ஓதினார் என உணர்க.

அஃதற்றாக, இது பொருளதிகாரமாயின், உலகத்துப் பொருள் எல்லாம் உணர்த்தல் வேண்டுமெனின், இதுமுதல், கரு, உரிப்பொருள் எனத் தொகை நிலையான் அடங்கும். அவ் வாறு வகுக்கப்பட்ட பொருளை உறுப்பினாலும், தொழிலினா லும் பண்பினாலும் பாகுபடுத்தி நோக்க வரம்பிலவாய் விரியும். இக்கருத்தினானே இவ்வாசிரியர் உலகத்துப் பொருள் எல்லா வற்றையும் முதல் கரு உரிப்பொருள் என ஓதினார் என உணர்க.

அஃதற்றாக, இவ்வதிகாரத்துள் உரைகின்ற பொருளை யாங் ஙனம் உணர்த்தினாரோ எனின், முற்பட இன்பப் பகுதியாகிய கைக்கிளை முதலாகப் பொருந்திணை ஈறாக அகப் பொருள் இலக்கணம் உணர்த்தி, அதன் பின் புறப்பொருட் பகுதியாகிய வெட்சி முதலாகப் பாடாண்டிணை ஈறாகப் புறப்பொருள் இலக் கணம் உணர்த்தி, அதன்பின் அகப் பொருட் பகுதியாகிய களவியல் கற்பியல் என இரண்டு வகைக் கைகோளும் உணர்த்தி, அதன்பின் அகம் புறம் என இரண்டினையும் பற்றிவரும் பொருள் இயல்பு உணர்த்தி, அதன்பின் அவ்விரு பொருட்கண்ணும் குறிப்பும்பற்றி நிகழும் மெய்ப்பாடு உணர்த்தி,

---

9. பிறநூலாசிரியர் : பிற்காலத்திருவள்ளுவர், நீதிநூலார்.
10. இன்பமும் அதற்குரிய முதல் கரு உரிப் பொருளும் சிறப்பாவன.

அதன்பின் வடிவும் தொழிலும் பண்பும் பயனும் பற்றி உவமிக்கப் படும் உவம இயல் உணர்த்தி, அதன்பின், எல்லா பொருட்கும் இடமாகிய செய்யுள் இயல் உணர்த்தி, அதன்பின், வழக்கு இலக் கணமாகிய மரபு இயல் உணர்த்தினார் என்று கொள்க. இவ் வகையினானே அகத்திணை இயல், புறத்திணைஇயல், களவியல், கற்பியல், பொருள் இயல், மெய்ப்பாட்டுஇயல், உவமஇயல், செய்யுள் இயல், மரபு இயல் என ஓத்து ஒன்பதாயின.

இவ்வதிகாரத்துள், இம்முதற்கண் ஓத்து அகப்பொருள் இலக்கணம் நுதலிற்று.

1. கைக்கிளை ........ என்ப

இத்தலைச் சூத்திரம் என்நுதலிற்றோ எனின், அகப் பொருள் இத்துணை என வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இதன் பொருள்) கைக்கிளை முதல் ஆக பெருந்திணை இறுவாய் ஆக) - கைக்கிளை என்று சொல்லப்படும் பொருள் முதலாகப் பெருந்திணை என்று சொல்லப்படும் பொருள் ஈறாக, எழுதிணை முற்படக் கிளந்த என்ப ஏழு பொருள்[1] முற்படக் கூறப்பட்டன என்று சொல்வர்.

முதலா என்பது முதலாக என்னும் பொருள்பட நின்றது; விகாரம் எனினும் அமையும். இறுவாயாக என்பதன்கண் ஆக என்பது எஞ்சி நின்றது. எழுதிணையும் முற்படக் கிளந்த எனற் பாலது மொழி மாறி நின்றது. கிளந்த என்பது கிளக்கப்பட் டன என்னும் பொருள்பட வந்த முற்றுச் சொல். முற்படக் கிளந்த எழுதிணை கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுதிய எனினும் இழுக்காது. "முற்படக் கிளந்த என்றமையான், அவை ஏழும் அகப்பொருள் என்று கூறினாருமாம்; அகம், புறம் எனப் பொருளை வரையறுத்தல் இவர் கருத்தாகலின்: அன்ன தாதல்,

"அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்"

(புறத் - 1)

என்பதனாற் கொள்க.

---

1. திணை என்பதற்குப் 'பொருள்' என இளம் பூரணர் கூற நச்சினார்க்கினியர் ஒழுக்கம் என்றார்.

முற்படக் கிளந்த எழுதிணை எனவே பிற்படக் கிளக்கப் படுவன எழுதிணை உள என்பது பெறுதும். அவையாவன, வெட்சி முதலாகப் பாடாண்டிணை ஈறாகக் கிடந்த எழுதிணையும், இவ்வகையினான் இவ்வதிகாரத்திற் கூறப்பட்ட பொருள் பதினான்கு என்பதூஉம்; அவையும்

'வெட்சி தானே குறிஞ்சியது புறனே'. (புறத் - 1)

எனவும்.

''வஞ்சி தானே முல்லையது புறனே'' (புறத் - 6)

எனவும், இவ்வாறு கூறுதலின்[2] ஏழாகி அடங்கும் என்பதூஉம் கொள்க.

அஃதேல்; மெய்ப்பாட்டியலானும் உவம இயலானும் செய்யுள் இயலானும் மரபு இயலானும் கூறப்பட்ட பொருள் யாதனுள் அடங்கும் எனின், அவை கருப்பொருளும் அப்பொருளாற் செய்யப்பட்டனவும் அப்பொருளின் குணம் முதலியனவும் அப்பொருளின் குறிப்பு நிகழ்ச்சியும் ஆதலின், அவையும் கருப்பொருளின்பால் நடுவண் ஐந்திணையுள் அடங்கும் என்ப. அவை சிறுபான்மை கைக்கிளை பெருந்திணையினும் வரும். அவ்வெழுதிணையும் ஆவன - கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை.

கைக்கிளை என்ற பொருண்மை யாதோ எனின், கை என்பது சிறுமை பற்றி வரும்; அது தத்தம் குறிப்பிற் பொருள் செய்வதோர் இடைச்சொல்; கிளை என்பது உறவு; பெருமையில்லாத தலைமக்கள் உறவு என்றவாறு; கைக்குடை; கையேடு, கைவாள், கைஒலியல், கைவாய்க்கால் எனப் பெருமையில்லாதவற்றை வழங்குபவாதலின்.

நடுவண் ஐந்திணைக்கண் நிலமும் காலமும் கருப்பொருளும் அடுத்துப் புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் எனச் சொல்லப்பட்ட அவ் உரிப்பொருள், ஒத்த அன்பும் ஒத்த குலனும் ஒத்த இளமையும் உளவழி நிகழுமாதலின், அது

---

2. வெட்சி குறிஞ்சிக்குப் புறன் என அடக்கிக் கூறுதலான். குறிஞ்சியும் வெட்சியும் அகமும் புறமுமாய் அடங்கும் ஒரு பொருள் எனக் கொள்ளல் வேண்டும். இப்படியே பிறவும்.

பெருங் கிளமை [3]ஆயிற்று. முல்லை முதலாகிய ஐந்தும் முன்னர்க் கூறப்படும்.

பெருந்திணை நடுவண் ஐந்திணையாகிய ஒத்த காமத்தின் மிக்கும் குறைந்தும் வருதலானும், எண்வகை மணத்தினும் பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் என்பன அத்திணைப் பாற் படுதலானும், இந்நான்கு மணமும் மேன்மக்கள் மாட்டு நிகழ்தலானும் இவை உலகினுள் பெரு வழக்கு எனப் பயின்று வருதலானும் அது பெருந்திணை எனக் கூறப்பட்டது. [4]அஃதேல் நடுவண் ஐந்திணையாகிய ஒத்த கூட்டம் பெருவழக் கிற்றன்றோ எனின், அஃது அன்பும் குலனும் முதலாயின ஒத்து வருவது உலகினுள் அரிதாகலின் அருகியல்லது வாராது என்க.

இந்நூலகத்து ஒருவனும் ஒருத்தியும் நுகரும் காமத்திற்குக் குலனும் குணனும் செல்வமும் ஒழுக்கமும் இளமையும் அன்பும் ஒருங்கு உளவழி [5]இன்பம் உளதாம் எனவும், கைக்கிளை, ஒரு தலை வேட்கை எனவும், பெருந்திணை ஒவ்வாக் கூட்டமாய் இன்பம் பயத்தல் அரிது எனவும் கூறுதலான், இந்நூலுடையார் காமத்துப் பயனின்மை உய்த்து உணர வைத்தவாறு அறிந்து கொள்க

## நச்சினார்க்கினியம்

**1. கைக்கிளை........ ...யென்ப.**

என்பது சூத்திரம்.

---

3. பெருங் கிளைமை—பெருமைதரும் உறவு.

4. ஒத்த காமத்தின் மிக்கும் குறைந்தும் வருவது பெருந் திணை என்பதால் அதுபொருந்தாக் காமத்தின்பாற் படும்—பின்னர்க் கூறப்படும காரணங்கள் அதற்கு மாறு பட்டன. பொருத்தம் அற்றன.

5. ஒருங்கு உள்வழி இன்பம் உளது என்பதால் ஒருங்கு உளதாவது அரிது எனக்குறித்து இன்பத்தின் அருமை கூறு முகத்தால் காமத்துப் பயன் இன்மை குறித்தார் என்பதால் ஐந்திணை இன்பமும் பயனின்று என்று குறித்தவாறு.

நிறுத்த முறையானே பொருளினது இலக்கணம் உணர்த் தினமையின், இது பொருளதிகாரமென்றும் பெயர்த்தாயிற்று. இது நாண் மீனின் பெயர் நாளிற்குப் பெயராயினாற் போல்வ தோர் ஆகுபெயர்[1]

பொருளாவன :- அறம் பொருளின்பமும், அவற்றது நிலை யின்மையும், அவற்றினீங்கிய வீடு பேறுமாம். பொருளெனப் பொதுப்படக் கூறவே, அவற்றின் பகுதியாகிய முதல் கரு உரியும், காட்சிப்பொருளும், கருத்துப்பொருளும் அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும் பூதமும் அவற்றின் பகுதியாகிய இயங்குதிணையும் நிலைத்திணையும், பிறவும் பொருளாம்.

எழுத்துஞ் சொல்லும் உணர்த்தி, அச்சொற்றொடர் கருவீ யாக உணரும் பொருள் உணர்த்தலின், மேலதிகாரத்தோடு இயைபுடைத்தாயிற்று. அகத்திணைக்கண் இன்பமும், புறத் திணைக்கண் ஒழிந்த மூன்று பொருளும் உணர்த்துப. இது இது வழக்கு நூலாதலிற் [2]பெரும்பான்மையும் நால்வகை வரு ணத்தார்க்கும் உரிய இல்லறம் உணர்த்திப் பின் துறவறமுஞ் சிறுபான்மை கூறுப. அப்பொருள்கள் இவ்வதிகாரத்துட் காண்க. பிரிதனிமித்தங் கூறவே, இன்ப நிலையின்மையுங்கூறிக் 'காமஞ் சான்ற' என்னுங் கற்பியற் சூத்திரத்தால் (192) துறவறமுங் கூறினார். வெட்சிமுதலா வாகையிறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல் கூறி, அவற்றது நிலையின்மை காஞ்சியுட் கூறவே, அறனும் பொருளும் அவற்றது நிலையின்மையுங் கூறினார், 'அறு வகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' என்னுஞ் சூத்திரத்தான் (75) இல்லறமும் துறவற முங் கூறினார். இங்ஙனம் இந்நிலையாமையானும் பிறவற்றானும் வீட்டிற்குக் காரணங் கூறினார். இங்ஙனம் கூறவே, இவ்வாசிரியர் பெரிதும் பயன் றருவதோர் இலக்கணமே கூறினாராயிற்று: இதனாற்

---

1. கார்த்திகை எனும் நாண்மீனின் பெயர் அது இயங்கும் கால எல்லைக்கும் கார்த்திகை நாள் எனப்பெயரானாற் போல பொருளின் இலக்கணம் அதை உணர்த்தும் பகுதிக்கு ஆயிற்று.

2. வழக்கு நூல்—உலக நடைமுறை வழக்கைக் கூறும்நூல்

செய்தபுலனெறி வழக்கினை [3]யுணர்ந்தோர் இம்மை மறுமை வழுவாமற் செம்மை நெறியால் துறைபோவராதலின்.

இப்பொருளை எட்டுவகையான் ஆராய்ந்தாரென்ப; அவை அகத்திணை புறத்திணை என இரண்டு திணை வகுத்து, அதன் கட் கைக்கிளை முதற் பொருந்திணையிறுவா யேழும். வெட்சி முதற் பாடாண்டிணை யிறுவா யேழுமாகப் பதினான்கு பால் வகுத்து, ஆசிரியம் வஞ்சி வெண்பா கலிபரிபாடல் மருட்பாவென அறுவகைச் செய்யுள் வகுத்து, முல்லை, குறிஞ்சி, மருதம் நெய்த லென நால்வகை நிலன் இயற்றி, சிறுபொழு தாறும் பெரும்பொழு தாறுமாகப் பன்னிரண்டு காலம் வகுத்து, அகத்திணை வழுவேழும் [4]புறத்திணை வழுவேழு[5]மெனப் பதினான்கு வழுவமைத்து, நாடக வழக்கும் உலகியல் வழக்குமென இருவகை வழக்கு வகுத்து, வழக்கிடமுஞ் செய்யுளிடமுமென இரண்டு இடத் தான் ஆராய்ந்தாராதலின். எட்டிறந்த பல்வகையான் ஆராய்ந் தாரென்போர், முதல் கரு உரியும் திணைதொறு மரீஇய பெயரும், [6]திணை நிலைப் பெயரும் ,[7]இருவகைக் கைகோளும் [8]பன்னிரு வகைக் கூற்றும்,[9]பத்து வகைக் கேட்போடும், [10]எட்டுவகை மெய்ப்பாடும்,[11]நால்வகை உவமமும்,[12]ஐவகை மரபும் [13]என்பர்.

---

3. புலனெறி வழக்கு-செய்யுள் வழக்கு
4. அகத்திணை வழு ஏழு ...
5. புறத்திணை வழு ஏழு-
6. திணைதொறும் மரீஇய பெயர்-குறிஞ்சி முதலிய நில மக்களின் பெயர்-வேட்டுவர் குறவர் போலும் பெயர்கள்
7. திணை நிலைப்பெயர்-நிறத்தலைமக்கள் பெயர்-வெற்பன் போலும் பெயர்கள்.
8. களவு' கற்பு என்பன
9. தலைவன், தலைவி, பாங்கன், தோழி, செவிலி, பார்ப் பான், பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர், கூறும் கூற்றுகள்.
10. கூற்றுக்குரியோருள் தலைவன் தலைவி ஒழிந்தவர்கள்.
11. மெய்ப்பாடுஎட்டு : நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை.
12. வினை, பயன், மெய், உரு என்பன வற்றால் வரும் உவமங்கள்.
13. ஐவகைமரபு; சொல்மரபு, செய்யுள்மரபு, பொருள்மரபு, உலகியல்மரபு, நூல்மரபு.

இனி இவ்வோத்து அகத்திணைக் கெல்லாம் பொது இலக்கண முணர்த்துதலின், அகத்திணையியலென்னும் பெயர்த்தாயிற்று. என்னை? எழுவகை அகத்திணையுள் உரிமை வகையான் நிலம் பெறுவன [14]இவையெனவும் அந்நிலத்திடைப் பொது வகையான் நிகழ்வன கைக்கிளை பெருந்திணை பாலை யெனவுங் கூறலானும் [15]அவற்றுட் பாலைத்திணை நில வகையான் நடுவணதெனப்பட்டு நால்வகை யொழுக்கம் நிகழாநின்றுழி அந்நான்கனுள்ளும் பிரிதற் பொருட்டாய்த் தான் பொதுவாய் நிற்குமெனக் கூறலானும் முதல்கரு உரிப்பொருளும் உவமங்களும் மரபும் பொதுவகையாற் கூறப்படுதலானும், பிறவும் இன்னோரன்ன பொதுப் பொருண் மைகள் கூறலானு மென்பது இங்ஙனம் ஓதிய அகத்திணைக்குச் சிறப்பிலக்கணம் ஏனை ஓத்துக்களாற் கூறுப.

ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியுங் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்ப முறுவதோர் பொருளாதலின், அதனை அகம் என்றார். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓர் ஆகு பெயராம்.

இதனை ஒழிந்தன, ஒத்த அன்புடையார் தாமே யன்றி எல்லார்க்குந் துய்த்துணரப் படுதலானும், இவை இவ்வாறிருந்த தெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும், அவை புறமெனவேபடும். இன்பமே யன்றித் துன்பமும் அகத்தே நிகழுமாலெனின் அதுவுங் காமங் கண்ணிற்றேல் இன்பத்துள் அடங்கும். ஒழிந்த துன்பம் புறத்தார்க்குப் புலனாகாமை மறைக்கப்படாமையிற் புறத்திணைப் பாலதாம். காம நிலையின்மையான் வருந் துன்பமும் 'தாபத நிலை தபுதார நிலை' (79)யென வேறாம்.

திணையாவது ஒழுக்கம் :- இயல் - இலக்கணம்; எனவே அகத்திணை யியலென்றது இன்பமாகிய ஒழுக்கத்தினது இலக்கண மென்றவாறாயிற்று.

---

14, 15 குறிஞ்சி முல்லை, மருதம், நெய்தல் ஒழுக்கங்கள் நிலம், மலை, காடு, வயல், கடல் அவற்றின் நிலங்கள் (சூ. 2)

இவ்வோத்துக்கள் ஒன்றற்கொன்று இயைபுடைமை அவ்வவ் வோத்துக்களுட் கூறுதும்.

இனி, இச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், கூறக் கருதிய பொருளெல்லாந் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :- கைக்கிளை முதலா - கைச்கிளை யெனப்பட்ட ஒழுக்கம் முதலாக, பெருந்திணை இறுவாய் - பெருந்திணையென்னும் ஒழுக்கத்தின் இறுதியாகவுடைய ஏழனையும், முற்படக் கிளந்த எழுதிணை என்ப - முற்படக் கூறப்பட்ட அகத்திணை யேழென்று கூறுவர் ஆசிரியர் என்ற வாறு.

எனவே, பிற்படக் கூறப்பட்ட புறத்திணையும் ஏழுள வென்றவாறாயிற்று; எனவே, இப்பதினான்கு மல்லது வேறு பொருளின்றென வரையறுத்தாராயிற்று. அகப்புறமும் அவை தம்முட் பகுதியாயிற்று. முதலும் ஈறுங் கூறித் திணையே ழெனவே, 'நடுவணைந்திணை' உளவாதல் பெறுதும். அவை மேற்கூறுப.

கைக்கிளை யென்பது ஒருமருங்கு பற்றிய கேண்மை. இஃது ஏழாவதன் தொகை.[1] எனவே, ஒருதலைக் காமமாயிற்று. எல்லாவற்றினும் பெரிதாகிய திணையாதலிற் பெருந்திணை யாயிற்று. என்னை? எண் வகை மணத்தினுள்ளுங் கைக்கிளை முதல் ஆறு திணையும் நான்கு மணம் பெற, தானொன்றுமே நான்கு மணம் பெற்று நடத்தலின்.[2] பெருந்திணையிறுவாய் - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.[3]

முற்படக் கிளந்தவென எடுத்த லோசையாற் கூறவே, பிற்படக் கிளந்த எழுதிணை யுளவாயிற்று. அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்டிணை

1. கைக்கண்கிளை - சிறுமைக்கண் தோன்றும் உறவு.

2. பெருந்திணைப் பெயர்க்காரணம் பொருந்தாது. இளம் பூரணர் கூறிய முதற்காரணமே பொருந்தும்.

3. பெருந்திணையாகிய இறுவாயையுடைய ஒழுக்கங்கள் என விரிதலின் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகும்.

எனவரும். ஒழிந்தோர் பன்னிரண்டென்றாராதலிற்[4] புறத்திணை யேழென்ற தென்னையெனின், அகங்கை இரண்டுடையார்க்குப் புறங்கை நான்காவது இரண்டாயவாறுபோல, அகத்திணை யேழற்கும் புறத்திணை யேழென்றலே பொருத்த முடைத்தாயிற்று. எனவே அகத்திணைக்குப் புறத்திணை அவ்வந் நிலத்து மக்கள் வகையாற் பிறந்த செய்கை வேற்றுமையாதலின், ஒன்றொன்றற்கு இன்றியமையாவாறாயிற்று. கரந்தை அவ்வேழற்கும் பொதுவாகிய வழுவாதலின், வேறு திணையாகாது.

எண்வகை மணத்தினும் எதிர் சென்று கூறுவதாக லானுங், காமஞ் சாலா விளமைப் பருவம் அதன் கண்ணதாக லானுங் கைக்கிளையை முற்கூறினார்.

என்ப வென்றது அகத்தியனாரை[5] இக் குறியீடுகளும் அகத்தியனாரிட்டவென் றுணர்க.

சோமசுந்தர பாரதியார்

எழுத்துஞ் சொல்லும் செய்யுளுக்கு இன்றியமையாத உறுப்புகளாதலின், அவற்றை முறையே முன்னிரண்டு பகுதிகளாக வகுத்துக் கூறின தொல்காப்பியர் புலவர்க்குரிய பொருட் பகுதியை மூன்றாம் படலமாக வகுத்தார். மக்கள் கருத்துகளை விளங்க வெளிப்படுத்துங் கருவியனைத்தும் செய்யுளெனப்படும். செவ்விதாய உளப்பாடு, அதாவது உளத்துறுங் கருத்தைக் கேட்போருளத்துறக் கூறுதற்குரிய சொற்றொடர்களெல்லாம் செய்யுளாகும். பாட்டே செய்யுளென்பது பிற்காலப் பிழை வழக்கு. உரை, பாட்டு, நூல், பிசி, குறிப்புமொழி, மறைமொழி, பழமொழி எனப் பலவகையானும் பல்வேறுருவிற்றோன்றி நின்று பொருள் பயப்பன யாவும் செய்யுளேயாம். செய்யுளெல்லாம் பொருள் பற்றியவே யாகலானும், பொருளொன்றே மக்கள்

---

4. பன்னிரண்டாவன: வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை.

5. முற்காலத்து இலக்கண நூலாளர் என்றலே பொருத்தம்; அகத்தியர்க்கும் முந்து நூல்கள் உண்டு.

குறியாகலானும் அப்பொருள் பற்றியும், அப்பொருளுரைக்குங் கருவியாகும் செய்யுள் பற்றியும் அவையிற்றுக் குறிப்பும் துணையுமாவன பிறபற்றியும் கூறுவனவற்றின் தொகுதி தொல்காப்பியரின் பொருட்படலமாகும்.

இனி, ஆரியர் செய்யுள் அனைத்தும் அறம் பொருள் இன்பம், வீடு என்பவற்றுள் ஒன்றும் பலவும் பொருளாகக் கொண்டே அமைதல் வேண்டுமென்பர் தமிழ்ப் புலவர். மக்கள் பொருளாக மதிப்பன எல்லாம் செய்யுளுக்குரியவாகும் எனக் கொள்வர். அப்பொருளெல்லாம் மக்கள் வாழ்வொடு படுவவாகலானும், மக்கள் வாழ்வும் அகமும் புறமுமென இரண்டிலடங்குவதாகலானும், பொருளை அகமும் புறமுமென இரு கூறாய் வகுத்துக் கூறுவதே தமிழ் மரபாகும். அம்மரபு மேற்கொண்டு தொல்காப்பியரும் தமிழ்ச் செய்யுட் பொருளை அகப் பொருளும் புறப் பொருளுமாக இரு கூறாக்கி, அவற்றின் பொது இயல்புகள் அல்லது இலக்கணங்களைத் தம் நூலின் பொருட் படலத்தில் முதற்கண் அகத்திணையியல் - புறத்திணையியல் என முறையே வகுத்தமைத்துப், பிறகு அவற்றுள் அகத்தின் சிறப்பியல்புகளைக் களவியல் கற்பியல் பொருளியல்களில் விளக்கி. அவற்றின் பிறகே அப்பொருள்களை அறியக் கூறும் கருவியாகிய செய்யுளியல்புகளை மெய்ப்பாட்டியல் உவமவியல் செய்யுளியல் என மூன்று பகுதிகளிற் கூறி இறுதியில் செய்யுள் செய்வார் தமிழ் மரபு பிறழாமற் காத்தற்கு வேண்டியனவற்றை மரபியலில் தொகுத்து விளக்கிப் போந்தார்.

இதில் முதற்கண்ணதாய இவ்வகத்திணையியல் மக்களின் அகவொழுக்கம் அல்லது காதலற வழக்குகளின் பொதுவிலக்கணம் கூறுகிறது. அகமாவது, காதலர் உளக்கிடையும், அவர் காதல் கதிர்த்து வினைப்பட்டு அன்னோர் மனையற வாழ்க்கையிற்றொடர் புறுவதுமாகும். திணையாவது ஒழுக்கம். ஆகவே அகத்திணை என்பது காதல் கண்ணிய ஒழுகலாறாம். அவ்வொழுக்கப் பொதுவியல்புகள் கூறும் பகுதி அகத்திணையியலெனப் பெயர் பெற்றது. (அதுவேபோல் புறத்திணையென்பது அக வாழ்க்கைப் புறமான மக்களின் சமுதாயத் தொடர்புடைய ஒழுக்கமாகும். அது பற்றிக் கூறுமிலக்கணப்பகுதி புறத்திணையியலெனப்படும்) திணைச்சொல் முதலில் ஒழுக்கத்துக்கு இயற்பெயர். குறிஞ்சி முதலிய திணைப் பெயர்களும் நிரலே புணர்வு முதலிய ஒழுக்கப் பொருட்டாம். அவை அவ்வத்திணைக்குரிய

நிலங்குறிப்பது ஆகுபெயர் நிலையில்; அவற்றின் முதற்பொருள் ஒழுக்க வகையே இப்பழந் தமிழ் மரபே தொல்காப்பியர் சொல்வது. நானிலங்களுக்கு ஒழுக்கங்களை வகுத்தனர் என்னாமல், நடுவணதொழிய நடுவணைந்திணை தமக்கு வைய நானிலத்தை வகுத்தவாறென இவ்வியற்றுவக்கத்து அவர் விளக்குதல் காண்க. புணர்தல் முதலைந்தும் ''திணைக்குரிப் பொருளே'' என மீட்டும் கூறும் தொடருமிதனை வற்புறுத்தும். ஒழுக்கம் கருதாமல் நிலம்பற்றித் திணைவகுத்தல் பழமரபுணராது முரணப்படைத்த புது வழக்காம்.

இனி, அவர்காலத் தமிழ் நூல்வழக்கை மேற்கொண்டு அகப்புற வொழுக்கங்களைத் தொல்காப்பியர் முறையை ஒன்றற் கொன்றியையபுடைய அவ்வே ழூதிணைகளிலடக்கி யமைத்தார் அவற்றில் அக வொழுக்கங்களை முறையே கைக்கிளை- முல்லை குறிஞ்சி-பாலை-மருதம்-பெருந்திணை என முறைப்படத் தொகுத்தார். காதல் ஒருவன் பாற் கதிர்த்து, மற்றையோள் மாட்டுப் பருவன்மையாற் பால்விளியுணரப் பான்மையிற் சிறக்கத் தோன்றா நிலையே கைக்கிளை. எனில், இந்நிலை, கன்றிய காதலன் ''காமஞ்சாலா இளமையோள் வயின்'' - தனக்கேமம் சாலப்பெறானெனினும், தன்னலம் விழையாமல் பழிபடு பிழையொழித்து அவணலம் பேணியொழுகும் காதற்பெற்றியதாகலின். அதனை முதலில் வைத்து, இருபாலும் காதலொத்துக் கனிந்து சிறந்த அன்பினைந் திணைகளை அதன் பின்னமைத்து, அவற்றின் பின் காதல் கண்ணாது கழி காமப்பிறக்கும் பெருந்திணையைப் பிரித்து நிறுத்தி முறைப்படுத்தினார். இவ்வெழுதிணைகளையுமிம் முறையாற்றொகுத்துக் காட்டினரெனினும், விரிக்குங்கால் இலக்கணம் நிறைந்த ஐந்திணைகளையும் தொடர்புடன் பலபட விளக்கித் தம்மியல் கூறுமளவில் அமைவனவான கைக்கிளை பெருந்திணைகளினிலக் கணங்களை முறையே இறுதியிலிரண்டு தனிச் சூத்திரங்களாற்றெளித்து முடிப்பர்.

இவ்வகத்திணையியற் சூத்திரங்களின் வைப்புமுறை வருமாறு:-

முதற் சூத்திரத்தில் அகத்திணைகள் ஏழெனத் தொகை வரையறைப்பட்டது. அவ்வேழனுள் முதலும் இறுதியுமாகத் தமக்கென நிலத் தொடர்பில்லாத கைக்கிளை பெருந்திணைகளை விடுத்து, மற்ற ஒத்தகாதல் திணைகள் ஐந்தனுள் பிரி

வாம் பாலையைப் பொதுவாக்கி, ஏனைய நான்கினையும் தத்த மியல்பால் நால்வகைப்பட்ட 'தமிழ் கூறும்' நல்லுலக நானிலப் பகுதிகளில் ஒவ்வொன்றிற்கும் முறையே சிறப்புயைபுபற்றி வகுத்துப் பொருத்திய மரபு இரண்டாஞ் சூத்திரத்திற் கூறப் படுகிறது. காடும், மலையும், ஊருங், கடலுமான நானிலப் பகுதிகளும், அவ்வந் நிலத்தில் சிறந்த முல்லை, குறிஞ்சி, மருதம் நெய்தல் எனும் அடையாளப் பூக்களால் அழைக்கப்படுதலின், அவ்வப்பகுதிக்குச் சிறந்தியைந்த அகவொழுக்கங்களும் அவ்வந் நிலப் பூப்பெயர்களே கொள்வனவாயின. பூப்பெயர் கொள்ளும் இம்முறையைத் தழுவியே ஏனைப் பிரிவொழுக்கமும் நானிலங் களிலங்களிலடங்காத சுரங்களிற் பெரும்பாலான பாலைப் பூவின் பெயரால் வழங்கலாயிற்று.

இனி, அகப்பொருள் முதல் கரு உரியென மூன்று கூறப்படு மென்பது மூன்றாஞ் சூத்திரத்தாலும், அவற்றுள் முதல் பொருள் நிலமும் பொழுது மென்றிரு வகைப்படு மென்பது நாலாஞ் சூத்திரத்தானும் விளக்கப்பட்டன. ஐந்தாஞ் சூத்திரத்தில் நில முதற்பொருளின் இயல்பும் வகையும் கூறப்பட்டன. 1 முதல் 101 வரையுள்ள ஆறு சூத்திரங்களால் காலமுதற் பொருள் அன்புத்திணை ஐந்தனொடு பொருந்தும் இயைபு விளக்கப்பட் டது. 102, 103 ஆம் சூத்திரங்களில் அகவொழுக்க வகைகளும் முதற்பொருளின் கூறுகளும் முன் விளக்கிய முறையேயன்றி வேறுபட்டுத் தம்முள் விரவி வருதலுமுண்டெனக் குறைக்கப்பட் டது. 104-ஆம் சூத்திரத்தில் உரிப்பொருட்குச் சிறந்த ஒத்த காதல் ஒழுக்கச் சிறப்புவகை ஐயந்தனியல்பும் 105, 106-ஆம் சூத்திரங்களில் அவ்வைந்தனுளடங்காது அவை போலவே சிறப் புடைய பொதுவகை அகவொழுக்கங்கள் சிலவும் கூறப்பட்டன. 107-ஆம் சூத்திரம் உரி கருப்பொருள்கள் பல்வேறு வகைப் படுவன போலன்றி முதற்பொருள் நிலம் பொழுதிரண்டே வகைப் படுமென்பதை வலியுறுத்துகிறது. 108, 109-ஆம் சூத்திரங்கள் அகப்பொருள் வகை மூன்றனுள் எஞ்சிய கருப்பொருள் வகை களும் முறையே அகவொழுக்கங்களுக்கு ஏற்ற பெற்றி இயைந் தும் இயையாமலும் வருமாறு கூறும்.

20 முதல் 24 வரையுள்ள சூத்திரங்களால் அகவொழுக்க மரபுகளுக்குப் பலதிறப்பட்ட தமிழ் மக்களின் உரிமை விளக்கப் பட்டது. 25 முதல் 33 வரையுள்ள சூத்திரங்களில் அக

வொழுக்க மரபுகளுக்குப் பல திறப்பட்ட தமிழ் மக்களின் உரிமை விளக்கப்பட்டது. 25 முதல் 33 வரையுள்ள சூத்திரங் களில் அகவொழுக்கங்களிற் பெருவரவிற்றாய பாலை, பிரிவின் நோக்கம் பற்றி அறுதிறப்பட்டு ஒவ்வொரு வகையும் வெவ்வெறு வகுப்பினருக்குச் சிறந்து பொருந்துமியைபுடன் விளக்கப்பட்டது. 34-ஆம் சூத்திரத்தில் கடற்செலவும், 35-ஆம் சூத்திரத்தில் மடற்றிறமும் மடவார்க்குக் கடியப்படுந் தமிழ் மரபு காட்டப்படு கிறது. 36 முதல் 42 வரையுள்ள சூத்திரங்களில் தாயர், தோழி, கண்டோர், தலைவன் மற்றையோர்களுக்கு அகத்துறையில் கூற்று நிகழ்தற்கேற்ற இடங்கள் கூறப்பட்டன 43, 44-ஆம் சூத்திரங்கள் முன் 15, 16-இல் கூறிய பெருவரவான உரி ஒழுக்கம் போல் ஐந்திணை யிலக்கணத் திலடங்காது, சிறுவர விற்றாய் உரிப் பொருட்டுறைகளாகு மிரண்டைச் சுட்டுகின்றன. 45-ஆம் சூத்திரம் உரிப்பொருட் புறனடையாய், முன்சுட்டிய வற்றுளடங்காது உரிப்பொருளாதற்குப் பொருந்திய பிற்பல மரபு முரணாவாறு வருவனவுமுளவெனக் கூறுகின்றது. 46 முதல் 49 வரையுள்ள சூத்திரங்கள் அகத்துறைகளுள் உள்ளு றையும் பிறவுமாய உவமங்கள் பயிலுமாறு கூறுகின்றன 50-ஆம் சூத்திரம் கைக்கிளை இயலையும், 51-ஆம் சூத்திரம் பெருந் திணையியல் வகைகளையும் நிரலே விளக்குகின்றன. இவற் றுள் பின்னைய பெருந்திணையை விலக்கி, முன்னதான கைக் கிளைக்கும் அன்பினைந் திணைகளுக்கும் பொருந்திவருவன வாய் முன்னே சுட்டப்பட்ட (1) நிகழ்ந்தது நினைத்தல், (2) நிகழ்ந்தது கூறி நிலையல், (3) மரபுதிரியாப் பிற உரிப் பொருள்கள் விரவல், (4) உள்ளுறை திணையுணர் வகை யாதல் என்னும் நான்கும் வந்து பயிலுமென 52-ஆம் சூத்திரம் கூறுகின்றது. 53-ஆம் சூத்திரத்தில் இயற்பா வகைகளுள் கலியும் பரிபாடலுமே அகப்பொருட்குச் சிறந்துரியாமென்பது சுட்டப்படுகிறது. ஈற்றிலுள்ள சூத்திரமிரண்டும் அகத்துறையில் தலைமக்கள் கூற்றுக்களில் இயற்பெயர் சுட்டுவது மரபன்றெனக் கூறுகின்றன.

### 1. கைக்கிளை என்ப

கருத்து;- இது அகத்திணைகள் ஏழென வரையறுக்கிறது

பொருள்:- கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுதியாக முன்னே சொல்லப்பட்ட அகத்திணை ஏழாமென்று கூறுவர் தமிழ் நூல்வல்லார்.

குறிப்பு:- இச்சூத்திரத்தில் அகத்திணையேழும் நிரலே கூறப்பெறாமையானும், கிளக்கும் என்னாது கிளந்த என இறந்த கால எச்சம் பெய்த பெற்றிமையானும், இதன் பிறகுள்ள சூத்திர வைப்பு முறையில் கைக்கிளையை முதலாகவும் அதனையடுத்து அன்பினைந் திணையும் இறுதியிற் பெருந்திணையுமாக அமைத்துக் கூறப்பெறாமல், முதற்கண் அன்பினைந்திணை கூறி, அவற்றின் பின் கைக்கிளை பெருந்திணைகள் தொடர்ந்து கூறப்படுவதாலும் 'முற்படக்கிளந்த வெழுதிணை' என்பது அமைத்துக் கூறப்பெறாமல், முதற்கண் அன்பினைந்திணை கூறி, அவற்றின் பின் கைக்கிளை பெருந்திணைகள் தொடர்ந்து கூறப்படுவதாலும் 'முற்படக்கிளந்த வெழுதிணை' என்பது அகத் திணையலில் இச்சூத்திரத்தின் பின் அமைத்துக் கூறப்பட்ட முறையைச் சுட்டாதென்பது வெளிப்படை. எனவே ஈண்டு ''முற்படக்கிளந்த', என்பது இடத்தால் முற்படக்கூறும் அமைப்பு முறையோடு பொருந்தாமையால், காலத்தால் முற் படக்கிளந்த வொன்றனையே குறிக்குமென்பது தோற்றமாகும்

ஆகவே, பொருட்படலத்தின் முதலில், பொருள் அகம் புறமென இருவகைப்படுமென்பதும், அவற்றுள் பின் கூறப்பெறும் புறத்திணை ஏழாதல் போலவே அகத்திணையும் ஏழாமென்பதும் அவ்வகத்திணையும் கைக்கிளை அன்பினைந்திணை பெருந் திணை என ஏழாக வகுக்கப்படுமென்பதும், ஆகிய இவற்றைச் சுட்டிய சில சூத்திரங்கள் அகத்திணையின் முதற்கண் இச் சூத்திரத்திற்கு முன்னே ஆசிரியரால் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். அவ்வாறாயின் மட்டும் 'முற்படக்கிளந்த' எனுமிச் சூத்திரச் சொற்களுக்குப் பொருளமைதியும், 'கைக்கிளை முதலா' எனுந் தொடர்க்குப் பொருளும் அமைவதாகும். இப்பழ நூற் சூத்திரங்கள் சில கடல்கோளாலும் புலம் பெயர்தலாலும் வீழ்ந்து மறைக்கப்பட்டிருத்தல் கூடுமென்பது களவியலுரையாலும், ''தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் காலப்பழமையால் (ஏடு) பெயர்த்தெழுதுவோர் விழ எழுதினார் போலும்'' என்னும் இளம் பூரணர் உரைக் குறிப்பாலும் தெளியப்படும். அவ்வாறு கொள்ளாக்கால் இச்சூத்திரச் சொற்றொடர்கள் பொருந்தும் பொருளமைதி பெறுமாறில்லை. ஆதலாலும் 'முற்படக்கிளந்த' என்னுந்தொடருக்கு 'இதற்கு முன்னே ஆசிரியர் கூறிப்போந்த என்று அமையப் பொருள் காண்பதே பொருத்தமாகும். (1)

ஆ. சிவலிங்கனார்.

இச்சூத்திரப் பொருள் கோளாக இளம்பூரணர்,

"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய் (ஆக)
எழுதிணை முற்படக்கிளந்த என்ப"

எனவும்;

"முற்படக்கிளந்த எழுதிணை கைக்கிளை
முதலாப் பெருந்திணை இறுவாய் என்ப"

எனவும் இருவகையில் 'கொண்டு கூட்ட, நச்சினார்க்கினியர், இருந்தாவாறே கூட்டினர். சோமசுந்தர பாரதியார்,

கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்திணை ஏழுஎன்ப"

எனக் கூட்டினர்.

சூத்திரப் பொருளளவில் யாவரும் ஒத்த கருத்தினரே.

'முற்படக்கிளந்த' என்றதனால் ஆசிரியர் தொல்காப்பியர் இச்சூத்திரத்தின் முன்னர் அகத்திணை ஏழ், புறத்திணை ஏழ் எனக் கூறியிருத்தல் வேண்டும் என்பர். அது பொருந்துவதே எனினும் ஆசிரியர் என்ப என்றது தம் முந்து நூலாரை அந் நூலார், தமக்கு முந்து நூலார் கைக்கிளை முதலாப் பெருந் திணையிறுவாய் உள்ள ஏழையும் முற்படக் கிளந்தனர் என்பர். எனவே ஆசிரியர்களுக்கு முன்னர் இரண்டு தலைமுறையினர் இச்சூத்திரத்துக் கூறப்பட்டன என்க. அதற்கேற்ப இச்சூத்திரப் பொருளாக, "எமக்கு முந்து நூலார்கள் தமக்கு முந்து நூலார்கள், கைக்கிளை முதலாப் பெருந்திணையிறுவாய் உள்ள வற்றை முற்படக்கிளந்த எழுதிணை என்பர்" எனவுரைப்பது சிறக்கும்.

ஏழ்திணை எனப் பாடம் கொள்ளாமல் எழுதிணை என்றே யாவரும் கொள்ளலின், 'முற்படக்கிளந்த திணை ஏழென்ப' எனக்கூட்டுவது பொருந்தாது. ஏழ்திணை என்றிருப்பின் ஏழ் திணை எனவும் ஏழ் என்பஎனவும் கூட்டலாம். 'எழுஎன்ப' எனக் கூட்டுதல் புணர்ச்சி விதிப் பொருந்தமற்றதாகும். அதனால் 'எழுதிணை' என்பதே தொல்காப்பியர் கருத்தென்னலாம்.

கொண்டு கூட்டு எப்படி அமையினும் அவ்வேழும் அகத்திணை என்பதை வருவித்தே கூற வேண்டும். முற்படக் கிளந்த என வந்தது கொண்டு அகத்திணை ஏழ் என வாராததை முடித்து உரையாளர் பொருள் எழுதினர் என்னலாம்.

'அகர முதல னகர இறுவாய் முப்பஃதென்ப' தொல்-எழு நூன்மரபு) என்றது போலக் கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய் முற்படக் கிளந்த எழுதிணை என்றார் என்க. அதனால் ''முற்படக் கிளந்த எழுதிணை கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய் என்ப'' எனக் கூட்டல் சிறக்கும்.

கைக்கிளை என்பதில் கை என்பது சிறுமையையுணர்த்தும் இடைச்சொல். எனவே கைக்கிளை என்பது இடைச்சொற்றொடராம். அது சிறுமையாகிய உறவு எனப் பண்புக்கேற்ப விவரிக்கப்படும். உறவிற் சிறுமையாவது ஒருவனும் ஒருத்தியும் ஒத்த அன்பினாய் உறுதலின்றி ஒருவன் மட்டில் ஒருத்தியின் கருத்தறியாது அல்லது அவள் காமம் சாலாதவள் என்பதறியாது அவளுடன் உறவு கொள்ளக் கருதும் நிலைமையாகும். இவன் அவன் கைக்குப் போனான்' என்றவிடத்துக் 'கை' என்பது பக்கம் எனப்பொருள் படுதல்போலக் கைக்கிளை என்பதிலும் கை என்பது பக்கம் என்னும் பொருள் படும் எனக் கொண்டு கைக்கிளையாவது ஒருபக்க உறவு எனக்கொள்வது சிறக்கும்.

பெரும்பிரிவு பெருந்தூக்கம் போலப் பெருந்திணை என்பது பொருந்தாத்திணை என்னும் பொருளதாகும். நடுவண் ஐந்திணை தலைவர் போல ஒத்த அன்பினாய்ப் பொறுந்துதல் இன்றி வேறுபடுதலின் பெருந்திணையாயிற்று.

2. அவற்றுள்

**நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்[1]**
**படுதிரை வையம் பாத்திய பண்பே.** (2)

ஆ. மொ: இல.

Of them

the world surrounded by sea is divided
and apportioned to 'ainthinai' standing
in the middle of the group exepting the
middle (of five)

---

1. ஒழிய - பாடம் நச்.

**நம்பி 6. இல. வி. பொருள். 379**

குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே

**தொன். 174, முத்து அக. 8.**

முல்லை குறிஞ்சி பாலை மருதம்
நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே

**2. அவற்றுள், ...... ... பண்பே**

இது மேற்சொல்லப்பட்ட எழுதிணையுள், நிலம்பெறுவன வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அவற்றுள் - மேற்சொல்லப்பட்ட எழுதிணையுள், நடுவணது ஒழிய - நடு எனப்பட்ட பாலை ஒழிய, நடுவண் ஐந்திணை - (கைக்கிளை பெருந்திணைக்கு) நடுவணதாகி நின்ற ஐந்திணை, படுதிரை வையம் பாத்திய பண்பு - ஒலிக்கின்ற திரை கடல் சூழ்ந்த உலகம் பகுக்கப்பட்ட இயல்பு.

இதனாற் சொல்லியது எழுவகைத்திணையினும் நிலம் பெறுவன நான்கு என்றவாறாயிற்று. நடுவணது பாலை என்று எற்றாற் பெறுதும் எனின், வருகின்ற சூத்திரங்களுள்,

'முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்'. (அகத் - 5)

என நிலம் பகுத்து ஓதினமையின்[1], நடுவணது பாலை எனக் கொள்ளப்படும். நடுவு நிலைத் திணையெனினும் பாலை எனினும் ஒக்கும். பாலை என்னுங் குறியீடு எற்றாற்பெறுதும் எனின்,

---

1. நிலம் பகுத்து ஓதிப் பாலைக்கு நிலம் பகுத்து ஓதாது விட்டமையால் குறிஞ்சி முதலியவற்றின் நடுவிருப்பது பாலை எனக் கொள்ளப்பட்டது.

'வாகை தானே பாலையது புறனே'. (புறத்-15)

என்பதனாற் பெறுதும்[2] இச்சூத்திரத்துள் ஒழிய என்னும் வினையெச்சம் எவ்வாறு முடிந்தது எனின், அது பாத்திய என்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது. அப்பெயரெச்சம் பண்பு என்னும் பெயர்கொண்டு ஐந்திணை என்னும் எழுவாய்க்குப் பயனிலையாகி நின்றது என உரைப்ப.

இவ்வாறு உரைப்பவே, ஐந்திணை பண்பு என வருஉங் காலத்துப் பயன்பட[3] நில்லாமையின் அஃது உரையன்று என்பார் உரைக்குமாறு:- ஒழிய என்பதனை எச்சப்படுத்தாது முற்றுப்படக் கூறி.

''படுதிரை வையம் பாத்திய பண்பு நடுவண தொழிய.'' எனப் பொருள் உரைப்ப, அஃதேல் வினையெச்ச வாய்ப்பாட்டால் வரும் முற்றுளவோ எனின்,

''வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.''[4] (எச்ச-59) என்று முற்று வாய்ப்பாட்டால் வினையெச்சம் வருதலின் வினையெச்ச வாய்ப்பாட்டால் முற்று வரும் என்பதூஉம் அச்சூத்திரத்தின் அமைத்துக் கொள்ளப்படும் என்ப. இவ்வுரை இரண்டினும் ஏற்பது அறிந்து கொள்க.

* 'நடுவண் ஐந்திணை' என்பன யாவை எனின், முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்பனவாம். எற்றுக்கு? இந்நூல்

---

2. வாகைத்தானே நடுவணது புறனே என்பதற்குப் பதிலாகப் பாலையது புறனே என்பதனால் நடுவணது பாலை என்பது பெறப்படும்.

3. பயன்பட - எழுவாய் பயனிலைத் தொடர் பொருள்பட. (பண்பு என்பதைப் பண்பு ஆம் எனக் கொள்ளின் நன்று)

4. இச்சூத்திரம் வினைமுற்று எச்சமாகும் என்பதற்குக் கூறப்பட்டது.

* ''நடுவண் ......... ஆணாம் என்க'' - விளக்கம்.

கத்து[5] அகமும் புறமும் ஆகிய உரிப்பொருள் கூறுகின்றாராத லான் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல், என அமையுமே எனின், புறப்பொருட்கண் நிரை கோடலை வெட்சி எனக் குறியிட்டு ஆளுமாகலான் ஈண்டு இப்பொருளையும்[6] முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என ஆளும் என்க. இத னாற் பயன் என்னையெனின், உரிப்பொருளே திணையென உணர்த்துவாராயின் முதற்பொருளும் கருப்பொருளும் திணை யாதலால் தோன்றாதாம். அவையெல்லாம் அடங்குதற் பொருட்டு முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் என்றார் என்பது[3]. அவை ஆமாறு வருகின்ற சூத்திரங்களாஞ் விளங் கும். [ஏகாரம் ஈற்றசை] (2)

## நச்சினார்க்கினியர்

2. அவற்றுள் ......... பண்பே.

இது முற்கூறிய ஏழனுள் தமக்கென நிலம் பெறுவனவும் நிலம் பெறாதனவுங் கூறுகின்றது.

இதன் பொருள் :- அவற்றுள் - முற்கூறிய ஏழு திணை யுள், நடுவண் ஐந்திணை - கைக்கிளை பெருந்திணைக்கு

இவ்வதிகாரத்தில் அகமும் புறமும் கூறுகின்றார். அகமும் புற மும் உரிப்பொருளுடையன. அதனால் அதன் ஐந்திணைகளை உரிப்பொருளடியாகப் புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் என்ற பெயராலேயே கூறலாமே? குறிஞ்சி பாலை முல்லை நெய்தல் மருதம் என நிலப் பெயரால் கூறுவானேன்? இது வினா. இதற்கு விடை.

நிரை கோடலாகிய உரிப்பொருள் நிகழ்ச்சியை வெட்சி எனத் தனிப் பெயர் கொடுத்தல் போல (இவ்வாறே பிறவும்) புணர்தலாகிய உரிப் பொருட்குக் குறிஞ்சி எனப் பெயர் கொடுத்து ஆள்வர் ஆசிரியர் (இவ்வாறே பிறவும்)

இதனால் பயன் என்? வினா விடை உரிப்பொருளேயன்றி முதற்பொருளும் (கருப்பொருளும்) திணையுணர ஏதுவாம் என்பது.

---

5. இந்நூலகத்து என்றாரேனும் இவ்வதிகாரத்து எனக் கொள்க.

6. புணர்தல் முதலிய உரிப்பொருளையும்.

நடுவுநின்ற ஐந்தொழுக்கத்தினை, படுதிரை வையம் பாத்திய பண்பே - ஒலிக்குந் திரை உலகிற்கு ஆசிரியன் பகுத்துக் கொடுத்த இலக்கணத்தை, நடுவணது ஒழிய - நடுவணதாகிய பாலையை அவ்வுலகம் பெறாதே நிற்கும் படியாகச் செய்தார் என்றவாறு.

எனவே, யானும் அவ்வாறே நூல் செய்வ லென்றார்.

உலகத்தைப் படைக்கின்ற காலத்துக் காடும் மலையும் நாடுங் கடற்கரையுமாகப் படைத்த நால்வகை நிலத்திற்கு ஆசிரியன் தான் படைத்த ஐவகை ஒழுக்கத்திற் பாலையொழிந்தனவற்றைப் பகுத்துக் கொடுத்தான். அப்பாலை ஏனைய போல ஒருபாற் படாது[2] நால்வகை நிலத்திற்கும் உரியவாகப் புலனெறி வழக்கஞ் செய்து வருதல் பற்றி. பாலைக்கு நடுவணதென்னும் பெயர் ஆட்சியுங் குணனுங் காரணமாகப் பெற்ற பெயர். 'நடுவுநிலைத்திணையே நண் பகல் வேனில்' (9) என ஆள்ப[1] புணர்தல், இருத்தல், இரங் கல், ஊடல் என்பவற்றிற்கு இடையே பிரிவு நிகழ்தலானும், நால்வகையுலகத்திற்கிடையிடையே,

''முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலையென்பதோர் படிவங் கொள்ளும்''

(சிலப்-காடு 64-66)

என முதற்பொருள் பற்றிப் பாலை நிகழ்தலானும், நடுவணதாகிய நண்பகற் காலந் தனக்குக் காலமாகலானும் புணர்தற்கும் இருத்தற்கும் இடையே பிரிவு[3] வைத்தலானும், உலகியற் பொருளாகிய அறம்பொருளின்பங்களுள் நடுவணதாய பொருட்குத் தான் காரணமாகலானும், நடுவணதெனக் குணங்காரணமாயிற்று.

---

1. பாலையை நடுவுநிலைத்திணை என்ற பெயரால் ஆசிரியர் ஆண்டமை காண்க.

2. பாலை மற்றை உரிப்பொருள்கள் குறிஞ்சி நிலம் முல்லை நிலம் என்பனவற்றுள் தனித்தனி ஓரிடத்தும் பொருந்துதல் போலத் தனக்கென ஒரு நிலம் பொருந்தாது.

3. பாலைக்கு உரிப்பொருள் பிரிவு.

பாயிரத்துள் எல்லை கூறியதன்றி ஈண்டும் எல்லை கூறினார்[4], புறநாட்டிருந்து தமிழ்ச் செய்யுள் செய்வார்க்கும் இதுவே இலக்கணமா மென்றற்கு.

இவ்விலக்கணம் மக்கள் நுதலிய அகனைதிணைக்கே யாதலின், இன்பமே நிகழுந் தேவர்க்காகா.

'காமப் பகுதி கடவுளும் வரையார்'

(தொல்-பொருள்-83)

என்பது புறம்-[5]

நடுவணாற்றிணை யென்னாது ஐந்திணை யென்றார், பாலையும் அவற்றோ டொப்பச் சேறற்கு[6] இத்திணையை மூன்றாக மேற் பகுப்பர்.

---

4. பாயிரத்துள் எல்லை கூறியவர் பனம் பாரனார் அவர் கூறியது வடவேங்கடம்....... நல்லுகம்' என்பது தொல்காப்பியர் ஈண்டுஎல்லை கூறவில்லை; உரிப் பொருள்களுக்கு நிலப்பிரிவு கூறினார் அவ்வளவே. பாயிரம் செய்வார் கூற்று நூலாசிரியர்க்கும் உடன்பாடு ஆம். ஆதலின் பாயிர ஆசிரியர் கூற்றாகவும் கூறுதல் மரபு எனக் கொண்டால் பின் வருமாறு கருத்துக் கொள்ளலாம்.

தமிழ் கூறு நல்லுலகத்து எல்லையாக வடவேங்கடம் தென்குமரியைக் கூறிய ஆசிரியர் தமிழ் ஒழுகலாற்று உரிப்பொருள் நிகழ்ச்சிக்கும் குறிஞ்சி முதலிய நிலங்களைக் கூறினார். ஏனெனின் புறநாட்டிருந்து செய்யுள் செய்வாரும் உரிப் பொருள் நிலப்பகுப்பினைத் தாம் கூறியவாறே கூற வேண்டும் என்பதற்காகவே என்க

5. புறம் -புறத்திணைப்பாற்படும்

6. அவற்றோடு ஒப்பச் சேறலாவது குறிஞ்சி முதலிய உரிப் பொருள்கள் போல தானும் (பாலையும்) ஒத்த நிலையில் செய்யுளில் ஆளப்படுதல்.

பாரதியார்

2. அவற்றுள் ...... பண்பே

கருத்து:- இது மேற்குறித்த திணைஏழனுள், 'தமக்கென நில உரிமையுடையன நான்கெனக் குறிக்கின்றது.

பொருள்:- அவற்றுள் நடுவணைந்திணை - முன்னைச் சூத்திரத்துட் கூறிய எழுதிணைகளுள் முதலுங்கடையுமான கைக்கிளை பெருந்திணைகளை நீக்கி, நடுநின்ற முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் ஐந்திணை;

நடுவணதொழிய = தம்முள் நடுவுநிலைத்திணையாகிய (பாலை யொழிய

படுதிரைவையம் பாத்திய பண்பே - கடல் சூழ்ந்த நிலத்தைப் பகுத்த இயல்பிற்று.

குறிப்பு:- இதில் ஐந்திணை - எழுவாய் பாத்திய பண்பே பயனிலை; 'ஒழிய' என்னும் வினையெச்சம் 'பாத்திய' எனும் பெரெச்சங்கொண்டும், அப்பெயரெச்சம் 'பண்பே' எனும் பெயர் கொண்டும் முடிந்தன. வையம், பாத்திய என்னும் வினைக்குச் செயப்படுபொருள் வையம் 'நானிலம்' எனப்படுதலானும் அது குறிஞ்சி முல்லை மருதம் நெய்தலென திணைக்குரிய நிலத்தியல்பு பற்றிப் பகுக்கப்படுதலானும், பாலைக்குத் தனக்குரிய நிலம் பிறிதின்மையானும், முல்லை முதல்நெய்தலீறான நிலங்களையே அவ்வகத்திணைக்களனாகப் பொருள் நூலுடையார் கொள்ளு தலானும் வையத்தை நாற்கூறாகப் படுத்த இயல்புடைத்து பாலையொழிந்த நாலுதிணையும் என்பதை இச்சூத்திரம் விளக்கிப்போந்தது. இதனால் திணையே அகவுரிப் பொருளாய், அதற்குப் பொருந்த நிலம் பிரிவு கொண்டது என விளக்கப் பட்டது.

சிவலிங்கனார்.

இச் சூத்திரத்திற்குப் பொருள் காண்பதில் உரையாளர்கள் ஒன்று படுகின்றனர். ஆனால் கொண்டு கூட்டில் வேறுபடு கின்றனர்.

இளம் பூரணர், நடுவண் ஐந்திணை என்பதை எழுவாயாக வும் ஒழிய என்பதை வினையெச்சமாகவும் பாத்திய பண்பு என்பதைப் பயனிலையாகவும் கொண்டார். அவரே நடுவண் ஐந்திணைக்கும் படுதிரைவையம் பாத்திய பண்பில் நடுவணது ஒழிய எனப் பிறர் வினை முடிவு கொள்வர் என்றும் கூறுகிறார்.

நச்சினார்க்கினியர் ஐந்திணை நடுவணது ஆகியவற்றை இரண்டாம் வேற்றுமைத் தொகை எனவும், வையம் என்பதை நான்காம் வேற்றுமைத் தொகை எனவும், பாத்திய என்பதற்கு (தத்தம் வருவித்த) ஆசிரியர் எனவும் ஒழிய என்பதற்கு வையம் ஒழிவதாக என வையத்தை எழுவாயாகவும் கொண்டு இடர்ப்பட்டார்.

பாரதியார் ஐந்திணை பாத்திய பண்பு என இயைப்பார்.

பின்வருமாறு பொருள் கொண்டு வினை முடிவு கொள்வதே சிறக்கும்.

“முற்கூறப்பட்ட எழுதிணைகளுள் கைக்கிளை பெருந் திணைகளுக்கு நடுவில் உள்ள குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்னும் ஐந்து ஒழுக்கங்களுக்குப் படுதிரை வைய மாகிய நிலத்தை முன்னோர் பகுத்துக் கொடுத்த முறைமையில் நடுவண் ஒழுக்கமாகிய பாலை ஒழுக்கம் தனக்கு நிலம் இன்றித் தவிர்வதாக”. இப்பொருளில் நடுவணது எழுவாய் ஒழிய பய னிலை பிற நாடுகளில் தார்ப் பாலைவனம் சகாராப் பாலை வனம் எனப் பாலை நிலங்கள் இருத்தல் போலத் தமிழ் நாட்டில் இல்லாமையால் அகவொழுக்கத்துக்கு நிலம் வகுத்த முன்னோர் பாலைக்குத் தனி நிலம் வகுக்க இல்லை. ஏன் எனின் இவ் விலக்கணம் வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் நல் லுலகத்துக்கே கூறப்படுவது ஆதலின் என்க. ஆனால் குறிஞ் சியும் முல்லையும் முறைமையில் திரிந்து பாலை வடிவம் கொள்ளும் ஆதலின் அத் திரிவு முதுவேனிற் காலத்தாதலின் அத் திரிந்த நிலமும் திரிந்து நிற்கும் கால அளவாகிய முது வேனிற் காலமும் பாலைக்கு நிலமாகவும் பொழுதாகவும் வகுத் தனர்.

3. முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந்தனவே
பாடலுள் பயின்றவை நாடுங்காலை (3)

ஆ. மொ. இல.

On examining the content of poetry, it is found, 'Muthal', 'Karu' and 'Uri' are the three which exeel in order in the act of composing

நம்பி - 7

அவைதாம்
முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் எனமுறை
நுதற்பொருள் மூன்றினும் நுவலப் படுமே.

இல. வி. 8. நம்பி. சூத்திரமே.

முத்து. அக. 6

முதல்கரு உரிப்பொருள் மூன்றா கும்மே.

இளம்பூரணர்

3. முதல்கரு ........... காலை

இது மேற்சொல்லப்பட்ட நடுவண் ஐந்திணை ஆமாறும் ஒரு வகையான் உலகத்துப் பொருள் எல்லாம் மூவகையாகி அடங்கும் என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பாடலுள் பயின்றவை நாடும் காலை - (சான்றோர் செய்யுளகத்துப் பயின்ற பொருளை ஆராயுங்கால்), முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே -(முதற்பொருள் எனவும் கருப்பொருள் எனவும் உரிப்பொருள் எனவும் சொல்லப்பட்ட மூன்று பொருண்மையுமே (காணப்படும்)), நுவலுங்காலை முறை சிறந்தன - அவை சொல்லுங்காலத்து முறைமையாற் சிறந்தன.

இச் சூத்திரத்துள் பாடலுட் பயின்ற பொருள் மூன்று என ஓதி அவற்றுள் உரிப்பொருள் என ஒன்றை ஓதினமையால் புறப்பொருளும் உரிப்பொருளாகியவாறு கண்டு கொள்க. [1]

முறைமையாற் சிறத்தலாவது:- யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்பொருளும் கருப்பொருளும் வரின், முதற்பொருளால் திணையாகும் என்பதூஉம் முதற்பொருள் ஒழிய ஏனைய இரண்டும் வரின் கருப்பொருளால் திணையாகும் என்பதூஉம் உரிப்பொருள் தானேவரின் அதனால் திணையாகும் என்பதூஉம் ஆம். அவை ஆமாறு முன்னர்க் காணப்படும். அஃதேல், ஒரு பொருட்டு ஒரு காரணம் கூறாது மூன்று காரணம் கூறியது என்னைஎனின், உயர்ந்தோர் என்ற வழிக் குலத்தினால் உயர்ந்தாரையும் காட்டும்: கல்வியான் உயர்ந்தாரையும் காட்டும்: செல்வத்தான் உயர்ந்தாரையும் காட்டும்: அதுபோலக் கொள்க. [முதல் ஏகாரம் பிரிநிலையாகவும், இரண்டாம் ஏகாரம் அசைநிலையாகவும் வந்தன]

## நச்சினார்க்கினியர்

3 முதல்கரு வுரிப்பொரு ......... காலை.

இது நடுவணைந்திணையைப் பகுக்கின்றது.

இதன் பொருள் :- பாடலுள் பயின்றவை நாடும் காலை புலனெறி வழக்கிடைப் பயின்ற பொருட்களை ஆராயுங் காலத்து, முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே - முதலுங் கருவும் உரிப்பொருளும் என்ற மூன்றேயாம் : நுவலுங்காலை முறை சிறந்தனவே - அவை தாம் செய்யுட் செய்யுங்கால் ஒன்று. ஒன்றினிற் சிறந்து வருதலுடைய என்றவாறு.

இங்ஙனம் பாடலுட் பயின்ற பொருள் மூன்றெனவே, இம் மூன்றும் புறத்திணைக்கும் உரியவென்பதும் பெறுதும். அது புறத்திணைச் சூத்திரங்களுள், 'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' (56) என்பன முதலியவற்றாற் கூறுப.

---

1. அகப்படல் புறப்பாடல் எனக்கூறாது பொதுவில் பாடல் என்றதனால் புறப்பாடலுக்கும் இம்மூன்றும் உரிய என்க. அதனால் புறப்பொருளும் உரிப்பொருளாகும்.

* முதலிற் கருவும், கருவில் உரிப்பொருளுஞ் சிறந்து வரும். இம்மூன்றும் பாடலுட் பயின்று வருமெனவே வழக்கினுள் வேறுவேறு வருவதன்றி ஒருங்கு நிகழாவென்பதூஉம், நாடுங் காலையெனவே புலனெறி வழக்கிற் பயின்றவாற்றான் இம் மூன்றனையும் வரையறுத்துக் கூறுவதன்றி வழக்கு நோக்கி இலக்கணங் கூறப்படாதென்பதூஉம் பெறுதும்:

'நல்லுலகத்து, வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்' (தொல் - பாயிரம்) என்று புகுந்தமையிற் பொருளும் அவ் விரண்டினானும் ஆராய்தல் வேண்டுதலின்.

இஃது[1] இல்லதெனப்படாது உலகியலேயாம்.[2] உலகிய லின்றேல் ஆகாயப்பூ நாறிற்றென்றவழி அதுசூடக் கருதுவாரு மின்றி மயங்கக் கூறினானென்று உலகம் இழித்திடப் படுதலின் இதுவும் இழித்திடப்படும்.

இச்செய்யுள் வழக்கினை நாடக வழக்கென மேற்கூறினார், எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தன் முதலாகப் புனைந்துரை வகையாற் கூறும் நாடக விலக்கணம் போல யாதானு மொரே வழி ஒரு சாரார் மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமுங் காலமும் நியமித்துச் செய்யுட் செய்தல் ஒப்புமை நோக்கி.[1] மற்று இல்லோன் தலைவனாக இல்லது புணர்க்கும் நாடக வழக்குப்

---

* 'முதலிற்கருவும் ......... பெறுது' எனக் கூறியதற்குக் காரணமாக அமைந்தது ''நல்லுலகத்து ......... வேண்டு தலின்'' என்பது.

1. இஃது - புலனெறி வழக்கு

2. உலகியல் அன்று என்பர் இறையனார் அகப்பொருள் உரைகாரர் நக்கீரர் (சூ 1)

1. நோக்கி நாடக வழக்கென மேற் கூறினார் என இயைக்க.

போல ஈண்டுக் கொள்ளாமை, 'நாடக வழக்கு' என்னுஞ் சூத்திரத்துட் (53) கூறுதும்.[2]

"கணங்கொ ளருவுக் கான்கெழு நாடான்
குறும்பொறை நாட னல்வய லூரன்
தெண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும் பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்புங்
காலை வரினுங் களைஞரோ விலரே."

(ஐங்குறு 183)

என இவ் வைங்குறு நூற்றுள் இடம் நியமித்துக் கூறியது செய்யுள் வழக்கு[3]

இனி, அவை முறையே சிறந்து வருமாறு:-

"முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புறங் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி.

---

2. இவ்வியலிற் கூறப்படும் செய்திகள், பொருள்கள் யாவும் உள்ளோன் தலைவனாக வுள்ள நாடகவழக்கு பற்றியனவே; இல்லோன் தலைவனாகவுள்ளநாடக வழக்கு பற்றியனவல்ல என்பது.

3. இச் செய்யுளில் கான்கெழு நாடான் (குறிஞ்சி) குறும்பொறை நாடான் (முல்லை) நல்வயலூரன் (மருதம்) சேர்ப்பன் (நெய்தல்) என நானிலப் பெயர்களால் தலைவன் கூறப்படினும் 'கொடுங்கழி நெய்தல்' என இடம் கூறினமையால் அத்தலைவன் நெய்தல் நிலத் தலைவன் என்பது கூறப்பட்டதாம். நானிலத்துப் பெயரும் கூறப்பட்டு ஓர் நிலத்துத் தலைவன் என்பதைப் பெற வைத்தால் இப்பாட்டு செய்யுள் வழக்காயிற்று. உலக வழக்காயின் தெளிவாகக் கூறப் படும்.

நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரி
னுதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும் பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி நாறு
மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே''.

(அகம் - 4)

இது குறித்த காலம் வந்தது, அவரும் வந்தாரென ஆற்று வித்தது

இக்களிற்றியானை நிரையுள் முல்லைக்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.[4]

''கிளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு
முளைதரு பூட்டி வேண்டுகுள கருத்த
வாணிற வுருவி னொளிறுபு மின்னிப்
பரூஉவுறைப் பஃறுளி சிதறி வானவின்று
பெருவரை நளிர்சிமை யதிர வட்டித்துப்
புயலே நுரைஇய வியலிரு ணடுநாள்
விறலிழைப் பொலிந்த காண்பின் சாயற்
நடைஇத் திரண்ட நின் றோள்சேர் பல்லதைப்
படாஅ வாகுமெங் கண்ணென நீயு
மிருண்மயங் கியாமத் தியவுக்கெட விலங்கி
வரிவயங் கிரும்புலி வழங்கு நர்ப் பார்க்கும்
பெருமலை விடாகம் வரவரி தென்னாய்
வரலெளி தாக வெண்ணுதி யதனா
னுண்ணிதிற் கூட்டிய படுமா ணாரந்
தண்ணிது கமழு நின்மார் பெருநா
ளடைய முயங்கே மாயின் யாமும்

---

4. இப்பாடலில் 'கார்செய்தன்றே கவின்பெறு கானம்' என்பதால் கார்காலமும் முல்லை நிலமுமாகிய முதற் பொருளும் முல்லை முதலிய கருப்பொருளும், கானம் கார்செய்தன்றாதலின் உதுக்காண் தோன்றும் குறும் பொறை நாடன் என்பதால் உரிப்பொருளும் தோன்று தல் காண்க.

விறலிழை நெகிழச் சாஅய்து மதுவே
யன்னை யறியினு மறிக வலர்வா
யம்பன் மூதூர் கேட்பினுங் கேட்க
வண்டிறை கொண்ட வெரிமரு டோன்றி யொ
டொன்பூ வேங்கை கமழுந்
தண்பெருஞ் சாரற் பகல்வந் தீமே.'' (அகம் - 218)

இஃது இடத்துய்த்துப் பகற்குறி நேர்ந்த வாய்பாட்டான் வரைவுகடாயது.

இம் மணிமிடைபவளத்துள், குறிஞ்சிக்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது[5]

''வண்டுபடத் ததைந்த கண்ணி யொண்கழ
லுருவக் குதிரை மழவ ரோட்டிய
முருக னற்போர் நெடுவே ளாவி
யறுகோட் டியானைப் பொதினி யாங்கட்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போற் பிரியல மென்ற சொற்றா
மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த
வேய்மருள் பணைத்தோண் நெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக
வழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலி
னிழறேய்ந் துலறிய மரத்த வறைகாய்
பறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலி
னுகுநெற் பொரியும் வெம்மைய யாவரும்
வழங்குந ரின்மையின் வௌவுநர் மடியச்
சுரம்புல் லென்ற வாற்ற வலங்குசினை
நாரின் முருங்கை நவிரல் வான்பூச்
சூரலங் கடுவளி யெடுப்ப வாருற்
றுடை திரைப் பிதிர்விற் பொங்கிமுன்
கடல்போ றோன்றல காடிறந் தோரே''. (அகம் - 1)

5. இச் செய்யுளில் புயல் சிதறி என்பதால் கூதிர்ப் பொழுதும் இருள் நடு நாள் யாமம் என்பனவற்றால் சிறுபொழுதும் பெருமலை விடரகம் என்பதால் குறிஞ்சி நிலமும் ஆகிய முதற்பொருளும் களிறு புலி முதலிய கூறலால் கருப்பொருளும், மலை விடரகத்து இருள் நடுநாள் யாமத்து வர அரிது என்னாது எளிதென வருவையாயின் யாங்கள் புலி முதலிய வழியருமைக்கு அஞ்சுவம்; அதனால் அன்னையறியினும் அறிக; ஊரலர் எழினும் எழுக வேங்கைச் சாரலில் நீ பகல் வருக' என்பதால் உரிப்பொருளும் வந்தன.

இது பிரிவிடையாற்றாது தோழிக்குக் கூறியது.

இக் களிற்றியானை நிரையுள், பாலைக்கு முதலும் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது[6]

''சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா
னூர்மடி கங்குலி னோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய
வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமல ராரு மூர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்
றுறையிறந் தொளிருந் தாழிருங் கூந்தற்
பிறளு மொருத்தியை யெம்மனைத் தந்து
வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்
கூறேம் வாழிய ரெந்தை செறுநர்
களிறுடை யிருஞ்சமந் ததைய நூறு
மொளிறுவாட் டானைக் கொற்கைச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவெம்
மொண்டொடி நெகிழினு நெகிழ்க.
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ''

(அகம் - 46)

இதுவாயின் மறுத்தது.

---

6. அழல் போல் வெங்கதிர் ......... காடு என்பதால் பாலை நிலமும் வெங்கதிர் தெறுதலின் என்பதால் முது வேனிலும் நண்பகலும் ஆகிய முதற்பொருளும் உலறிய மரம், அறுசுனை, நாரரி முருங்கை என்பதால் கருப் பொருளும், 'பிரியலம் என்ற சொல் தாம் மறந்தனர் கொல்லோ' என்பதால் உரிப் பொருளும் அமைந்த வாறு காண்க.

இக் களிற்றியானை நிரையுள், மருதத்திற்கு முதலுங்கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது. 'வண்டூது பனி மலர்' எனவே வைகறையும் வந்தது.[7]

"கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர.
வசைவண் டார்க்கு மல்குறு காலைத்
தாழை தளரத் தூக்கி மாலை
யழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறு பினையத்
துயரஞ் செய்துநம் மருளாராயினு
மறாஅ லியரோ வவருடைக் கேண்மை
யளியின் மையி னவணுறைவு முனைஇ
வாரற்க தில்ல தோழி கழனி
வெண்ணெய் லரிஞர் பின்றைத் ததும்புந்
தண்ணுமை வெரீஇய தடந்தா ணாரை
செறிமடை வயிரிற் பிரற்றிப் பெண்ணை
யகமடற் சேக்குந் துறைவ
னின்றுயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே",

(அகம் - 40)

---

7. இதில் புழனம் நில முதற்பொருள் பனிமலரில் வண்டு ஊதும் நேரம் வைகறையாதலின் அச்சிறு பொழுதும் ஆகிய முதற்பொருளும், காரான்வள்ளை முதலிய கருப் பொருளும், பிறவும் ஒருத்தியை வதுவை அயர்ந்தனை யாரையோ நிற்புலக்கேம், சென்றீ பெரும நிற்றகைக் குநர் யாரே என்பனவற்றால் ஊடலும் வாயில் மறுத்த லுமாகிய உரிப்பொருளும் உள்ளமை காண்க.

இது பொருட்பிரிவிடைத் தோழிக்கு உரைத்தது.

இக் களிற்றியானை நிரையுள், நெய்தற்கு முதலுங் கருவும் வந்து உரிப் பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.[8]

இச்சிறப்பானே[9] முதலின்றிக் கருவும் உரிப்பொருளும் பெறுவனவும், முதலுங் கருவுமின்றி உரிப்பொருளே பெறுவனவுங் கொள்க.

"திருநகர் விளங்கு மாசில் கற்பி
னரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு
நின்னுடைக் கேண்மை யெவனோ முல்லை.
யிரும்பல் கூந்த னாற்றமு
முருந்தேர் வெண்ப லொளியுநீ பெறவே"

இது பொருள் வயிற் பிரிந்தோன் சுரத்து நினைந்து உரைத்தது.
இது முதற்பொருளின்றி வந்த முல்லை.[10]

"கரந்தை விரைகிய தண்ணறுங் கண்ணி
யிளைய ரேவ வியங்குபரி க்டைஇப்
பகைமுனை வலிக்குந் தேரொடு
வினைமுடித் தணர்நங் காத லோரே."

இது வந்தார் என ஆற்றுவித்தது.
இது முதலுங் கருவுமின்றி வந்தமுல்லை.

---

8. இதில் கடல் கழி - முதற்பொருள் புன்னை, தாழை பனை முதலியன கருப்பொருள். நெஞ்சம் இனைய நம் அருளாராயினும் கேண்மை அறாலியரோ என இரங்குதலால் வருவது உரிப்பொருள்.

9. முறை இறந்தன என்றதனானே.

10. இதில் முல்லை என்பது கருப்பொருள் முல்லையே நீ மாயோளொடு கூந்தல் நாற்றமும் பல் ஒளியும் பெற நின்னுடைக் கேண்மை எவன்? என்பது உரிப் பொருள்.

"நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா
லுறையெதிர்ந்து வித்திய ஊ ழேனற்-பிறையெதிர்ந்த
தாமரை போன்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
வேமரை போந்தன வீண்டு." (தினமாலை - 1)

இது மதியுடம் படுத்தது.

இது முதற்பொருளின்றி வந்த குறிஞ்சி.[11]

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலைய னொள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே."

இஃது இளையள் விளைவிலளென்றது. முதலுங் கருவுமின்றி வந்த குறிஞ்சி.

இது நாணநாட்டம்[12]

"நாளு நாளு மாள்வினை யழுங்க
வில்லிருந்த மகிழ்வோர்க் கில்லையாற் புகழென
வொண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி நீயே."
(சிற்றெட்டகம்)

இது வற்புறுத்தாற்றியது.

---

11. இதில் ஏனல் சாந்தம் கருப்பொருள் தாமரை முகத்துத் தாழ்குழலீர்! சந்தனமரத்தை வெட்டி மழை பெய்ததை ஏற்று விதைத்து வளர்ந்ததினைப்புன வழியாக என் கம்பை ஏற்ற மான்வரக் கண்டீரோ என்பது உரிப் பொருள்

12. தலைவியும் தோழியும் உன்வழித் தலைவன் தன் குறையைக் கூறிய போது தோழி கூறியதாகக் கொள்க. இதனைக் கேட்ட தலைவி நாளதுவள் அதுகொண்டு தோழி கூட்டம் உண்மையறியும் நாணநாட்டம் என் பது தோழி தலைவியிடம் நாடுவது என்று கொள்ளின் இது இங்குப் பொருந்தாது

இஃது உரிப்பொருளொன்றுமே வந்த பாலை.

"பூங்கொடி மருங்கி னெங்கை கேண்மை
முன்னும் பின்னு மாகி
யின்னும் பாண ணெம்வயி னானே."

இதுவாயின் மறுத்தது.[13]

இஃது உரிப்பொருளொன்றுமே வந்த மருதம்.

"அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டெனப்
பூசல் வாயாப் புலம்புமளைக் கலங்கி
யேதின் மாக்களு நோவர் தோழி
யென்று நோவா ரில்லைத்
தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னதக்கே."

இது கழிபடர்.

இது பெயரானும் உரிப்பொருளானும் நெய்தலாயிற்று.[14]

இங்ஙனங் கூறவே உரிப்பொருளின்றேற் பொருட்பயமின்றென்பது பெற்றாம். இதனானே முதல் கரு வுரிப்பொருள் கொண்டே வருவது திணையாயிற்று. இவை, பாடலுட்பயின்ற வழக்கே இலக்கணமாதலின், இயற்கையாம். அல்லாத சிறுபான்மை வழக்கினைச் செயற்கையென மேற்பகுப்பர்.[15]

---

13 பூங்கொடியாகிய பரத்தையிடந்துத் தலைவனுக்குக் கேண்மையை நம்மைப் பிரியுமுன்னரும் பின்னரும் உளதாகச்செய்ததோடமையாது இன்னமும் பாணன் வாயில் வேண்டி தம்மிடம் வருகின்றானே' என்று கூறி வாயில் மறுத்தது இச்செய்யுள்.

14 சேர்ப்பன் எனநெய்தல் நிலத்தலைவன் பெயர் வந்தமையால் நெய்தலாயிற்று மதியம் அரவின் வாய்ப்பட்டது எனவருந்துவர் அயலார்; ஆனால் சேர்ப்பன் உண்டு சென்றதால் பொலி விழந்த என் நலனுக்காக யாரும் வருந்தவில்லை என்பது உரிப்பொருள் இதுஇரங்கலாதலின் நெய்தலாயிற்று.

15 அகத்—45.

பாரதியார்

3. முதல் கரு.........நாடுங்காலை

**கருத்து :-** இது, அகப்பொருள் முதல்கரு உரிஎனமுத் திறப்படும் மரபு கூறுகிறது.

**பொருள் :-** பாடலுட் பயின்றவை நாடுங்காலை—புலவர் செய்யுளில் வந்து பயிலும் வழக்குகளை ஆராயுங்காலை, முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே—முதற்பொருள், கருப் பொருள் உரிப்பொருளென வகுத்த மூன்றுமே ; நுவலுங்காலை முறைசிறந்தனவே—செய்யுளுக்குரிய புலனெறி வழக்கம் கருதுங் கால் முறையே ஒன்றினொன்று சிறந்தனவாம்.

**குறிப்பு :** முறை சிறந்தன என்பதனால் முதலிற் கருவும், கருவின் உரியும், ஒன்றினொன்று முறையே மேற்சிறப்புடைத்தா மெனவும், சிறத்தன என்பதனால் சிறவாப் பிறபொருளும் உளவாமெனவும் பெறுதும். அகப்பாட்டுக்களில் உரிப்பொருளே தலையாய தென்பதும், அதற்கு முதலுங் கருவும் சிறப்புதவுந் துணையாகச் சார்ந்து வருபொருள்களாமென்பதும் வெளிப் படை. இனி, இம்மூன்றுமேயன்றி இவைபோலச் சிறவாத பிற பொருளும் உளவாதல் அகத்திணையியல் "மரபு நிலை, திரியா மாட்சியவாகி, விரவும் பொருளும் விரவுமென்ப" என்னும் 45-ஆம் சூத்திரத்தால் தெளியப்படும். இதில் மூன்றே என்பதில் ஏகாரம் தேற்றமும் பிரிநிலையுமாம். சிறந்தனவே என்பதிலேகாரம் இசை நிறையாக வேனும் அசைநிலையாக வேனுங் கொள்ளுக.

சிவலிங்கனார்

செய்யுள்களுள் மிகுதியாகப் பயின்றுவரும் பொருள்களை ஆய்ந்துபார்க்குங் காலத்து அவற்றை இலக்கணப்படுத்திச் சொல்லும்போது முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் என்ற மூன்றே முறையாகச் சிறந்தனவாம் என்பது இச் சூத்திரப் பொருள்.

பாடலுட் பயின்றவை நாடுங்காலை நுவலுங்
காலை முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே
முறை சிறந்தன எனக் கூட்டுக.

நுவலுங்காலை என்றதனால் இது அகப்பொருட் செய்யுட்கே கூறப்பட்டது என்னலாம். புறப்பொருட் செய்யுள்கள் உரிப் பொருளடிப்படையிலேயே திணையும் துறையும் வகுக்கப் படுவன. அகப் பொருட்செய்யுள்கள் முதல் கருஉரிப்பொருள் களால் திணையும் துறையும் வகுக்கப்படுவன. கால முதற் பொருளாலும் கருப்பொருளாலும் திணைமயங்குதலும் உண்டு என்பது அகப்பொருட் செய்யுள்களுக்கே உரியது. அதனால் புறப்பொருட் செய்யுள்களுக்குத் திணை மயக்கம் கூறுதல் இல்லை. மேலும் குறிஞ்சி முல்லை முதலிய நிலப்பாகுபாடு பெயர்சுட்டிக் கூறப்படும் தலைமக்களுக்கு உரியவல்லை. அவர்க்கு அவர் ஆளும் பெருநாடே நிலமாகும். யாவும்கருப் பொருள்களாகும். அதனால் திணை துறைவகுக்க உரிப்பொருள் ஒன்றே சிறந்ததாகும். எனவே இச்சூத்திரம் அகப்பாடல் களுக்கே உரியதாகும்.

**4. முதல்எனப் படுவது நிலம்பொழுது இரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே. (4)**

ஆ. மொ: இல.

Space and Time are said to be 'Muthal' by scholars who know their nature.

பி. இ. நா.

**நம்பி. 8.**

நிலமும் பொழுதும் என முதல்இரு வகைத்தே.

**இல. வி. 9.** ஷை ஷை

**முத்து அக. 7**

முதல்நிலம் பொழுதிரு வகைப்படும் எனலே

## இளம்பூரணர்

**4. முதல் எனப் ......... தோரே.**

இது மேற்சொல்லப்பட்ட மூன்று வகைப் பொருளினும் முதற் பொருள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின் இயல்பு - முதல் என்று சொல்லப்படுவது நிலமும் காலமும் ஆகிய அவ்விரண்டினது இயற்கை, என மொழிப இயல்பு உணர்ந்தோர் - என்று சொல்லுவர் உலகின் இயல்பு உணர்ந்தோர்,

இயற்கை என்பதனால் செய்து கோடல் பெறாமை அறிந்து கொள்க. நிலம் என்பதனால் பொருள் தோற்றுதற்கு இடமாகிய ஐம்பெரும் பூதமும் கொள்க.

## நச்சினார்க்கினியர்

4. முதலெனப் ...................... தோரே.

இது நிறுத்த முறையானே[1] முதல் உணர்த்துவான் அதன் பகுதியும் அவற்றுட் சிறப்புடையனவும் இல்லனவுங் கூறுகின்றது.

இதன் பொருள்:- முதல் எனப்படுவது - முதலென்று சிறப்பித்துக் கூறப்படுவது, நிலம் பொழுது இரண்டின் இயல்பு என மொழிப - நிலனும் பொழுதும் என்றும் இரண்டினது இயற்கை நிலனும் இயற்கைப் பொழுதுமென்று கூறுப, இயல்பு உணர்ந்தோரே - இடமுங் காலமும் இயல்பாக உணர்ந்த ஆசிரியர் என்றவாறு.

இயற்கையெனவே செயற்கை நிலனுஞ் செயற்கைப் பொழுதும் உளவாயிற்று. மேற் 'பாத்திய' (2) நான்கு நிலனும் பொழுதும் முன்னர் அறியப்படும்.[2] முதல் இயற்கைய வென்றதனாற் கருப் பொருளும் உரிப்பொருளும் இயற்கையுஞ் செயற்

1. முன் சூத்திரத்து முதல் கரு உரிப் பொருள் என வரிசைப் படுத்திய முறை.
2. சூ. 12—15.

கையுமாகிச் சிறப்புஞ்[3] சிறப்பின்மையும்[4] உடையவாய்ச் சிறு வரவினவென மயக்கவகையாற் கூறுமாறு மேலே[5] கொள்க. இனி நிலத்தொடு காலத்தினையும் முதலென்றலிற் காலம் பெற்று[6] நிலம் பெறாத பாலைக்கும் அக்காலமே முதலாக அக்காலத்து நிகழுங் கருப்பொருளுங்[7] கொள்க. அது முன்னர்க்காட்டிய உதாரணத்துட் காண்க.

## பாரதியார்.

**4. முதலெனப் ……… உணர்ந்தோரே,**

கருத்து:- முன்னைச் சூத்திரங்கூறும் மூன்றனுள் முதற் பொருளினைத்தென இச்சூத்திரம் விளக்குகிறது.

பொருள் : முதலெனப்படுவது—முதற்பொருளென்று கூறப் படுவது; நிலம் பொழுதிரண்டினியல்பு—நிலமும் பொழுதுமாகிய இரண்டினியல்பாம் ; என மொழிப இயல்புணர்ந்தோரே—என்று சொல்லுவார் பொருளிலக்கணம் உணர்ந்த புலவர்.

குறிப்பு:- இதில் ஈற்றேகாரம் அசைநிலை.

## சிவலிங்கனார்.

உலகியல்பும் செய்யுள் இயல்பும் உணர்ந்தவர் முதற்பொருள் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவன நிலமும் காலமும் ஆகிய இரண்டின் இயற்கை நிலைகளே என்று சொல்வர்.

---

3. சிறப்பாவது அவ்வந் நிலக் கருப் பொருள் அவ்வத் திணைப் பாடலில் வருவது

4. சிறப்பின்மையாவது ஒரு நிலக் கருப் பொருள் தன் தன் நிலத்திணைப் பாடலில் வராமல் வேற்றுத்திணைப் பாடலில் வருவது.

5. சூ 12–19 மேலே கொள்க - மேற் சூத்திரங்களில் உணர்ந்து கொள்க.

6. காலம் - முதுவேனிற்காலமும் நண்பகலும்.

7. கருப்பொருள் - உலரியமரம் நீரற்ற சுனை முதலியன.

நிலத்தில் இயற்கை நிலம் என்பது மலை காடு வயல் கடல் எனும் செய்துகொள்ளப்படாத நிலங்களை. செயற்கை நிலம் என்பது கட்டுமலை அரணாக அமைக்கும் காடு, இளமரக்கா போல்வனவற்றை கட்டுமலை இளமரக்கா முதலியன சிறிய அளவினவாதலின்களவைப் பிறர்எளிதில் அறியமுடியும் ஆதலினாலும் அரணாக அமையும் காடு காவலரால் உட்பு காமல் தடுக்கப்படுதலின் களவு நிகழாதாதலினாலும் இயற்கை நிலங்களே பாடலுட்பயில்வனவாம். பொழுதில் செயற்கைப் பொழுது இல்லை.

5. **மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன்மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே**

ஆ. மொ: இல.

Forest would occupied by 'Mayon' Mountainous world occupied lay 'Seyon' Water - logged world occupied by 'Vendhan' sea - shore world occupied by Varunan' These are said to be 'Mullai', Kurinji' ,Marutham' and Neythal respectivily.

பி. இ. நூ

**நம்பி. 6, 7**

குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே
வரையே சுரமே புறவே பழனம்
திரையே அவையவை சேர்தரும் இடனே
எனவீ ரைந்தும் இயம்பிய நிலனவை

இல. வி. அ. 10

வரையே சுரமே புறவே பழனம்
திரையே அவையவை சேர்தரும் இடனே
எனவீ ரைந்தும் இயம்பிய நிலனவை
குறிஞ்சி முதலா அகன்ஐந் திணைக்கும்
உறுந்திற முறையாண் இரண்டிரண் டுரிய

தமிழ்நெறி விளக்கம் 8

பொறுப்பே வெம்பரல் புறவொடு பழனம்
பரப்பமை வாரி குறிஞ்சி முதல் பாகே

தொன் 174 முத்து. அக. 9

வரையே வனமே சுரமே மருதம்
நிரையே அளவியவை சேர்தரும் இடனே.

இளம்பூரணர்

5. மாயோன் ………… படுமே.

இது நிறுத்த முறையான்[1] நிலத்தால் திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மாயோன் மேய காடு உறை உலகமும் மாயவன் மேவிய[2] காடு பொருந்திய உலகமும், சேயோன் மேய மைவரை உலகமும் - முருகவேள் மேவிய மைவரை உலகமும், வேந்தன் மேய தீம்புனல் உலகமும் - இந்திரன் மேவிய தீம்புனல் உலகமும், வருணன் மேவிய பெருமணல் உலகமும், முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என சொல்லிய முறையால் சொல்லவும்படும் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச் சொல்லிய முறையினானே சொல்லவும் படும்.

---

1. முன் சூத்திரத்தில் நிலம் பொழுது என நிறுத்த முறை.
2. மேவிய - விரும்பிய

நிரனிறை[3] உம்மை[4] எதிர்மறையாகலான் இம்முறையன்றிப் பிறவாய்பாட்டாற் சொல்லவும்படும் என்றவாறு. காடு நாடு மலை கடல் என்பதே பெரு வழக்கு. இன்னும் "சொல்லிய முறையாற் சொல்லவும் படும்" என்றதனான், இம்முறையன்றிச் சொல்லவும் படும் என்று கொள்க. அஃதாவது அவற்றுள் யாதானும் ஒன்றை முன்னும் பின்னுமாக வைத்துக் கூறுதல். அது சான்றோர் செய்யுட் கோவையினும் பிற நூலகத்துங் கண்டு கொள்க.[5] இச் சூத்திரத்துள் காடுறை நிலம் என்னாது உலகம் என்றதனான் ஐவகைப் பூதத்தானும் ஐந்து இடம் என்பது உய்த்துணர வைத்தவாறு கண்டு கொள்க.

முல்லை குறிஞ்சி என்பன இடுகுறியோ, காரணக் குறியோ எனின், ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர்குறி என்று கொள்ளப்படும். என்னை காரணம் எனின்'

"நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவிழ் அலரி தூஉய்'
(முல்லைப்பாட்டு - 8 - 10,

என்றமையால், காடுறை உலகிற்கு முல்லைப்பூ சிறந்தது ஆக லானும்,

---

3. காடுறையுலகம் முதலிய நான்கும் நேர் வரிசை முறையில் முல்லை முதலியவற்றிற்கு இயைதல் நிரல் நிறையாகும்.

4. சொல்லவும் என்பதில் உள்ள உம்மை முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற பெயர் முறைகளாற் சொல்லப் படுதலேயன்றிப் பெருவழக்கான காடு நாடு மலை கடல் என்ற பெயராலும் சொல்லப்படும் என்பதாம்.

5. கலித்தொகை : பாலை, குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல்.
ஐங்குறுநூறு : மருதம் நெய்தல் குறிஞ்சி பாலை முல்லை
ஐந்திணை எழுபது : குறிஞ்சி முல்லை பாலை மருதம் நெய்தல்.

இப்படி முறையன்றிக் காணப்படுதல் காண்க.

6. ஏகதேச காரணம் - ஏதோ ஓர் காரணம்.

"கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"

(குறுந் - 3)

என்றவழி மைவரை உலகிற்குக் குறிஞ்சிப்பூச் சிறந்தது ஆக லானும்,

"இறாஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை உறங்குந் தண்துறை ஊர"

(அகநா - 286)

என்றவழி, தீம்புனல் உலகிற்கு மருது சிறந்தமையானும.

"பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்"

(குறுந் 9)

என்றவழிப் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும் இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டார் என்று கொள்ளப்படும்.

பாலை என்பதற்கு நிலம் இன்றேனும், வேனிற் காலம் பற்றி வருதலின் அச்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலின், அகச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறியிட்டார். கைக்கிளை பெருந்திணை என்பன வற்றிற்கு நிலமும் காலமும், பகுத்து ஓதாமையின் இவ்வாறன்றிப் பிறிதோர் காரணத்தினாற் குறியிட்டார்.[7]

## நச்சினார்க்கினியர்

### 5. மாயோன் மேய ..... ... படுமே.

இது 'நடுவணது' (2) ஒழிந்த நான்கானும் அவ் 'வைய'த்தைப் பகுக்கின்றது.

இதன் பொருள்:- மாயோன் மேய காடு உறை உலகமும்- கடல் வண்ணன் காதலித்த காடுறையுலகமும், சேயோன் மேய மைவரை உலகமும் - செங்கேழ் முருகன் காதலித்த வான் தங்கிய வரை சூழலகமும், வேந்தன் மேய தீம்புனல் உலகமும்-

---

7. முதற் சூத்திரவுரையில் காரணம் காண்க.

இந்திரன் காதலித்த தண்புனனாடும், வருணன் மேய பெரு மணல் உலகமும் - கருங்கடற் கடவுள் காதலித்த நெடுங்கோட் டெக்கர் நிலனும், முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச் சொல்லிய முறையால் சொல்லவும் படுமே - முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென ஒழுக்கங் கூறிய முறையானே சொல்லவும் படும் என்றவாறு.

இந் நான்கு பெயரும் எண்ணும்மையோடு நின்று எழுவா யாகி, 'சொல்லவும்படும்' என்னுந் தொழிற் பயனிலை கொண் டன. என்றது இவ்வொழுக்கம் நான்கானும் அந்நான்கு நிலத் தையும் நிரனிறை வகையாற் பெயர் கூறப்படுமென்றவாறு. எனவே, ஒழுக்கம் நிகழ்தற்கு நிலம் இடனாயிற்று.

உம்மை எதிர்மறையாகலின், இம்முறையன்றிச் சொல்ல வும் படுமென்பது பொருளாயிற்று. அது தொகைகளினுங்[1] கீழ்க்கணக்குக்களினும்[2] இம்முறை மயங்கி வரக் கோத்தவாறு காண்க.

முல்லை நிலத்துக் கோவலர், பல்லா பயன் தருதற்கு மாயோன் ஆகுதி பயக்கும் ஆபல காக்கவெனக் குரவை த்தீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு அவன் வெளிப்படுமென்றார்.

உதாரணம்:- 'அரைசுபடக் 'கடந்தட்டு' என்னு முல்லைக் கலியுள்,

"பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
வாடுகொ ணேமியாற் பரவுதும்" (கலி-105)

எனவரும்.

"படையிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும்
பாலொடு கோட்டம் புகின்" (கலி-109)

என அவன் மகனாகிய காமனும் அந்நிலத்திற்குத் தெய்வ மாதல் 'அவ்வகை பிறவுங் கருவென மொழிப' (18) என்புழி வகையென்றதனாற் கொள்க.

---

1. தொகைகள். எண்ணுத் தொகை கொடுத்துக் கூறப் படும் அகநானூறு நற்றிணை நானூறு ஐங்குறு நூறு முதலிய நூல்கள்

2. கீழ்க்கணக்குகள். ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழு பது திணை மாலை நூற்றைம்பது முதலிய நூல்கள்.

இனி, குறிஞ்சி நிலத்திற்குக் குறவர் முதலியோர் குழீஇ வெறியயர்தற்கு வேண்டும் பொருள்கொண்டு வெறியயர்பவா கலின், ஆண்டு முருகன் வெளிப்படுமென்றார்.

அது, 'அணங்குடை நெடுவரை' என்னும் அகப்பாட்டினுள்,

"படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவ ளிவள்"

(அகம்-22)

எனவரும். சூரர மகளிரொ டுற்ற சூளே என்புழிச் சூரர மகளிர் அதன் வகை.

இனி ஊடலுங் கூடலுமாகிய காமச் சிறப்பு நிகழ்தற்கு மருத நிலத்திற்குத் தெய்வமாக 'ஆடலும் பாடலு மூடலு முணர்தலும்' உள்ளிட்ட இன்ப விளையாட்டு இனிது நுகரும் இமையோர்க்கும் இன்குரலெழிலிக்கும்[1] இறைவனாகிய இந்திரனை ஆண்டையோர் விழவு செய்து அழைத்தலின் அவன் வெளிப்படுமென்றார்.

அது

"வையைப் புதுப்புன லாடத் தவிர்ந்தமை
தெய்வத்திற் றேற்றித் தெளிக்கு"

(கலி-98)

என இந்திரனைத் தெய்வமென்றதனானும், இந்திர விழ வூரெடுத்த காதையானும் உணர்க.

இனி நெய்தனிலத்தில் நுளையர்க்கு வளைவளந்தப்பின் அம்மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக் கோடு நட்டுப் பரவுக் கடன் கொடுத்தலின், ஆண்டு வருணன் வெளிப்படு மென்றார். அவை,

"சினைச் சுறவின் கோடு நட்டு
மனைச் சேர்த்திய வல்லணங்கினான்"

(பட்டின - 86 - 87)

எனவும்,

"கொடுஞ்சுழிப் புகா அர்த் தெய்வ நோக்கி"

(அகம் - 110)

எனவும்,

---

1. இன்குரல்எழிலி — இடியுடன் கூடிய மேகம்.

"அணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி
யாயு மாயமொ டயரும்" (அகம்-240)

எனவும் வரும்.
இனிப் பாலைக்கு,

"சினைவாடச் சிறக்குநின் சிறந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ"
(கலி-16)

எனவும்,
"வளிதரு செல்வனை வாழ்த்தவு மியை வதோ"
(கலி- 16

எனவும் ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற் றோன்றிய மழையினையுங் காற்றினையும் அத்தெய்வப் பகுதியாக்கிக் கூறுபவாலெனின், எல்லாத் தெய்வத்திற்கும் அந்தணர் அவி கொடுக்குங்கால் அங்கி ஆதித்தன்கட் கொடுக்கு மென்பது வேதமுடிபாகலின், ஆதித்தன் அவ்வெல்லா நிலத்திற்கும் பொது வென மறுக்க. இவ்வாசிரியர் கருப்பொருளாகிய தெய்வத்தினை முதற் பொருளோடு கூட்டிக் கூறியது தெய்வவழி பாட்டு மரபு இதுவே, ஒழிந்தது மரபன்றென்றற்கு. எனவே அவ்வந் நிலத்தின் தெய்வங்களே பாலை நிலத்திற்குந் தெய்வமாயிற்று.

உறையுலகென்றார், ஆவும் எருமையும் யாடும் இன்புறு மாற்றான் நிலைபெறும் அக்காட்டின் கடவுளென்றற்கு மைவரை எனவே மழைவளந்தவிக்கும் முருகவேளென்றார் இந்திரன் யாற்றுவளனும் மழைவளனுந் தருமென்றற்குத் தீம்புன லென்றார் திரை பொருது கரை கரையாமல் எக்கர் செய்தல் கடவுட் கருத்தென்றற்குப் பெருமணலென்றார்.

இனி, முல்லை, குறிஞ்சி, மருதம் நெய்தல் என்ற முறை யென்னை, யெனின், இவ்வொழுக்க மெல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்கமாதலின், கற்பொடு பொருந்திக் கணவன் சொற் பிழை

யாது இல்லிருந்து நல்லறஞ் செய்தல் மகளிரது இயற்கை முல்லை[2] யாதலின் அது முற்கூறப்பட்டது. எனவே, முல்லையென்ற சொற்குப் பொருள் இருத்தலாயிற்று. முல்லை சான்ற முல்லையம் புறவின்[3] என்பவாகலின். புணர்தலின்றி இல்லறம் நிகழாமையிற் புணர்தற் பொருட்டாகிய குறிஞ்சியை அதன் பின் வைத்தார். இதற்கு தாரணம் இறந்தது. கருங்காற் குறிஞ்சி சான்றவெற் பணிந்து' என்பது கரு.[4] புணர்ச்சியின் பின் னூடல் நிகழ்தலின் அதன்பின் மருதத்தை வைத்தார். 'மருதஞ் சான்ற மருதத் தண்பனை' என்புழி மருதமென்றது ஊடியுங் கூடியும் போகம் நுகர்தலை. பரத்தையிற் பிரிவுபோலப் பிரிவொப்புமை நோக்கி நெய்தலை ஈற்றின் கண் வைத்தார். நெய்தற் பறையர்வது இரங்கற் பறையாதலின், நெய்தல் இரக்கமாம்.

"ஐதக லல்குன் மகளிர்
நெய்தல் கேளன்மார் நெடுங்கடை யானே"

என வரும். (புறம்-389)

இனி இவ்வாறன்றி முல்லை முதலிய பூவாற் பெயர் பெற்றன இவ்வொழுக்கங்களெனின், அவ்வந்நிலங்கட்கு ஏனைப்பூக்களும் உரியவாகலின் அவற்றாற் பெயர் கூறலும் உரியவெனக் கடாவு வாற்கு விடையின்மை உணர்க,

இதனானே நடுவுநிலைத்திணை யொழிந்த நான்கற்கும் பெயரும் முறையுங் கூறினார். இந்நான்கும் உரிப் பொருளாதல் 'புணர்தல் பிரிதல்' (14) என்புழிக் கூறுதும் கருப்பொருளாகிய

---

2. முல்லை - கற்பு - முல்லை கற்புக்கடையாளம் - கற்பை உறுதிப்படுத்துவது ஆற்றியிருத்தலாதலின் இருத்தல் முல்லை எனப்பட்டது.

3. இருத்தல் அமைந்த முல்லைக்காடு சிறுபாண் 169.

4. கரு - காரணம் கருங்காற் குறிஞ்சி என்ற அடையால் குறிஞ்சி என்றது புணர்தல் ஒழுக்கத்தைக்குறியாது எனினும் கருங்கால் என்றது வாளா நின்றது எனின் பொருந்தும்.

தெய்வத்தை முதற்பொருளோடு கூறியது அவை 'வந்த நிலத்தின் பயத்தவாய்' (19) மயங்குமாறு போல மயங்காது இதுவேயென்றற்கும், கருப்பொருளுடைத் தெனப்பட்ட பாலைக்குத் தெய்வத்தை விலக்குதற்கும்[1] என்றுணர்க.

உதாரணம் :-

"வன்புலக் காட்டுநாட் டதுவே" (நற்றிணை - 59)

எனவும்,

"இரும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
...........கன்மிசைச் சிறுநெறி" (அகம் - 128

எனவும்,

"அவ்வய னண்ணிய வளங்கே ழூரனைப்
புலத்தலுங் கூடுமோ தோழி" (அகம் - 26)

எனவும்,

"கானலுங் கழறாது.........மொழியாது (அகம் - 170)

எனவும் நால்வகை யொழுக்கத்திற்கு நால்வகை நிலனும் உரியவாயினவாறு காண்க.

பாரதியார்.

4. மாயோன்............படுமே.

கருத்து :- இது மேலே இரண்டொரு சூத்திரத்துட் கூறியாங்கு, நானிலம் முறையே நான்குதிணைக்கு உரிமை பெறுமுறை கூறி, நில முதற்பொருள் திணையுரிப் பொருளொ டியையுமாறு விளக்குகிறது.

பொருள் :- மாயோன்மேய காடுறையுலகமும் - கருநிறக் கடவுள் உறைவிடமாகிய நிரைமேயும் காட்டு நிலப் பகுதியும்; சேயோன்மேய மைவரையுலகமும் — செவ்வேளுரையும் மஞ்சுதவழும மலைநிலப்பகுதியும்; வேந்தன்மேய தீம்புனலுலகமும் இந்திரனுக்கிருப்பிடமாகிய இனி புனல்நிறை நிலப்பகுதியும்;

---

1. பாலைக்கு நிலம் இல்லையாதலின் தெய்வமும் இல்லை என்பது இவர் கருத்துப் போலும்.

வருணன்மேய பெருமணலுலகமும் - கடல்கெழுகடவுளாகிய வருணன் விரும்பும் அகன்ற மணல் நிலப்பகுதியும்; முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே - முறையே முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற திணைவரிசையாற் சொல்லவும் படும்.

குறிப்பு :- சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே என்பதனால், இந்த நற்றிணைக்குரிய நானிலங்களும் ஈண்டுச் சொல்லாத வேறுமுறையாலும் கூறப் பெறும் என்பது பெறப் படும். இதில் நானிலப்பகுதியும் அவற்றிற்குரிய திணைப் பெயரும் நிரல் நிரையால் கூறப்பெற்றன, ஈண்டுக் கூறப் பெற்ற மாயோனுஞ் சேயோனுத் கருநிறக் கடவுளுஞ் செவ்வேளு மாகத் தொன்று தொட்டுத் தமிழர் தொழும் கடவுளராவர். கருநிறத்தைப் பழிப்பதன்றிப் பாராட்டுதல் தொல்லாரியர் வழக்கன்று: தமிழிலோ எழில் பாராட்டி "மாயோன்" எனவும் "மாயோயே" எனவும் வரும் பழம்பாட்டுகளின் தொடர்களும் குறிப்புகளும் இங்குச் சிந்திக்கத்தக்கனவாம். இனி, இந்திரனும் வருணனும் ஆரியர் வழிபடுங் கடவுளராய்க் கருதப் பெறினும், அறப்பழங்காலத்தே அவர் தமிழர் வழிபட்ட தெய்வங் களாகவும், பிறகு அவரிடம் ஆரியர் வாங்கித் தம் வழிபடு கடவுளராக்கிக் கொண்டன ரெனவும் சில மேனாட்டுப் புலவரின் ஆராய்ச்சிக் கட்டுரைகளால் அறிகின்றோம். உண்மை யெதுவாயினும் பண்டைக் காலமுதல் இக்கடவுளர் பெயரும் வழிபாடும் தமிழகம் அறிந்ததென்பது தெளியப்படும்.

இச்சூத்திரத்தானும் முதற்பொருளின் முதற்பிரிவான நிலத் தியல்பும் திணைத்தொடர்பும் கூறப்பெற்றன. இனிவருஞ் சூத்திரங்களால் அதன் இரண்டாம் பிரிவான காலவியல்பும் பாகு பாடுகளும் கூறப்படும்.

## சிவலிங்கனார்

காடு பசுமை நிறமுடையது; தொலைவில் கருநிறமாகக் காணப்படுவது; ஆதலின் அதில் மேவியவன் மாயோன் (கரியன்) எனப்பட்டான். காடு மறைவிடம். அதனால் அதில் மேவியவன் மாயோன் (மறைபவன்) எனப்பட்டான் எனினுமாம்.

மலைசெந்நிறமுடையது; அதனால் அதில் மேவியவன் சேயோன் எனப்பட்டான் மலை சேய்மையில் உள்ளார்க்கும் தெரிவது. அதனால் சேயோன் எனப்பட்டான் எனினுமாம்.

வயலும் வயல்சூழ்ந்த இடமும் வளமுடையன. மற்லை நிலத்தார்க்கு உணவுதருவன வயல் வளம் சேர்க்க உழவர் பலர் தேவை. அவர்க்குத் தலைவன் தேவை. அத்தலைவன் வேந்தன் (வேந்து-தலைமை) எனப்பட்டான்.

கடல் நோக்கி வழிபடுவோர்க்குக் கடலில் தோன்றிவந்து அருள் செய்பவன் வருநன் எனப்பட்டான். வருநன் வருணன் ஆயிற்று.

காடுறையுலகம் முதலியவற்றுக்கு முல்லை முதலாகப் பெயர் வந்தது முல்லை முதலாகிய மலர்களால் என்பதும் முல்லை யொழுக்கம் முதலியவற்றால் என்பது முல்லை யொழுக்கம் முதலியவற்றால் என்பதுமாகிய கருத்துகள் உண்டு. அவ்வந் நிலங்களில் பெரும்பான்மையாவும் சிறப்பாகவும் அமைந்த மலர்களாலேயே (மரத்தாலேயே) நிலங்களுக்குப் பெயர் அமைந்தன எனவும், பின்னர் நூலார் அவ்வந்நிலத்து ஒழுக்கங்களுக்கு முல்லை முதலாகப் பெயர் அமைத்தனர் எனவும் கொள்வதே நன்று குறிஞ்சிப்பூ பன்னிரண்டாண்டுக்கு ஒருமுறை பூக்கும் சிறப்புடைமை கருதி மலைக்குக் குறிஞ்சியென அப்பூவால் பெயர் அமைந்தது.

ஆசிரியர் முதற் சூத்திரத்தில் அகன் ஐந்திணை உண்டென்றும் அடுத்து அவற்றுக்கு நிலம் கூறுமுன் பாலைக்கு நிலம் இன்று என்றும் அடுத்து ஒழுக்கம் கூறும் செய்யுளில் முதல் கரு உரிப்பொருள் உண்டு என்றும் அடுத்து முதற்பொருள் நிலமும் பொழுதும் என்றும் அம்முதற் பொருளுள் நிலம் பற்றி இச் சூத்திரத்தும் கூறிவரும் முறையை நோக்கும்போது, அகவொழுக்க அடிப்படையிலேயே கூறிவருவது புலனாம். அந்நிலையில் காடுறையுலகம் முதலிய நான்கும் முல்லை முதலிய நான்கன் பெயர்களால் கூறவும் படும் என்பது கொண்டு அந்நிலங்களுக்கு முல்லை முதலிய ஒழுங்கங்களாலேயே முல்லை முதலிய பெயர்கள் அமைந்தன என்பது ஆசிரியர் கருத்து எனலாம். ‘சொல்லிய முறையாற் சொல்லவும் படும்’ என்பதில் உம்மையை எச்சவும்மையாக்கி உலகினரால் முல்லை முதலிய மலரடிப்படையில் சொல்லப்படுதலேயன்றி நூலோரால் முல்லை முதலிய ஒழுக்க அடிப்படையிலும் கூறப்படும் என்றார் ஆசிரியர் எனக் கொள்ளலாம்.

**6. காரும் மாலையும் முல்லை.**

ஆ. மொ. இல.

இதை அடுத்த சூத்திரத்தில் இணைத்துக் காண்க.

பி. இ. நூ.

**நம்பி. 15.**

மல்குகார் மாலை முல்லைக் குரிய.

**இல. வி. அ. 14.**

மல்குகார் மாலை முல்லைக்கு வகுத்தல்.

**முத்து அக. 14.**

காரும் மாலையும் காட்டிற் குரிய.

7. குறிஞ்சி

**கூதிர் யாமம் என்மனார் புலவர்.** (7)

ஆ. மொ. இல.

முன் சூத்திரத்தையும் இணைத்துக் காண்க.

The rainy season and evening belong to 'Mullai' and the cold season and midnight to 'Kurinji'

பி. இ. நூ.

அடுத்த சூத்திரத்துக் காண்க.

இளம்பூரணர்

**6. காரும் ......... முல்லை.**

---

* இச் சூத்திரத்தையும் அடுத்து வரும் சூத்திரத்தையும் சேர்த்து ஒரு சூத்திரமாக வுரைப்பர் நச்சினார்க்கினியர்.

இனிக் காலத்தால் திணையாமாறு உணர்த்துவான் எடுத்துக் கொண்டார். இஃது அவற்றுள் முல்லைத்திணைக்குக் காவல் வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று

(இ-ள்) காரும் மாலையும் முல்லை கார்காலமும் மாலைப் பொழுதும் முல்லைத் திணைக்குக் காலமாம்.

காராவது மழை பெய்யுங்காலம். அஃது ஆவணித் திங்களும் புரட்டாசித் திங்களும். மாலையாவது இராப் பொழுதின் முற்கூறு.

**7. குறிஞ்சி, கூதிர் ......... புலவர்.**

இது குறிஞ்சிக்குக் காலம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) குறிஞ்சி - குறிஞ்சித் திணைக்குக் காலமாவது, கூதிர் யாமம் என்மனார் புலவர் - கூதிர் காலமும் யாமப் பொழுதும் என்று கூறுவர் புலவர்.

கூதிராவது ஐப்பசித் திங்களும் கார்த்திகை திங்களும்.
யாமமாவது இராப்பொழுதின் நடுக் கூறு.

## நச்சினார்க்கினியர்

**6. காரு மாலையு ......... புலவர்.**

இது முதலிரண்டனுள் நிலங் கூறிக் காலங் கூறுவான் முல்லைச்கும் குறிஞ்சிக்கும் பெரும் பொழுதுஞ் கிறுபொழுதுங் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :- காரும் மாலையும் முல்லை - பெரும் பொழுதினுட் கார்காலமுஞ் சிறுபொழுதினுள் அக்காலத்து மாலையும் முல்லையெனப்படும்; குறிஞ்சி கூதிர் யாமம் என் மனார் புலவர் - பெரும் பொழுதினுட் கூதிர்க் காலமுஞ் சிறு பொழுதினுள் அதன் இடையாமமும் குறிஞ்சி எனப்படும் என்றவாறு.

முதல்கரு உரிப்பொருளென்னும் மூன்று பாலுங் கொண்டு ஓர் திணையாமென்று கூறினாரேனும் ஒரு பாலினைந்திணை யென்று அப்பெயரானே கூறினார் ; வந்தான் என்பது உயர்

திணை என்றாற்போல[1] இது மேலனவற்றிற்கும் ஒக்கும்[2] இக் காலங்கட்டு விதந்து ஓர் பெயர் கூறாது. வாளா கூறினார். அப்பெயர் உலக வழக்காய் அப்பொருள் உணர நிற்றலின். காலவுரிமை எய்திய ஞாயிற்றுக்கு உரிய சிங்கவோரை முதலாகத் தண்மதிக்கு உரிய கற்கடகவோரையீறாக வந்து முடியுந்துணை ஓர் யாண்டாமாதலின் அதனை இம்முறையானே அறுவகைப் படுத்து இரண்டு திங்கள் ஒரு காலமாக்கினார்.[4] இனி ஒரு நாளினைப் படுசுடாமையந்[5] தொடங்கி மாலையெனவும், அதன் பின் இடையாமமெனவும் அதன்பின் வைகறையெனவும், அதன் பின் காலையெனவும் அதன்பின் நண்பகலெனவும், அதன்பின்

---

1. முதல்கரு ... என்றாற்போல— விளக்கம். ஒரு திணை என்பது முதல்கரு உரி என்ற மூன்றும். ஆம் இச் சூத்திரத்தில் காரும் மாலையும் முல்லைத் திணையாம் என்று பொழுதை மட்டும் திணையென்றார் இது எது போல்வது எனின், ஆண் பெண் பலர் என்பன மூன்றும் உயர்திணை எனப்படுமாயினும் வந்தான் என ஆண் பாலை மட்டில் குறித்தால் அதுவும் உயர்திணை எனப் படுதல் போலாம் என்க.

2. மேல்வரும் குறிஞ்சி முதலியவற்றுக்கும் ஒக்கும்.

3. கார்காலவது ஆவணி புரட்டாசித் திங்கள் என விதந்து கூறாமல் கார் என்றே கூறியது ஏன் எனின் கார் காலம் என்றாலே அத்திங்கள்களை உலகத்தாரால் உணரப்பட்டு நிற்கும் ஆதலின்.

4. காலவுரிமை—காலமாக்கினார் : காலத்தைப் பாகுபடுத்த ஞாயிற்றை அடிப்படையாகக் கொள்ளலின் ஞாயிறு காலவுரிமையுடையதாயிற்று ஞாயிற்றுக்குரிய மாதம் ஆவணி திங்களுக்குரிய மாதம் ஆடி. ஆவணி முதலாக ஆடிவரையுள்ள 12 மாதங்களை ஓர்யாண்டு என வரையறுத்தனர். அவற்றை இவ்விரண்டுமாதங்களைக் கார் முதலிய ஆறுபருவங்களாக வகுத்தனர்.

5. படுசுர் அமையம்—சுடர்படு அமையம் என்க. ஞாயிறு மறையும் நேரம்.

ஏற்பாடெனவும் ஆறாகப் பகுத்தார். அவை ஒரோவொன்று பத்துநாழிகையாக இம்முறையே சூத்திரங்களுட் சிறுபொழுது வைப்பர் பின்பனியும் நண்பகலும் பிற்கூறிய காரணம் அச் சூத்திரத்துட் கூறுதும்.

முல்லைக்குக் காரும் மாலையும் உரியவாதற்குக் காரண மென்னை யெனின், பிரிந்து மீளுந் தலைவன்றிறமெல்லாம் பிரிந்திருந்த கிழத்தி கூறுதலே முல்லைப் பொருளாயும், பிரிந்து போகின்றான் திறங்கூறுவனவெல்லாம் பாலையாயும் வருதலின், அம்முல்லைப் பொருளாகிய மீட்சிக்குந்தலைவி இருத்தற்கும் உபகாரப்படுவது கார்காலமாம். என்னை? வினைவயிற் பிரிந்து மீள்வோன், விரை பரித்தேரூர்ந்து பாசறையினின்று மாலைக் காலத்து ஊர்வயின் வருஉங்காலம் ஆவணியும் புரட்டாதியும் ஆதலின், அவை வெப்பமுள் தட்பமும் மிகாது இடை நிகர்த்தவாகி ஏவல் செய்துவரும் இளையர்க்கு நீரும் நிழலும் பயத்தலானும், ஆர்பதம்[6] மிக்கு நீரும் நிழலும் பெறு தலிற் களிசிறந்து மாவும் புள்ளுந் துணையோடின்புற்று விளை யாடுவன கண்டு தலைவற்குந் தலைவிக்குங் காமக்குறிப்பு மிகு தலானுமென்பது. புல்லைமேய்ந்து கொல்லேற்றோடே புனிற் றாக் கன்றை நினைந்து மன்றிற் புகுதரவும் தீங்குழ லிசைப்ப வும் பந்தர்முல்லை வந்து மணங்கஞற்றவும் வருகின்ற தலை வற்கும் இருந்த தலைவிக்குங் காமக் குறிப்புச் சிறத்தலின் அக் காலத்து மாலைப்பொழுதும் உரித்தாயிற்று.

இனிக் குறிஞ்சியாவது புணர்தற்பொருட்டு. அஃது இயற்கைப் புணர்ச்சி முதலியனவாம். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் அளவு நீட்டிப்பக் கருதுந் தலைவற்கு அக்களவினைச் சிறப் பிக்குங்கால், தலைவி அரியளாக வேண்டுமாகவே அவ்வரு மையை ஆக்குவது ஐப்பசியுங் கார்த்திகையுமாகிய கூதிரும் அதன் இடையாமமு மென்பது. என்னை?[7] இருள் தூங்கித்

---

6. ஆர்பதம்—உணவு

7. பாக! காரும் ஆர்கலி தலையின்று; மாலை புதல்வர்ப் பொய்க்கும் பூங்கொடி நிலையைத் தேர்கடவிக் காண் குவம் என்றலின் பாகற்குரைத்த உரிப்பொருள் காண்க. கார் எனவும் மாலை எனவும் வந்தன பொழுதுகள்.

துளி மிகுதலிற் சேறல் அரிதாதலானும், பானாட் கங்குலிற் பரந்துடன் வழங்காது மாவும் புள்ளுந்துணையுடன் இன்புற்று வதிதலிற் காமக் குறிப்புக் கழியப்பெருகுதலானும் காதன்மிகுதி நோக்காது வருந்தலைவனைக் குறிக்கண் எதிர்ப்பட்டும் புண ருங்கால் இன்பம் பெருகுதலின், இந்நிலத்திற்குக் கூதிர்க்காலஞ் சிறந்ததெனப்படும்.

உதாரணம் :—

விருந்தின் மன்ன ரருங்கலந் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன் றீம்பெயர
காரு மார்கலி தலையின்று தேரு
மோவத் தன்ன கோபச் செந்நிலம்
வள்வா யாழி யுள்ளுறு புருளக்
கடவிக் காண்குவம் பாக மதவுநடைத்
தாம்பசை குழவி வீங்குசுரை மடியக்
கனையலங் குரல காற்பரி பயிற்றிப்
படுமணி மிடற்ற பயநிரை யாயங்
கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்
கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க
மனை மனைப் படரு நனைநகு மாலைத்
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்கா னெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி அவையிற் றீவிய மிழற்றி
முகிழ்நிலாத் திகழ்தரு மூவாத் திங்கள்
பொன்னுடைத் தாலி யென்மக னொற்றி
வருகுவை யாயிற் றருகுவென் பாலென
விலங்கமர்க் கண்ணள் விரல்விளி பயிற்றிந்
திதலை யல்குலெங் காதலி
புதல்வர்ப் பொய்க்கும் பூங்கொடி நிலையே''

இது பாகற்குரைத்தது. (அகம்-64)

இது முல்லைக்கட் காரும் மாலையும் வந்தது[7]

''மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே
கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே
யாமங் கொளவரிற் கனைஇக் காமங்
கடலினு முரைஇக் கரைபொழி யும்மே

யெவன்கொல் வாழி தோழி மயங்கி
யின்ன மாகவு நன்னர் நெஞ்ச
மென்னோடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக்
கிறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கானக நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்
பிட்டருங் கண்ண படுகுழி யியவி
னிருளிடை மதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே.'' (அகம்-128)

இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்கு உரைப்பாளாக உரைத்தது.

இது குறிஞ்சிக்குக் கூதிரும் யாமமும் வந்தது[8]

நிலனும் பொழுதும் முதலென்றமையிற் கார் முதலாதல் வேண்டும்; வேண்டவே, அதற்கிடையின்றிக் கூறிய மாலையும் அதன் சினையாமாதலின், கார்காலத்து மாலையென்பது பெற்றாம்.[9] இது கூதிர் யாமம் என்பதற்கும் ஒக்கும்.

பாரதியார்.

6. காரு மாலை ......... புலவர்

கருத்து :- இது முதல் 101 வரை ஆறு சூத்திரங்கள் கால முதற்பொருள் திணையுரிப் பொருளுக்கு உரிமை கொள்ளுமாறு கூறுகிறது.

---

8. தலைவி கூற்று. 'தோழீ' யாம் வருந்தி இங்கிருக்கவும் நம் நெஞ்சம் இரவில் மாரிவானம் பொழிய நீர்நிறைந்த படுகுழிகளைத் தலைவன் கடக்கும் அவள் கால்களைத் தாங்கும் பொருட்டு அவனிடம் சென்றது என்னே!'' - இது உரிப்பொருள் மாரிவானம் தலைஇ என்பது கூதிர் காலத்தைக் குறிப்பது யாமம் சிறுபொழுது.

9. மாலை எல்லாப் பருவத்தும் வருவதாயினும் காரும் மாலையும் எனச் சேர்த்துக் கூறலின் கார்காலத்து மாலை எனக் கொள்க. பிற காலங்களிலும் அவ்வாறே கொள்க.

பொருள் :- காரும் மாலையும் முல்லை - கார்காலமாகிய பெரும் பொழுதும், மாலையாகிய சிறுபொழுதும் முல்லைத் திணைக்குச் சிறந்தன; குறிஞ்சி கூதிர் யாமம் - கூதிரென்னும் பின்பெயர் சிறுபொழுதும் குறிஞ்சித் திணைக்குச் சிறந்தன; என்மனார் புலவர் - என்று கூறுவர் புலவர்.

குறிப்பு :- ஓராண்டு - இளவேனில், முதிர்வேனில், கார் கூதிர், முன்பனி, பின்பனி, என இவ்விரண்டு திங்கள் கொண்ட பருவம் அல்லது பெரும் பொழுது ஆறாகப் பகுக்கப்படும். இதில் கார் காலம் முன்பெயற்காலமான ஆவணியும் புரட்டாசி யும் எனத் திங்களிரண்டுகொண்ட பெரும் பொழுதாகும்.

பகல்—விடியல் அதாவது காலை, நண்பகல் எற்பாடு எனவும், இரவு—மாலை, யாமம், வைகறை யெனவும், பகல் மூன்று இரவு மூன்றாக ஆறு சிறுபொழுதுகள் கூடியது ஒரு நாளாகும். ஈண்டு 'யாமம்' என்பது நள்ளிரவு (இரவின் நடுக் கூறு) குறிக்கும் தமிழ்ச்சொல்; ஏழரை நாழிகைகொண்ட நாளின் எட்டிலொரு பகுதி சுட்டும் சாமம், வடசொல். இவற்றை ஒன்றெனக்கருதி மயங்குதல் தவறு.

காரு மாலையும் முல்லைக்குச் சிறத்தலுக்குச் செய்யுள் :-

"முகை முற்றினவே முல்லை. முல்லையொடு தகை முற் றினவே தண்கார், வியன்புலம் வாலிழை, நெகிழ்த்தோர் வாரார், மாலை வந்தன்றென் மாணலங் குறித்தே." (குறுந்-188)

இதில், குறித்த பருவத்தில் வாராத் தலைவன் பிரிவால் வருந்தி இருக்கும் தலைவிக்குக் காரும் மாலையும் துன்பம் தருதல் கூறுத லால் முல்லைக்குரிய பருவம் பொழுதும் ஒருங்குற்ற பெற்றியறிக.

"பழ மழை கலித்த ... ... ...

... ... ... ... ... ...

வண்டுசூழ் மாலையும் வாரார்
கண்டிசிற் றோழி, பொருட் பிரிந்தோரே."

(குறுந்-220)

என்பது மிதுவே,

இளிக் கூதிரும் யாமமும் குறிஞ்சிக் காதற்குச் செய்யுள் வருமாறு :-

"சிறைபனி யுடைந்த சேயரி மழைக்கட்
பொறையரு நோயொடு புலம்பலைக் கலங்கிப்
பிறரும் கேட்குந ருளர்கொல்? உறைசிறந்
தூதை தூற்றுங் கூதிர் யாமத்
தானுளம் புலம்புதொ றுளம்பும்
நாநவில் கொடுமணி நல்கூர் குரலே."

(குறுந்-86)

இதில் கூதிரும் யாமமும் கூடுதலாகிய காலம் குறிஞ்சிக் குரித்தெனல் காண்க. "காம மொழிவதாயினும்" எனும் கபிலர் குறும்பாட்டில் (42) யாமமும். "யாது செய்வாங்கொல் தோழி" எனும் நன்னாகையார் குறும்பாட்டில் (197) கூதிரும் குறிஞ்சிக் குரித்தாதல் குறிக்கப்படுதலுமறிக.

**8. பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப (8)**

ஆ.மொ.இல.

The dewy season also belongs to
'Kurinji'—say the scholars.

பி.இ.நா.

**நம்பி 13.**

கூதிர் யாமம் முன்பனி என்றிவை
ஓதிய குறிஞ்சிக் குரிய வாகும்.

**இல.வி அ. 14.**

கூதிர் யாமம் முன்பனி என்றிவை
ஓதிய குறிஞ்சிக் குரிய வாதலும்.

**முத்து அக 14, 15**

கூதிரும் யாமமும் குறிஞ்சிக் குரிய
பனி யெதிர் பருவமும் உரிய தாகும்.

**இளம்பூரணர்**

**8. பனிஎதிர் ........ மொழிப.**

இஃது எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ-ள்) பனிஎதிர் பருவமும் உரித்து எனமொழிப முன் பனிக்காலமும் உரித்தென்று சொல்லுவர்.[1]

இதனைக் கூதிர்க் காலத்தோடு ஒருங்கு கூறாமையின், அத்துணைச் சிறப்பிற்று அன்றெனக் கொள்க. குறிஞ்சி என்றது அதிகாரத்தான் வந்தது.

முன்பனிக் காலமாவது மார்கழித் திங்களும் தைத்திங்களும். உம்மை இறந்தது தழீஇய[2] எச்ச உம்மை.

(8)

## நச்சினார்க்கினியர்

7. பனியெதிர் ........... மொழிப.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறியது; முற்கூறிய குறிஞ்சிக்கு முன்பனியும் உரித்தென்றலின்.

இதன்பொருள் :- பனிஎதிர் பருவமும் உரித்துஎன மொழிப- பனி முற்பட் பருவமுங் குறிஞ்சிக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

எதிர்தலென்பது முன்னாதல்; எனவே, முன்பனியாயிற்று. அது ஞாயிறுபட்ட அந்திக்கண் வரும்

உரித்தென்றதனாற் கூதிர்பெற்ற யாமமும் முன்பனி பெற்று வரும் எனக் கொள்க.

உதாரணம் :

''பனியடூஉ நின்ற பானாட் கங்குற்
றமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய வலைத்தி முரணில் காலை.''

(அகம்-124)

என முன்பனியாமங் குறிஞ்சிக் கண் வந்தது.

---

1. குறிஞ்சிக்கு உரித்தென்று சொல்லுவர்.
2. முன் சூத்திரத்துக்கூறிய கூதிர்ப் பருவத்தைத்தழுவியது.

பாரதியார்.

7. **பனியெதிர் ......... மொழிப**

பனியெதிர் பருவமு முரித்தென மொழிப.

கருத்து : இது மேலைச் சூத்திரத்திற்கோர் புறனடை; முன்பனியும் குறிஞ்சிக் குரித்தா மெனக் கூறுகிறது.

பொருள் :- பனியெதிர் பருவமும்-முன்பனிக் காலமும், உரித் தென மொழிப - குறிஞ்சித் திணைக்குரியதெனக் கூறுவர் (புலவர்)

குறிப்பு :- பனி எதிர்பருவம் எனவே, மாலையிற் பனி தோன்றும் முன்பனிக் காலமாயிற்று. முன்பனிக் காலமாவது மார்கழி தை எனுந்திங்களிரண்டு கொண்ட பெரும் பொழுதாம். 'பருவமும்' என்பதிலும்மை குறிஞ்சித்திணைக்குக் கூதிரேயன்றி இப்பருவமும் உரியதாம் எனப்பொருள் தருதலால், இறந்தது தழீஇய எச்சவும்மை. 'மொழிப' என்பதனால் அதற்குரிய எழு வாயான புலவர் என்பது அவாய் நிலையாற் கொள்ளப்படும். முன் பனிப்பருவம், கூடற்குரியது. பிரிவரியது, என்பதற்குச் செய்யுள் :

"உள்ளார் கொல்லோ, தோழி!
மழைகழி விசும்பின் மாறி ஞாயிறு
விழித்திமைப் பதுபோல் விளங்குபு மறைய
எல்லை போகிய பொழுதின் எல்லுறப்
பனிக்கால் கொண்ட பையுள் யாமத்துப்
பல்லித ழுண்கண் கலுழ
நில்லாப் பொருட் பிணிப் பிரிந்திசி னோரே."

எனும் நற்றினைப் (241-ஆம்) பாட்டில், பின் பெயலாகிய கூதிர்கழிந்த பின் முன்பனிப்பருவ யாமப் பொழுது குறிஞ்சி யாகிய கூடற்குரிமையும் பிரிவருமையும் ஆதலறிக. "கொண்ட லாற்றி" எனும் நற்றிணைப் (89-ஆம்) பாட்டில்.

"மாமழை அழிதுளி கழிப்பிய
வழிபெயற் கடைநாள் இரும்பனிப் பருவத்து,
இன்னும் வருமே தோழி, வாரா
வன்க ணாளரோ டியைந்த
புன்கண் மாலையும் புலம்புமுந் துறத்தே".

என்பதுமது. இதில் வழிபெயற் கடைநாள் இரும் பனிப் பருவம் எனவே, பின்பெயற் கூதிர் கழிந்த முன்பனி எனத் தெளிக்கப்பட்டது.

**9. வைகறை[1] விடியல் மருதம் ***

ஆ. மொ. இல.

அடுத்த சூத்திரத்திற் சேர்த்துக் காண்க.

பி. இ. நா.

**நம்பி. 16.**

இருள்புலர் காலை மருதத்திற் குரித்தே.

**இல. வி. ஆ. 14**

வைகுறு விடியல் மருதத்திற் குறுதலும்

**முத்து. அக. 17**

வைகுறு விடியல் மருதக் குரிய.
**எற்பாடு**

**நெய்தல் ஆதல்மெய்பெறத் தோன்றும் (10)**

ஆ. மொ. இல. (முன் சூத்திரத்தையும் இணைத்துக் காண்க)

The last hours of the night and the dawn belong to 'Marutham' and the sunset to 'Neythal'

பி. இ. நா.

**நம்பி 17**

வெய்யோன் பாடு நெய்தற் குரித்தே.

**இல. வி. அ. 14**

வெய்யோன் பாடு நெய்தற்குச் சிறத்தலும்
எய்தும் என்மனார்

---

1. வைகுறு விடியல் - நச். பாடம்

* இச்சூத்திரத்தையும் அடுத்து வரும் சூத்திரத்தையும் ஒரு சூத்திரமாகக் கொள்வர் நச்சினார்க் கினியரும் பாரதியாரும்.

முத்து. அக 18

எற்பாடுநெய்தக் குரிய தாகும்.

## இளம்பூரணர்

**9. வைகறை ........ மருதம்.**

இது. மருதத் திணைக்குக் காலம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) வைகறை விடியல் மருதம் - வைகறையும் விடியலும் மருதத்திற்குக் காலமாம்.

வைகறையாவது இராப்பொழுதின் பிற்கூறு. விடியலாகும் பகற்பொழுதின் முற்கூறு. பருவம் வரைந்தோதாமையின் அறுவகைப் பருவமும் கொள்ளப்படும். இது[1] நெய்தற்கும் ஒக்கும். (9)

**10. எற்பாடு ........ தோன்றும்.**

நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்.

இது நெய்தற்றிணைக்குக் காலம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) எற்பாடு-எற்படுபொழுது, நெய்தல் ஆதல் மெய் பெற தோன்றும் - நெய்தற்றிணைக்குக் காலமாதல் பொருண்மை பெறத் தோன்றும்.

எற்பாடாவது பகற்பொழுதின் பிற்கூறு (10)

## நச்சினார்க்கினியர்

**8. வைகறை விடியன் ...... .. தோன்றும்**

இனிச் சிறுபொழுதே பெறுவன கூறுகின்றது.

இதன் பொருள் :- வைகுறு விடியல் மருதம் - வைகறையும் விடியற்காலமும் மருதமாதலும் எற்பாடு நெய்தல் ஆதல் மெய் பெறத் தோன்றும் - எற்படுகாலம் நெய்தலாதலும் பொருள் பெறத் தோன்றும் என்றவாறு.
வைகுறுதலும் விடியலும் என்னும் உம்மை தொக்கு நின்றது.

செவியறிவுறுத்தலைச் செவியறிவுறூஉ (423) என்றாற்போல வைகுறுதலை வைகுறு என்றார். அது மாலையாமமும் இடை

---

1. இது - அறுவகைப்பருவமும் கொள்ளப்படுதல்.

யாமமுங் கழியுந்துணையும் அக்கங்குல் வைகுறுதல்; அது கங்குல் வைகிய அறுதியாதனோக்கி வைகறை எனவும் கூறுப. அதுவும் பாடம். நாள் வெயிற் காலையை[2] விடியலென்றார். விடியல்வெங் கதிர்காயும் வேயமலகலறை என்ப. விடியல் வைகறை யிடூஉ மூரன் என்றது விடியற்கு முன்னர்த்தாகிய வைகறையென உருபுதொக்கு முன்மொழி நிலையலாயிற்று[3]. பரத்தையிற் பிரிந்த தலைவன் ஆடலும் பாடலுங் கண்டுங் கேட்டும் பொழுது கழிப்பிப் பிறர்க்குப் புலனாகாமல் மீளுங் காலம் அதுவாதலானும், தலைவிக்குங் கங்குல் யாமங்கழியாது நெஞ்சழிந்து ஆற்றாமை மிகுதலான் ஊடலுணர்தற் கெளிதாவதோர் உபகாரமுடைத்தாதலானும் வைகறை கூறினார். இனித் தலைவி விடியற்காலஞ் சிறுவரைத்தாதலின் இதனாற் பெரும் பயன் இன்றென முனிந்து வாயிலடைத்து ஊடனீட்டிப்பவே அவ்வைகறை வழித் தோன்றிய விடியற் கண்ணும் அவன் மெய் வேறுபாடு விளங்கக் கண்டு வாயில் புகுத்தல் பயத்தலின் விடியல் கூறினார்.

'வீங்குநீர்' என்னும் மருதக்கலியுள்
"அணைமென்றோள் யாம்வாட வமர்துணைப் புணர்ந்துநீ
மணமனையா யெனவந்த மல்லலின் மாண்பன்றோ
பொதுக்கொண்ட கௌவையிற் பூவனைப் பொலிந்தநின்
வதுவையங் கமற்நாற்றம் வைகறைப் பெற்றதை."

---

2. நாள் வெயிற்காலை - வெயில் தோன்றிய நாட்காலை. அது விடியல் எனப்படும். 'விடியல் வெங்கதிர் காயும்' என்பதால் ஞாயிறு தோன்றி வெயில்காயும் நாளின் முற்பகுதி விடியல் என்பது பெறப்படும்.

3 விடியல் வைகறை யிடூஉம் ஊரன்' என்றதில் விடியல் முன்னரும் வைகறை பின்னரும் கூறப்பட்டிருப்பினும் விடியலுக்கு முன் உள்ளதாகிய வைகறை எனப் பொருள் கொள்க. வெள்ளின் வைகறை என்பதில் சிறப்பு அமையும் விடியல் வைகறை என வரும் இரு மொழிகளில் வைகறை என்னும் (இட) முன் மொழியில் பொருள் சிறத்தலால் இது முன்மொழி நிலையாயிற்று.

என மருதத்திற்கு வைகறை வந்தது. (கலி-66)

'விரிகதிர் மண்டிலம்[3] என்னும் மருதக்கலியுள்,
''தணந்தனை யெனக் கேட்டுத் தவறோரா தெமக்குநின்
குணங்களைப் பாராட்டுந் தோழன்வந் தீயான்கொல்
கணங்குழை நல்லவர் கதுப்பற லணைத் துஞ்சி
யணங்குபோற் கமழுநின் னலர்மார்பு காணிய''
(கலி - 71)

என மருதத்துக் காலை[4] வந்தது.

'காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி' என்பதும் அது.

இனி வெஞ்சுடர் வெப்பந் தீரத் தண்ணறுஞ் சோலை தாழ்ந்து நீழற் செய்யவும், தண்பதம்பட்ட தென்கழி மேய்ந்து பல்வேறு வகைப்பட்ட புள்ளெல்லாங் கூடம்பை நோக்கி உடங்கு பெயரவும், புன்னை முதலிய பூவினாற்றம் முன்னின்று கஞற்றவும், நெடுந்திரை யழுவத்து நிலாக்கதிர் பரப்பவும், காதல் கைமிக்குக் கடற்கானுங் கானற்கானும் நிறைகடந்து வேட்கை புலப்பட உரைத்தலின் ஆண்டுக் காமக்குறிப்பு வெளிப்பட்டு இரங்கற்பொருள் சிறத்தலின் எற்பாடு நெய்தற்கு வந்தது.

''நெடுவேண் மார்பி லாரம் போலச்
செவ்வாய் வானந் தீண்டி மீனருந்து
பைங்காற் கொக்கின் நிரைபறை யுகப்ப
வெல்லை பைபையக் கழிப்பிக் குடவயிற்
கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு
மதரெழின் மழைக்கண் கலுழ விவளே
பெருநா ணணிந்த சிறுமென் சாயன்
மாணலஞ் சிதைய வேங்கி யானா
தழறொடங் கினளே பெரும வதனாற்

---

4. நின் அலர் மார்பு காணிய வந்தீயான் கொல் என்றதில் அவள் மார்பு நல்லவர் கதுப்பறல் அணைத்துஞ்சிக் கமழும் அவர் மார்பு எனப்பட்டமையால் தூங்கி எழுந்த காலம் குறிக்கப்பட்டு அதுகாலை என்பதைப் புலப் படுத்தியது என்க.

கழிச்சுறா வெறிந்த புட்டா ளத்திரி
நெடுநீ ரிருங்கழிப் பரிமெலிந் தகைஇ
வல்வில் விளையரொ டெல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவ துண்டோ
பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை
யன்றி லகவு மாங்கட்
சிறுகுர னெய்தலெம் பெருங்கழி நாட்டே.'

(அக—120)

பகற்குறிக்கண் இடத்துய்த்துத் தலைவனை எதிர்ப்பட்டு உரைத்தது.

நெய்தற்கு எற்பாடு வந்தது[5]

'கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப' என்பதனுள் மாலையும் வந்தது. கலியுள் மாலைக்காலம் நெய்தலின்கண் வந்தவாறு காண்க. இதுமேல் 'நிலனொருங்கு மயங்குதலின்று' (12) என்பதனாற் பெறுதும்.

இவற்றிற்கு அறுவகை இருதுவும் உரிய வென்பதன்றிக் காரும் இளவேனிலும் வேனிலும் பெரும் பொழுதாகக்கொள்ப. என்றற்குப் பொருள்பெறத் தோன்றும் என்றார்.

இனி நெய்தற்கு ஒழிந்த மூன்று காலமும் பற்றிவரச் சான்றோர் செய்யுட் செய்திலர் : அக்காலத்துத் தலைவி புறம் போந்து விளையாடாமையின் அங்ஙனம் வந்த செய்யுளுளவேல் அவற்றையுங் கொள்க.

"கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூர
னெம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
கையுங் காலுந் தூக்கத் தூக்கு
மாடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே."

(குறு—8)

இது குறுந்தொகை[6].

---

5. ஞாயிறு எல் (வேயில்) லைப் பைப்பயக்கழிப்பிகுட வரைக்கல் சேர்ந்தன்று என்பதால் எற்பாடு கொள்க.

6. இதில் பொழுது கூறப்படவில்லை.

புறனுரைத்தாளெனக் கேட்ட பரத்தை தலைவனை நெருங்கித் தலைவன் பாங்காயினார் கேட்ப உரைத்தது.

''அரிபெய் சிலம்பி னாம்பலந் தொடலை
யரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை
யிழையணிப் பணைத்தோ ளையை தந்தை
மழைவளந் தரூஉ மாவண் டித்தன்
பிண்ட நெல்லி னுறந்தை யாங்கட்
கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தங்
குழைமா ணொள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயநா டியினையின் முகனமர்ந் தாஅங்
கேந்தெழி லாகத்துப் பூந்தார் குழைய
நெருந லாடினை புனலே யின்றுவந்
தாக வனமுலை யரும்பிய சுணங்கின்
மாசில் கற்பிற் புதல்வன் றாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்
முதுமை யெள்ளலஃ தமைகுந் தில்ல
சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்
தந்தூம்பு வள்ளை யாய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்
பல்வேன் மத்தி கழாஅ ரன்னவெம்
மிளமை சென்று தவத்தொல் லஃதே
யினியெவன் செய்வது பொய்ம்மொழி யெமக்கே.''

(அகம் - 6)

பரத்தையொடு புனலாடி வந்தமை கேட்டுத் தலைவி புலந்தது.

இது இளவேனில் வந்தது[7]
ஏனைய வந்தவழிக் காண்க.

நாடக வழக்கானன்றி உலகியல் வழக்கானும் அச்சிறு பொழுதும் அப்பெரும்பொழுதிற்குப் பொருந்து மென்றற்குத்

---

7. காவிரியில் பரத்தையொடு புனலாடுதல் கூறினமையால் அவ்வாறு ஆடுதற்குரிய இன்பக்காலம் இளவேனில் ஆறலின் அது கூறப்பட்டது என்க.

'தோன்றும்' என்றார். இதன் பயன் இவ்விரண்டு நிலத்துக்கு மற்றை மூன்று காலமும் பெரும்பான்மை வாராவென்றலாம்.

(8)

பாரதியார்.

8. வைகறை ........ தோன்றும்

கருத்து :- இது, மருதம் நெய்தல் திணைகளுக்குப் பருவமும் பொழுதும் குறிக்கின்றது.

பொருள் :- வைகுறு விடியல் மருதம் - பொழுது புலராத இரவினிறுதிப் பகுதியான வைகறையென்றும் சிறுபொழுதும், பொழுது புலர்ந்து எல்லெழுங் காலையான விடியலென்னும் சிறுபொழுதும், மருதத்திணைக்குச் சிறந்தனவாகும்; எற்பாடு நெய்தலால் மெய்பெறத் தோன்றும் - சுடர்படும் பகற்கால மூன்றாம் பகுதியாகிய சிறுபொழுது நெய்தற்றிணைக்கு உரிய பொழுதாதல் பொருள் பெறத் தோன்றுவதாகும்.

குறிப்பு :- இதில், "வைகுறிள வேனில் மருதம்" எனும் பாடம் மருதத்திணைக்கும் பொழுதும் பருவமும் வழுவாதுரைக்கும் சிறப்புடைத்து. இனி, எல்படும் பொழுதை எற்பாடென்பது தமிழ் வழக்கு. இன்றும் தமிழ் வழக்கறியா மேல் கடற்கரையில் படுஞாயிற்றின் திசையைப் 'படுஞாறு' என வழங்குதல் உலகறிந்த செய்தி. இதில் வைகுறு என்பது வைகறையின் மருஉ "வைகறை விடியல்" என்றே இளம்பூரண அடிகள் பாடங்கொண்டிருப்பதும் இதனை வலியுறுத்தும். "வைகுறு விடியல்" என்பதில் எண்ணும்மை சூத்திரச் செறிவு நோக்கித் தொக்கது. இனி, "வைகுறு விடியல்" என்ற தொடரை வைகுறுதலாகிய விடியல் எனக்கொண்டு பொழுது புலர்தற்கு முற்பட்ட இறுதியிரவுக் காலத்தையே குறிக்குமென்றும், எற்பாடு என்பது சுடரெழுந்து வெயிலெறிக்கும் காலைப் பொழுதைக் குறிக்குமென்றும் ஆசிரியர் சிவஞான முனிவர் தம் முதற் சூத்திர விருத்தியில் கூறுகின்றார். வைகறையும் விடியலும் ஒருபொருட் கிளவிகள் என்னுமவர் கொள்கை பண்டைத் தமிழ்ப் புலவர்க்குடன்பா டன்றென்பது பழைய தொகை நூல்களில் பலவிடங்களிலும் பயின்று வரும் குறிப்புக்களால் தெளியப்படும்.

வைகறையும் விடியலும் முன்னும் பின்னுமாக வரும் இரு வேறு சிறுபொழுதுகளே யென்பது மதுரைக் காஞ்சியடிகளா லினிது விளங்கும்,

"........................ இல்லோர்
நயந்த காதலர் கவவுப்பிணித் துஞ்சிப்
புலர்ந்துவிடி விடியல் எய்த" (662, 663, 664)

என்ற அடிகளில் "இருள் மாய்ந்து கதிர் விரியும்" கலையை விடியலென்றும் பிறகு "இரவுத்தலைப் பெயரும் ஏமவைகறை" என்று அதேபாட்டில் 686 - ஆம் வரியில் வைகறையை விடிய லினின்றும் வேறு பிரித்து அது இரவுத் தலைப் பெயரும் ஏமஞ் செய் காலமென்றும், மாங்குடி மருதனார் கூறுதலால் அது வலிபெறுவதாகும். அன்றியும் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசி கனார் தாம் பாடிய மலைபடு கடாத்தில்,

"வேய்ப்பயில் விளையுட் டேக்கட் டேறல்
குறைவின்று பருகி நறவுமகிழ்ந்து வைகறைப்
பழஞ்செருக் குற்ற அனந்தல் தீர"

171, 172, 173-வது அடிகளில் வைகறைப் பொழுதைக் கூறிப் பிறகு அடி 195, 196-இல்

............................... நள்ளிருளலரி

விரிந்த விடியல் வைகினிர் கழிமின்" என்று இருள் புலர்ந்து பகல் மலர்ந்து கதிர் முரிந்த விடியற் காலத்தை வேறு பிரித்தோதினர். இஃது, இவ்விரு பொழுதையும் இவ்வாறே வெவ்வேறாக மதுரைக் காஞ்சியில் விளக்கிய மாங்குடி மருதனார் கொள்கையே அடிப்பட்ட தமிழ் வழக்கென்பதனை வெள்ளிடை மலைபோல் விளக்குவதாகும். ஈண்டுப் பெருங்கௌசிகனார் "நறவு மகிழ்ந்து வைகறைக் காலத்தே அனந்தல் தீர கடமான் ஒகாழுங்குரையும் ............ பயினிணப் பிளவை ...... தடியொடு விரைஇ ......... குறமகளாக்கிய வாலவிழ்வல்சி அகமலியு வகை யார்வமொடளைஇ ......... மனைதொறும் பெறுகுவிர்" என்று முதற்கூறி, பிறகு அவ்வாறுண்ட நீவிர் விடியல்வரை வைகி விடிந்த பிறகு கழிவீராக; ஏனெனில், நீர் போகும் ஆறு ......... "பரல வற்போழ் விற்,

"கரந்துபாம் பொடுங்கும் பயம்பு மாறுளவே" (அதனால்
"குறிக்கொண்டு ............... நோக்கி

வறிதுநெறியொரீஇ வலஞ்செயாக் கழிமின், "எனக் கூத்த ருக்கு வைகறைப் பொழுதில் வழிக்கொண்டு பாம்பொடுங்கும் பள்ளங்களில் வீழ்ந்திடர்ப்படாமல் தங்கிக் கதிர்விரிந்த விடியற் காலத்தே புறப்படுமாறு கூறுதலால், இவ்விரு காலமும் இரு வேறு சிறுபொழுதுகளே என்பது தெள்ளத் தெளியக்கிடப்ப தாகும். இன்னும் மலைபடுகடாத்திலேயே,

"வான்கண் விரிந்த விடியலேற் றெழுந்து" என 257 வது வரியிலும்

"நொய்ம்மா விறகின் ஞெகிழி மாட்டிப்
பனிசே ணீங்க வினிதுடன் றுஞ்சிப்
புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்"

என 446 முதல் 448 வது வரிகளிலும் வைகறையின் வேறுபட்ட விடியற்காலத்தை ஐயமற விளக்கியிருப்பது பாராட்டிச் சிந்திக்கத் தக்கது. இனி, அகநானூற்றில் 37, 41-ஆம் பாட்டுகளில்,

"வைகு புலர் விடியல் னவயெயர்த் தாட்டி" எனவும்
வைகு புலர் விடியல் மைபுலம் பரப்ப" எனவும்

முறையே இரவு புலர்ந்து கதிர்விரியும் விடியற்காலம் இனிது விளக்கப் பெற்றும், 42வது பாட்டில் "பெரும் பெயல் பொழிந்த ஏமவைகறை" எனவும், 308வது பாட்டில் ......... "கங்குல் ......... ஆலியழிதுளி பொழிந்த வைகறை" என வைகறை விளக்கப்பெற்று மிருக்கிறது. இன்னும், இரவிருள் கழிந்து பகலொளியெழுந்து படரும் புலரியே 'விடியல்' என்பதும், இருளறவொழியாத இரவினிறுதியே 'வைகறை' என்பதும் பல பழம் பாட்டுகளால் விளக்கமாகும். 'பெரும் புலர் விடியல்' (குறுந் - 224) (நற் - 60), "தண்புலர் விடியல்" (60) "வைகுபுலர் விடியல்" எனப் பலவிடத்தும் புலரும் பொழுதே விடியல் என உரைக்கப்படுதலால், இரவிருள் புலர்ந்து பகலொளியலர்ந்த நாட்காலையே விடியல் என விளங்குகிறது. புலரி, வைகல் விடியல் என்பன நாட்காலை எனும் ஒரு பொருள் குறிக்கும் பல பெயர்களாகப் பயிலுதலுமிதனை வலியுறுத்தும். இனி வைகறை இருள் கழியாத இரவினிறுதி யென்பது விளங்க "வைகுறு மீனின் இனையத்தோன்றி" (நற் - 48) என மீனொளி மறையாத இருள் தங்கும் வான் சிறப்புடைய வைகறை என வருதலானுமறிக.

''குக்கூ என்றது கோழி, அதனெதிர்
... ... ... ... ... ... ...
தோள்தோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றா லெனவே''

(குறுந் - 157) என்பதில், வைகறை தலைக்கோழி கூவும் விடியாப்பொழுதென விளக்கப்படுதலும் காண்க. சிவஞான முனிவர் எடுத்துக்காட்டும் முருகாற்றுப்படையடிகளும், அவர் கொள்ளும் பொருளில், வைகறையும் விடியலுமொன்றெனற்கு மாறாக அவை இரு வேறு பொழுதுகளாகவே விளக்குகின்றன.

''முட்டாட் டாமரைத் துஞ்சி, வைகறை
கட்கமழ் நெய்த லூதி, எற்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்கும்''

(முருகு - வரி - 73 - 76)

என்பதவ்வடிகள். இதில், வண்டினம் இரவில் தாமரையில் தூங்கிவைகறையில் நெய்தல் மலரூதி, பிறகு ஞாயிறெழும் விடியலில் சுனைப்பூக்களி லொலிக்கும் எனக்கூறி, இரவு, வைகறை விடியல், என மூன்றும் மூவேறு பொழுதெனத் தெளிக் கப்படுகின்றது. எனில், இதில் ''எல்பட'' என்பதற்கு ''ஞாயிறு எழ'' எனப் பொருந்தாப் பொருள் கூறுவதினும், ''ஞாயிறடை யும் பகலிறுதிப் பொழுதில்'' எனக்கொள்ளுவதே, சொல்லும் மரபும் சுட்டும் நல்ல கருத்தாகும்; எனவே விடியலுக்கு முன் வைகறையில் விழித்தெழும் வண்டினம் நெய்தலூதி'' மாலைக்குமுன் பகல் மாய்ந்து சுடர்படும் எற்பாட்டில் சுனை மலர்களிலொலிக்கும் என்பதே இவ்வடிகளுக்கு நேரிய செம் பொருளாகும். இனி வைகறை விடியல் எனுமிரு சிறுபொழுதும் ஒழிய எற்பாடு இவற்றின் வேறாய பகலிறுதிப் பொழுதென்பது.

''பகல்மாயந்திப் புடு சுடரமையம்'' என அகம் 48 ஆம் பாட்டிலும் தெளிக்கப்படுகிறது. இன்னும்,

''படுசுட ரடைந்த பகுவாய் நெடுவரை
முரம்புசேர் சிறுகுடிப் பரந்தமாலை.'' (நற்-33)

எனும் இளவேட்டனார் பாட்டும், இரவின் முதற்பொழுதான மாலையை எற்பாட்டின் பிற்பொழுதாகக் கூறுதலும் பகலிறுதிப்

பொழுதைப் படுசுடர் எனச் சுட்டுதலும் காண்க. "நெய்தல் கூம்ப நிழல்குணக் கொழுக,—கல்சேர் மண்டிலம் நிவந்துநிலம் தணிய" எனும் ஔவை நற்றிணை (187) ஆம்பாட்டு மதுவே கூறுகிறது. "ஒன்றது மென்ற தொன்றுபடு நட்பில்" (நற்-109) எனும் பெரும்பதுமனார் நற்றிணைப்பாட்டிலும் "உலமரக் கழியுமிகப் பகல்மடி பொழுதே" என வருதலறிக. இன்னும் இரவின் முதற்பொழுதோ மாலைக்கு முந்திய பகலிறுதிப் பகுதியைக் "கல்சுடர் சேரும் கதிர்மாய் மாலை" (321) என மள்ளனாரும் கூறுதல் காண்க. இளைய பல பழம் புலவர் பாட்டுகளால் பொழுது புலர்ந்து கதிர் விரியும் இளவெயிற் காலையாய பகற்பொழுதின் முதற்பகுதியே விடியலென்றும்[2] இருள் புலருமுன்னுள்ள இரவின் இறுதிப்பகுதி நேரமே வைகறையென்றும், சுடர்படும் பகலிறுதிக்காலமே எற்பாடென்றும் மயக்கத்திற் கிடனின்றித் தெளியக்கிடக்கின்றது.

இன்னும், "முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் பாலை யென முறைசெய்தற்கேது, மாலை, யாமம், வைகறை, காலை நண்பகல் என்னும் சிறு பொழுதின் இடக்கை முறையேயன்றி வேறின்மையானும் ஏனைத்திணை கட்குச் சிறுபொழுது ஒரோவொன்றேயாகலின், மருத மாத்திரைக்கிரண்டு கோடல் பொருந்தாமையானும் அஃதுரையன்றென மறுக்க" என்னும் சிவஞான முனிவர் கூற்றும் பொருந்தாமையறிக. சிறுபொழுது ஐந்து மாலை முதல் நண்பகல் வரையெண்ணி நிறுத்தப்படின், ஒரு நாளுலப்புறாமல் பிற்பகல் பெயரும் பயனுமின்றி வீணே விடப்படுமாகலின் ஈண்டு எண்ணப் பெறாத பிற்பகலாகிய சிறு பொழுதொன்றுண்மையும் அதுவே எற்பாடாவதும் விளக்கமாகும்.

அன்றியும், அன்பினைந்திணைமுறை சிறுபொழுதின் கிடக்கை முறைபற்றியதேயாகும் என்பதற்கு முனிவரவர்களின் கூற்றைத் தவிரப் பிறிதாதரவின்மையானும், பெரும்பொழுதாறினை ஐந்து திணைக்கு ஒரோவொன்றாய்க் கொடுத்தமையாதலாலும், சிறுபொழுதுகளு மவ்வாறமைதல் வேண்டா குறிஞ்சிக்குக் கூதிரொடு முன்பனியும், பாலைக்கு வேனிலொடு பின்பனியும் ஆக இவ்விரண்டு பருவந்தந்து வைத்தும், மருதத்திற்கும் நெய்தலுக்கும் பெரும் பொழுதெதுவும் பிரித்துரிமை செய்யா

மலும் சூத்திரிக்கும் ஆசிரியர் முறையிற் பொருத்தம் காணும் முனிவரவர்கள் மருதத்திணை யொன்றற்குச் சிறுபொழுதிரண்ட மைத்தலில் பொருந்தாப் பெருந்தவறு காணுதற்குரிய நியாயத்தை விளக்கினார்களுமில்லை. இனி, பிற்றைய நாற் கவிராச நம்பியார் சிறுபொழுதைந்தென்று கூறுதலால், பண்டைப் புலவர் பாட்டுகளைப் பொய்யாக்கித் தொல்காப்பி யர் சூத்திரங்களுக்கும் புதுப்பொருள் காண்பது உரையற மாகாது. மேலும் வைகறையும் விடியலும் மருதத்திணையான ஊடலுக்கு உரித்தாமாறும், மாலையையும் யாமத்தையும் பரத்தையர் வீட்டிற்கழித்த தலைவன் தன் மாட்டு மீட்டு வரும் வைகறை விடியற்காலங்களில் தலைவி அவனோடூடுதல் இயல் பாவதும், பிறகு பொழுதேறி விருந்தினர்க்கு வேளாண்மை செய்தலால் ஊடல் தீர்தல் முறையென்பதும், மருதக்கலி நெய்தற்கலி முதலிய பண்டைய அகத்துறைப் பாட்டுகளால் இனிது விளங்கும்.

''ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்'' எனும் குறளால்

ஊடுமிடத்தெல்லாம் கூடுதலின்றியமையாமை பெறுதற் கில்லை. 'கூடிமுயங்கப்பெறின்' அதற்கின்பம் என வள்ளுவர் விதந்து கூறுதலாலேயே, ஊடுந்தொறும் உடனே கூடல் ஒருதலையாகாது. கூடப் பெருப் பொழுதுகளும் உளவாதல் இயல்பென்பது பெறப்படும். அன்றியும், ஊடல் அதன்பின் கூட நேர்ந்துழி; அக்கூட்டத்திற்கு இன்பம் மிகுக்கும் என்பது இக்குறட் பொருள் ஆவதன்றி உடனே கூட நேராப் பொழு தெல்லாம் ஊடல் நிகழாது என்பது கருத்தகாமை வெளிப்படை. இனி,

''காலையும் பகலும் கையறு மாலையும்
ஊர்துஞ்சு யாமமும் விடியலு மென்றிப்
பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்''

எனும் அள்ளூர் நன்முல்லையாரின் குறுந்தொகைப் பாட்டில் காலையும் விடியலும் வேறாக்கி விரிகதிர் விடியலைக் காலை யென்றபின் வைகறையை விடியலென்று கூறியதனால், வைகறையின் வேறுபட்ட விரிகதிர் விடியலும் பகலிறுதியின் எற்பாடும் உண்டெனப் பண்டைப் புலவரின் பல பாட்டுகள்

கூறுவதை மறுக்கவொண் ணாது. அதுவேபோல் அப்பாட்டில் எற்பாடு கூறப்பெறாமை கொண்டு 'பகல் மாய்ந்திப்படு சுடர்ப்' பொழுதான எற்பாடு இல்லையெனலும் இயலாது. கூறப்பட்ட தொன்று உண்டெனலாமன்றிக் கூறப்பெறாமை கொண்டு உள்ள தொன்றை இல்லையெனத் துணிதற்கு அளவை நூலிடந் தராது மேலும், இப்பாட்டினடிகளில் சொற்றோறும் வருகின்ற உம்மை எண்ணும்மையேயாகும். 'என்று இப்பொழுதைந்தும்' என முற்றும்மை பெறாமையானும் சிறுபொழுதைந்தேயாம் என்னு முடிவிற்கு இக்குறுந் தொகைப் பாட்டடிகள் இடந்தராவாம்.

எவ்வாற்றானும் பண்டைச் சான்றோர் பாட்டுபலவற் றுள்ளும் வைகறையும் விடியலும் இருவேறு சிறுபொழுதுகளா மென விதந்து கூறப் பெற்றிருத்தலானும், இச்சூத்திரத்தில் வைகறையையும் விடியலையும் கூறி அவற்றின் வேறாயஎற் பாடும் கூறப்பெறுதலானும், இரவுக்குச் சிறுபொழுது மூன்றாவது போல் பகலுக்கும் மூவேறு சிறுபொழுது உண்மையானும், ஈண்டு வைகுறு, விடியல், எற்பாடு என்பன மூன்றும்முறையே கங்குலிறுதிப் பொழுதான வைகறையும், வெயிலோடு விரிகதிர் விடியலான பகல் முதற் சிறுபொழுதாகிய காலையும் மருதத் துக்கும், பகலிறுதியில் சுடர்படும் பொழுதான எற்பாடு நெய் தலுக்கும் சிறப்புறவருமெனும் உரையே உண்மையுரையாமெனத் தெளிதலெளிதாம். அதனால் நச்சினார்க்கினியரொடு இளம் பூரண அடிகளும் இதுவே இச்சூத்திரப் பொருளாகக் கூறுதல் அமைவுடைத்தாகும்.

1. விடியல் அல்லது காலை மருதப்பொழுதாதற்குச் செய்யுள்:-

காலை எழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
மல்ல லூரன் எல்லினன் பெரிதென
தெறுவதம்ம இத்திணைப் பிறத்தல்லே. (குறுந்-45)
"நிரைதார் மார்பன் பெருந லொருத்தியொடு
வதுவை அயர்தல் வேண்டிப் புதுவதின்
இயன்ற அணியன் இத்தெரு இறப்போன்
..............................................................
பூங்கட் புதல்வனை நோக்கி நெடுந்தோ

தாங்குமதி வலவ என்றிழிந்தனன் ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ...
மகனொடு தானேபுகு தந்தோனே யானது
தடுத்தன னாகுதல் நாணி இடத்திவற்
கலக்கினன் போலுமிக் கொடியோ னெனச்சென்
றலைக்கும் கோலொடு குறுக, தலைக்கொண்டு
... ... ... ... ... ... ... ... ... ...
அழுங்கின னல்லனோ அயர்ந்ததன் மனனே.''
(அகம்-66)

இதில், கூடாமலே தலைவி காலையில் ஊடிய திறம் கூறியதறிக.

''சேற்றுநிலை முனைஇய'' எனும் அகப்பாட்டும் (46) ''உணர்குவ னல்லேன், உரையல் நின்மாயம்'' எனும் (226-ஆம்) அகப்பாட்டுமதுவே யாம்.

2. வைகறை மருதப் பொழுதாதல்.
''பொதுக்கொண்ட கௌவையிற் பூவணை பொலிந்தநின்
வதுவையுங் கமழ் நாற்றம் வைகறைப் பெற்றதை.''
கலி-66) எனவரும் கலிப்பாட்டடியிற் காண்க.

3. இனி எற்பாடு நெய்தற்கு வருதல்.
''நெடுவெண்மார்பி லாரம் போல்'' எனவரும் (120) அகப்பாட்டாலறிக

**11. நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே (9)**

ஆ.மொ.இல.

The middle placed 'Thinai' is being
thought of when the midday and summer
occur jointly

பி.இ.நூ.

**நம்பி 14.**

அடுத்த சூத்திரத்துக் காண்க.

இல.வி அ. 14.

வேனில் நண்பகல் பின்பனி என்றிவை
பான்மையின் உரிய பாலைக் கேற்றலும்

முத்து. அக. 19.

நண்பகல் வேனில் நடுத்திணைக் குரிய

## இளம்பூரணர்

**11. நடுவுநிலைத் ... ......... நெறித்தே.**

இது, பாலைக்குக் காலமும் இடனும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நடுவு நிலைத்திணை - நடுவு நிலைத்திணையாகிய பாலையாவது, நண்பகல் வேனிலொடு முடிவு நிலை மருங்கின் முன்னிய நெறித்து—நண்பகற்பொழுது வேனிற் காலத்தொடு புணர்ந்து நின்றவழிக் கருதிய நெறியை உடைத்து.

இஃது இளவேனில் முதுவேனில் என்னும் இருவகைப் பருவத்தின் கண்ணும் வரும் நண்பகற்பொழுது காலமாம் என்பதூஉம், ஆண்டு இயங்கும் நெறி நிலமாம் என்பதூஉம், உணர்த்தியவாறு.

இளவேனிலாவது சித்திரைத் திங்களும் வைகாசித்திங்களும், முதுவேனிலாவது ஆனித் திங்களும் ஆடித்திங்களும். நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு.

## நச்சினார்க்கினியர்

**9. வைகறை விடியல் மருதம்**

இது நிலனுடைய நான்கற்குங் காலங் கூறி அந்நான்கற்கும் பொதுவாகிய பாலைக்குக் காலங் கூறுகின்றது.

இதன் பொருள் :- நடுவுநிலைத்திணையே -பாலைத்திணை, நண்பகல் வேனிலொடு - எற்பாடுங் காலையும் என்னும் இரு கூற்றிற்கு நடுவணதாகிய ஒரு கூறு தான் கொண்டு வெம்மை செய்து பெருகிய பெரும் பகலோடும் இளவேனிலும் முதுவேனி லும் என்னும் இரண்டினோடும், முடிவு நிலை மருங்கின்பிரி

வெனப்படுதற்கு முடிவுடைத்தாகிய குறிஞ்சியும் முல்லையுமாகிய ஒருமருங்கின்கண்ணே, முன்னிய நெறித்து ஆசிரியன் மனங் கொள்ளப்படும் நெறியையுடைத்து என்றவாறு.

நிலை யென்றது நிலத்தினை. முடிவுநிலைப்பகுதிக்கண் முன்னப்படு மெனவே அத்துணை யாக்கமின்றி ஒழிந்த மருதமும் நெய்தலும் முடியா நிலமாய் அத்துணை முன்னப்படாதாயிற்றுப் பாலைக்கென்பதாம். பிரிவின்கண் முடியவருவன வெல்லாம் இவ்விரண்டற்கும் அவை குறைய வருதலும் உரையிற் கொள்க என்னை? சுரத்தருமை அறியின் இவள் ஆற்றாளாமெனத் தலைவன் செலவழுங்குதலும், துணிந்து போதலும், உடன் போவலெனத் தலைவி கூறுதலும், அதனை அவன் விலக்கலும், இருருதிரங்கலும் போல்வன பலவும் முடிய வரும் நிலம் குறிஞ்சியும் முல்லையு மாகலின், சுரத்தருமை முதலியன நிகழாமையின் மருதமும் நெய்தலும் அப்பொருண் முடிய வாராவாயின.

"நன்றே காதலர் சென்ற வாறே
யணிநிற விரும்பொறை மீமிசை
மணிநிற வுருவின தோகையு முடைத்தே"

(ஐங்குறு-431)

இது சுரத்தருமை நினைந்து வருந்தினேனென்ற தலைவிக்கு அவ்வருத்த நீங்கக் கார்கால மாயிற் றென்று ஆற்றுவித்தது.

இப்பாட்டு முதலிய பத்தும் முல்லையுட் பாலை.[1]

"கார்செய் காலையொரு கையறப் பிரிந்தோர்
தேர்தரு விருந்திற் றவிர்குதல் யாவது
மாற்றருந் தானை நோக்கி
யாற்றவு மிருத்தல் வேந்தனது தொழிலே"

(ஐங்குறு 451)

---

1. பத்து—ஐங்குறுநூறு 431—440 காதலர் சென்ற ஆறு என்றது பாலை. அவர்சென்ற ஆறு இரும்பொறை (காடு) மேல் நீலமணியுருவுடைய மயில்களையுடையது. இதனால் காட்டில் மழை பெய்து மயில்கள் அகவும் இயல்பு கூறப்பட்டதாதலின் முல்லை நிலமாயிற்று. முல்லையுட்பாலை—முல்லை நிலத்தில் நிகழ்ந்த பிரிவொழுக்கம்.

இது பருவங்கண்டு ஆற்றாளாகிய தலைவி பாசறைச் செய்தி கேட்டு வருந்தியது.

இப் பத்தும் முல்லையுட் பாலை[2]

"கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ
யிருங்கல் வியலறை விரிப்பத் தாஅ
நன்மதல நாடன் பிரிந்தென
வொண்ணுதல் பசப்ப தெவன்கொ லன்னாய்."

(ஐங்குறு 219)

இது வரைவிடைவைத்துப் பிரிந்துழித் தலைவி யாற்றாமை கண்டு தோழி கூறியது.

இவ்வைங்குறுநூறு குறிஞ்சியுட் பாலை.[3]

"எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலைத் தண்டுளி வீசிப்
பசதல செய்தன பனிபடு துறையே."

(ஐங்குறு-141)

இவ்வைங்குறுநூறு வரைவிடைவைத்துப் பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் துறை யின்ப முடைத்தாகலான் வருத்திற் றெனத் தலைவி கூறியது.

இது சுரத்தருமை முதலியனவின்றி நெய்தற்குட் பாலை வந்தது.[1]

ஏனைய[2] வந்துழிக் காண்க.

முந்நீர் வழக்கஞ் சிறுபான்மையாகலின் நெய்தற்கு முடிய வாராதாயிற்று. இக்கருத்தானே பிரிவொழுக்கம் மருதத்திற்கும் நெய்தற்குஞ் சிறுபான்மையாகப் புலனெறி வழக்கஞ் செய்யப் படும்.

---

2. கார்செய்காலை என்றதால் முல்லையும் பிரிந்தோர் என்பதால் பாலையும் காண்க. ஐங்குறு 451-460

3 வேங்கைமலர் பாறையில் விரியும் மலை நாடன் என்பதால் குறிஞ்சி நிலமும் பிரிந்தென என்பதால் பாலை யொழுக்கமும் பெறப்படும்.

1. பனிபடுறேைற, எக்கர் என்பனவற்றாலும் ஞாழல் செருந்தி என்னும் கருப்பொருளாலும் நெய்தல் நிலமும் பசலை செய்தலால் பிரிவுண்மயையும் காண்க.

2. ஏனைய—ஏனையது எனின் நன்று. அது மருதத்துட் பாலை.

எற்பாட்டுக்கு முன்னர்த்தாகிய நண்பகலைப் பாலைக்குக் கூறவேண்டிப் பின் வைத்தாரேனும், பெரும் பொழுதிற்கு முற் கூறுதலின் ஒருவாற்றாற் சிறுபொழுதாறும் முறையே வைத்தா ராயிற்று. காலையும் மாலையும் நண் பகலன்ன கடுமை கூரச்[3] சோலை தேம்பிக் கூவன்[4] மாறி, நீரும் நிழலுமின்றி, நிலம் பயந் துறந்து, புள்ளும் மாவும் புலம்புற்று[5] இன்பமின்றித் துன் பம் பெருகுவதொரு காலமாதலின், இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்கு நண்பகலும் வேனிலுஞ் சிறப்புடைத்தாயிற்று.

"தெள்ளறல் யாற்றுத் திரைமண லடைகரை
வண்டுவரி பாடத் தண்போ தலர்ந்து
தாதுந் தளிரு மேதகத் துவன்றிப்
பல்பூஞ் சோலைப் பன்மலர் நாற்றமொடு
செவ்வித் தென்ற னொவ்விதிற் றாகிக்
குயில் கூஉக் குரலும் பயில்வதன் மேலும்
நிலவுஞ் சாந்தும் பலவுறு முத்து
மின்பம் விளைக்கு நன்பொருள் பிறவும்
பண்டைய போலா தின்ப மிகத்தரும்"

இளவேனிற்காலத்து, பொழில் விளையாடியும் புதுப்பூக் கொய்தும் அருவியாடியும் முன்னர் விளையாட்டு நிகழ்ந்தமை பற்றிப் பிரிந்து கிழத்தி மெலிந்துரைக்குங் கிளவி பயின்று வருதலானும், உடன்போக்கின்கண் அக்காலம் இன்பம் பயக்கு மாதலானும், இளவேனிலோடு நண்பகல் சிறந்ததெனப்பட்டது. பிரிந்த கிழத்தி இருந்து கூறுவன கார்கால மன்மையின் முல்லை யாகா- உதாரணம் :—

"கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை
வறனுற லங்கோ டுதிர வலங்கடந்து
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
யிரவுக்குறும் பலற நூறி நிரை பகுத்
திருங்கன் முடுக்கர்த் திற்றி கெண்டுங்
கொலைவி லாடவர் போலப் பலவுடன்

---

3. நண்பகல்ழபால வெயிலின் கொடுமைமிக
4 கூவல் – கிணறு
5. புலம்புற்று—தனிமையுற்று
மின்பம் விளைக்கு நன்பொருள் பிறவும்
பண்டைய போலா தின்ப மிகத்தரும்"

பெருந்தலை யெருவைபொமு பருந்துவந் திறுக்கு
மருஞ்சுர மிறந்த கொடியோர்க் கல்கலு
மிருங்கமழை யிறும்பி னாய்ந்து கொண் டறுத்த
நுணங்குகட் சிறுகோல் வணங்கிறை மகளிரோ
டகவுநர்ப் புரந்த வன்பிற் கழறொடி
நறவுமகி ழிருக்கை நன்னன் வேண்மான்
வயலை வேலி வியலூ ரன்ன நின்
னலர்முலை யாகம் புலம்பப் பலநினைந்
தாழ லென்றி தோழி யாழாவென்
கண்பனி நிறுத்த லெளிதோ குரவுமலர்ந்
தற்சிர நீங்கிய வரும்பத வேனி[1]
லறலவிர் வார்மண லகலயாற் றடை கரைத்
துறையணி மருதமொ டிகல்கொள வோங்கிக்
கலுழ்தளி ரணிந்த விருஞ்சினை மாஅத்
திணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்
புகைபுரை யம்மஞ் சூர
நுகர்குயி லகவுங் குரல்கேட் போர்க்கே'' (அகம்-97)

இது வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி கூறியது.

இக்களிற்றியானை நிரையுள் இருவகை வேனிலும் பாலைக்கண் வந்தன.

## 9. நடுவுநிலை ...... நெறித்தே

### பாரதியார்

கருத்து :— இது பாலைக்குப் பருவமும் பொழுதும் கூறுகிறது.

பெர்ருள் :— நடுவுநிலைத் திணையே—அன்பினைந்திணையுள் நடுநின்ற பாலைத்திணை ; நண்பகல் வேனிலொடு முடிவு நிலை மருங்கின்—நடுப்பகல் முதிர் வேனிலொடு கூடப் பொருந்துமிடத்து ; முன்னிய நெறித்து—அது பிரிவுக்குச் சிறந்ததாகக் கருதும் முறைமையுடைத்தாகும்.

குறிப்பு :— ஏகாரம், முன்னது, இசை நிறை, பின்னது அசை.

---

1. அற்சிரம்—இளவேனில், வேனில்—முதுவேனில்

நண்பகலாகிய சிறுபொழுதும் முதிர்வேனிலாகிய பெரும் பொழுதும் பாலைத்திணையாகிய பிரிவுக்குத் தனித்தனியுரிமை கொள்ளுதலேயுமன்றி, இவை தம்முட் கூடிய நிலையில் முதிர் வேனிலின் நண்பகல் பிரிவுக்கு மிகவும் சிறப்புரிமையுங் கொள்ளு மென்பது இச்சூத்திரத்தில் விளக்கப் படுகிறது. முதிர்வேனிற் காலம் ஆனியும் ஆடியுமாகிய திங்களிரண்டுமாம். இதில், வேனிலென்பது முதிர்வேனிற் பருவத்தையே குறிக்கும் ; அதுவே பிரிவுக் குரித்தாகலின், முதிர்வேனிலிற் பிரிந்தார் கார் காலத் தில் கூடுவர் இளவேனில் கூடுதலுக்கே உரிய பருவமாகும். பின்பனிக் காலத்தில் பிரிந்தார் இளவேனிலிற் கூடுவர். முதிர் வேனில் பிரிவுக்குரித்தாதற்குச் செய்யுள் :—

''உறைதுறந் திருந்த புறவிற் றனாது
செங்கதிர்ச் செல்வன் தெறுதலில், மண்பக
உலகு மிகவுருந்தி அவர்வுறு காலைச்[1]
சென்றன ராயினும் நன்றுசெய் தனரெனச்
சொல்லித் தெளிப்பவும் தெளிதல் செல்லாய்
செங்கோல் வாளிக் கொடுவி லாடவர்
வம்ப மாக்க ளுயிர்த்திறம் பெயர்த்தென
வெங்கடங் றண்டமுதற் படுமுறை தழீஇ
உறுபசிக் குறுநரி குறுகல் செல்லாது
மாறுபுறக் கொடுக்கும் அத்தம்
ஊறில ராகுத லுள்ளா மாறே.''

(நற் – 164)

## சிவலிங்கனார்

''நால்வகை யொழுக்கங்களிலும் நிற்றலால் நடுவுநிலைத் திணை எனப்படும் பாலைத்திணையானது நண்பகலாகிய சிறுபொழுதும் இளவேனில் முதுவேனிலாகிய இருவகைப்பெரும் பொழுதும் ஆகியவற்றோடு முடிதல் நுலைக்கும் பக்கமானது முந்து நூலாரால் நினைந்து கொள்ளப்பட்ட மரபாகும்'' என்பது இச்சூத்திரப்பொருள்

1. உறைதுறந்.........காலை என்பது முதிர்வேனிலைக் குறிக்கும்

காரும் மாலையும் முல்லை என்பதுபோல நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனில் என்றமையாது 'முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்து' என மேலும் கூறியதன் சிறப் பாவது தனக்கென நிலமில்லாமையால் பாலை ஒழுக்கமானது நான்கு நிலத்திலும் நிகழ்தலின் செய்யுளில் அமைத்துக்கூறுங் கால் ஏதேனும் ஒரு நிலத்தில் முடிவதாகக்கூறல் வேண்டும். வேண்டினும் தனக்கெனவுரிய நண்பகல் வேனிலொடு அவ்வந் நிலத்தில் முடிவதாகக்கூறல் வேண்டும். அதனால் ஆசிரியர் நடுவுநிலைத்திண்யானது நண்பகல் வேனில்களோடு ஏதேனும் ஒரு நிலத்தில் முடியும் நிலைமையுடைய பக்கத்தில் அமைவ தாக நூலாரால் கருதப்பட்ட மரபையுடையதாகும் என்றார்.

நெறித்து என்பதால் இது மரபாகச் செய்யப்பட்டுவருவது என்பது புலப்படும்.

## 12. பின்பனி தானுும் உரித்துஎன மொழிப (12)

ஆ. மொ. இல.

The scholars say that the later part
of the snow-season also belong to it

பி. இ. நா.

**நம்பி. 14**

வேனில் நண்பகல் பின்பனி என்றிவை
பான்மையின் உரிய பாலை தனக்கே

**இல. வி. அ. 14.**

முன் சூத்திரத்துக் காண்க.

**முத்து. அக. 20**

பின்பனி தானும் உரித்தெனப்படுமே

### இளம்பூரணர்

**12.** பின்பனி தானும்......... மொழிப

**இஃது, எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.**

(இ-ள்) பின்பனியும் உரித்து எனமொழிப –பின்பனிக் கால காலமும் உரித்து என்று கூறுப.

இது வேறோதினமையான், வேனில் போலச் சிறப்பு இன் றெனக் கொள்க. பின்பனியாவது மாசித் திங்களும் பங்குனித் திங்களும்.

அஃதற்றாக இவ்வறுவகைப் பருவமும் அறுவகைப் பொழு தும் இவ்வைந்திணைக்கு உரியவாறு என்னையெனின், சிறப்பு நோக்கி என்க. என்னை சிறந்தவாறு எனின் ; முல்லையாகிய நிலனும், நிலனும், வேனிற் காலத்து வெப்பம் உழந்து மானும் புதலும் கொடியும் கவினழிந்து கிடந்தன புயல்கள் முழங்கக் கவின் பெறும் ஆகலின், அதற்கு அது சிறந்ததாம். மாலைப் பொழுது இந்நிலத்திற்கு இன்றியமையாத முல்லை மலருங் காலம் ஆதலானும் அந்நிலத்துக் கருப்பொருளாகிய ஆனிரை வருங்காலமாதலானும், ஆண்டுத் தனியிருப்பார்க்கு இவை கண்டுழி வருத்தம் மிகுதலின், அதுவும் சிறந்தது ஆயிற்று. குறிஞ்சிக்குப் பெரும்பான்மையும் களவிற் புணர்ச்சி பொருளாத லின் அப்புணர்ச்சிக்குத் தனிஇடம் வேண்டுமன்றே. அது கூதிர்க்காலத்துப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவார் இலராம் ஆதலான், ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின், அதற்கு அதுசிறந்தது. நடுநாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது. மருதத்திற்கு நிலன் பழனஞ்சார்ந்த இட மாதலான், ஆண்டு உறைவார் மேன் மக்களாதலின்; அவர் பரத்தையிற் பிரிவுழி அம்பனையகத்து உறைந்தமை பிறர் அறியாமை மறைத்தல் வேண்டி வைகறைக்கண் தம்மனை யகத்துப் பெயரும்வழி, ஆண்டு மனைவி[1] அந்நிலத்திற்குச் சிறந்தன. நெய்தற்குப் பெரும்பான்மையும் இரக்கம் பொருளாத லின் தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற்பொழுதினுள் இராப் பொழுது மிகுமாதலின் அப்பொழுது வருதற்கேதுவாகிய எற் பாடு கண்டார் இனி வருவது மாலையென வருத்தமுறுதலின், அதற்கு அது சிறந்தது என்க.

---

1 அவை - வைகறையும் விடியலும் வைகறைக்குக்கூறிய காரணமே விடியலுக்கும் பொருந்தும் ஆதலின் அவை என்றார்.

பாலைப் பொருளாவது பிரிவு அப்பிரிவின் கண் தலைமகற்கு வருத்தம் உறும் என்று தலைமகள் கவலுங்கால், நிழலும் நீரும் இல்லாத வழி ஏகினார் எனவும் கவலு மாகலின், அதற்கு அது சிறந்தது என்க.

நச்சினார்க் கினியம் 12

10. பின்பனிதானு ... ... ...மொழிப

இஃது எய்தியதன்மேற் சிறப்பு விதி

இதன்பொருள்:- நடுவுநிலைத்திணைக்கு முற்கூறியவேனிலன்றிப் பின் பனிக்காலமும் உரித்து என்றவாறு,

இது கூதிரை முன்பனியாகிய மார்க்கழியுந் தையுந் தொடர் தாற்போல, வேனிலாகிய சித்திரை முதலிய நான்கற்கு பின் பனியாகிய மாசியும் பங்குனியுந் தொடர்ந்த தென்று கூறினர்.

உதாரணம் :-

"பகைவென்று திறைகொண்ட பாய்திண்டோர் மிசையவர்
வகை கொண்ட செம்மனாம் வனப்பார விடுவதோ
புகையெனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா
முகைவெண்ப னுதிபொர முற்றிய கடும்பனி."

(கலி-31)

இது, தனித்தோர்க்குப் பின்பனி ஆற்றலரிது இஃதெவர்க்கும் ஏதமாம் எனவும், இதனான் இறந்துபடுவேனெனவுங் கூறிற்று.

"அம்ம வாழி தோழி காதலர்
நூலறு முத்திற்றண்சித ருறைப்பத்
தாளித் தண்பவர் நாளா மேயும்
பனிபடு நாளே பிரிந்தனர்
பிரியு நாளும் பலவா கவ்வே" (குறு.104)

தலைவி தோழிக்கு உரைத்தது.

இக் குறுந்தொகையும் அது.

பின்பனிக்கு நண்பகல் துன்பஞ்செய்யா தென்பதூஉம் அதற்குச் சிறுபொழுது வரைவில் வென்பதூஉங் கூறிற்று; என்னை? சூத்திரத்துத் 'தான்' எனத்தனித்து வாங்கிக் கூறினமையின்.

## 10. பின்பனி.........மொழிப

### பாரதியார்

கருத்து :- இது பிரிவுக்குப் பின்பனியும் உரித்தாதால் கூறுகிறது.

பொருள் :- (முதிர்வேனிலேயுமன்றி) பின்பனிக்காலமும் பிரிவு சுட்டும் பாலைத்திணைக் குரித்தாகுமென்று கூறுவர் (புலவர்) பின்பனி பிரிவுப் பருவமாதல், பின்வரும் ஆலத்தூர் கிழாரின் குறும்பாட்டிற் காண்க.

''அம்ம, வாழி, தோழி ! முன்னின்று
'பனிக்கடுங் குரையம், செல்லாதீ' மெனச்
சொல்லின் மாயிற் செல்லார் கொல்லோ?
ஆற்றய லிருந்த இருந்தோட் டஞ்சிறை
நெடுங்காற் கணந்துள் ஆளறி வுறீஇ
ஆறுசெல் லம்பலர் படைதலை பெயர்க்கும்
மலையுடைக் கானம் நீந்தி
நிலையாப் பொருட் பிணிப் பிரிந்திசி னோரே.''

(குறுந்-350)

பின்பனிப் பிரிந்தோர் இளவேனிலிற் கூடுவதற்குச் செய்யுள் :-

''கோங்கங் குவிமுகை யவிழ ஈங்கை
நற்றளிர் நயவர நுடங்கு
முற்று வேனின் முன்னிவந் தோரே.'' (நற்-86)
''...............புணர்மினோ என இணமிசைச்
செங்க ணிருங்குயி லேதிர்குரல் பயிற்று
மின்ப வேனிலும் வந்தன்று.''

(நற்-224)

என்னும் பெருங்கடுங்கோவின் நற்றிணைப் பாட்டடிகளும் பிரிந்த காதலர் திரும்பக்கூடும் ''காமர் வேனின்மன் இது'' என்னும் அகப்பாட்டடியும்.

''ஊடீனீ ரெல்லா முருவிலான் நன்னாணை
கூடுமி கனன்று குயில் சாற்ற - நீடிய
வேனற்பா ணிக்கலந்தாண் மென்பூந் திருமுகத்தைக்
கானற்சா ணிக்கலந்தாய் காண்.''

எனவரும் சிலப்பதிகார வெண்பாவும். பின்பனிக்காலம் பிரிவுக்கும் இளவேனில் கூடலுக்குமே ஏற்புடைத் தென்பதை வலியுறுத்தல் காண்க.

**13. இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றலும்[1]**
**உரியதாகும் என்மனார் புலவர். (13)**

ஆ.மொ.இல.

The poets say that when two kinds of separation take place permanently it is suitable (it-the later part of the snow-season).

இளம்பூரணர்

13. இருவகைப் பிரிவும்......... புலவர்.

இது பாலைக்கு உரிய பொருளாம் ஆறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இருவகை பிரிவும்-இருவகைப் பிரிவான தலைமகளைப் பிரிதலும் தலைமகளை உடன்கொண்டு தமர்வரைப் பிரிதலும், நிலைபெற தோன்றலும்-நிலைபெறத் தோன்றலும், உரியது ஆகும் என்மனார் புலவர்-பாலைக்கு உரிய பொருளாம் என்று கூறுவார் புலவர்.

உம்மை[1] எச்ச உம்மையாகலான், நிபெறத் தோன்றாது பிரிதற்குறிப்பு [2]நிகழ்ந்துழியும் பாலைக்கு உரிய பொருளாம் என்று கொள்க. அதிகாரப்பட்டு[3] வருகின்றது பாலையாகலின், இருவகைப் பிரிவும் பாலைக்குரிய பொருளாயின.

(13)

---

1. தோன்றினும்-பாடம்.

1. நிலை பெறத்தோன்றினும் என்பதன் உம்மை.
2. பிரிதற்குறிப்பு—பிரிவுண்டு என்று கொள்ளுமாறு தலைவனிடம் நிகழும் பாராட்டுதல் முதலிய செயல்களாம்
3. முன்னிரு சூத்திரங்களில் தொடர்பாகச் சொல்லப்பட்டு

நச்சினார்க்கினியர் (13)

**11.** இருவகைப்பிரிவு .........புலவர்.

இது பாலைப்பகுதி இரண்டெனவும் அவ்விரண்டற்கும் பின்பனி உரித்தெனவுங் கூறுகின்றது.

இதன் பொருள் :— இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றினும்-நான்கு வருணத்தார்க்குங் காலிற் பிரிவும் வேளாளர்க்குக் கலத்திற் பிரிவும் தத்தம் நிலைமைக்கேற்பத் தோன்றினும், உரியது ஆகும் என்மனார் புலவர்-பின்பனிக்காலம் அவ்விரண்டற்கும் உரிமை பூண்டு நிற்குமென்று கூறுவர் புலவர் என்றவாறு

கடலினை நிலமென்னாமையிற் கலத்திற்கு பிரிவுமுன் பகுத்த நிலத்துள் அடங்காதென்று அதுவும் அடங்குதற்கு இருவகைப் பிரிவும் என்னும் முற்றும்மை கொடுத்துக்காலிற் பிரிவோடு கூட்டிக் கூறினார். கலத்திற் பிரிவு அந்தணர் முதலிய செந்தீவாழ் நர்க்கு ஆகாமையின் வேளாளர்க்கே

வருவது. அதிகாரம்—தொடர்பு.

உரித்தென்றார். வேதவணிகரல்லாதார்[1] கலத்திற்கு பிரிவு வேத நெறி யன்மையின் ஆராய்ச்சியின்று இக்கருத்தானே இருவகை வேனிலும் நண்பகலும் இருவகைப் பிரிவிற்கும் ஒப்ப உரிய வன்றிக் காலிற் பிரிவுக்குச் சிறத்தலும், கலத்திற் பிரிவிற்கு இளவேனி லொன்றுங் காற்றுமிகாத முற்பக்கத்துச் சிறு வர விற்றாய் வருதலும் கொள்க. ஒழிந்த உரிப்பொருள்களிலும் பாலை இடை நிகழு மென்றலிற்[2] பிரிய வேண்டியவழி அவற் றிற்கு ஓதிய காலங்கள் கலத்திற் பிரிவிற்கும் வந்தால் இழுக் கின்று. என்னை ? கார்காலத்துக் கலத்திற்பிரிவும் உலகிய லாய்ப் பாடலுட் பயின்று வருமாயினைன்க. தோன்றினும் என்ற உன்மை சிறப்பும்மை. இரண்டு பிரிவிற்கும் பின்பனி உரித்தென்றலின்.

---

1. பேதநெறியொழுகாத வணிகர்—வேற்வி முதலியசெய் தொழுகாதவர்

2. சூத்திரம் 2-ல் இவர் எழுதியுள்ளார் ; காண்க.

இனிக் கலத்திற் பிரிவிற்கு உதாரணம் :-

"உலகுகிளர்ந் தன்ன வுருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கட னீரிடை போழ
விரவு மெல்லையு மசைவின் றாதி
விரைசெல லியற்கை வங்கூ ழாட்டக்
கோடுயர் திணிமண லகன்றுறை நீகான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
வான்வினைப் புரிந்த காதலர் நாள்பல
கழியா வைபயே யழிபட ரகல
வருவர் மன்னாற் றோழி தண்பனைப்
பொருபுனல் வைப்பி னம்மூ ராங்கட்
கருவிளை முரணிய தண்புதற் பகன்றைப்
பெருவன மலர வல்லி தீண்டிப்
பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்
கூதள மூதிலைக் கொடிநிரை தூங்க
வறனின் றலைக்கு மானா வாடை
கடிமனை மாடத்துக் கங்குல் வீசத்[3]
திருந்திழை நெகிழ்ந்து பெருங்கவின் சாஅய்
நிரைவளை யூருந் தோளென
வுரையொடு செல்லு மன்பினர்ப் பெறினே."

(அகம்—255)

இது தோழி தூதுவிடுவது காரணமாக உரைத்தது.[4]

இம் மணிமிடை பவளத்துப் பின்பனி வந்தவாறும் நண்பகல் கூறாமையும் அவர் குறித்தகாலம் இதுவென்பது தோன்றியவாறுங் காண்க.

---

3. அறனின் றலைக்கும் ஆனா வாடை கடிமனை யகத்துக் கங்குல்வீச என்பது பின்பனிக்குரிய பகுதி.

4. தன் ஆற்றாமை யறித்துதோழி தலைவனிடம் தூது விடல் வேண்டும் என்னும் நினைவால் தலைவி கூறியது உரையொடு செல்லும் அன்பினர்ப் பெறின் வருவர் என்றது தூதுவிட விரும்பும் குறிப்பு

"குன்ற வெண்மண லேறி நின்றுநின்
றின்னுங் காண்கம் வம்மோ தோழி
களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்

தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே."
வருகின்றாரெனக் கேட்ட தலைவி தோழிக்கு உரைத்தது இது பின்பனி நின்ற காலம்[5] வரைவின்றி வந்தது.

கடலிடைக் கலத்தைச் செலுத்துதற்கு உரிய காற்றொரு பட்ட காலம் யாதானும்[6] கொள்க. 'ஆகும்' என்றதனால் வேத வணிகரும் பொருளின்றி இல்லறம் நிகழாத காலத்தாயிற் செந்தீ வழிபடுதற்கு உரியோரை நாட்டிக் கலத்திற் பிரிதற்கு உரியரென்று கொள்க.

## II இருவகைப்.........புலவர்

### பாரதியார்

கருத்து :- இது முதிர்வேனிலிற் பிரிந்தார் கார் காலத்து மீண்டு வந்து கூடலும், பின்பனிக்காலம் பிரிந்தார் இளவேனி லில் கூடலும், மரபென்பதை விளக்குகிறது.

பொருள் : - இருவகைப் பிரிவு - முன்னையிரு சூத்திரங் களிலும் கூறப்பெற்ற வேனிற் பிரிவும், பின்பனிப்பிரிவும்; நிலைபெறத் தோன்றினும்-பிரிதல் நிமித்தங்களாக அமையாது, பிரிந்து நின்ற பாலையாகவே உருப்படினும்; உரியதாகும் என்மனூர் புலவர்-அது பாலைக்குரியதேயாகும் என்று கூறுவர் புலவர்.

குறிப்பு ;- இதில் இருவகைப் பிரிவென்பதற்கு உரையாசி ரிய ரிருவரும் இரு வேறுரைகள் தருவாராவர். தொல்காப்பி யர் தம் இலக்கண நூலில் யாண்டும் தாம் நுதலும் பொருளை ஐயமற வரையறுத்து விளக்குவதைக் கடனாகக் கொண்

---

5. பின்பனி நீங்கிய காலம்.
6. இளவேனிலாவது முதுவேனிலாவது

டொழுகும் பான்மை பாராட்டத்தக்கது. உரைகாரர் கூறும் பிரிவுவகைகளை பிரிவெனப் பொதுவிற் கூறி வேண்டுவோர் வேண்டியாங்கு மாறிப் பொருள் கொள்ளுமாறு வைக்கமாட்டார். தானே வகைகளை விளக்காது தொகையை மட்டும் கூறுவது இலக்கண நூலார் மரபாகாது. அதனால் ஈண்டு 'இருவகைப் பிரிவு' என்னுந்தொடர் சுட்டும் வகையிரண்டும், இதனொடு தொடர்பு படத் தொல்காப்பியர் தாமே கூறியவாதல் வேண்டும் முதிர்வேனிச் பிரிவை முன் ஒன்பதாஞ் சூத்திரத்திலும் பின் பனியிலும் பிரிவுண்டென்பதைப் பத்தாஞ் சூத்திரத்திலும் கூறிய மைத்தாராதலின், இவ்விருவகைப் பிரிவு என இச்சூத்திரத்தில் அவற்றைந் தொகுத்துச் சுட்டினுரென்பதே பொருந்துவதாகும். காலிற்பிரிவும் கலத்திற் பிரிவுகமன நச்சினார்கினியர் கூறுவதே தொல்காப்பியர் கருத்தென்பது அவர் சூத்திரங்களில் யாண்டும் சுட்டப்பெருமையாலும் அஃது இங்குக் கருத்தன்மையறிக.

இனி, இளம் பூரணர் கொள்கையும் அமைவுடைத்தன்று. "தலைமகளைப் பிரிதலும், அவளையுடன் கொண்டு தமர்வரைப் பிரிதலும்" என்று பிரிவிருவகைத்தாமென்பதிவர் கூற்று. இது தொல்காப்பியர் நூலில் யாண்டும் ஆதரவு பெருததோடு, தலைமகன் தலைமகளைக் கொண்டு தலைக்கழிதலையும் பாலையென்று கபாருளொடு பொருந்தாப் பெயரிடும் இவர் பிழைக்குத் தொல்காப்பியரை யாட்டுபடுத்துவதுமாகும். பிரிவும், புணர்தலேபோ, தலைமன் தலைக்கழிதலில் இவ்விவரும் தலைக் கூடித்தம் முட்பிரியாமல் ஒருங்கு செல்வராதலால், அஃதவர் காதற்றிணையில் பாலையாமாறில்லை. அவர் கூடியிருக்கவும் தலைவி தலைவனுடன் செல்லும் பொருட்டுத் தன் தமரைப்பிரிந்து செல்லல் பாலையெனில் தலைவியைக் காணவருந் தலைவன் தன் தமரையும் பாங்கரையும் பிரிந்து வரலும் பாலையாதல் வேண்டும். இவ்வாறு யார் யாரைப் பிரிந்தாலும் பாலையென்று கொள்ளுதற்கு இலக்கண நூலிடந்தராது. அகத்திணைகளனைத்தும் காதற்றலைமக்கள் தம்முள் நிகழும் அன்பொழுக்கம் பறிறியதேயாகு மன்றி, அவருள் ஒருவருக்கும் அயலவர்க்கும் இடைப்பட்ட ஒழுக்கத்தையும் தொடர்புகளையும் அட்டமாட்டா. ஆதலானும், காலத்தால் வெறுபட்ட பிரிவிரண்டையும்

இதற்கு முன் தனியிரண்டு சூத்திரங்களில் ஆசிரியர் விளக்கினாராக்லானும், இச்சூத்திரந்தில் அவற்றையே இருவகைப் பிரிவுமெனத் தொகுத்துக்கூறி நிறுத்தினர் எனக்கொள்ளுதலே பொருத்தமாகும்.

1. வேனிற்பிரிவுக்குச் செய்யுள்மேலே "நடுவுநிலைத் திணையே" எனும் 9-ஆம் சூத்திரத்தின் கீழ்க் காட்டிய "உறைதுறந்திருந்த" எனவரும் நற்றிணைப்பாட்டாலறிக.

இன்னும், பின்வரும் காவன்முல்லைப் பூதனார் பாட்டும் முதிர்வேனிற் பிரிவு கூறுதல் காண்க.

"அஞ்சி லோதி ஆள்வனே நெகிழ
நேர்ந்துதம் அருளார், நீத்தோர்க் கஞ்சல்
எஞ்சினம் வாழி, தோழி! எஞ்சாத்
தீய்ந்த மராஅத்து ஓங்கல் வெஞ்சினை
வேனிலோரிணர் தேனோ டூதி
ஆராது பெயரும் தும்பி
நீரில் வைப்பிற் சுரனிறந் தோரே"

(குறுந்-211)

இதில், "தீய்ந்த மராமரத்தின் ஓங்கிய கிளையில் உண்டான ஒரே பூங்கொத்திலும் கூடத்தேன் எனும் பேண்வண்டோடு தும்பி எனுமாண்வண்டு ஊதி அளைந்து நேடியும் வண்ணத் தேனின்றி மீளும்" எனலாலும், நீரின்மை சுட்டுதலாலும், பருவம் முதிர்வேனிலாதல் வெளிப்படை. அதில் தலைவன், தலைவியை அருளாதகன்று சுரனிறத்தலால் அவ்வேனில் பிரிவுப்பருவ மாதலறிக.

2. இனி, வேனிற்பிரிந்தார் காரிற் கூடுதல் கீழ்வருஞ் செய்யுளிற் காண்க.

"விருந்தெவன் செய்கோ? தோழி சாரல்
அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கைச்
சுரும்பிமி ரடுக்கம் புலம்பக் களிறட்
டுரும்பி லுள்ளத் தரிமா வழங்கும்
பெருங்கல் நாடன் வரவறிந்து திரும்பி
மாக்கடல் முகந்து மணிநிறந் தருவித்

தாழ்நீர் ரனந்தலை யழுந்துபடப் பாஅய்
மலையிமைப் பதுபோல் மின்னிச்
சிலைவல் வேற்றெடு செறிந்தவிம் மழைக்கே.''

(நற்-112)

இன்னும் "இலையில் பிடவம் ஈர்ம் மலரரும்ப" எனும் பெருங்கண்ணனார் நற்றிணைப் பாட்டிலும் இத்துறை வருதலறிக.

''கார் தொடங் கின்றே காலை; வல்விரைந்து
செல்க, பாக! நின் தேரே உவக்காண்
கழிப்பெயர் களரிற் போகிய மடமான்
வழிக்கட் பேதையொ டினனிரிந் தோடக்
காமர் நெஞ்சமொ டகலாத்
தேடூஉ நின்ற இரலை யேறே.''

(நற்—242)

இன்னும்,

''உலகிற் காணி யாகப் பலர்தொழப்
பலவயி னிலைஇய குன்றிற் கோடுதோ
றேயினை உரைஇய ரோ பெருங்கலி எழிலி!
படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்
பெழீஇ யன்ன உறையினை; முழவின்
மண்ணார் கண்ணி னிம்மென இமிரும்
வணர்ந்தொலி கூந்தல் மாஅ யோளொடு
புணர்ந்தினிது நுகர்ந்த சாரல் நல்லூர்
விரவு மலருதிர வீசி
இரவுப்பெயல் பொழிந்த உதவி யோயே.''

(நற்-139)

எனும் பெருங் கௌசிகனார் பாட்டும் முதுவேனிற் பிரிந்தார் காரிற் கூடியின் புறலை விளக்கும் பரிசு களித்தற்குரியது.

3. இனி, பின்பனி பிரிவுக்குப் பாட்டு:—
அம்ம வாழி தோழி! காதலர்
நூலறு முத்திற் றண்சித ருறைப்பத்
தாளித் தண்பவர் நாளா மேயும்
பனிபடு நாளே பிரிந்தனர்
பிரியும் நாளும் பலவா குவவே.''

(குறுந்-104)

"அம்ம வாழி தோழி! முன்னின்று
பனிக்கடுங் குரையம் செல்லா தீமெனச்
சொல்லின மாயிற் செல்வர் கொல்லோ
நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே."
(குறுந்-350)

4. பின்பனியிற் பிரிவார் இளவேனில் கூடுவதற்குச் செய்யுள் :—

"................
ஆற்றறல் நுணங்கிய நாட்பத வேனி
லிணர்துதை மாஅத்த புணர்குயில் விளித்தொறும்
நல்வயி னினையும் நெஞ்சமொடு கைமிகக்
கேட்டொறுங் கலுழுமால் பெரிதே
.....................................
துண்பஃ றித்தி மாஅ யோளே."
(நற்-157)

இன்னும்

"அன்பினர், மன்னும் பெரியர் ........
.....................................
செங்க ணிருங்குயில் எதிர்குரல் பயிற்றும்
இன்ப வேனிலும் வந்தன்று ; நம்வயிற்
பிரியல மென்று தெளித்தோர் தேளத்
தினியெவன் மொழிகோ யானே ........
வெம்முனை அருஞ்சுர முன்னி யோர்க்கே."
(நற்-224)

எனவருமிப் பெருங் கடுங்கோ பாட்டும், "ஈங்கே வருவர் ; இனையல்" என்னும் கச்சிப்பேட்டு நன்னாகையார் குறும் பாட்டும். இத்துறையையே விளக்குதல் காண்க.
(11)

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் களவுப் பிரிவும் கற்புப் பிரிவும் பாலை எனப் படும் என்கிறது.

(இ-ள்) களவில் நிகழும் பிரிவும் கற்பில் நிகழும் பிரிவும் ஆகிய இருவகைப் பிரிவுகளும் செய்யுளில் நிலைபெறுமாறு தோன்றினும் அவைகள் பாலைத் திணைக்கு உரியவாகும் என்றவாறு.

களவில் நிகழும் பிரிவுகளாவன ஒருவழித் தணத்தல் வரை விடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல் உடன் போக்கு என்பன. கற்பில் நிகழும் பிரிவுகளாவன: ஓதல், தூது, பகை, நாடு,காவல், பொருளீட்டல், பரத்தை என்பன.

ஒரு வழித்தணத்தல் என்பது களவில் தலைவன் வந்து கூடிச் சென்று சிறிது இடையீடு நிகழ்வதைக் குறிப்பதாகலின் அஃது ஒரு வருந்தத் தக்க பிரிவாகக் கருதப்படாது. பரத்தையிற் பிரிவு ஊடலுக்கு ஏதுவாதலினாலும் பிரிவால் தலைவனுக்கு வரும் ஏதம் இன்மையின் தலைவி அது குறித்து இரங்கல் இன்மையானும் ஓரூரில் நிகழ்வதாதலினாலும் ஏனைப் பிரிவுகள்போல் கருதப்படாது, எனவே மற்றைப் பிரிவுகளே பாடலுள் பயில்வனவாகும். நிலைபெறத்தோன்றினும் என்பது பயின்று தோன்றினும் என்றவாறு.

இனி, இளம்பூரணர் இருவகைப் பிரிவாவன தலைவன் தலைவியைப் பிரிதலும் உடன் கொண்டு பிரிதலும் என்பர். தலைவியைப் பிரிதல் என்பது களவு கற்பு இரண்டிலும் நிகழ்வது. உடன் கொண்டு பிரிதல் என்பது களவில் நிகழ்வது பின்னர்க் ''கொண்டு தலைக் கழிதலும்'' (17) என்னும் சூத்திரத்தில் உடன் கொண்டு பிரிதலைப் பாலையின்பாற்படும் என இளம்பூரணரே பொருள்கூறியிருத்தலின் இங்கும் அது பாலையின் பாற்படும் என்றதுசிறவாது.

நச்சினார்க்கினியர் இருவகைப் பிரிவாவன காலிற்பிரிவும் கலத்திற்பிரிவும் என்பர். முந்நீர் வழக்கம் மகடூஉவொடு இல்லை ''(32) என்றதனால் காலிற்பிரிவு மகடூஉவொடு பிரிதலும் தனித்துப் பிரிதலும் என்பன என்றும் கொள்ளலாமே.

பாரதியார் வேனிற்பிரிவும் பின்பனிப்பிரிவும் எனக்கொண்டு ''அவை பிரிதல் நிமித்தங்களாக அமையாது பாலையாகவே உருப்படினும் பாலைக்குரியதாகவே ஆகும் என்று கூறுவர்'' என்பர். அப்படியாயின் மற்றைக் குறிஞ்சி முதலிய ஒழுக்கங்களும் நிமித்தங்களாக அமையாது குறிஞ்சி முதலிய வாகவே அமைவனவற்றையும் அவ்வவ்வொழுக்கங்களே எனக் கூறுதல் வேண்டும். கூறாமையின் அவர் கூற்று ஏற்புடைய தன்று.

இனி இருவகைப் பிரிவென பாலைத்திணைக்கே யுரிய பிரிவம் பிறதிணைகளுள் வரும் பிரிவும் என்று கொள்ளலும்

ஆம். அவ்வாறு கூறியதால் தான் அடுத்துத் திணைமயக் குறுதலும்'' ( ) என்றும் கூறநேர்ந்தது என்னலாம். எனினும் இவ்வுரை அத்துணைச்சிறப்பின்று.

**14. திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே நிலன் ஒருங்கு மயங்குதல் இல என மொழிப புலன்நன்கு உணர்ந்த புலமை யோரே 14**

ஆ. மொ. இல.

The intermingling of 'thinai' is not
prevented The intermingling of
regions is not allowed-
Poets well-versed in literature say so.

பி. இ. நா.

**நம்பி 251**

முத்திறப் பொருளும் தத்தம் திணையொடு
மரபின் வாராது மயங்கலும் உரிய

**இல. பி. அ. 22.** ஷ ஷ

இளம்பூரணர்

*திணைமயக்குறுதலும்.................யோரே.*

இது, மேல் அதிகரிக்கப்பட்ட நிலத்தினானும் காலத்தினானும் ஆகிய திணை மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) திணை [1] மயங்குறுதலும் கடிநிலை இல-ஒரு திணைக்கு உரிய முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய முதற் பொருளோடு சேர நிற்றலும் கடியப்படாது, நிலன் ஒருங்கு மயங்குதல் இல் எனமொழிப-ஆண்டு நிலன் சேர நிற்றல் இல்லை என்று சொல்லுவர், புலன் நன்கு உணர்ந்த புலமையோர்-புலன் நன்கு உணர்ந்த புலமையோர்.

---

1. திணை-முதற்பொருள்.

எனவே, காலம் மயங்கும் என்றவாறாயிற்று.
அதற்குச் செய்யுள் :-

"தொல் ஊழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தான்
பல்வயின் உயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போல்
எல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய
நல்லற நெறிநிறீஇ உலகாண்ட அரசன்பின்
அல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம்போல் மயங்கிருள் தலைவர
எல்லைக்கு வரம்பாய இடும்பைகூர் மருள் மாலை"[2]
பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்
தூவறத் துறந்தனன் துறைவனென் றவன்திறம்
நோய்தெற உழப்பார்கண் இமிழ்தியோ எம்போலக்
காதல்செய் தகன்றாரை உடையையோ நீ;
மன்றிரும் பெண்ணை மடல்சேர் அன்றில்
நன்றறை கொன்றனர் அவரெனக் கலங்கிய
என்துயர் அறிந்தனை நரறியோ எம்போல
இன்துணைப் பிரிந்தாரை உடையையோ நீ;
பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழல்
இனிவரின் உயருமன் பழியெனக் கலங்கிய
தனியவர் இடும்பைகண் டினைதியோ எம்போல
இனியசெய் தகன்றாரை உடையையோ நீ;
எனவாங்கு,

அழிந்தயல் அறிந்த எவ்வம் மேற்படம்
பெரும்பே துறுதல் களைமதி பெரும!
வருந்திய செல்லல் தீர் திறனறி ஒருவன்
மருந்தறை கோடலிற் கொடிதே யாழநின்
அருந்தியோர் நெஞ்சம் அழிந்துக விடினே."
(கலி-நெய்-12)

எனவரும்.

---

2. இடும்பை கூர் மருள் மாலைஎன முல்லைக்குரியமாலைப் பொழுது இந்நெய்தல் திணைப்பாடலில் வந்தது.

நச்சினார்க்கினியர் (14)

**12. திணைமயக் ............... யோரே.**

இஃது உரிப்பொருள் மயங்கு மென்றலின் மேலன[1] வற்றிற்குப் புறனடை.

இதன் பொருள் :- திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே- 'மாயோன்மேய' (5) என்பதனுள் ஒரு நிலத்து ஒரொழுக்கம் நிகழுமென நிரனிறுத்துக் கூறிய ஒழுக்கம் அவ்வந் நிலத் திற்கே உரித்தா யொழுகாது தம்முள் மயங்கி வருதலும் நீக்கப்படா, நிலன் ஒருங்கு மயங்குதல் இன்று என மொழிப- அங்ஙனம் ஒரு நிலத்து இரண்டொழுக்கந் தம்முள் மயங்கு தலன்றி இரண்டு நிலம் ஒரொவொழுக்கத்தின்கண் மயங்குத லில்லையென்று கூறுவர், புலன் நன்கு உணர்ந்த புலமையோர்- அங்ஙனம் நிலனும் ஒழுக்கமும் இயைபுபடுத்துச் செய்யும் புல னெறி வழக்கினை நன்று உணர்ந்த அறிவினையுடையோர் என்றவாறு.

என்றது ஒரு நிலத்தின்கண் இரண்டு உரிப்பொருள் மயங்கிவரு மென்பதூஉம், நிலன்இரண்டு மயங்காதெனவே காலம் இரண்டு தம்முள் மயங்குமென்பதூஉம், கூறினாராயிற்று. எனவே, ஒரு நிலமே மயங்கு மாறாயிற்று. உரிப்பொருண் மயக்குறுதல் என்னாது திணைமயக்குறுதலும் என்றார். ஓர் உரிப்பொருளோடு ஓர் உரிப்பொருண் மயங்குதலும், ஓர் உரிப் பொருள் நிற்றற்கு உரிய இடத்து ஓர் உரிப்பொருள் வந்து மயங்குதலும். இவ்வாறே[2] காலம் மயங்குதலும்-கருப்பொருண் மயங்குதலும்பெறு மென்றற்கு. திணையென்றது அம்மூன்றனை யும்[3] கொண்டே நிற்றலின், உதாரணம் :—

---

1. முதல் கருஉரிப் பொருள்களுக்கு.
2. ஓர் காலத்தோடு பிறிதோர் காலம் வந்து மயங்குதலும் ஓர் காலம் நிற்றற்குரிய விடத்துப்பிறிதோர் காலம் வந்து நிற்றலும் ஓர் நிலக்கருப்பொருளோடு பிறிதோர் நிலக்கருப் பொருள்வந்து மயங்குதலும் ஓர்நிலக்கருப் பொருள் நிற்றற்குரிய விடத்துப் பிறிதோர் கருப்பொருள் வந்து நிற்றலும் கொள்க.
3. அம் மூன்று – முதல் கரு உரிப்பொருள்.

"அறியே மல்லே மறிந்தன மாதோ
பொரிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்
சாந்த நாறு நறியோள்
கூந்த னாறுநின் மார்பே தெய்யோ."

(ஐங்குறு-240)

இது புறத்தொழுக்க மின்றென்றாற்குத் தோழி கூறியது.[4]

"புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பிற் கேழல் புரக்குங்
குன்றுகெழு நாடன் மன்றதன்
பொன்போற் புதல்வனோ டென்னீத் தோனே"

(ஐங்குறு-265)

இது வாயில்களுத் தலைவி கூறியது[5]

"வன்கட் கானவன் மென்சொன் மடமகள்
புன்புல மயக்கத் துழுத வேனற்
பைம்புறச் சிறுகிளி கடியு நாட
பெரிய கூறி நீப்பினும்
பொய் வலைப் படூஉம் பெண்டுதவப் பலவே."

(ஐங்குறு-288)

இது தலைவன் ஆற்றாமை வாயிலாகப் புணர்ந்துழிப்பள்ளி யிடத்துச் சென்ற தோழி கூறியது[6]

---

4. பரத்தையிற் பிரிவு ஒரு ரகத்தது. இதில் சாந்தம் நாறும் நறியோள் என்றதால் பரத்தை சாந்தமரம் உள்ள குறிஞ்சி நிலத்தாள் என்பது புலப்படும் அவள் கூந்தல் மணம் நின்மார் பிடத்து நாறும் என்றமை யால் வாயில் மறுத்தலாகிய ஊடல் ஒழுக்கம்புலப்படும். எனவே குறிஞ்சியில் மருதம் நிகழ்ந்ததாம்.

5. குன்று கெழு நாடன் என்றதால் குறிஞ்சியும் புதல்வ னொடு என்னையும் நீத்துப்புறந்து ஒழுகினான் என்று வாயில்களிடம்கூறி மறுப்பதால் மருதமும் காண்க.

6. ஏனல் பைம்புறச்சிறு கிளி கடியும் நாடன் என்றதால் குறிஞ்சி நிலமும் பெரியகூறி......பலவே என்றதால் ஊடற்குறிப்பும் காண்க.

இவை குறிஞ்சிக்கண் மருதம் நிகழ்ந்தன ; இவை ஓரொழுக்கம் நிகழ்தற்கு உரியவிடத்தே ஒரொழுக்கம் நிகழ்ந்தன[7]

''அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயி னென்னதூஉ
மறிய வாகுமோ மற்றே
முறியினர்க் கோங்கம் பயந்த மாறே.''
(ஐங்குறு-366)

இஃது இவ்வேறுபாடென்னென்ற செவிலிக்குத் தோழிபூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்.

இது பாலையிற் குறிஞ்சி[8]

இஃது உரிப்பொருளோடு உரிப்பொருள் மயங்கிற்று [9] மேல் வருவனவற்றிற்கும் இவ்வாறு உய்த்துணர்ந்து கொள்க.

''வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழின்
முளைநிரை முறுவ லொருத்தியொடு நெருநற்
குறிநீ செய்தனை யென்ப வலரே
குரவ நீள்சினை யுறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே.''
(ஐங்குறு - 369)

---

7. நிலத்தால் குறிஞ்சி ஒழுக்கத்தால் ஊடலும் வந்தன. இடம் நிலம்-முதற்பொருள், குறிஞ்சி நிலத்தில் மருத ஒழுக்கம் நிகழ்ந்தது திணைமயக்கம்.

8. கோங்கம் பாலைக்கருப்பொருள். அதனால் இப்பாடல் பாலைத் திணைக்குரியதாம். கோங்கம்பூத்தந்து புணர்ந்தான் எனக்குறிப்பிற் கூறி அறத்தொடு நிற்றலால் குறிஞ்சி ஒழுக்கம் கூறப்பட்டது.

9. இத்தொடர்தவறு.

இது பொழிலிடத்து ஒருத்தியொடு தங்கிவந்தும் யான் பரத்தையை அறியேனென்றாற்கு தோழி கூறியது.[10]

''வண்சினைக் கோங்கின் றண் கமழ் படலை
யிருஞ் சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப
நீநயந் துறையப் பட்டோள்
யார ளோவெம் மறையா தீமே.'' (ஐங்குறு-370)

இது பரத்தையர்க்குப் பூவணிந்தமை கேட்ட தலைவி அஃதின் றென்றாற்குக் கூறியது. [11]

இவை பாலைக்கண் மருதம் நிகழ்ந்தன.
'அருந்தவ மாற்றியார், [12] என்னும் பாலைக்கலியும் அது.

''அன்னை வாழிவேன் டன்னை யுதுக்கா
ணோர்கொடிப் பாசடும்பு பரிய வூர்பிழிபு
நெய்தன் மயக்கிவந் தன்று நின்மகள்
பூப்போ லுண்கண் மரீஇய
நோய்க்கு மருந் தாகிய கொண்கன் றேரே''
(ஐங்குறு - 101)

இஃது அறத்தொடு நின்றபின் வரைதற்குப் பிரிந்தான் வரைவொடு வந்தமை தோழி செவிலிக்குக் காட்டியது.

---

10. குரவ நீள்சினையுறையும் பருவம் என்றதால் குரவுக்கருப் பொருளாலும் குரவமலர்க்கிளையில் குயில்வதியும் பருவம் என்பதால் இளவேனிற் பருவம் கூறப்பட்டன. அதனால் பாலை நிலமாயிற்று. நீநெருநல் ஒருத்தியொரு குறி செய்தனை என்று அவர் கூறுவர் என்றதால் ஊடல் ஒழுக்கம் கூறப்பட்டது.

11. தோங்கு கூறியதால் பாலைநிலமும் நீநயந்துறையப் பட்டாள் யார்? மறையாது கூறுமின் என்றதால் ஊடலும் பெறப்படும்.

12. பாலைக்கலி 20.

இது நெய்தலிற் குறிஞ்சி.

"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே."

(ஐங்குறு-122)

"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
உறாஅ வறுமுலை மடாஅ
வுண்ணாப் பாவை யூட்டு வோளே."

(ஐங்குறு-128)

இவை பெதும்மைப் பருவத்தாள் ஒரு தலைவியொடு வேட்கை நிகழ்ந்தமையைத் தலைவி கூறித் தலைவன் குறிப் புணர்ந்தது.

இப்பத்தும் நெய்தற்கண் மருதம்.

"யானெவன் செய்கோ பாண வனாது
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
புல்லென் றனவென் புரிவளைத் தோளே,"

(ஐங்குறு-133)

இது தலைவன் புறத்துப்போன அத்துணைக்கு ஆற்றாகுதல் தகாதென்ற பாணற்குத் தலைவி கூறியது.

இப்பத்தும் நெய்தற்கண் மருதம்.

"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
மிதிப்ப நக்க கண்போ னெய்தல்
கட்கமழ்ந் தானாத் துறைவற்கு
நெக்க நெஞ்ச நேர்கல் லேனே."

(ஐங்குறு 151)

இது வாயில் வேண்டிய தோழிக்குத் தலைவி வாயின் மறுத்தது.

இப்பத்தும் நெய்தற்கண் மருதம்.

"இலங்குவளை தெளிர்ப்ப வலவ னாட்டி
முகம்புதை கதுப்பின ளிறைஞ்சிநின் றோளே

புலம்புகொள் மாலை மறைய
நலங்கே ழாக நல்குவ ளெனக்கே.''

(ஐங்குறு-197

இது இடந்தலைப்பாட்டிற் றலைவி நிலைகண்டு கூறியது. இது நெய்தலிற் புணர்தனிமித்தம்.

''வேப்புநனை யன்ன நெடுங்கட் கள்வன்
றண்ணக மண்ணளை நிறைய நெல்லி
னிரும்பூ வுறைக்கு மூரற்கிவள்
பெருங்கவி னிழப்ப தெவன்கொ லன்னாய்.''

(ஐங்குறு 30)

இது தோழி அறத்தொடு நின்றது.

''பழனக் கம்புள் பயிர்ப்பெடை யகவுங்
கழனி யூரநின் மொழிவ லென்றுந்
துஞ்சுமனை நெடுநகர் வருதி
யஞ்சா யோவிவ டந்தகை வேலே.''

(ஐங்குறு 60)

இதுதோழி இரவுக்குறிமறுத்தது.

''நெறிமருப் பெருமை நீல விரும்போத்து
வெறிமலர்ப் பொய்கை யாம்பன் மயக்குங்
கழனி யூரன் மகளிவள்
பழன வெதிரின் கொடிப்பிணை யலளே.''

(ஐங்குறு-91)

இஃது இளையள் விளைவில ளென்றது.[1]

''கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றாக்
காதற் குழவிக் கூறுமுலை மடுக்கு
நுந்தை நும்மூர் வருது
மொண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே.''[2]

(ஐங்குறு-92)

---

1. பொய்கை ஆம்பலை எருமைப் போத்து மயக்கும் என்றது மருதம். பழன வேதிதின் (கரும்பு) மாலை அணிந்தவள் என்றது இளையள் புணர்ச்சிக்குரிய விளைவு இவள் என்றது சேட்படையாதலின் குறிஞ்சி.
2. எருமைப் புனிற்றா கிழவிக்கு முலை மடுக்கும் என்றது நின்னையாம் பெறின் வருதும் என்றது குறிஞ்சி.

இது நின் தமர் வாராமையின் எமர் வரைவு நேர்ந்திலரென்று தோழி கூறக்கேட்ட தலைவன் தலைவிக்குக் கூறியது.

இவை மருதத்துக் குறிஞ்சி நிகழ்ந்தன.
இக்காட்டிய வெல்லாம் ஐங்குறு நூறு
'புனையிழை நோக்கியும்' என்னும் மருதக் கலியும் அது
"முரசுடைச் செல்வர் புரவிச் சூட்டு
மூட்டுறு கவரி தூக்கி யன்ன
செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்
மூதா தின்ற லஞ்சிக் காவலர்
பாக லாய்கொடிப் பகன்றையொடு பரீஇக்
காஞ்சியி னகத்துக் கரும்பருத்தி யாக்குந்
தீம்புன லூர திறவ தாகக்
குவளை யுண்கண் ணிவளும் யானுங்
கழனி யாம்பன் முழுநெறிப் பகைத்தழை
காயா ஞாயிற் றாகத் தலைப்பெய்ப்
பொய்த லாடிப் பொலிகென வந்து
நின்னகாப் பிழைத்த தவறோ பெரும
கள்ளுங் கண்ணியுங் கையுறை யாக
நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட் குளப்பட வோச்சித்
தணிமருங் கறியாள் யாஅயழ
மணிமருண் மேனி பொன்னிறங் கொளலே."

(அகம்-156)

இது தலைவியைத் தோழி இடத்துய்த்துத் தலைவனை வரைவு கடாயது. இவ்வகப்பாட்டும் அது.[3]

இன்னும் மயக்குறுதலும் என்றதனான் அவ்வந் நிலங்கட்கு உரிய முதலுங் கருவும் வந்து உரிப்பொருள் வேறாதலன்றி அவ்வந்நிலங்கட்கு உரியவல்லாத முதலுங் கருவும் வந்து உரிப்பொருள் மயங்குவனவும் கொள்க. அஃது 'அயந்திகழ் நறுங்கொன்றை' என்னும் நெய்தற் கலியுட் காண்க. இக் கருத்தானே நக்கீரரும் ஐந்திணையுள்ளுங்களவு நிகழுமென்று கொண்டவாறுணர்க.

---

3. மருதத்துக்குறிஞ்சி தீம்புனலூர என்றது மருதம் இடத்துய்த்தலும் வரைவுகடாதலும் குறிஞ்சி.

இனிக் காலம் ஒருங்கு மயங்குங்காற் பெரும்பொழுது இரண்டும் பெரும்பான்மையுஞ் சிறுபொழுதும் மயங்குதலுங் கொள்க.

''மழையில் வான மீனணிந் தன்ன
குழையமன் முசுண்டை வாலிய மலர
வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்
பெரிய சூடிய கவர்கோற் கோவல
ரெல்லுப் பெயலுழந்த பல்லா நிரையொடு
நீர்திகழ் கண்ணிய ரூர்வயிற் பெயர்தர
நனிசேட் பட்ட மாரி தளிசிறந்
தேர்தரு கடுநீர் தெருவதோ றேழுகப்
பேரிசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கிக்
கூதிர் நின் றன்றாற் பொழுதே காதலர்
நதநிலை யறியா ராயினுந் தந்நிலை
யறிந்தனர் கொல்லோ தாமே யோங்குநடைக்
காய்சின யானைக் கங்குற் சூழ
வஞ்சுவர விறுத்த தானை
வெஞ்சின வேந்தன் பாசறை யோரே.''

(அகம்—264)

இது தோழிக்குத் தலைவி கூறியது.

இம் மணிமிடை பவளத்துள் முல்லையுட் கூதிர் வந்தது[4]

''மங்குன் மாமழை விண்ணதிர்பு முழங்கித்
துள்ளுப்பெயல் கழிந்த பின்னறைப் புகையுறப்
புள்ளிநுண் டுவலை பூவக நிறையக்
காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்
நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத்
துய்த்தலைப் பூவின் புதலிவ ரீங்கை
நெய்த்தோய்த் தன்ன நீர்நனை யந்தளி
ரிருவகி ரீருளி ணீரிய துயல்வர
வவரைப் பைம்பூப் பயில வகல்வயற்
கதிர்வார் காய்நெற் கட்கினி திறைஞ்சச்
சிதர்சினைத் தூங்கி மற்சிர வரைநாட்

---

4. கோவலர் ஊர்வயிற் பெயர்தர முதலியன முல்லை கூதிர்நின்றன்றாற் பொழுது என்பது கூதிர்க்காலம்.

காய்சின வேந்தன் பாசறை நீடி
நந்நோ யறியா வறனி லாள
ரிந்நிலை களைய வருகுவர் கொல்லென
வானா தெறிதரும் வாடையொடு
நோனேன் றோழியென் றனிமை யானே."

(அகம்-294)

இது பருவ வரவின் கண் வற்புறுத்துந் தோழிக்குத்தலைவி கூறியது.

இம் மணிமிடை பவளத்து முல்லையுள் முன்பனி வந்தது நிலமுங் கருவும் மயங்கிற்று.[5]

"கருங்கால் வேங்கை வீயுகு துறுக
லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை
யெல்லி வருநர் களவிற்கு
நல்லை யல்லை நெடுவெண் ணிலவே."[6]

(குறுந்-47)

இஃது இரா வந்து ஒழுகுங்காலை முன்னிலைப் புறமொழி யாக நிலாவிற்கு உரைப்பாளாய் உரைத்தது.

இக் குறுந்தொகையுட் குறிஞ்சியுள் வேனில் வந்தது.

"விருந்தின் மன்ன ரருங்கலந் தெறுப்ப"

(அகம் - 54)

---

5. பாசறை நீடி நம்நோய் அறியா அறனிலாளர் வருவர் சொல் என நோனேன் என்பது உரிப்பொருள் முல்லைக்குரியது குறிஞ்சிக்குரிய முன்பனி (அற்சிரம்) வந்தது பொழுதுமயக்கம். வயல் என மருதநிலமும் நெல் என அதன் கருப்பொருளும் இச்செய்யுளில் வந்தன மயக்கம்.

6. இரவுக்குறிவிலக்கலால் உரிப்பொருளாலும் வேங்கைக் கருப்பொருளாலும் துறுகல் காடு என்பனவற்றால் நில முதற்பொருளாலும் இப்பாட்டு குறிஞ்சியாயிற்று. நெடுவெண் நிலவாக விளக்க முறுதல் வேனிற் காலத் தாதலின் வேனிற்பொழுது மயங்கியதாகக் கொள்க.

என்பது கார்காலத்து மீள்கின்றான் முகிழ் நிலாத் திகழ் தற்குச் சிறந்த வேனிலிறுதிக்கண் தலைவிமாட்டு நிகழ்வன கூறி, அவை காண்டற்குக் கடிது தேரைச் செலுத்தென்றது.

இது முல்லைக்கண் வேனில் வந்தது.

''துஞ்சுவது போல விருளி விண்பக
விமைப்பது போல மின்னி யுறைக்கொண்
டேறுவது போலப் பாடுசிறந் துரைஇ
நிலநெஞ் சுட்க வோவாது சிலைத்தாங்
கார்தளி பொழிந்த வார்பெயற் கடைநா
ளீன்றுநா ளுலந்த வாலா வெண்மழை
வான்றோ யுயர்வரை யாரும் வைகறைப்
புதலே ரணிந்த காண்பின காலைத்
தண்ணறும் படுநீர் மாந்திப் பதவருந்து
வெண்புறக் கொடைய திரிமருப் பிரலை
வார்மண லொருசிறைப் பிடவவிழ் கொழுநிழற்
காமர் துணையோ டமர்துயில் வதிய
வரக்குநிற வுருவி னீயன் மூ தாய்
பரப்பிய வைபோற் பாஅய்ப் பலவுட
னீர்வார் மருங்கி னீரணி திகழ
வின்னும் வாரா ராயி னன்னுதல்
யாதுகொன் மற்றவர் நிலையே காதலர்
கருவிக் காரிடி யிரீஇய
பருவ மன்றவர் வருதுமென் றதுவே.''[7]

(அகம்-139)

இது பிரிவிடை யாற்றாது தோழிக்கு உரைத்தது.

இம் மணிமிடை பவளத்துப் பாலைக்கண் முன்பனியும் வைகறையும் ஒருங்கு வந்தன.

---

7. இன்னும் வாராராயின் யாது சொல் மற்றவர் நிலையே என்றது பாலை உரிப்பொருள் கார்பெயற் கடை நாள் என்றது குறிஞ்சிக்குரிய முன்பனிப்பொழுது. வைகறை என்ற மருதச் சிறுபொழுதும் வந்தது காண்க.

''தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலிதலி
னல்லாந்தா ரலவுற வீன்றவள் கிடக்கைபோற்
பல்பய முதலிய பசுமைதீ ரகன்ஞாலம்
புல்லிய புனிறொரீஇப் புதுநல மேர்தர
வளையவர் வண்டல்போ லார்மணல் வடுக்கொள
விளையவ னரம்பாபோ லெக்கர்போழ்ந் தறல்வார
மாவீன்ற தளிர் மிசை மாயவ டிதலைபோ
லாயிதழ்ப் பன்மல ரைய கொங் குறைத்தர
மேதக விளவேனி லிறுத்தந்த பொழுதின்கண் ;

''சேயார்கட் சென்றாவென் னெஞ்சினைச் சின்மொழி
நீ கூறும் வரைத்தன்றி நிறுப்பென்மன் னிறைநீவி
வாய்விரிபு பனியேற்ற விரவுப்பன் மலர் தீண்டி
நோய்சேர்ந்த வைகலான் வாடைவந் தலைத்தரூஉம் ;

''போழ்துள்ளார் துறந்தார்கட் புரிவாடுங் கொள்கையைச்
சூல் பாங்கே சுடரிழாய் கரம்பென்மற் கைநீவி
வீழ்கதிர் விடுத்த பூ விடுத்த பூ விருந்துண்ணு மிருந்தும்பி
யாழ்கொண்ட விமிழிசை யியன்மாலை யலைத்தரூஉம் ;

''தொடிநிலை நெகிழ்த்தார்கட் டோயுமென் னாருயிர்
வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்மன் வலிப்பவு
நெடுநிலாத் திறந்துண்ண நிரையிதழ் வாய்விட்ட
கடிமலர் கமழ்நாற்றங் கங்குல்வந் தலைத்தரூஉம் ;
''எனவாங்கு,

''வருந்தினை வதிந்தநின் வளைநீங்கச் சேய்நாட்டுப்
பிரிந்துசெய் பொருட்பிணி பின்னோக்கா தெய்தி நம்
மருந்துயர் களைஞர் வந்தனர்
திருந்தெறி றிலங்குநின் றேமொழி படர்ந்தே.[8]

(கலி-29)

---

8. இளவேனில் இறுத்தந்த பொழுது பாலைக்குரிய பொழுது. வாடைவந்து அலைத்தரும் என்றது குறிஞ்சிக்குரிய கூதிர்ப் பொழுது மாலை அலைத்தரும் என்றது முல்லைச்சிறு பொழுது கங்குல்வந்தலைத்தரும் என்றது குறிஞ்சிச்சிறுபொழுது.

வந்தாரென ஆற்றுவித்தது.

இதில் வேனிலும் வாடையும் கங்குலும் மாலையும் வந்தன.

''அம்ம வாழி சிறியிலைக்
குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய
வாவ லுகக்கு மாலையு
மின்றுகொல் காதலர் சென்ற நாட்டே.''

(ஐங்குறு-339)

இவ் வைங்குறு நூறு பாலைக்கண் மாலை வந்தது.[9]

''தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்பக்
காலை வரினுங் களைஞரோ விலரே.''

(ஐங்குறு-183)

பருவ வரவின்கண் மாலைப் பொழுது கண்டு ஆற்றாளாய தலைவி தோழிக்குக் கூறியது

இவ் வைங்குறுநூறு நெய்தற்கண் மாலை வந்தது.[10]

''தொல்லூழி தடுமாறித் தொகல் வேண்டும் பருவத்தாற்
பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போ
லெல்லறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய
நல்லற நெறிநிறீஇ யுல காண்ட வரசன்பி
னல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம்போன் மயங்கிரு டலைவர
வெல்லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை

---

9. உரிபொருளால் பாலை. முல்லைக்குரிய சிறுபொழுது வந்தது.

10. சேர்ப்பன் என்பதாலும் (நிலத்தால்) உரிப்பொருளாலும் நெய்தல் மாலைவருதி என்பதால் முல்லைக்குரிய சிறு பொழுது வந்தது.

பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழ
லினிவரி னுயருமற் பழியெனக் கலங்கிய
தனியவ ரிடும்பைகண் டினைதிவோ வெம்போல
வினிய செய் தகன்றாரை யுடையை யோநீ''

(கலி-129)

என நெய்தற் கலியுட் கங்குலும் மாலையும் முன்பனியும் வந்தன.[11] ஒழிந்தனவும் மயங்குமாறு வந்துழிக் காண்க

பாரதியார்

### 12. திணைமயக்.........புலமையோரே

கருத்து:- இதுவும் இதையடுத்த 'உரிப்பொருளல்லன' என்றுஞ் சூத்திரமும் முன் ஐந்தாவது சூத்திரத்திற் கூறியமுல்லை முதலிய நிலவகைகளுக்கும், பின் 'புணர்தல் பிரிதல்' எனும் 14-வது சூத்திரத்திற் கூறும் குறிஞ்சி முதலிய திணைவகைகளுக்கும் உள்ள இயைபு முரண்களை, நடுநிலை விளக்காய் நின்று, எடுத்துக் காட்டி ஐயமகற்ற எழுந்த சூத்திரங்களாகும்.

பொருள் :- திணை மயக்குறுதலுங் கடிநிலையிலவே குறிஞ்சி முதலிய அன்பினைந்திணைகளான புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்ற ஐந்தொழுக்கங்களும் தத்தமக்குச் சிறப்புரிமையுடைய முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் நிலங்களில் நிகழ்வதுடன் அவ்வாறு சிறப்புரிமையற்ற பிற நிலங்களில் வந்து கலத்தலும் விலக்கப்படா; நிலனொருங்கு மயங்குதல் இன்றென மொழிப- (இவ்வாறொழுக்கங்கள் தமக்குரிமையற்ற நிலங்களில் நிகழ்ந்து மயங்குதலமையுமெனினும்) அவ்வொழுக்க மயக்கம் பற்றித் தம்முள் நிலங்கள் மயங்குதலில்லையென்று கூறுவர்; புலன் நன்குணர்ந்த புலமையோரே-புலனெறி வழக்கங்களை நன் கறிந்த அறிவுடையோர்.

---

11. இப்பாடல் இரங்குதல் உரிப்பொருளால் நெய்தல். இருள்தலைவர என்பதனால் கங்குலும் மருள் மாலை என்பதனால் முல்லைச் சிறுபொழுதும் பனியிருள் என்பதனால் குறிஞ்சிக்குரிய முன்பனிப் பொழுதும் வந்தமை காண்க.

குறிப்பு:- இதன் முதல் மூன்றாமடிகளின் ஈற்றே காரங்கள் அசைநிலை. உம்மை திணைக்கும் மயக்கம் சிறப் பின்மை உணர்த்தும் இதனால் எவ்வொரு நிலத்திற்கும் ஒவ் வொரு திணை சிறப்புரிமை யுடையதென்பதும் அவ்வுரிமை முறையன்றி நிலங்களுள் திணைகளும் தம்முள் மயங்குதல் சிறவாதெனினும் விலக்கு மாறில்லை என்பதும் தெளியப்படும். மயக்கம், தனக்குச் சிறப்புரிமையற்ற நிலத்தில்பிற ஒழுக்க நிகழ்ச்சி குறிக்கும். எந்நிலத்தும் திணைகள் தம்முட்டா மயங்குதல்! கூடாமையின் அது கருத்தன்மை தேற்றம் ஒருங்கு, உடனிகழ்ச்சிப் பொருட்டு.

1. ஒன்றுடன் ஒன்று மயங்குதல் - இரண்டு உரிப்பொருள் வருதல்.

அகத்துறைகளில் முதலில் ஒழுக்கங்களுக்கே உரிய குறிஞ்சி முதலியபெயர்கள் பின்நிரலே அவ்வொழுக்கங்களுக்குச் சிறந்துரிய நிலங்களுக்கும் ஆகுபெயராய் வழங்கலாயின. அவைகள் நிலங் களுக்கே உரிய பெயர்களெனல் பிற்காலப் பிறழ்வுணர்ச்சி. எனவே, சிறப்புக் குறியாகப் புணர்தல் முதலிய ஐந்திணைகளை யும், ஆகுபெயராய் அவற்றிற்குச் சிறந்துரிய நிலங்களையும் குறிஞ்சி, பாலை, நெய்தல், மருதம் எனும் பொதுப் பெயர் களாற் கூறுதல் பழைய தமிழ் நூன் மரபு. எனில், பெய ரொற்றுமையால் திணைகளும் நிலங்களும் யாண்டும் ஒரு நீர்மைய வெனக் கொண்டு, திணை மயங்குந்தோறும் நிலமயக் கமும் உண்டெனக் கொள்ளுதல் கூடாதென வற்புறுத்தி ஐயமகற்றுவதே ஈண்டிச் சூத்திரக் கருத்தாகும். திணையென் பது ஒழுக்கத்திற்கே சிறந்துரிய பெயராகும். 'திணைக்குரிப் பொருளே' என்னுஞ் சொற்றொடரும் இதனை வலியுறுத்தும். ஒவ்வோரொழுக்கமும் அவ்வதற்குச் சிறப்புரிமை கூறிய ஒரு நிலத்திற்கே தனியுரிமையுடைத்தன்று. ஒவ்வொரு நிலமக்களும் அவ்வந் நிலத்தில் ஐந்திணை யொழுக்கங்களையும் கையாளுத லியல்பு. ஆகவே ஒவ்வொரு நிலத்தும் அதுவதற்குச் சிறந்துரிய ஒழுக்கமேயன்றிப் பிறவொழுக்கங்களையும் தொடர்பு படுத்திப் புலனெறி வழக்கஞ் செய்தல் தவறாகாது. ஒரு நிலத்து நிகழும் ஒழுக்க வேறுபாட்டால் அந்நிலத்தியல்பும் மாறினதாகக் கருதலாகாது. மயங்கி நிகழும் ஒழுக்க வேறுபாட்டால் அந் நிலத்தியல்பும் மாறினதாகக் கருதலாகாது மயங்கி நிகழும்

ஒழுக்கத்தோடு ஒருங்கே நிலமயக்கங்கொள்ளுதல் மரபன்று என்பதும், ஒவ்வொரு திணையும் ஒவ்வொரு நிலத்திற்குச் சிறப்புரிமையுடையதாகக் கூறப்படினும் அதுகொண்டு அந்நிலத்து அவ்வோர் ஒழுக்கமே நிகழ வேண்டும் என்ற வரையறையின்றி நிலத்தியல் கருதாமல் திணைமயக்கம் (அதாவது பிறவொழுக்க நிகழ்ச்சி) கூறுதலும் மரபென்பதும், தொல்காப்பியர் இச்சூத்திரத்தால் விளக்கிப் போந்தார். எனவே, எங்கு எவ்வொழுக்கம் நிகழினும் அதனால் நிலத்தியல் மாறாது; காடு புணர்ச்சி நிகழ்வதால் குறிஞ்சியாகாது. முல்லை நிலமேயாம். பிரிவாற்றாக் குறமகளிரங்குவதால் மலைநிலம் நெய்தலாகாது; குறிஞ்சியேயாம்.

தத்தம் இயல்மாறாத நிலம் யாதாயினும், அதில் நிகழும் ஒழுக்கம் பற்றித் திணை வகுப்பது பழைய மரபு. ஒழுக்க இயல் கருதாது நிலவகையால் திணையமைப்பது பிழைபட்ட பிற்கால வழக்கு. அது தொல்காப்பியர்க்குடன்பாடன்று என்பது இச்சூத்திரத்திரத்தால் தெற்றென விளங்கும். புணர்தல் முதலிய கால வகைகளும் தத்தம் இயற்பொருத்தம் பற்றித் தனிச் சிறப்புரிமை கொள்ளுமெனினும், ஒரு திணைக்கு ஒரே காலந்தான் கூறல் வேண்டுமெனும் வரையறையில்லை. எந்தத் திணையும் தன் இயல்பற்றி அதற்குச் சிறந்துரியதல்லாத பிற நிலம் பிற்காலங்களிலும் நிகழ்தல் கூடுமாதலின், ஒவ்வொரு திணையும் எல்லா நிலங்களிலும் போலவே எல்லாக் காலங்களோடும் கலந்து நிகழ்வது கடியப்படாது என்பதும் வெளிப்படை. எனவே, ஒவ்வொரொழுக்கமும் அதற்குச் சிறந்துரியதாகக் கூறப்பெற்ற நிலம்பொழுதுகளிலேயே நிகழும் என ஒருதலையாக் கொள்ளல் கூடாது. உரிப்பொருள்களாகிய எல்லா ஒழுக்கங்களும், நிலமும் பொழுதுமாகிய முதற்பொருள் வகைகளில் ஓரோவொன்றைத்தத்தமக்கு இயலியைபு பற்றிச் சிறப்புரிமை கொள்ளினும், எல்லா நிலங்களினும் எல்லாப் பொழுதுகளினும் எத்திணையும் ஏற்ற பெற்றி கலந்து நிகழ்தலுங் கடியப்படாது என்பதே இச்சூத்திரக் கருத்தாதல் தெளிவாகும். இனி, இச்சூத்திரத்தில் முதற் பொருளிரண்டில் பொழுது கூறாமல் நிலம் விதந்து கூறப்பட்டது. பொழுது போலன்றித் திணையொடு நிலம் குறிஞ்சி முதலிய பொதுப் பெயர் பெற்று மயங்குதலால் வரும் ஐய மகற்றற் பொருட்டு திணையொடு பெயரொற்றுமையில்லாத பொழுதுகள் பற்றி அத்தகைய மயக்கத்திற்கிடனில்லையாதலின், பொழுது மயங்காமை விதந்து கூற வேண்டிற்றில்லை.

இதற்கு "ஒரு நிலத்து இரண்டுரிப்பொருள், அதாவது இரண்டொழுக்கம் தம்முண் மயங்குதலன்றி, இரண்டு நிலம் ஒரோவொழுக்கத்தின்கண் மயங்குதலில்லை" என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். மேலும், "உரிப்பொருள் மயக்குறுதல் என்னாது, திணை மயக்குறுதலுமென்றார், ஓருரிப்பொருளோடு ஓருரிப்பொருள் மயங்குதலும்..............இவ்வாறே கால மயங்குதலும், கருப்பொருள் மயங்குதலும் பெறுமென்றற்கு" எனச் சிறப்புக் குறிப்பும் கூட்டி விரித்தார். இதனால் ஒரு நிலத்தொருகாலத்து ஒன்றின் மிக்க பலதிணைகள் மயங்குமென்பது கருத்தாயின், அது கூடாமைதேற்றம். அன்றி ஒருதிணை பல நிலத்தும் மயங்கும் இயல்பையே இவ்வாறு கூறினர் எனின், அதுமிகையாவதோடு வேறுபாடில்லாத ஒரு மாறுபாட்டைத் தானே படைத்து மயங்குவதுமாகும். ஒவ்வொரு நிலத்தும் அதற்குரிய வல்லாப் பிறவொழுக்கங்கள் நிகழ்தலையும் என்பதனாலேயே, ஒவ்வோரொழுக்கத்திற்கும் அதற்குரிய நிலமேயன்றிப் பிற நிலங்களையுந் தொடர்பு படுத்திச் கூறுதல் அமைவுடைத்தென்பது தெளியப்படும். ஒரு நிலத்துப் பல வொழுக்கம் நிகழும் என்றபின், பல நிலத்து ஓரொழுக்கம் நிகழும் (அதாவது ஒவ்வோ ரொழுக்கத்தோடும் பல நிலத்தொடர்பு அமையும்) என்பதை விலக்குமாறில்லை. எனவே நச்சினார்க்கினியர் கூறுவதே ஈண்டுக் கருத்தாயின். 'திணைமயக்குறுதலுங்கடிநிலையிலவே' என்ற அளவே அக்கருத்தை விளக்கப் போதியதாகும்; 'நிலனொருங்கு மயங்குதலின்றி' எனக்கூட்டியுரைப்பது பொருட் பொருத்தமின்றி முரண்பாடும் விளைத்து மயங்க வைக்கும். இனி. ஒருப்பட்ட தலைமக்களுள் ஓரொழுக்கம் பல நிலங்களில் நிகழ்வது ஒரு காலத்தமையாது என்று கூறி, நச்சினார்க்கினியர் உரைக்கு அமைவு காட்டுவதும் பொருந்தாது. ஒரே காலத்தும் ஒரு நிலத்தும் பலவொழுக்கம் ஒருங்கு நிகழ்தலும், ஒருப்பட்ட ஒரே தலைமக்களுள் ஓரொழுக்கம் ஒரு காலத்துப் பலவிடத்து நிகழ்தலும் கூடாமை வெளிப்படை அதனாலும் அது பொருளன்மை யறிக.

இதற்கு இளம்பூரணர் கூறும் பொருளாவது :– "ஒரு திணைக்குரிய முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய முதற் பொருளொடு சேர நிற்றலுங் கடியப்படாது; ஆண்டு நிலம் சேர நிற்றலில்லையென்று சொல்லுவர் ; எனவே காலம்

மயங்கும் என்றவாறாயிற்று'' என்பதே சூத்திரத்தில் ஒரு நிலத்திற்குரிய வொழுக்கம் வேறொரு நிலத்திற்குக் கூறுதலும் கடிநிலையிலவெனத் தெள்ளத்தெளிய விளக்கியிருக்கவும், அதற்கு மாறாக 'ஒரு திணைக்குரிய முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய முதற் பொருளோடு சேர நிற்றல் கூடாது'' என முரணப் பொருள் கூறுவது அமைவுடைத்தன்று. தொல் காப்பியர் 'திணை மயக்குறுதல்' என்றாரன்றி, 'திணையில் முதற்பொருள் மயங்குதல்' என்று கூறினாரில்லை. ஆதலின் இளம்பூரணர் கூற்றும் இச்சூத்திரச் சொற்றொடருக்கு நேரிய பொருளன்று.

திணைகளையும் நிலங்களையும் சுட்டி அவற்றினியைபு விளக்க எழுந்த இச்சூத்திரத்தில், அவற்றின் புறம்பான காலங் களையும் கருப்பொருள்களையும் புகுத்த வேண்டிப் பழைய உரைகாரர் இச்சூத்திரத்திற்குத் தம்முன் மாறுபடப் பலவாறு மயக்கத்திற்கிடமான பொருந்தாப்பொருள் கூறுவாராயினர்.
திணைமயக்குறுதற்குச் செய்யுள் :—

''கடற்கானற் சேர்ப்ப! கழியுலாஅய் நீண்ட
அடற்கானற் புன்னை தாழ்ந் தாற்ற - மடற்கானல்
அன்றி லகவும் அணிநெடும் பெண்ணைத்தெம்
முன்றி லிளமணன்மேல் மொய்த்து ;
(திணைமாலை 190. செய் - 56)

இதில் குறிஞ்சித் திணையின் இரவுக்குறி நேரும் துறை, தனக்குரிய குறிஞ்சி நிலத்தன்றி, இரங்கற்றிணைக்குரிய நெய் தனிலத்து மயங்கியதறிக. அவ்வாறு குறிஞ்சித்திணை வந்து கலப்பினும், அதனால் நிலத்தியல் மயங்காமல் நெய்தலாகவே நிற்பது கூறுப்படுதலும் காண்க. இன்னும் ''புலாலகற்றும்'' எனும் திணைமாலை (35-ஆம்) வெண்பாவும் நெய்தனிலத் தில் குறிஞ்சித் திணைமயக்கம் கூறும். இனி,

'புன்புறவே சேவலோடுடல் பொருளன்றால்,
அன்புற வேயுடையா ராயினும் - வன்புற்
றதுகாண் அகன்ற வழிநோக்கிப் பொன்போர்த்
திதுகாணென் வண்ண மினி.''
(திணைமாலை 150 செய் - 74)

எனும் திணைமாலைப் பாட்டில் நெய்தற்றிணை பாலை நிலத்து மயங்குதல் அறிக.

(12)

சிவலிங்கனார்

பாடலுட் பயிலும் பொருள்கள் முதல் கரு உரி என்னும் மூன்றுமாம் என்றும் அம்மூன்றன் காரணமாகத்திணை உணரப்படும் என்றும் அவற்றுள் முதற் பொருளாவன நிலமும் பொழுதும் என்றும் எவ்வெந்நிலத்துக்கு எவ்வெப் பொழுது உரியது என்றும் கூறி வந்த ஆசிரியர் நிலத்தொடர் பாகவே 'திணைமயக்குறுதலும்' என்னும் இச்சூத்திரம் கூறி னார் என்க. அதாவது நிலம் பொழுதும் என்னும் முதற் பொருள் தொடர்பாகவே கூறினார். அதனால் திணைமயக் குறுதல் என்பது நிலமும் பொழுதும் மயங்குதலையே குறிக்கும். ஆனால் 'நிலன் ஒருங்கு மயங்குதல் இன்று, என்றதால் திணைமயக்குறுதல் என்பது பொழுதுமயங்குதலையே குறிக்கும். திணையுணர்தற்குக் கருப்பொருளும் உரிப்பொருளும் காரணங் களாக அமைதலின் திணைமயக்குறுதல் என்பது கருப்பொருள் மயக்கத்தையும் உரிப்பொருள் மயக்கத்தையும் உணர்த்ததோ எனின் பின்னர் அடுத்து 'உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே ( )என உரிப்பொருளை விலக்கிக்கருப்பொருள் மயங்கும் என்று கூறுதலின் இச்சூத்திரத்துத் திணைமயக்குறு தல் என்றது பொழுது மயங்குதலையே குறிக்கும் என்க.

ஒரு நிலத்தில் பிறிதோர் நிலம் சேர்ந்திருந்தாலோ ஒரு நிலம் இருக்கவேண்டிய இடத்தில் அஃதின்றிப் பிறிதோர் நிலம் வந்து நிற்பதோ நடவாதது ஆதலின் செய்யுள் செய்வாரும் அவ் வாறு செய்யார்; ஆதலின் நிலன் மயங்குதல் இல்லை. கார்ப்பொழுதில் வேனிற்பொழுது போல் ஞாயிறு காய்தலும் வேனிற் காலத்துக் கார் வருவதும் பெருமழை (கூதிர்) வருவதும் நிகழக்கூடியன. ஆதலினாலும் ஒரு நாளின் சிறு பொழுது ஆறும் எந்நாளிலும் வருதலின் எல்லா நிலங்களுக்கும் உரிய வாதலினாலும் பொழுதாகிய முதற் பொருள் மயக்கம் உண்டு. அவ்வந்நிலக்கருப் பொருள்கள் அவ்வந்நிலத்துக்கே சிறந்தன வாயினும் பிறநிலங்களிலும் ஆங்காங்கு தோன்றும் ஆதலினால்

கருப் பொருள் மயக்கம் உண்டு. புணர்தல் முதலிய ஒழுக்கங்கள் குறிஞ்சி முதலிய எல்லா நிலங்களிலும் நிகழுமாயினும் நூலார் அவ்வந்நிலங்களுக்கே உரிமைப்படுத்தினர். ஆதலினாலும் அவ்வுரிப் பொருள் கொண்டே செய்யுளுக்கு திணை வகுத்தல் வேண்டும் ஆதலினாலும் உரிப்பொருள் மயக்கம் விலக்கப் பட்டதாம் இரண்டு ஒழுக்கங்கள் சேரக்கூறப்படின் அச்செய்யுள் எத்திணைப் பாற்படும் என்பது அறியப்படாதாம். ஒரே காலத்தில் இரண்டொழுக்கம் நடைபெறுதல் இல்லை; செய்யுள்களும் காணப்படவில்லை. உதாரணங்கள் யாவற்றிலும் உரிப்பொருளில் பொழுதும் கருப் பொருளும் மயங்கியனவாக வுளவேயன்றி வேறில்லை. அதனால் நச்சினார்க்கினியர், திணைமயக்கத்துக்கு, ஓர் உரிப் பொருள் மயங்குதலும் ஓர் உரிப்பொருளோடு ஓர் உரிப் பொருள் மயங்குதலும் ஓர் உரிப் பொருள் நிற்றற்குரிய விடத்தே பிறிதோர் உரிப்பொருள் நிற்றலும் கூறுதல் பொருந்தாது.

**15. உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே (15)**

**ஆ. மொ. இல.**

Those other 'than 'Uripporul' may overlap.

**பி. இ. நூ.**

**நம்பி 251**
**இல. வி. அ 22** } முன் சூத்திரத்து உள்ளனவே.

நச்சினார்க்கினியர் உரைக்கு ஏற்ற இலக்கண விளக்கம் அகத்திணை யியற் சூத்திரம் 395

ஒருதலைக் காமமும் ஒவ்வாக்காமமும்
விரவியும் வரூஉம் மரபின என்ப.

**இளம்பூரணர்**

*15. உரிப்பொருள் ........... பெறுமே. (15)*

இஃது எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

(இ-ள்) உரிப்பொருள் அல்லன - உரிப்பொருள் அல்லாத கருப்பொருளும் முதற்பொருளும், மயங்கவும் பெறும் - மற்றொரு திணையொடு சேர நிற்கவும் பெறும்.

உம்மை எதிர்மறை யாகலான் மயங்காமை பெரும்பான்மை எனவே,

"உய்த்துக் கொண்டுணர்தல்"

(மரபு 110)

என்னும் தந்திர உத்தியான் எடுத்தோதிய காலமாகிய முதற் பொருளும், பூவும் புள்ளுமாகிய கருப்பொருளும் மயங்கியும் மயங்காமையும் வரும். எனவே, உரிப்பொருள் மயங்கிவராது என்றவாறு. மயங்கி வருதல் கலி முதலாகிய சான்றோர் செய்யுளகத்துக் கண்டுகொள்க.

"ஒண்செங் கழுநீர்க் கண்போல் ஆயிதழ்
ஊசிபோகிய சூழ்செய் மாலையன்
பக்கம் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயமண் டாகம் செஞ்சாந்து நீவி."

(அகநா. 48)

என்றவழி, மருதத்திற்குக் [1]கருப்பொருளாகிய கழுநீரும் குறிஞ்சிக் குரிய வெட்சிப்பூவும் அணிந்தோன் என்றமையாற் கருப்பொருள் கருப்பொருள் மயக்கமாயிற்று. [2]பிறவும் அன்ன.

## நச்சினார்க்கினியர்

15. உரிப்பொரு......பெறுமே
இஃது எய்தாத தெய்துவித்தது[3]

---

1. கருப்பொருட்கு மயக்கம் எய்தாததை இச்சூத்திரத் தான் எய்து வித்தலின் எய்தாதது எய்துவித்தலாயிற்று.

2. கழுநீர் மாலையன் செச்சை (வெட்சி) க்கண்ணியன் எனத் தலைவன் மருதக் கருப்பொருளும் குறிஞ்சிக் கருப்பொருளும் கூறப்பட்டன. இது குறிஞ்சித்திணை யாதலின் மருதக்கருப்பொருள் வந்துமயங்கியதாகக் கொள்க.

3. கைக்கிளை பெருந்திணைகளுக்கு இதுவரை எய்தாத மயக்கம் எய்துவித்தது.

இதன் பொருள் :- உரிப்பொருள் அல்லன - உரிப்பொருளென்றும் ஓதப்படும் ஐந்திணையும் அல்லாத கைக்கிளையும் பெருந்திணையும் மயங்கவும் பெறும் - நால்வகை நிலத்தும் மயங்கவும் பெறும் என்றவாறு.

உம்மை எச்சவும்மை யாதலின் உரிப்பொருளாக எடுத்த பாலையும் நால்வகை நிலத்தும் மயங்கவும் பெறும் என்றவாறாம். பாலை என்பது ஒன்று பிரிந்து பலவாகிய கூற்றின் மேற்றாதலின் ஒற்றுமைப்பட்டு நிகழ்கின்றார் இருவர் பிரிந்து வரலும் பாலையாமன்றே ? அதனால், அதுவுங் குணங் காரணமாய்ச் செம்பால் செம்பாலை யாயினாற் போல நின்றது [1]

ஊர்க்கா னிவந்த'' என்னுங் குறிஞ்சிக்கலியுள்,

''ஆய்தூவி யனமென வணிமயிற் பெடையெனத்
தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழிலை
மாதர்கொண் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்
பேதுறூஉ மென்பதை யறிதியோ வறியாயோ''
(கலி-56)

---

1. பால் என்பது பிரிவு. ஒரு பொருளின் பல பிரிவுகளுக்கும் உரிய பொதுப்பெயர். நிலத்தின் வன்மை மென்மைப் பிரிவுகளை வன்பால் மென்பால் என்பர். உயர்திணைப்பிரிவு ஆண்பால் பெண்பால் பலர்பால் எனப்படுதல் காண்க. பண்களுள் பாலைப்பண் என்பதும் ஒன்று அது கொண்ட பிரிவுகளுள் ஒன்று செம்பால் என்பது. அது செம்பாலை என ஐசாரியை பெற்று வழங்கப்படுகின்றது.

அன்புளங் கொண்ட ஒருவனும் ஒருத்தியும் ஒருவர் என இருந்து பின் தனித்தனிப் பிரிந்திருக்கும் நிலையும் பால் எனப்படும். அதனால் அப்பிரிந்த ஒழுக்கம் பால் எனப்படும். அது ஐசாரியையுடன் கூடிச் செம்பால் என்பது செம்பாலை ஆனாற் போலப் பாலை எனப்பட்டது.

நச்சினார்க்கினியர் பாலைப் பெயர்க்காரணத்தை இவ்விடத்துக் கூறவேண்டிய காரணம் புலப்படவில்லை.

இது நிலம்வரையாது வந்த கைக்கிளை. இதனைக் குறிஞ் சியுட் கோத்தார் புணர்ச்சி யெதிர்ப் பாடாகலின்.

''கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே யாய மகள்;

''வளியா வறியா வுயிர்காலம் கொண்டு
நளிவாய் மருப்பஞ்சு நெஞ்சினார் தோய்தற்
கெளியவோ வாயமக டோள்;'' (கலி-103)

''அவ்வழி முள்ளெயிற்றேஎ ரிவளைப் பெறுமிதோர்
வெள்ளேற் றெருத்தடங்கு வான்;

''ஒஃளிழை, வாறாறு கூந்தற் றுயில்பெறும் வைமருப்பிற்
காரி கதனஞ்சான் கொள்பவன்......'' (கலி-104)

என்றாற்போல ஏறுதழுவினாற்கு உரியள் இவளென வந்த கைக்கிளைகளெல்லாம் முல்லைக்கலி பலவற்றுள்ளுங் காண்க.

'முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே' (105) என்ப தனான் அவை கைக்கிளையாயின.

இனி 'எழின் மருப் பெழில்வேழம்' என்றது முதலிய நாலு பாட்டும் ஏறிய மடற்றிறமான (51) பெருந்திணை; என்னை?

''மாமேலே னென்று மடல்புனையா நீந்துவேன்
தேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு.'' (கலி-139)
என்றாற் போல்வன வருதலின்.

'புரிவுண்ட புணர்ச்சி' என்றது முதலிய ஆறுபாட்டுந் தேறுத லொழிந்த காமத்து மிகுதிறமாகிய (51) பெருந்திணை இவற்றை நெய்தலுட் கோத்தார் சாக்காடு குறித்த இரங்கற் பொருட் டாகலின். கூனுங் குறளும் உறழ்ந்து கூறும் பெருந்திணையும் ஊடற் பகுதியவாகலின் மருதத்துட் கோத்தார்.

''கல்லாப் பொதுவனை நீமாறு.'' (கலி-112)
எனப் பொதுவியர் கூறலும்.

"நடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின்
விடாஅலோம் பென்றா ரெமர்"

(கலி-112)

எனப் பொதுவர் கூறலும் மிக்க காமத்து மிடலாகிய (51) பெருந்திணையாகலின் முல்லையுட் கோத்தார்.

'நறவினை வரைந்தார்' 'ஈண்டு நீர்மிசை' என்னுங் கலிகளுங் காமத்து மிகுதிறத்தான் (51) அரசனை நோக்கிச் சான்றோர் கூறியவாகலின் மறுத்துக் கோத்தார்.

"வானமூர்ந்த வயங்கொளி மண்டில
நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட்டு"

(அகம்-11)

எனக் காடுறை யுலகத்துப் (5) பாலைவந்தது.

"தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக
வடங்காதார் மிடல்சாய வமரர்வந் திரத்தலின்
மடங்கல்போற் சினைஇ மாயஞ்செ யவுணரைக்
கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலு
முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலிற்
சீறருங் கணிச்சியோன் சினவலி னவ்வெயி
வேறுபெற் றுதிர்வனபோல் வரைபிளந் தியங்குந
ராறுகெட விலங்கிய வழலவி ராரிடை
மறப்பருங் காத லிவளீண் டொழிய
விறப்பத் துணிந்தனிர் கேண்மின்மற் றைஇய." கலி

இது மைவரையுலகத்துப் (5) பாலை வந்தது.

'மறந்தவ ணமையா ராயினும்' என்னும் அகப்பாட்டுத் தீம்புனலுலகத்துப் (5) பாலை வந்தது.

'அருளி லாளர் பொருள்வயி னகல' என்னும் அகப் பாட்டினுட் பெருமணலுகத்துப் (5)பாலை வந்தது.

இன்னும் பிறவுஞ் சான்றோர் செய்யுட் கண்ணே உரிப் பொருண் மயங்கியும் காலங்கண் மயங்கியும் வருவனவெல்லாம் இதனான் அமைத்துக் கொள்க.

(13)

பாரதியார்

### 15. உரிப்பொருள்.........பெறுமே

கருத்து :- இது ஐந்திணைகள் போலவே, அத்திணைகளின் சார்பான பிற உரிப்பொருள்களும் பல நிலங்களிலும் ஏற்ற பெற்றி வந்து மயங்கும், என்று கூறுகிறது.

பொருள் :- உரிப்பொருளல்லன-''திணைக்குரிப் பொருளே'' என வரையறுத்த புணர்தல் முதல் ஐந்திணையல்லாத உரிப் பொருளான தலைமக்கள் ஒழுக்கமாவன பிற; மயங்கவும் பெறும்-எந்நிலத்தும் வந்து கலத்தலுமுண்டு.

குறிப்பு :- புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் எனும் திணைக்குரிப்பொருள் ஐந்துமின்றி அவற்றின் சார்பாய் அவ்வுரிப்பொருள்களோடு அமைத்துக் கோடற்பாலனவாய், பிற்றைச் சூத்திரங்கள் கூறும் 'கொண்டுதலைக் கழிதல்' 'பிரிந்தவணிரங்கல்' 'கலந்த பொழுது' 'காட்சி' முதலியனவும், ஐந்திணை உரிப்பொருள்களைப் போலவே ஒரு நிலத்துக்குந் தனியுரிமையின்றி எல்லா நிலத்தும் வந்து மயங்கவும் பெறும். ஈற்றேகாரம் அசைநிலை.

திணைக்குரிப் பொருள்களாக விதந்துகூறும் புணர்தல் முதலிய ஐந்தும் எந்த நிலத்தும் வந்து மயங்குதல் மேற் சூத்திரத்திற் கூறப்பட்டது. பேரளவில் அவ்வைந்தனுளடங் காமல் இயல் பற்றி உரிப்பொருளா யமைவனபிறவுமுள என்பதை இவ்வியல் 'கொண் டுதலைக்கழிதல்' 'கலந்தபொழுதும்' என்ற சூத்திரங்களிற் சுட்டுவதால், அத்தகைய பிற அகவுரிப் பொருள்களும், விதந்தோதிய ஐந்திணையுரிப் பொருள்கள் போலவே, வரையறையின்றி யெந்த நிலத்தும் வந்து மயங்குதல் கூடும் என்பதை இந்தச்சூத்திரம் விளக்குகிறது. ஈண்டு 'உரிப்பொருளல்லன' என்பது முன்னைச்சூத்திரத்தில் திணைக் குரிப்பொருள்' என விதந்தோதிய தலைமக்களொழுக்கம் ஐந்து மல்லாத பிறவெனக் கொள்ளல் வேண்டும். 'உரிப்பொருளல்லன' என்பதை 'அல்லன உரிப்பொருள்' எனச் சொன்மாற்றி, முன் விதந்தோதிய ஐந்துமல்லாத உரிப்பொருளாவன எனக் கொள்ளுவதே ஈண்டுப் பெரிதும் பொருத்தமுடைத்தாம்.

இனி, இவ்வாறு கொள்ளாமல், உரிப்பொருளல்லாத கருப் பொருளும் முதற்பொருளும் பிறதிணையோடு சேரும் என்று இளம்பூரணர் பொருள் கொள்வதும் பொருந்தாது. ஏனெனில் திணைமயக்குறுதலும் என்ற சூத்திரத்தால் முதற்பொருள் மயக்கமும் எந்நில மருங்கிற் பூவும்புள்ளும்' என்பதால் கருப் பொருள்களின் மயக்கமும் முன் தனி வேறு சூத்திரங்களாற் கூறியிருத்தலின், அவற்றையே இச்சூத்திரத்திலும் தொல்காப் பியர் கூறினாரென்பது கூறியது கூறல் என்னுங் குற்றத்திற்கு அவரையாளாக்கும்.

''உரிப்பொருள் என்றோதிய ஐந்திணையுமல்லாதகைக்கிளை பெருந்திணையும் நால்வகை நிலத்தும் மயங்கவும் பெறும்'' என்னும் நச்சினார்க்கினியர் உரையும் அமைவுடைத்தன்று. கைக்கிளை பெருந்திணைகளுக்கு நிலம் பொழுதுகளில் எதுவுமே தனியுரிமை கூறாததால், விலக்கில்லா நிலம்பொழுதுகளில் அவை வந்து மயங்குமெனச் சுட்டுதல் மிகையாகும். அன்றியும் மேல் இரண்டாஞ் சூத்திர முதல் கீழ் 42-ஆம் சூத்திரமுடிய நிரலே நடுவணைந் திணைகளின் இயல்புகளையே விளக்கிப் பிறகு 43முதல் 49வரையுள்ள சூத்திரங்களில் சில பொது வியல்புகள் கூறி, அவற்றின்பின் இவ்வியலிறுதியில் 50, 51-ஆம் சூத்திரங்களில் கைக்கிளை பெருந்திணைகளை விளக்கி முடிக்கும் இந்நூலார் ஈண்டு அன்பினைந்திணையின் இயல்பு களுக்கிடையே இன்றியமையாத் தொடர்பு எதுவுமின்றி இறு தியிற் கூறும் கைக்கிளை பெருந்திணைகளையிழந்து அவற்றின் இலக்கணம் கூறுமுன் மயக்கங் கூறினாரெனக் கொள்ளுதல் எவ்வாற்றானுஞ் சாலாமையறிக.

ஐந்திணையல்லாப் பிற உரிப்பொருள் பலநிலத்து மயங்கு தற் ச் செய்யுள் :-

கொண்டுதலைக்கழிதல் அத்தகைய பிற உரிப்பொருளாத லுண்டென அடுத்த பின் சூத்திரம் கூறுகிறது. அவ்வுரிப் பொருள் புணர்தற்குரிய குறிஞ்சி நிலத்தில் மயங்குவதாகக் கீழ்வரும் பழம்பாட்டுக் கூறுதல் காண்க.

1. ''நினையாய், வாழி, தோழி!'' எனும் பூதத்தேவனார் குறும்பாட்டில்

"............புலிப்பகுவா யேற்றை
............விடர்முகைக்
கோடை ஒற்றிய கருங்கால் வேங்கை
வாடுபூஞ் சினையிற் கிடக்கும்
உயர்வரை நாடனொடு பெயருமாறே"

(குறுந்-343)

புலி வேங்கைச் சினையிற் கிடக்கு முயர்வரை நாடாகவே நிலம் குறிஞ்சி; நாடனொடு பெயர்தல் கொண்டுதலைக் கழிதலாமுரிப்பொருள். இன்னும் "ஊஉரலதெ்ரழ" எனும் பெருங் கடுங்கோவின் பாட்டு மதுவா தலறிக."

'.............................................

உணலாய்ந் திசினா லவரொடு சேய்நாட்டு
விண்டொட நிவதந் விலங்குமலைக் வகாற்
கரும்புநடு பாத்தி யன்ன
பெருங்கழிற் றடிவழி நிலைஇய நீரே."

(குறுந்-262)

இதில் புணர்தற்குரிய மலையிற்றலைவனுடன் போகும் தலைவி களிற்றடிவழி நிலைஇய நீரைத் தலைவனோடுண்ணுதலை விரும்பும் ஒழுக்கம் மயங்குதலறிக.

இனி கொண்டுதலைக்கழிதல்.

"அன்னாய் வாழி வேண்டன்னை, நம் படப்பைத்
தேன் மயங்கு பாலினும் இனிய, அவர்நாட்
டுவலைக் கூவற் கீழ்
மானுண் டெஞ்சிய கலுழி நீரே"

(ஐங்-203)

எனும்ஐங்குறுநூற்றுப்பாட்டில் குறிஞ்சி நிலத்தும்.
"ஒன்றானு நாம்மொழிய லாமோ செலவதான்
பின்றாது பேணும் புகழான்பின்-பின்றா
வெலற்கரிதாம் வில்வலான் வேல்விடலை பாங்காச்
செலற்கரிதாச் சேய சுரம்."

(திணைமாலை 150செய்-87)

எனும் திணைமாலை வெண்பாவில் பாலைநிலத்தும், வந்து மயங்குதல் காண்க.

இதுபோலவே மற்றைய ஐந்திணையிலடங்கா உரிப் பொருள் அனைத்தும் எல்லாநிலத்தும் மயங்குமென்றறிக. (13)

சிவலிங்கனார்

இச்சூத்திரத்துக்கு, உரிப்பொருளில்லாக்கருப் பொருளும் பொழுதாகிய முதற்பொருளும் மயங்குதலும் உண்டு என இளம் பூரணர் கூறும் உரையே பொருந்தும். திணைமயக்குறுதலும் கடிநிலையின்று எனப் பொதுவில் திணைமயங்கும் என்றவர் திணையறிதற் குரிய பொருள்களுள் நிலம் என்ற முதற் பொருள் மயங்காது என்றார். 'திணைமயக்குறுதலும்' என்னும் சூத் திரத்தின்மூலம் பொழுதாகிய முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளுமாகியன மயங்குமா என்னும் ஐயம் தோன்றும் அதனை விலக்க இச்சூத்திரத்தால் உரிப்பொருள் மயங்காது; அல்லன மயங்கும் என்றார். எந்நிலமருங்கிற் பூவும் புள்ளும்' (21) என்னும் சூத்திரத்தால் கருப்பொருள் மயங்குமாறு எப்படி என்பது சொல்லப்பட்டதேயன்றி மயங்கும் என்பது சொல்லப்படவில்லை. இச்சூத்திரத்தால்தான் சொல்லப்பட்டது.

நச்சினார்க்கினியர் கைக்கிளைபெருந்திணைகள் மயங்கும் என்பது சொல்லப்பட்டதாகக் கொள்வர். அவற்றுக்கு முதல் கரு என்பனவரையறுக்கப்படவில்லையாதலின் மயக்கத்துக்கு இடம் இல்லை.

பாரதியார், கொண்டுதலைக்கழிதலும் பிரிந்தவண் இரங் கலும் (18) கலந்த பொழுதும் காட்சியும் (19) தமக்கென உரிப்பொருளுடையனவல்ல ஆதலின் அவற்றையே மயங்கும் என்றார் ஆசிரியர் என்பர். அவை பாலை நெய்தல் குறிஞ்சி ஆகியவற்றில் சார்ந்து தமக்கெனவுரிப் பொருள் உடையன வாம். அதனால் உரிப்பொருளல்லன என்றல் பொருந்தாது. உரிப்பொருளில்லாச் செய்யுள் இல்லை.

**16. புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் [1] நிமித்தம் என்றிவை**
**தேருங் காலை திணைக்குஉரிப் பொருளே (16)**

ஆ. மொ. இல.

('Punarthal,' 'Pirithal', 'Iruththal', 'Irangal' and 'Udal' and their causes are the 'Uripporul' of 'thinais' if we examine the aspects of love)

பி.இ.நா.

தமிழ் நெறிவிளக்கம். 13

புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும் அனைவயின் இரங்கலும் அவற்றின் நிமித்தமும் களவோடு கற்பெனக் கலைநர் கூறிய அளவில் உரிப்பொருள் ஆகும் என்மனார்.

**நம்பி. 25**

புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும்
இரங்கலும் இவற்றின் நிமித்தமும் எனவாங்கு
எய்திய உரிப்பொருள் ஐயிரு வகைத்தே

**இல. வி. அ. 21**

புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும்
இரங்கலும் இவற்றின் நிமித்தமும் எனவாங்கு
எய்திய உரிப்பொருள் ஐயிரு வகைத்தவை
ஓரிரண்டு ஓரிரண்டு உரைத்த ஐந் திணைக்கும்
நேரும் என்மனார் நெறியுணர்ந் தோரே

இளம்பூரணர்

**16. புணர்தல் பிரிதல்........பொருளே.**

இஃது உரிப்பொருள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் அவற்றின் நிமித்தம் என்று இவை-புணர்தலும், பிரிதலும், இருத்தலும் இரங்கலும், ஊடலும், அவற்றின் நிமித்தமும் என்று சொல்லப்பட்ட இவை, தேரும் காலை திணைக்கு உரிப் பொருள் - ஆராயுங்காலத்து ஐந்திணைக்கும் உரிப்பொருளாம்.

1 இவற்றின்—பாடம்.

பிரிவு பாலைக்கு உரித்தாமாறு மேற்சொல்லப்பட்டது. 'ஏனைய மொழிந்த பொருளோ டொன்றவைத்தல்' (மரபு-110) என்னும் தந்திர உத்தியால், புணர்தல் என்பது நெய்தற்கும், ஊடல் என்பது மருதத்திற்கும் பெரும்பான்மையும் உரித்தாக வும் சிறுபான்மை எல்லாப்பொருளும் எல்லாத் திணைக்கும் உரித்தாகவும்[1] கொள்ளப்படும் இருத்தலாவது, தலைமகன் வருந்துணையும் ஆற்றியிருத்தல். இரங்கலாவது ஆற்றாமை. நச்சினார்க்கினியம்.

14. புணர்தல் பிரித............பொருளே.

இது மேனிறுத்த முறையானன்றியும் அதிகாரப்பட்டமை[2] கண்டு உரிப்பொருள் கூறுகின்றது. உரிப்பொருள் உணர்ந் தல்லது உரிப்பொருளல்லன உணரலாகாமையின்.

இதன் பொருள் ;- புணர்தலும் புணர்தனிமித்தமும், பிரிதலும் பிரிதனிமித்தமும், ஊடலும் ஊடனிமித்தமும் என்ற பத்தும் ஆராயுங்காலை ஐந்திணைக்கும்[3] உரிப்பொருளாம் என்றவாறு.

'தேருங்காலை' என்றதனாற் குறிஞ்சிக்குப் புணர்ச்சியும்' பாலைக்குப் பிரிவும், முல்லைக்கு இருத்தலும், நெய்தற்கு இரங்கலும், மருதத்திற்கு ஊடலும், அவ்வந்நிமித்தங்களும் உரித்தென்று ஆராய்ந்துணர்க. இக்கருத்தே பற்றி 'மாயோன் மேய' (5) என்பதனுள் விரித்துரைத்தவாறுணர்க.[4]

---

1. 'சிறுபான்மை.................உரித்தாகவும்'—இது உரிப் பொருள் மயங்காது என்ற இவரது கொள்கைக்கு மாறுபட்டது
2. மேல் நின்றமுறைமை - முதல்கருஉரி. கருப்பொருள் கூற உரிப்பொருள் கூறாது உரிப்பொருளை இங்குக் கூலக்காரணம் உரிப்பொருளல்லன மயங்கவும் பெறும் எனமுன் சூத்திரத் தெர்டர்பு காரணமாம்.
3. ஐந்திணை-ஐந்துநிலம்.
4. 'இக்கருத்தே ........உணர்க''— இக்கருத்தேபற்றி— உய்த்து உணர்ந்து கொள்ள வேண்டும் என்னும் கருத்துபற்றி காடுறை உலகம் மைவரை உலகம் தீம்புனலுகம் பெருமணலுலகம் ஆகியவற்றுக்கு முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனப் பெயருண்டு என்பதை நிரல் நிறையாக உய்த்துணர்ந்து கொள்ளல் வேண்டும்.

அகப்பொருளாவது புணர்ச்சியாகலானும் அஃது இருவர்க்கும் ஒப்ப நிகழ்தலானும் புணர்ச்சியை முற்கூறி, புணர்ந்துழியல்லது பிரிவின்மையானும் அது தலைவன் கண்ணதாகிய சிறப்பானுந் தலைவி பிரிவிற்குப் புலனெறி வழக்கு இன்மையானும் பிரிவினை அதன்பிற் கூறி, பிரிந்துழித் தலைவி ஆற்றியிருப்பது முல்லையாகலின் இருத்தலை அதன்பிற்கூறி, அங்ஙனம் ஆற்றியிராது தலைவனேவலிற் சிறிது வேறுபட்டிருந்து இரங்கல் பெரும்பான்மை தலைமகளதேயாதலின் அவ்விரங்கற் பொருளை அதன்பிற் கூறி, இந்நான்கு பொருட்கும் பொதுவாதலானுங்[5] காமத்திற்குச் சிறத்தலானும் ஊடலை அதன்பிற் கூறி இங்ஙனம் முறைப்படுத்தினார்.

நான்கு நிலத்தும் புணர்ச்சி நிகழுமேனும் முற்பட்ட புணர்ச்சியே புணர்தற் சிறப்புடைமையிற் குறிஞ்சியென்று அதனை முற்கூறினார். அவை இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கற் கூட்டமும் தோழியிற் கூட்டமும் அதன் பகுதியாகிய இருவகைக் குறிக்கண் எதிர்ப்பாடும் போல்வன. தலைவன் தோழியைக் குறையுறும் பகுதியும் ஆண்டுத்தோழி கூறுவனவுங் குறைநேர்தலும் மறுத்தலும் முதலியன புணர்ச்சி நிமித்தம்.

இனி, ஓதலும் பகையும் தூதும் (25) அவற்றின் பகுதியும் பொருட் பிரிவும் உடன்போக்கும் பிரிவு ஒன்றாத் தமரினும் பருவத்துஞ் சுரத்தும்.........தோழியொடு வலித்தன்' (41) முதலியன பிரிதனிமித்தம், பிரிந்தபின் தலைவி வருந்துவனவுந் தோழியாற்று வித்தனவும் பாலையாதலிற் பின்னொருகாற் பிரிதற்கு நிமித்தமாம். அவை பின்னர்ப் பிரிவிற்கு முன்னிகழ்தலின்.

---

5. புணர்ச்சியின்ப மிகுதிக்குக் காரணமாவதாலும் பிரிவினால் தோன்றுதலாலும் பிரிந்தபோது ஆற்றியிருப்பதாலும், ஆற்றுதல் நீடித்து இரங்குதல் மிகுவதாலும் ஆக நான்கு வகையினும் ஊடல் தோன்றுதலின் நான்கு நிலத்துக்கும் பொது எனப்பட்டது ஊடல்.

இனித் தலைவி பிரிவுணர்த்தியவழிப் பிரியாசென்றிருத்தலும் பிரிந்துழிக் குறித்தபருவ மன்றென்று தானே கூறுதலும், பருவம் வருந்துணையும் ஆற்றியிருந்தமை பின்னர்க் கூறு வனவும் போல்வன இருத்தல் அப்பருவம் வருவதற்கு முன்னர்க் கூறுவன 'முல்லை சான்ற கற்பு' அன்மையிற் பாலையாம். இனிப்பருவங்கண்டு ஆற்றாது தோழி கூறுவனவும் பருவமன்றென்று வற்புறுத்தினவும் வருவரென்று வற்புறுத் தினவும் தலைவன் பாசறைக்கண் இருந்து உரைத்தனவும் அவை போல்வனவும் நிமித்த மாதலின் இருத்தனிமித்தமெனப் படும்.

இனிக் கடலுங் கானலுங் கழியுங் காண்டொறும் இரங் கலும், தலைவன் எதிர்ப்பட்டு நீங்கியவழி இரங்கலும், பொழுதும் புணர்துணைப் புள்ளுங்கண்டு இரங்கலும் போல்வன இரங்கல். அக்கடல் முதலியனவுந் நீங்குவனவு மெல்லாம் நிமித்தமாம்.

புலவி முதலியன ஊடலாம். பரத்தையும் பாணனும் முதலியோர் ஊடனிமித்தமாம்.

ஏனையவும்[6] வழக்கியலான் நால்வகை நிலத்துஞ் சிறு பான்மை வருமேனும் பெரும்பான்மை இவை உரியவென்றற்குத் 'திணைக்குரிப் பொருளே' யென்றார்.

உரிமை குணமாதலின் உரிப்பொருள் பண்புத்தொகை. உதாரணம் :

''கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிணர்க் குவளையோ டிடைப்பட விரைஇ
யைதுதொடை மாண்ட கோதை போல
நறிய நல்லோண் மேனி
முறியினும் வாயது முயங்கற்கு மினிதே''

(குறு. 62)

---

6. ஏனைய-கைக்கிளை பெருந்திணை இவை உரிப் பொருள் அல்லன என்பது இவர் கருத்து-இது முன் சூத்திரத்துக் கண்டது.

இக் குறுந்தொகை புணர்ந்துழி மகிழ்ந்து கூறியது.

"அல்குபட ருழந்த வரிமதர் மழைக்கட்
பல்பூம் பகைத்தழை நுடங்கு மல்குற்
றிருமணி புரையு மேனி மடவோள்
யார்மகள் கொல்லிவ டந்தை வாழியர்
துயர முறீஇயின ளெம்மே யகல்வய
லரிவன ரரிந்துந் தருவனர் பெற்றுந்
தண்சேறு தாஅய் மதனுடை நோன்றாட்
கண்போ னெய்தல் போர்விற் பூக்குந்
திண்டேர்ப் பொறையன் றொண்டி
தன்றிறம் பெறுகவிவ ளீன்ற தாயே" (நற்றிணை-8)

இந்நற்றிணையும் 'முலையே முகிழ்முகிழ்த் தனவே' என்னுங் குறுந்தொகையும் புணர்தனிமித்தம்.

"அன்றவ ணொழிந்தன்று முலையே வந்துநனி
வருந்திணை வாழியெ னெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்றும் யாஅவுயர் நனந்தலை
யுறாடுடி மகுளியிற் பொருடெரிந் திசைக்குங்
கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்ற
மெம்மோ டியத்தலுஞ் செல்லாய் பின்னின்
றொழியச் சூழ்ந்தனை யாயிற் றவிராது
செல்லினிச் சிறக்கநின் னுள்ளம் வல்லே
மறவ லோம்புமதி யெம்மே நறவின்
சேயித ழனைய வாகிக் குவளை
மாயிதழ் புரையு மலிர்கொ ளீரிமை
யுள்ளகங் கனல வுஇளுதோ றுலறிப்
பழங்கண் கொண்ட கலிழ்ந்துவீ ழவிரறல்
வெய்ய வுகுதர வெரீஇப் பையெனச்
சில்வளை சொரிந்த மெல்லிறை முன்கைப்
பூவீ மொடியிற் புல்லெனப் போகி
யடர்செ யாகற் சுடர்துணையாக
வியங்காது வதிந்தருங் காதலி
யுயங்குசாய் சிறுபுற முயங்கிய பின்னே".

(அகம்-19)

இது மறவலோம்புமதி யெனப்பிரிவு கூறிற்று.

"அறியாய் வாழி தோழி யிருளற
விசும்புடன் விளக்கும் விரைசெலற் றிகிரிக்
கடுங்கதி ரெறித்த விடுவாய் நிறைய
நெடுங்காய் முருங்கை வெண்பூத் தாஅய்
நீரற வறந்த நிரம்பா நீளிடை
வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு
கள்ளியங் காட்ட கத்திடை யுழிஞ்சி
லுள்ளூன் வாடிய சுரிமூக்கு நொள்ளை
பொரியரை புதைத்த புலம்புகொ ளியவின்
விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோ
ரெழுத்துடை நடுகல் லின்னிழல் வதியு
மருஞ்சுரக் கவலை நீந்தி யென்று
மில்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்
பொருளே காதலர் காத
லருளே காதல ரென்றி நீயே." (அகம்-53)

இது பிரிதனிமித்தம். வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி கூறியது.

"வண்டுபடத் ததைந்த கொடியிண ரிடையிடுபு
பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றைக்
கானங் காரெனக் கூறினும்
யானோ தேறேனவர் பொய்வழங் கலரே." (குறு-21)

இது பருவங்கண்டுழியும் பொய் கூறாரென்று ஆற்றியிருந்தது.

"அவரோ வாரார் முல்லையும் பூத்தன
பறியுடைக் கையர் மறியினத் தொழியப்
பாலொடு வந்து கூழொடு பெயரும்
யாடுடை யிடைமகன் சென்னிச்
சூடிய வெல்லாஞ் சிறுபசு முகையே." (குறு-221)

இது பருவங்கண் டாற்றாது கூறியது. இது முல்லை சான்ற கற்பாயிற்று. அவன் கூறிய பருவம் வருந்துணையும் ஆற்றியிருத்தலின்.

'மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா வளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிண ரூழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே.'' (குறு. 66)

இது பருவமன்றென்று வற்புறுத்தலின் இருத்தனிமித்தமாயிற்று.

'தேம்படு சிமய' என்னுங் களிற்றியானைநிரையும் இருத்தனிமித்தமாம். இக்காலம் வருந்துணையும் ஆற்றினாளெனத் தான் வருந்துதலின்.

''கானலுங் கழறாது கழியுங் கூறாது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா
தொருநின் னல்லது பிறிதியாது மிலனே
யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தற்
கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து
பறைஇய கிளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமா லலவ பல்காற்
கைதையம் படுசினை யெவ்வமொ டசாஅங்
கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்
வெள்ளிருக் கனவு நள்ளென் யாமத்து
நின்னுறு விழுமங் களைந்தோ
டன்னுறு விழும நீந்துமோ வெனவே.'' (அகம்-170)

இவ் வகப்பாட்டு நெய்தல். இரங்கலுரிப்பொருட்டாயிற்று.

''ஞாயிறு பட்ட வகல்வாய் வானத்
தளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை
யிறையுற வோங்கிய நெறியயன் மராஅத்த
பிள்ளை யுள்வாய்ச் செரீஇய
விரைகொண் டவையும் விரையுமாற் செலவே.'' (குறு. 92)

இஃது இரங்கனிமித்தம்.

''தருக்கேம் பெருமநின் னல்கல் விருப்புற்றுத்
தாழ்ந்தாய்போல் வந்து தகவில செய்யாது

சூழ்ந்தவை செய்துமற் றெம்மையு முள்ளுவாய்
வீழ்ந்தார் விருப்பற்றக் கால்.'' (கலி-69)

இஃது ஊடல்.

பரியுடை நன்மான் பொங்குளை யன்ன
வடைகரை வேழம் வெண்பூப் பகருந்
தண்டுறை யூரன் பெண்டிர்
துஞ்சூர் யாமத்துந் துயிலறி யலரே.'' (ஐங்குறு-13)

இஃது ஊடனிமித்தம்.

பிறவும் வேறுபட வருவனவெல்லாம் அறிந்து இதன்கண் அடக்கிக் கொள்க. (14)

## பாரதியார்

### 14. புணர்தல்......பொருளே

கருத்து:- இச்சூத்திரம் அகப்பொருட் பகுதியிற் சிறந்த அன்பினைந்திணைக்கு நேருரிமைகொண்ட ஒழுக்க வகைகளை உணர்த்துகிறது.

பொருள்:- புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடலி வற்றின் நிமித்த மென்றிவை - கூடுதல், பிரிதல், பிரிவிடையாற்றி யிருத்தல், ஆற்றாதிரங்கல், புலவி என்ற ஐந்தும் அவற்றிற் கியைபுடைய நிமித்தங்களுமே; தேருங்காலைத் திணைக்குரிப் பொருளே - ஆராயும் பொழுது அன்பினைந்திணையெனற்குச் சிறந்துரிய பொருள்களாம்.

குறிப்பு :- இதில் ஈற்றேகாரம் தேற்றமாகும். முதல்கரு உரிப் பொருள்களனைத்தும் அகத்திணைப் பகுதியாகவே அமைத்துக் கோடல் தவறன்றாயினும் திணையென்பது ஒழுக்கங்கண்ணிய பேராதலால் அன்பினைந்திணையெனற்குப் புணர்தல் பிரிதல் முதலிய தலைமக்கள் ஐந்தொழுக்கங்களே சிறப்புரிமையுடைய பொருள்களாகும் என்பதை இச்சூத்திரம் விளக்குகிறது.

நிமித்தமாவது ஒவ்வோரொழுக்கத்தை யடுத்து முன்னும் பின்னும் முதலும் முடிவுமாகத் தொடுத்து அவ்வொழுக்கத்திற்கு

இன்றியமையாத் தொடர்புடையனவற்றைச் சுட்டுவதாம், புகு முகம் புரிதல், நகுநயம் மறைத்தல் முதலியன புணர் தலுக்கு முன்னெழும் நிமித்தங்களாம். அணிந்தவை திருத்தல், பாராட்டெடுத்தல் முதலியன புணர்வின் பின்னர் நிகழும் நிமித் தங்களாம். இவ்வாறு தொடர்பணிமையற்றன. நிமித்தமாகா. "அன்னபிறவும் —நிமித்தமென்ப" என்னும் தெய்ப்பாட்டில் 19-ஆம் சூத்திரமும் இதை வலியுறுத்தும். இவ்வாறே பிறதிணை களுக்கும் நிமித்த வகைகளை ஏற்ற பெற்றி அமைத்துக்கொள்க, நிறுத்தமுறையானே முன்னர் முதற்பொருளைக் கூறினவர் அதனையடுத்துக் கூறுவதேனெனிற் சொல்லுவன்; அகப் பகுதி யில் முதற்பொருள் உரிப்பொருள்கள் அல்லாதன அனைத்தும் கருப்பொருள்களாயமைதலின், முதலில் வரையறைப்பட்டவற்றை விளக்குவான் றொடங்கி, நிலம் பொழுதெனும் இரண்டே வகை யுளடங்கும் முதற்பொருள் கூறினதும், அளவறுதிப்படாக் கருப் பொருள்களைக் கூறுமுன், ஐந்து ஒழுக்கத்தளவில் அடங்கும் உரிப்பொருளை இடையிற்கூறியமைத்த பெற்றி உய்த்துணர வைத்தார். அகவகைச் செய்யுள்களனைத்தும் இவ்வைந் திணையே கூறுதலின், எடுத்துக்காட்டு ஈண்டைக்கு வேண்டா.

## சிவலிங்கனார்

'உரிப் பொருளல்லன மயங்கவும் பெறுமே' என உரிப் பொருள் அதிகாரப்பட்டமையின் கருப் பொருள் கூறுதற்கு முன்னர் உரிப்பொருளாவன யாவை என இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

(இ-ள்) பாடலுள் பயின்றவற்றை ஆராயுங்காலத்து குறிஞ்சிக்குப்புணர்தலும் அதன்நிமித்தமும், பாலைக்குப் பிரிதலும் அதன் நிமித்தமும் முல்லைக்கு இருத்தலும் அதன் நிமித்தமும் நெய்தலுக்கு இரங்கலும் அதன் நிமித்தமும் மருதத்துக்கு ஊடலும் அதன் நிமித்தமும் உரிப்பொருளாம் என்றவாறு.

நிமித்தங்களாவன நச்சினார்க்கினியர் கூறியனவும் பாரதியார் கூறியனவுமாம்.

அகன் ஐந்திணையொழுக்கம் களவில் இயற்கைப்புணர்ச்சி யில் தொடங்குதலின் புணர்தல் முற் கூறப்பட்டது. புணர்ந்த பின் பிரிவு நிகழ்தலின் பிரிதல் அதன்பின் கூறப்பட்டது. இடந் தலைப்பாடு பாங்கற் கூட்டம் தோழியர் கூட்டம் இரவுக்குறி பகற்குறிக் கூட்டம் முதலிய நிகழ்வதற்கு இடைப்பட்ட காலங் களிலும் தலைவன் ஒரு வழித் தணந்தபோதும் வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரியுங்காலத்தும் தலைவன் பிரிவைத் தலைவி ஆற்றியிருத்தலின் அதன் பின் இருத்தல் கூறப்பட்டது. ஆற்றியிருந்தும் கால நீடிப்பால் வருத்தம் உறலின் அதன்பின் இரங்கல் கூறப்பட்டது. பிரிந்தவன் விரைந்து வாராமையின் அவன் வந்து சிறைப்புறத்தானாக ஊடற்குறிப்பால் இயற்பட மொழிதலும் இயற்பழித்து மொழிதலும் நிகழ்தலின் அதன் பின் ஊடல் கூறப்பட்டது.

இனிக்கற்பொழுக்கத்தில் தலைவனும் தலைவியும்இல்லிருந்து மகிழ்ந்து நல்லறம் செய்தலின் புணர்தலும், அறம் செய்யப் பொருள் தேவையாதலின் வேற்று நாடு சென்று பொருளீட்ட வேண்டுதலினாலும் பரத்தை ஓதல் காவல் தூதுபகை முதலிய காரணங்களினாலும் பிரிவு நேருமாதலின் பிரிவும், பிரிந்தவன் வருந்துணையும் ஆற்றியிருத்தலும், ஆற்றாமை மீதுர இரங்கலும், அவன் வந்த்போது பரத்தமை காரணமாகவோ விரைவில் குறித்த காலத்தில் வாராமை காரணமாகவோ இயல்பாகவோ செயற்கை யாகவோ ஊடல் கொள்ளுதலும் நிகழுமாதலின் புணர்தல் முதலியன முறையே கூறப்பட்டன.

"ஊடுதல் காமத்துக்கின்பம் அதற்கின்பம் கூடிமுயங்கப் பெறின்" (குறள் 1330) என்றாங்கு ஊடலின் முடிவு கூடல் ஆதலின் ஊடலையடுத்துப் புணர்தல் அமைந்தது சுழற்சி முறை யாகும். அதனால் ஐந்திணையொழுக்கம் ஊடலும் கூடலுமாய் அமைந்து இன்பம் செய்வதாம் என்பது இச்சூத்திரத்தால் பெற வைத்தது அறிக

'தேருங்காலை' என்றதால் ஐந்திணையொழுக்கங்களை வரிசைப்படுத்தும்போது 'மாயோன் மேய'(3) என்னும் சூத்திரத்து பின்னர் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனவும் பின்னர்ப் பாலை என்பது நடுவில் இருப்பது (4) எனவும் கூறியிருப்பினும் இச் சூத்திரத்துக் கூறியாங்குப் புணர்தல் பிரிதல் முதலியவாகவே

வரிசைப்படுத்தல் வேண்டும் என்றும், பாலையானது முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலை என்பதோர் வடிவம் கொள்ளுமாதலின் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் நடுவில் கூறப்படல் வேண்டும் என்பதும் அதனால் அது நடுவணது என்னும் பெயர் சிறப்பாகப் பெற்றது என்றும், புணர்தல் முதலிய ஒழுக்கங்களே யன்றி அவற்றின் நிமித்தங்களும் ஐந்திணைக்கும் சிறந்த உரிப் பொருள்களாம் என்றும் கொள்க.

**17. கொண்டுதலைக் கழிதலும்[1] பிரிந்துஅவண் இரங் கலும்[2] உண்டுஎன மொழிப ஓரிடத்தான. (17)**

ஆ. மொ. இலு.

The elipement and the wailing of lady-love in separation may take place at sometimes.

## இளம்பூரணர்

**17. கொண்டுதலைக்............தான**

இதுவும், ஒருசார் உறுப்புப் பொருள் ஆமாறு உணர்த்து தல் நுதலிற்று.

(இ-ள்) கொண்டுதலைக் கழிதலும் உண்டு, பிரிந்து அவண் இரங்கலும் உண்டு. ஓர் இடத்தான் என மொழிப- ஒரே இடத்துக்கண் என்று கூறுப.

உண்டு என்பதை இரண்டிடத்தும் கூட்டுக.[1] அன்றியும் உண்டென்பதனை இல்லென்பதன் மாறாக்கி விரவுத்திணை

---

1. கழியினும் 2 இரங்கினும்— பாடம் நச்.

1. உண்டு-உள்ளது. ஒருமை கழிதலும் இரங்கலும் உள எளப்பன்மையாற் கூறாமையின் கழிதல் உண்டு' இரங்கல் உண்டு எனத்தனிததனிக் கூட்டல் வேண்டும் என்றார்.

யாக்கிப் பொதுப்பட நின்றது எனவுமாம்.[2] ஓரிடத்து என்றமையான், மேற்சொல்லப்பட்ட ஐவகை உரிப்பொருளும் போல் எல்லாத் திணைக்கும் பொதுவாகி வருதலன்றி, கொண்டு தலைக்கழிதல் பாலைக்கண்ணும், பிரிந்தவன் இரங்கல் பெருந்திணைக் கண்ணும் வரும் என்று கொள்க. கொண்டுதலைக் கழிதலாவது உடன் கொண்டு பெயர்தல், அது, நிலம் பெயர்தலின் புணர்தலின் அடங்காமையானும், உடன்கொண்டு பெயர்தலின் பிரிதலின் அடங்காமையானும், வேறு ஓதப்பட்டது. பிரிந்தவன் இரங்கலாவது, ஒருவரை ஒருவர் பிரிந்த இடத்து இரங்கல். அது, நெட்டாறு சென்றவழி இரங்குதல் இன்மையானும்[3] ஒருவழித் தணந்த வழி[4] ஆற்றுதலின்றி வேட்கை மிகுதியால் இரங்குதலானும், வேறு ஓதப்பட்டது. ஏறிய மடற்றிறமும் தேறுபல் ஒழிந்த காமத்து மிகுதியமும் முதலாயின பொருள். இது பெருந்திணைக்கு உரித்து[5].
(இடத்தான் என்பது வேற்றுமை மயக்கம் ஏகாரம் ஈற்றசை) (17)

## நச்சினார்க்கினியர்

15. கொண்டுதலைக்..........தாவ.

இது முற்கூறிய ஐந்தனுட் பாலைக்கட் குறிஞ்சி மயங்குமாறும் நெய்தன் மயங்குமாறுங் கூறுகின்றது.

---

2. இல் என்பதன் மறுதலை உண்டு என்பதும் ஆம் இந்த 'உண்டு' என்பது ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுச்சொல். ஆதலின் கழிதலும் இரங்கலும் உண்டு எனக் கொள்ளினும் ஆம்.
3. நெட்டாறு-நெடியவழி. நெட்டாறு சென்ற வழி இரங்குதலாவது ஓதல் தூது பொருள் முதலிய காரணமாக வேற்றுநாடு சென்றவழி இரங்குதல். அதுவே ஐந்திணையுள் இரங்கல் என்று கூறப்பட்டதாம். ஒருவழித்தணத்தலால் வரும் இரங்கல் எதன்பாற்படும் எனின் அதுவும் இரங்கலின் (நெய்தலின்) பாற்படும் என்பது இதனாற் கூறப்பட்டது.
4. ஒருவழித் தணத்தல்-களவில் தலைவன் தலைவியை ஒரு சிலநாள்கள் பிரிந்திருத்தல்.
5. சிவலிங்கனார் விளக்கம் பார்க்க.

இதன்பொருள்:- கொண்டு தலைக்கழியினும்-தலைவன் தலைவியை உடன்கொண்டு அவள் தமரிடத்து நின்று பிரியினும், பிரிந்து அவன் இரங்கினும் - தலைவன் உடன்கொண்டு போகாது தானே போதலில் தலைவி மனையின்கண் இருந்து இரங்கினும், ஓரிடத்தான - இவ்விரண்டும் ஓரிடத்தின் கண்ணே ஓரொழுக்கமாயின, உண்டென மொழிப - இவ்வொழுக்கந்தான் நான்கு வருணத்திலும் வேளாண் வருணத்திற்கு உண்டென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

கொண்டு தலைக்கழிதலால் இடையூறின்றிப் புணர்ச்சி நிகழுமெனினும், பிரிவு நிகழ்ந்தவா றென்னையெனின்,

'இடைச்சுர மருங்கி னவடம ரெய்திக்
கடைக்கொண்டு பெயர்த்தலிற் கலங்கஞ ரெய்தி.'' (41,

என மேலே கூறுவாராதலின் தந்தையுந் தன்னையருந் தேடிப் பின்வந்து இவ்வொழுக்கத்திற்கு இடையூறு செய்வ ரென்னுங் கருத்தே இருவருள்ளத்தும் பெரும்பான்மை நிகழ் தலிற் பிரிவு நிகழ்ந்தவரறாயிற்று. ஆகவே மாலைக் கண்ணே குறிஞ்சி நிகழ்ந்ததாயிற்று உதாரணம் :-

''வேனிற் பாதிரிக் கூனி மாமலர்
நறைவாய் வாடனாறு நாட்சுர
மரியார் சிலம்பிற் சீறடி சிவப்ப
வெம்மோ டொராறு படீஇயர் யாழநின்
பொம்ம லோதி பொதுள வாரி
யரும்பற மலர்ந்த வாய்பூ மராஅத்துச்
சுரும்புசூ ழலரி தைஇ வேய்ந்தநின்
றேம்பாய் கூந்தற் குறும்பல மொசிக்கும்
வண்டுகடிந் தோம்ப றேற்றா யணிகொள
நுண்கோ லெல்வளை தெளிர்க்கு முன்னக
மெல்லிறைப் பணைத்தோள் விளங்க வீசி
வல்லுவை மன்னா னடையே கள்வர்
பகைமிகு கவலைச் சென்னெறி காண்மார்
மிசைமரஞ் சேர்த்திய கவைமுறி யாஅத்து
நாரரை மருங்கி னீர்வரப் பொளித்துக்
களிறு சுவைத்திட்ட கோதுடைத் ததரல்

கல்லா வுமணர்க்குத் தீமூட் டாகுந்
துன்புறு தகுந வாங்கட் புன்கோட்
டரிலிவர் புற்றத் தல்கிரை நசைஇ
வெள்ளரா மிளிர வாங்கும்
பிள்ளை யெண்கின் மலைவயி னானே.'' (அகம்-257)

இது கொண்டுத்தலைகழிதற்கண் தலைவன் நடையை வியந்தது. இஃது அகம்.

'அழிவிலர் முயலும்' என்பது பாலைக்கட் புணர்ச்சி நிகழ்ந்தது.

இனித் தலைவி பிரிந்திருந்து மிகவும் இரங்குதலின் 'இரங்கினும்' எனச்சூத்திரஞ்செய்து, அதனானே பாலைப் பொருட்கண் இரங்கற் பொருள் நிகழுமென்றார் உதாரணம்.

''ஓங்குமலைச் சிலம்பிற் பிடவுடன் மலர்ந்த
வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன
வூன்பொதி யவிழாக் கோட்டுகிர்க் குருளை
மூன்றுட னீன்ற முடங்கர் நிழத்த
துறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப்
பொறிகிள ருழுவைப் பேழ்வா யேற்றை
யறுகோட் டுழைமா னாண்குர லோர்க்கு
நெறிபடு கவலைய நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந் திசினால் யானே பலபுலந்
துண்ணா வுயக்கமொ டுயிர்செலச் சாஅய்த்
தோளுந் தொல்கவின் றொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி
மருந்துபிறி தின்மையி னிருந்தும்வினை யிலனே.''
(அகம்-147)

இதனுள் வெள்ளி வீதியைப்போலச் செல்லத் துணிந்து, யான் பலவற்றிற்கும் புலந்திருந்து, பிரிந்தோரிடத்தினின்றும் பிரிந்து பெயர்வுக்குத் தோணவந்தொலைய உயிர் செயச் சாஅய் இரங்கிப் பிறிது மருந்தின்மையிற் செயலற்றேனென மிகவும் இரங்கியவாறு மெய்ப்பாடு பற்றி யுணர்க. இஃது அகம்.

'வானமூர்ந்த' என்னும் அகப்பாட்டினுள்,

''மெய்புகு வன்ன கைகவர் முயக்க
மலரும் பெறுகுவர் மன்னே.''

எனக் கூறி, அழுதன் மேவலவாய்க் கண்ணுந் துயிலுமென இரங்க மீக்கூறியவாறு முணர்க.

'குறியன்ன' என்னும் அகப்பாட்டும் அது.

இவை பாலைக்கண் இரங்கல் நிகழ்ந்தது.

இங்ஙனம் இச்சூத்திர விதி உண்மையிற் சான்றோர் அகத்தினுங் கலியினும் ஐங்குறுநூற்றினும் பாலைக்கண்ணே உடன் போக்கு நிகழ்ந்த செய்யுட்களைக் கோத்தாரென்றுணர்க.

இல்லிருந்து செந்தீயோம்பல் வேளாளர்க்கு இன்மையிற் கொண்டுதலைக்கழிதல் அவர்க்கு உரியதாயிற்று. ஒழிந்த மூன்று வருணத்தோருள் தமக்குஉரிய பிரிவின்கட் செந்தீயோம்பு வாரை நாட்டிப் பிரிப; ஆகலான், அவர்க்கு ஏனைப் பிரிவுகள் அமைந்தன. இதனைக் 'கொடுப்போ ரின்றியுங் காணமுண்டே' (143) எனக்கற்பியலிற் கரணம் வேறாகக்கூறுமாறு ஆண்டுணர்க, 'வேர்முழு துலறி நின்ற' என்னும் மணிமிடை பவளத்துள்.

'கூழுடைத் தந்தை யினுடைய வரைப்பி
னூழடி யொறுங்கினு முயங்கும்'

எனவும், 'கிளியும் பந்தும்' என்னும் களிற்றியானை நிரையுள்,

'அல்குபத மிகுந்த கடியுடை வியனகர்'

எனவும், நெல்லுடைமை கூறிய அதனானே வேளாண் வருணமென்பது பெற்றாம். (15)

பாரதியார்

கொண்டுதலை....................தான.

கருத்து :- இதுமேலைச் சூத்திரத்தில் திணைக்குரிப் பொருளென விளக்கிய ஐந்தனுளடங்காதனவாய்த் தம்மியல் பால் அகத்திணைகளுக்குரிப் பொருள்களாய் ஆட்சிபெறும் பிற சிலவும் உண்டெனக் கூறுகிறது.

பொருள் :- கொண்டுதலைக் கழிதலும் களவில் தலைவன் தலைவியைத் தன்னுடன் கொண்டுசேறலும்; பிரிந்த வணி ரங்கலும் அவ்வாறுடன் கொண்டு செல்லுங்கால் தலைவியின் தமர்-வரவு முதலிய காரணங்களால் பிரிய நேரின் ஆண்டப் பிரிவுபற்றி யிரங்கலும்; உண்டென மொழிப-ஏற்றடெற்றி இவை உரிப்பொருள்போல வருதலும் உண்டு என்று கூறுவர் (புலவர்) ஓரிடத்தான-அவை அகத்திணைக் கியைபுடைய ஒரோவிடத்து.

குறிப்பு :- கொண்டுதலைக் கழிதல் என்பதனால், தலை மக்கள் தம்முள் அது பிரிதலாகாது; நேரே புணர்தலும் அன்றாம். ''அது நிலம் பெயர்தலின் புணர்தலின் அடங்காமை யானும், உடன் கொண்டு பெயர்தலின் பிரிதலினடங்காமை யானும், வேறு ஓதப்பட்டது'' எனும் இளம்பூரணர் குறிப்பு ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. இனி, அதுவே போல் பிரிந்த வணிரங்கல் என்பதும் பிரிந்தவர் இரங்கல் என்னுந்திணைக் குரிப் பொருளின் வேறுபட்டது. என்பதை விளக்குதற்காகவே கொண்டுதலைக் கழியுமிடத்துப்பிரிய நேர்ந்துழி 'அவண் இரங்கல்' என விதந்து விளக்கப் பெற்றது. இச்சூத்திரம் சுட்டும் இரண்டும் அகத்துறைகளில் உரிப்பொருள்களாகிய தலைமக்களினொழுக்கமாகவே ஆளப்பெறுதலானும், இவை புணர்தல் பிரிதல் இருத்தல் ஊடல் என்ற திணைக்குரிப் பொருள்களைந்தனுள் எதனிலும் அடங்காமையானும் அவற்றி னின்றும் வேறு பிரித்து, இச்சூத்திரத்தால் ஒரோவிடத்து உரிப்பொருளாதற்கு உரியன இவையென்று தெளிக்கப்பட்டன.

இதுவே, தொல்காப்பியர் கருத்தென்பது பின் இவ்வியலில் ''ஒன்றாத்தமரினும்'' எனும் (41-ஆம்) சூத்திரத்தில். ''இடைச் சுரமருங்கிலவள் தமரெய்திக் கடைக்கொண்டு பெயர்தலிற் கலங்கஞரெய்தி'' என்றவர் விளக்குதலானுமறிக.

ஈண்டு இளம்பூரணர் கொண்டுதலைக் கழிதலைப் பாலைக் கண்ணும், பிரிந்தவணிரங்கலைப் பெருந்திணைக்கண்ணும் வரும் உரிப்பொருள்களாக்கிப் பொருள் கூறுவர். ''உடன் கொண்டு போதல் (அதாவது கொண்டு தலைக்கழிதல்) பிரி வினடங்காது'' என இவரே கூறியபின், அது பிரிவாம்பாலைக் கண் வருமெனல் தன்னொடுதானே மாறுகொளக் கூறுவதாம்.

தலைமக்கள் தம்முட் பிரிந்திரங்குவது நேரிய நெய்தற்றிணைக் குரிப் பொருளாகும். பிரிந்திரங்கல் எனைத்தானும் பெருந்திணைப் பாற்படுதலில்லை' அது ஒத்தகாதலொழுக்கமாதலின்.

இனி, இவ்விரண்டையும் தந்நிலையில் உரிப்பொருளாக்காமல், திணைமயக்கம் என்றுகொண்டு, பாலைத்திணையுள் குறிஞ்சியும் நெய்தலுமாகிய பிறதிணைகளின் மயக்கம் கூறுவதாகக் கொள்ளும் நச்சினார்க்கினியர் உரையும் பொருந்தாது. திணை மயக்குறுதல் என்னுஞ் சொற்றொடரால் மயங்கி ஒரு திணையுள் பிறதிணைகள் ஒருங்கு வந்து மயங்குமெனக் கொள்ளுதல் எவ்வாற்றானும் பொருந்தாது. தலைமக்களிருவருள் ஒருகாலத்தோரொழுக்கம் நிகழ்வதன்றிப் பலவொழுக்கம் ஒருகாலத்துக்கலந்து மயங்குமென்பது இயல்பன்றாகலின், அதற்கிலக்கணமும் வேண்டப்படா. ஒரு நிலத்திற் பலவொழு) க்கங்களும் ஓரொழுக்கம் பலநிலங்களிலும் வேறுபட்ட காலங்களில்க் நிகழு மென்பதையேமுன் 'திணை மயக்குறுதல்' என்னுஞ் சூத்திரத்தால் விளக்கினாரன்றி, ஒரு காலத்துப் பலவொழுக்கந் தம்முள் மயங்குமென்று தொல்காப்பியர் யாண்டும் கூறிலர், அஃதியல் பன்மையின் அதனால் இச்சூத்திரம் திணைமயக்கம் கூறுவதன்று. ஒருசார் உரிப்பொருளாம் பிறசில கூறுதலே நுதலிற்று எண்பது தெளிப்படும். அன்றியும், இதில் திணை மயக்கம் கூறுதலே அவர் கருத்தாயின் இதனையும் இதுபோன்ற திணைமயக்கம் நுதலும் பிறசூத்திரங்களையும் திணைக்குரிப் பொருள் கூறுஞ் சூத்திரந்திற்கு முன் 'திணை மயக்குறுதலும்' 'உரிப்பொருள்ளலன' என்பவற்றோடு இயைபு நோக்கி இணைத்துக் கூறியிருப்பர். அவ்வாறன்றி, திணைக்குரிப் பொருள் வகை ஐந்தையுங் கூறுஞ் சூத்திரத்திற்குப்பின் இது கூறப்படுதலால், இதுவும் அவ்வைந்தனுளடங்காத பிற உரிப் பொருள் வகை விளக்குவதையே நுதலிற்றென்பது தேற்றம்.

ஈண்டு உம்மை யிரண்டும் எண்ணும்மை.

கொண்டுதலைக் கழிதலுக்குச் செய்யுள், முன் "உரிப் பொருளல்லன" எனும் (13-ஆம்) சூத்திர உரைக்குறிப்பில் காட்டிய பாட்டுக்களைக் காண்க.

பிரிந்தவணிரங்கலுக்குச் செய்யுள்:—

"நுமர்வரி னோர்ப்பி னல்லது, அமர்வரின்
முந்நீர் மண்டில மனைத்து மாற்றாத்

தெரிகணை விடுத்தலோ விலனே;
அரிமதர் மழைக்கண் கலுழ்வகை எவனோ?''
இப்பழைய உரைமேற்கோட் செய்யுளில் தமர்வரவு கருதி அதனானேரும் பிரிவினுக்கஞ்சி உடன்போக்கில் தலைமகளிரங்கத் தலைவன் தேற்றுங் குறிப்பறிக.

''ஏதங் கருதா திளையோய் நீ என்னோடு
போதரு வாய்கொல் புகலென்ற காதலர்பின்
வந்தேனை விட்டு மறைந்தார் எமர்வெறுத்தேற்
கெந்தநிலை எய்து மினி.''

எனும் வெண்பாவில் உடன் போக்கிடையில் தொடருந் தலைவி தமரை அவள்முன் இடருறப் பொருவதை வெறுத்துத் தலைவன் மறைய, தற்கொளவந்த தமரைமறுத்துக் கற்பு வற்புறுத்துந் தலைவியினிரக்கம் கூறப்பெறுதல் காண்க.

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் நேரே உரிப்பொருள் (திணை) கூற இயலாதவற்றை உரிப்பொருளிற் சார்த்துமாறு கூறுகின்றது.

(இ-ள்) தலைவன் தலைவியை உடன்கொண்டு அவளூரின்றும் பிரிதலும், அவ்வாறு பிரிந்தபோது உளதாம் இரங்கலும் ஆகிய இரண்டும் பாலை என்னும் ஓரிடத்தில் உண்டு எனப் புலவர் கூறுவர் என்றவாறு.

கொண்டுதலைக் கழிதல் என்பது தலைவன் தலைவியிடைப் பிரிவு இன்மையின் பாலையெனவும்படாது, தலைவியின் தமரிற் பிரிந்தமையின் இருவரும் சேர்ந்திருப்பினும் குறிஞ்சியெனவும் படாது ஒரு திணைப்பாற்படுதல் இல்லை. உலக ஒழுக்கத்துள் ஒன்றாகிய இது பாடட் பயின்று வரும் காரணத்தால் ஏதேனும் ஒரு திணையில் சார்த்தவேண்டும். இருவர் உள்ளத்தும் பிரியாது சேர்ந்துள்ளோம் என்னும் உணர்விருந்தாலும் இடைவழியில் தமர் வந்து பிரிப்பரோ என்னும் பிரிவச்ச உணர்வே மிக்கு இருத்தலின் பாலைத்திணையிற் சார்த்தலாம். இரங்கல் இல்லாப் பாலை இன்று ஆதலின் கொண்டுதலைக் கழிந்த விடத்து இரங்கும் இரக்கமும் பாலையாகும்.

கொண்டு தலைக் கழிந்த விடத்துத் தலைவனும் தலைவியும் இடைச்சுரமருங்கில் தமர்வந்து பிரிப்பரோ என அஞ்சியிரங்குதலும் மகளைக் காணாது செவிலியும் நற்றாயும் இரங்குதலும் ஆகிய இரக்கத்தையே பிரிந்தவண் இரங்கல் எனக்குறிப்பிட்டார் ஆசிரியர்.

இளம்பூரணர் கொண்டு தலைக்கழிதலைப் பாலையிலும் பிரிந்தவண் இரங்கலை காமம்மிக்க கழிபடர்கிளவியாகக் கொண்டு பெருந்திணையிலும் அடக்கியது பொருந்தாது. அகன் ஐந்திணை கூறிவரும் இடத்தில் பெருந்திணையைப் புகுத்தினார் என்றல் அமையாது. ஓரிடம் என்பதற்கு வேளாளரிடம் என நச்சினார்க்கினியர் கூறியதும் அமையாது. சாதியை இடையில் புகுத்த வேண்டிய இன்றியமையாமை என்னோ ?

பாரதியார் கொண்டுதலைக் கழிதலும் அப்போது இரங்கலையும் ஏற்றவாறு ஏதேனும் ஓர் உரிப்பொருளில் சார்த்தலாம் என்பர். அதாவது குறிஞ்சி, பாலைத்திணையாகவோ நெய்தல் திணையாகவோ இடத்துக்கேற்றவாறு சார்த்தலாம் என்பது அவர் கருத்துப்போலும். இன்ன திணையிற்சாரும் என அவர் வரையறை செய்யவும் இல்லை. உதாரணச் செய்யுள்களிலும் திணையாது எனக்கூறவும் இல்லை.

**18. கலந்த பொழுதும் காட்சியும் அன்ன (18)**

ஆ. மொ. இல.

The time of union and the sight of love are of the same nature.

## இளம்பூரணர்

**18. கலந்த பொழுதும்........அன்ன**
இதுவும் அது.

**(இ-ள்)** கலந்த பொழுதும்- தலைவனைக் கண்ணுற்ற வழி மனநிகழ்ச்சி உளதாங்காலமும், பின்னர்க் குறிப்பறியுந்துணையும் நிகழும் நிகழ்ச்சியும், காட்சியும்- தலைவியை எதிர்ப்படுதலும் அன்ன-ஓரிடத்து நிகழும் உரிப்பொருள்.

கலந்தபொழுது என்பது, தலைமகளைக் கண்ணுற்றவழி மனநிகழ்ச்சியுளதாங் காலம்; அக் காட்சிப் பின்னர்க் குறிப் பறியுந் துணையும் நிகழும் நிகழ்ச்சி. காட்சியாவது, தலைவியை எதிர்ப்படுதல். குறிப்பறிந்த பின்னர்ப் புணருந்துணையும் நிகழும் முன்னிலையாக்கல் முதலாயின புணர்தல் நிமித்தம். இவை அந்நிகரனவன்றிப்[1] பொதுப்பட நிற்றலின் வேறு ஓதப்பட்டன. அன்ன என்பது ஓர் இடத்து நிகழும் உரிப் பொருள் என்றவாறு. ஓரிடமாவது கைக்கிளை.

அஃதேல், இவையும் புணர்தல் நிமித்தம் ஆயினால் வரும் குற்றம் என்னை எனின், ஒருவன் ஒருத்தியை எதிர்ப் பட்டுழிப் புணர்ச்சி வேட்கை தோற்றாமையும் உண்மையின் காட்சி பொதுப்பட நின்றது. ஐயம் முதலாகக் குறிப்பறிதல் ஈறாக நிகழும் மனநிகழ்ச்சி, தலைமகள் மாட்டுக் காமக் குறிப்பு உணராது கூறுதலின், புணர்தல் நிமித்தம் அன்றாயிற்று

## நச்சினார்க்கினியர்

**16.** கலந்த பொழுதுங்... ......மன்ன.

இதுவும் பாலைக்கட் குறிஞ்சி மயங்கு மென்கின்றது.

இதன் பொருள் :- கலந்த பொழுதும் காட்சியும்-இயற் கைப் புணர்ச்சி நிகழ்ந்த காலமும் அதன் முன்னர்த்[3] தாகிய வழிநிலைக் காட்சி[4] நிகழ்ந்த காலமும், அன்ன - முன்னர்ச் சூத்திரத்துட் கொண்டுதலைக் கழிந்த காலத்தை உடைய என்றவாறு.

---

1. அந்நிகரன-குறிஞ்சி முதலியவற்றில் ஒன்றிற் சாரும் தன்மை.
2. சிவலிங்கனார் விளக்கம் பார்க்க.
3. முன்னர் இடமுன்னர் இயற்கைப் புணர்ச்சிக்குப் பிறகு உள்ளது.
4. வழிநிலைக்காட்சி - இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர் நிகழும் காட்சி.

என்றது. முன்னர்க் குறிஞ்சி பாலைக்குரிய இருவகை வேனிற் கண் நிகழ்ந்தாற்போல இவையும் இருவகை வேனிற்கண் நிகழு மென்றவாறு, மழைகூர் காலத்துப் புறம்போந்து விளையாடுத லின்மையின் எதிர்ப்பட்டுப் புணர்தல் அரிதாகலானும், அது தான் இன்பஞ் செய்யாமை யானும் இருவகை வேனிற் காலத்தும் இயற்கைப் புணர்ச்சிநிகழுமென்றது இச்சூத்திரம்.

முன்னர்க் கூதிரும் யாமமும் முன்பனியுஞ் சிறந்ததென்றது இயற்கைப் புணர்ச்சிப் பின்னர்க் களவொழுக்கம் நிகழ்தற்குக் காலமென்றுணர்க. அது.

> "பூவொத் தலமருந் தகைய வேவொத்
> தெல்லாரு மறிய நோய்செய் தனவே
> தேமொழித் திரண்ட மென்றோன் மாமலைப்
> பரீஇ வித்திய வேனற்
> குரீஇ யோப்புவாள் பெருமழைக் கண்ணே."
>
> (குறு-72)

எனவரும். இக்குறுந்தொகையுட் குரீஇ யோப்புவாள் கண்ணெனை வழி நிலைக் காட்சியைப் பாங்கற்குக் கூறினமை யின் அத்திணைக்கதிர் முற்றுதற்கு உரிய இளவேனிலும் பகற் பொழுதுங் காட்சிக்கண் வந்தன.

'கொங்குதேர் வாழ்க்கை' என்பதும் இளவேனிலாயிற்று. தும்பி கொங்கு தேருங் காலம் அதுவாகலின்.

கலத்தலுங் காட்சியும் உடனிகழுமென்றுணர்க. கலத்த லின்றிக் காட்சி நிகழ்ந்ததேல், உள்ளப்புணர்ச்சியே யாய் மெய்யுறு புணர்ச்சியின்றி வரைந்துகொள்ளு மென்றுணர்க.

பாரதியார்

16. கலந்த ..........அன்ன

கருத்து :- இதுவும், ஐந்திணை வகுப்பில் அடங்காதனவாய் அகப்பகுதியில் உரிப்பொருள் ஆவன இன்னுஞ் சிலவற்றைக் கூறுகின்றது.

பொருள் :- கலந்த பொழுதும்-ஒத்த தலைமக்கள் தம்மிடைப் பாலதாணையின் முதல் எதிர்ப்பாட்டில் நிகழ்வும். (கலந்த) காட்சியும் - அவ்வாறு தலைப்பட்டார் தம்முள் அறிவுடம் படுத்தற்குக் கூட்டிக் குறிப்புரைக்கும் நாட்டமும்; அன்ன- மேலைச் சூத்திரத்திற்கு கூறியதுபோல) ஏற்புழி அகவொழுக்கத் திற்கு உரிப்பொருளாதற் குரியவாகும்.

குறிப்பு :- உம்மை யிரண்டும் முன்னைச் சூத்திரத்தில் ஓதிய வற்றுடன் வைத்தெண்ணத்தகும் என்பதைக் குறிப்பதால் இறந்தது தழீஇய எச்சவும்மை. அன்ன என்பது. மேற்கூறிய கொண்டுதலைக் கழிதல் பிரிந்தவணிரங்கல் என்பனவற்றை இங்குக் கூறிய கலந்தபொழுதும் காட்சியும். உரிப்பொருளியல் பால் ஒப்பன என்பதைச் சுட்டும் குறிப்பு முற்றாம். 'கலந்த' என்னும் எச்சத்தைக் 'காட்சி' யென்பதனோடுங் கூட்டுக. ஈண்டுப் "பொழுது" காலம் காட்டாது, தலைப்பட்டுழி நிகழ்ச்சிகளுக்கு ஆகுபெயராம்; முதற்பொருளான காலம் முன்னரே கூறிமுடிந்ததால் அது மீண்டும் கூறல் வேண்டா.

இங்குக் 'கலந்தபொழு' தென்பது பின் களவியல் இரண்டாஞ் சூத்திரம் கூறும் தலைமக்களின் தலையெதிர்ப் பாட்டையும், 'காட்சி' என்பது அக்களவில் ஐந்தாஞ் சூத்திரம் கூறும் 'அறிவுடம் படுத்தற்கு'க் குறிப்பு நாடும் நோக்கத்தையும் முறையே குறிக்கும். கலத்தல் என்பது தலைப்படுதல் என்ற பொருளதாகும் 'ஒருமூவேங்கலந்த காலை' என்னுங் கம்பரடியும், 'கலந்த போர் செய்தாரோர் சிலர்' என்ற கந்தபுராண அடியுங்காண்க. கலப்பும் என்னாது கலந்த பொழுதும் என்றது முதலெதிர்ப்படுங் காலத்து நிகழும் காட்சி, ஐயம், துணிவு முதலிய பலவும் அடங்குதற் பொருட்டு. இச்சூத்திரத்தில் காட்சியென்பது முதலிற் கிழவனுங் கிழத்தியுந் தலைப்பட்டுக் காண்பதன்று; அது கலந்தபொழுது என்பதில் அடங்கும், எதிர்ப்பட்ட தலைமக்களிடை அவர் "அறிவுடம் படுத்தற்குக் கூட்டியுரைக்கும் குறிப்புரை" நாடும் நோக்கத்தையே ஈண்டுக் காட்சியென்றார். பின் களவியலில் விளக்கப்படுமிவையிரண்டும் புணர்தல் முதலிய ஐந்திணைகளுள் எவையு மாகாவெனினும், அகத்துறைப் பாட்டுகளுள் இவையும் உரிப்பொருள்களாக ஆட்சி பெறுவதால் ஐந்திணைகளுள் அடங்காத உரிப்பொருள் உண்மை கூறுமிவ்விடத்திலிவை இயைபு பற்றிக் குறிக்கப் பட்டன.

"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து."

எனுங்குறளில் தலைமக்களின் முதற்றலைப் பாட்டில் இருவரும் தம்முள் அறிவுடம் படுத்தற்குக் குறிப்பறிய "நாட்ட

முரண்டும் கூட்டியுரைக்கும்'' பெற்றி விளக்கப்படுதல் காண்க. முன்னலும் முயற்சியுமின்றித் தாமே தமியராய்த் தலைப்படல் கலந்த பொழுதாகும்; தலைப்பட்டவர், ஒருவர் மற்றவர் குறிப்பறிய நாடும் நோக்கு கலந்த காட்சி (அறிவினாட்டம்) ஆம். குறிக்கொண்டு நோக்குந்தலைவன், தலைமகள் குறிப்புநோக்காலவள் கருத்தும் தன்னதேபோற் காதல் கண்ணியதெனக் கண்டு தனக்குத்தான் தேற்றுமவன் கூற்றில், ஐயமும், அச்சமும், தெளிந்து மகிழ்தலும் ஒருங்கு காணக்கிடக்கின்றன. முதலில் அவள் கருத்தறியாமையாலவன் அஞ்சுவதும், அச்சமகற்றுமவள் அளிநோக்கும், அதன் மேலிருவரு மறிவுடம் பட்டுள்ளம் புணர்ந்துழி அவனவள் நலம் பாராட்டலும் ஆகிய மூன்றுமினிது விளங்கும். ''கூற்றமோ'' என்றதாலச்சமும் ''கண்ணோ'' என்றதால் கண்ணோடுமவள் காதல் நோக்கும். ''பிணையோ'' என்றதால் அறிவு டம்பட்டு ளங்கலந்துழி அவனவளைப் பாராட்டலும் இனிதமையச் சிறு குறளிற்செறித்த செல்வி வியத்தற்குரித்து.

> ''அணங்குகொல், ஆய்மயில் கொல்லோ கனங்குழை
> மாதர்கொல் மாலுமென் னெஞ்சு.''

என்பதிலும் ''அணங்கா'' லையவச்சமும், ''மாதர்'' என்பதாலறிவுடம் பாட்டுத் தெளிவும் ''மயில்'' என்பதால் பாராட்டு மொருங்கமைதலறிக.

> ''மயில்கொல், மடவாள்கொல், மாநீர்த் திரையுட்
> பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர்—குயில்பயிருங்
> கன்னி யிளஞாழற் பூம்பொழில் நோக்கிய
> கண்ணின் வருத்துமென் னெஞ்சு.''
>
> (திணைமொழி—49)

இத்திணைமொழி வெண்பாவும், நெய்தனிலத்துக் ''கலந்த பொழுதும் காட்சியுமாய்'' உரிப்பொருள்களின் மயக்கம் கூறுகிறது.

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் நேரே உரிப்பொருளில் அடங்காத நிகழ்ச்சிகளை உரிப்பொருளில் அடக்குமாறு கூறுகின்றது.

(இ-ள்) புணர்தற்குக் காரணமான நிகழ்ச்சிகளும் புணர்ந்த பின் காணும் காட்சிகளும் முன் கூறிய கொண்டுதலைக்கழிதலும் பிரிந்தவண் இரங்கலும் ஓரிடத்தானமைபோல ஓரிடத்தாகும் என்றவாறு.

கலந்தபொழுது-கலத்தற்கு (புணர்ச்சிக்கு)க் காரணமான காலம்; அதாவது காட்சி 'ஐயம்' தெளிவு குறிப்பறிதல் ஆகிய ஆகிய நிகழ்ச்சிகள் பொழுது என்பது நிகழ்ச்சிகளுக்கு ஆயது. காட்சி என்பது புணர்ந்த பின்னர்த் தலைவியின் செலவும் அவளை ஆய வெள்ளம் வழி படுதலும் பிறவும் ஆயகாட்களை

புணர்ச்சி என்றது இயற்கைப் புணர்ச்சியை. புணர்ச்சிக்கு முன்னர் நிகழும் காட்சி, ஐயம் முதலியனவும் புணர்ச்சி பின்னர் நிகழும் காட்சிகளும் இயற்கைப் புணர்ச்சிக்கும் இடந்தலைப் பாடு முதலிய புணர்ச்சிக்கும் நிமித்தமாக அமைதலின் அவை யிரண்டும் குறிஞ்சித்திணையின் பாற்சாரும் என்க.

புணர்ச்சிக்கு முன்னர் நிகழும் காட்சி, ஐயம் முதலிய நிமித்தங்கள் இருவர் மனத்தும் நிகழ்வனவே; ஆனால் ஒருவர் ஒருவரையறிந்திலர்; அவ்வளவே ஆதலின் அந்நிமித்தங்களும் குறிஞ்சிக்குரிய நிமித்தங்களாகவே கொள்ளப்படும் என்க.

நச்சினார்க்கினியர் அன்ன என்பதற்குக்கூறும் மாட்டேறு தொடர்பற்றது. இளம்பூரணர் இது, கைக்கிளைக்குரியது என்றதை முன்னர்ப் பெருந்திணைக்குரியதை மறுத்தாங்குக் கூறி மறுக்க.

இச்சூத்திரம் 'கலந்த பொழுது காட்சியும் அன்ன' என்றிருத்தல் வேண்டுவது ஏடெழுதினோர் பிழையாக, 'கலந்த பொழுதும்' என உம்மையொடு இருப்பதாயிற்று எனக்கொண்டு அருணாசலம் பிள்ளை அவர்கள்,

> ''தலைவனும் தலைவியும்கூடிச் சென்ற காலத்துத்
> தலைவியின் தமர் தேடிச்சென்று காண்டலும்
> சிறுபான்மை நிகழும் என்றவாறு''

என்பர். உடன்போயபின்னர்ச் செவிலி இடைச்சுரம் வரை சென்று கண்டாரையும் அறிவரையும் இவ்வழித் தம்முளே கூடிச் சென்ற இருவரைக் கண்டீரோ என வினவுதலும், அதற்கு அவர்

கண்டேம் எனக்கூறுதலும் உள்ள இலக்கியங்களே காணப் படுகின்றன. நற்றாய் சுரவழிச்சேறல் இல்லை. உடன் போய இருவரையும் தாயர் காண்டல் இல்லை. பிள்ளையவர்கள் அதனால் சிறுபான்மை காண்டல் உண்டு என்றார். இது இலக்கணம் இல்லை ; ஆதலின் அவர் கூற்றுப் பொருந்தாது.

**19. முதல்எனப் படுவது ஆயிரு வகைத்தே (19)**

ஆ.மொ.இல.

The division said to be 'Muthal' is of two kinds.

பி.இ.நா.

**நம்பி 8**

நிலமும் பொழுதும்என முதல் இரு வகைத்தே.

இல.வி.அ. 9 ஷெ ஷெ

இளம்பூரணர்

**19. முதல்எனப்..............வகைத்தே**

இதுவும்[1], ஐயம் அறுத்தலை நுதலிற்று.

(இ-ள்) முதல் எனப்படுவது - மேல் எடுத்தோதப்பட்ட வற்றில் முதல் என்று சொல்லப்படுவது, அ இருவகைத்து - நிலமும் காலமும் ஆகிய அவ்விருவகையை உடையது.

எனவே, ஏனையவெல்லாம்[2] உரிப்பொருள் என்றவாறாம். இதனாற் பெற்றது என்னை எனின், முதல் கரு உரிப்பொருள் என அதிகரித்து வைத்தார் ; இனிக் கருப்பொருள் கூறுகின்றார்; உரிப்பொருள் யாண்டுக் கூறினார் என ஐயம் நிகழும் ; அது

---

1. இதுவும் என்ற உம்மை இறந்தது தழீஇயது கொண்டு தலைக்கழிதல் முதலியன எத்திணையைச் சாரும் என்ற ஐயத்தை அகற்றியது போல இச்சூத்திர மும் ஓர் ஐயத்தை அகற்றுதலின் என்க.

2. ஏனைய எல்லாம் என்றது நிலமும் பொழுதும் வரை யறை செய்யாத சூத்திரங்களில் கூறப்பட்டன எல்லாம்

விடுத்தல் என்க [3] (19)

## நச்சினார்க்கினியர்

17. முதலெனப்.....................வகைத்தே.

இது முற்கூறிய முதற்பகுதியைத் தொகுத்து எழுதிணையும் இவ்வாற்றானுரிய வென்கின்றது.

இதன் பொருள் :- முதல் எனப்படுவது - முதலென்று கூறப்படும் நிலனும் பொழுதும், ஆயிருவகைத்து - அக்கூறிய வாற்றான் இருவகைப்படும் யாண்டும் என்றவாறு.

இது 'கூறிற்றென்றல்'[4] (666) என்னும் உத்திவகை.

இதன் பயன் முதல் இரண்டு வகை என்றவாறாம். தமக்கென நிலனும் பொழுதும் இல்லாத கைக்கிளையும் பெருந்திணையும் நிலனில்லாத பாலையும் பிறமுதலோடு மயங்கிற்றேனும் அவை மயங்கிய நிலனும் பொழுதும் அவ்வத்திணைக்கு முதலெனப்படுமென்பதாம். இது முன்னின்ற சூத்திரத்திற்கும் ஒக்கும்.

---

3. 'முதல் எனப்படுவது நிலப் பொழுது' என முன்னர்க் கூறி (4) ஈண்டும் கூறுவானேன் எனின் இருவகைப் பிரிவும் (13) என்பது முதலாக முன் சூத்திரங்காறும் முதற்பொருளும் உரிப்பொருளும் கலந்து கூறினார், இருவகைப்பிரிவும் ( ) என்பதன் முன்னர் முதற்பொருளே கூறினார் இனி தெய்வம் உணாவே ( ) எனக்கருப் பொருள் கூறுவார் கலந்து கூறியவற்றுள் நிலமும் பொழுதும் முதல் எனப்படும் என இங்குக் கூறியதால் நிலம் பொழுது கூறாத உரிப்பொருள் பற்றி மட்டும் கூறப்பட்ட சூத்திரங்கள் எல்லாம் தனியாக உரிப்பொருள் பற்றிக் கூறியனவாதல் வேண்டும். எனவே உரிப்பொருள் யாண்டுக்கூறப்பட்டது என்னும் ஐயம் விலக்கவே இச்சூத்திரம் மீளவும் கூறப்பட்டது.

4. அ இருவகை என்று சுட்டியதால் கூறிற்று என்றலாம்.

பாரதியார்

## 17. முதல் எனப்.........வகைத்தே

கருத்து :- இஃது, உரிப்பொருள் கருப்பொருள்கள் போல விலக்குகள் வேண்டி விரியாமல், முதற்பொருள் நிலம்பொழு திரண்டினுள் அடங்குமென்பதை வலியுறுத்தல் நுதலிற்று.

பொருள் :- முதலெனப்படுவது - முதற்பொருள் என்று சிறப்பித்துக் கூறப்படுவது ; ஆயிருவகைத்தே - மேலே நாலாவது சூத்திரத்தில் கூறியாங்கு நிலம்பொழு திரண்டினியல் பெனும் இரண்டே வகைகளை யாண்டும் உடையதாகும்.

குறிப்பு :- ஈற்றேகாரம் தேற்றங்குறிக்கும். முதல், கரு, உரி என்ற அகப்பொருட் பகுதிகள் மூன்றனுள் உரிப்பொருளா வன ஐந்தொழுக்கமும், அவைபோல அகத்துறையில் சிறந்துரிய தலை மக்களின் காதலொழுக்கங்கள் பிற சிலவுமாக வகைபெறு மென்பதை இந்நூலார் மேற்சூத்திரங்களில் விளக்கினார். அது போலவே கருப்பொருள்களும் பலவகைப்படு மென்பதை இனி வருஞ் சூத்திரத்திற் கூறுவர். இவை யிரண்டும் போலாது, யாண்டும் முதற்பொருளாவன நிலமும் பொழுதுமென்றிரண்டே வகைகளில் அடங்குமென்பதை இயைபு நோக்கி இவ்விடைச் சூத்திரத்தால் ஐயமற வரையறுத்து வற்புறுத்துகிறார். இஃது இறந்தது காத்தல், கூறிற்றென்றல், முடிந்தது காட்டல் என்னும் உத்திகளால் அமையுமாதலின், கூறியது கூறலாகாது

முதல்கரு உரிஎன முன்னே முறைப்படுத்திக் காட்டியவர் முதற்பொருள் வகையியல்புகளை முதலிற் கூறி, அதையடுத்துக் கருப்பொருள் கூறாமல் உரிப்பொருள்களின் இயல் கூறினார், இவையிரண்டும் அளவு பட்டமையும் இயைபு நோக்கி, அவ் வியைபை வலியுறுத்தும் பொருட்டே ஈண்டு இச்சூத்திரத்தால் முடிந்தது காட்டித் தந்துணிபுரைத்தார். உரிப்பொருளனைத்தும் தலைமக்களின் அன்பினைந்திணை வகைகளில் அமைந்தடங்கும். முதற் பொருள்களும் நிலம்பொழுதெனும் இரண்டே வகையிலடங் கும். இவையிரண்டும் போலாது கருப்பொருள் வகைகள் எண் ணிறந்து ஏற்றபெற்றி விரியு மியல்புடையவாதலால். அளவு பட்ட இவையிரண்டும் முற்கூறி, இவற்றின்பின் இவையல்லாத அளவிறந்தனவாய் வரும் பலவும் கருப்பொருள் வகைகளாகு

மென்பது விளங்கக் கருப்பொருளியல் இறுதியிற் கூறுகின்றார். இவ் அளவு முறையான் வைப்பு முறையும் அமைகின்றது. முதற் பொருள் இரண்டே வகைகளுள் அடங்குவதாகலின் முதலில் வைக்கப்பட்டது உரிப்பொருள்கள் அகவொழுக்கங்களுள் சில வாக ஐந்து வகைகளில் அடங்குதலால் அவற்றை முதற்பொரு ளின் பின்னர்க்கூறி, அவ்விருவகை யளவானும் அடங்காமல் பலபடவிரியும் கருப்பொருள்களை அவ்விரண்டின் பின் அமைத் துக் கூறினார்.

## சிவலிங்கனார்

முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின்
இயல்பு என மொழிப இயல்புணர்ந் தோரே

என்னும் சூத்திரத்தில் முதற்பொருள் என்பது நிலமும் பொழுது மாகிய இரண்டின் இயல்புகளையுடையது என்பது பெறப்படும். அதில் அவ்விரண்டும் உள்ளதே முதற்பொருள் எனப்படும் என்பது பெறப்படுகின்றது. ஒரு பாடலை நோக்கும்போது அதில் நிலமும் பொழுதும் ஆகிய இரண்டும் இருந்தால் அது கண்டு அப்பாடல் இன்ன திணை என வரையறுக்கலாம் நிலம் மட்டுமோ பொழுது மட்டுமோ அமைந்த பாடல் முதற் பொருளால் திணை கூறப்படுமோ படாதோ என்ற ஐயத்தை இச்சூத்திரம் அகற்றுகின்றது.

முதல் எனப்படுவது மேலே (4) கூறப்பட்ட இரண்டு வகையினையுடையது என்று கூறும் இச்சூத்திரத்தால் நிலமும் பொழுதும் கூறப்பட்ட பாடலேயன்றி நிலம் மட்டும் கூறப்படும் பாடல் நிலத்தால் திணைகூறப்படும் வகையிலும் பொழுது மட்டும் கூறப்படுப்பாடல் பொழுதால் திணை கூறப்படும் வகையிலும் அமைத்தல் வேண்டும். எனவே முதற்பொருள் என்பது நிலவகை முதற்பொருளும் பொழுது வகை முதற் பொருளும் என இருவகைப்படும் என்க. நிலமும் பொழுதும் கூறப்படும் பாடல் இருவகை முதற்பொருள் என்க.

எனவே ‘முதல் எனப்படுவது ... இயல்புணர்ந்தோரே’ (4) என்னும் சூத்திரத்தில் முதற்பொருளாவது நிலமும்பொழு தும் என்னும் இரண்டும் உடையது என்பதும், இச்சூத்திரத் தால் முதற் பொருள் நிலவகை பொழுது வகை என இருவகைப் படும் என்பதும் கூறப்பட்டன என்க. இவ்வாறு கொள்ளாக்

கால் கூறியது கூறல் என்னும் குற்றம் தங்கும் என்க. "இதன் பயன் முதல் இருவகை என்றவாறாம்" என நச்சினார்க்கினியர் கூறியது இக்கருத்தே பற்றியென்க.

**20. தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப (20)**

ஆ.மொ.இல.

The beings and things peculiar to
different regions ('Karu') are said to be
God, food, animal, tree, bird, drum,
profession and lute and such others.

பி.இ.நா

**தமிழ். 6.**

தெய்வம் மானிடம் செய்தி உணவொடு
எய்திய இசை விலங்கு இன்னன பிறவும்
பொய்தீர் கருவெனப் புகன்றனர் கொளலே

**நம்பி 19.**

ஆரணங் குயர்ந்தோர் அல்லோர் புள்விலங்கு
ஊர்நீர் பூ மரம் உணாப்பறை யாழ் பண்
தொழில் எனக் கருவீரெழு வகைத்தாகும்.

**இலாவி அ. 15.** ஷை ஷை

**தொன். 175 முத்து. அக. 33.**

தெய்வம் செல்வர் சேர்குடி புள்விலங்கு
பூ நீர் ஊர்மரம் உணாப்பறை யாழ்பன்
தொழில்எனக் கரு ஈர் எழுவகைத்தாகும்.

இளம்பூரணர்

**20.** தெய்வம் உணாவே......... மொழிப.

இது, கருப்பொருள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தெய்வம் உணா மாமரம் புள் பறை செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ—தெய்வம் முதலாகச் சொல்லப் பட்டன வும், அவ்வகை பிறவும் கரு என மொழிப—அத்தன்மைய பிறவும் கருப்பொருள் என்று கூறுப.

அவையாவன முதற்பொருட்கண் தோன்றும் பொருள்கள்[1].

''மாயோன் மேய காடுறை உலகம்'' (அகத் — 5)

என்றதனால்

முல்லைக்குத் தெய்வம் கண்ணன்.

''காடுறை உலகம்.''

என்றதனானுங்,

''காரும் மாலையும் முல்லை'' (அகத் - 6)

என்றதனானும், காட்டினும் கார் காலத்தினும் மாலைப்பொழுதி னும் நிகழ்பவை[2] கொள்க.

'எந்நிய நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும்.' (அகத்—21)

என்றதனாலும், நிலமும் காலம்மு பற்றி வருவன கருப்பொருள் என்பது உணர்க.

உணவு - வரகும் முதிரையும்[3]. மா - மானும் முயலும். மரம் - கொன்றையும் குருந்தும் புதலும். புள் - கானாங்கோழி, பறை - ஏறுகோட்பறை. செய்தி - நிறை மேய்த்தல். யாழின் பகுதி என்பது பண். அது சாதாரி. பிறவும் என்றதனால், பூ - முல்லையும் பிடவும் தளவும். நீர் - கான்யாறு. பிறவும் இந்நிகரன கொள்க.

குறிஞ்சிக்குத் தெய்வம் முருகவேள். மை வரையுலகமும் கூதிர் காலமும் நள்ளிருளும் கூறினமையான், அந்நிலத்தினும் காலத்தினும் நிகழ்பவை கொள்க. உணவு - திணையும்

1. கருப்பொருள்—தோன்றும்பொருள்.
2. நிகழ்பவை—கருப்பொருளின் நிகழ்ச்சிகள்.
3. முதிரை—பயறுவகை.

ஐவனமும்[4] வெதிர் நெல்லும்[5]. மா - யானையும், புலியும், பன்றியும், கரடியும் - மரம் - வேங்கையும் கோங்கும். புள் - மயிலும் கிளியும். பறை-வெறியாட்டும் பறையும், தொண்டகப் பறையும். செய்தி-தேனழித்தல். பண்-குறிஞ்சி. பிறவும் என்றதனால் பூ-வேங்கைப் பூவும், காந்தட் பூவும், குறிஞ்சிப் பூவும். நீர்-சுனை நீரும். அருவி நீரும் பிறவும் அன்ன.

பாலைக்கு நிலம் ஓதாது வேனிற்காலமும் நண்பகலும் ஓதினமை யானும்,

> ''முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
> நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்
> பாலை என்பதோர் படிவம் கொள்ளும்.''

(சிலப்—காடுகாண்—64—66)

எனப் பிறசான்றோர் செய்யுள் அகத்து வருதலானும், நிஇ நிலங்களில் வேனிற் காலத்து நிகழ்வன, கருப்பொருளாகக் கொள்ளப்படும். தெய்வம் - கொற்றவை, உணவு-ஆறலைத் லான்[6] வரும் பொருள். மா-வலியழிந்த யானையும், வலியழிந்த புலியும் வலியழந்த செந்நாயும். - மரம் - பாலை, இருப்பை. கள்ளி, சூரை - புள் - எருவையும், பருந்தும் - பறை- ஆற் லைப்பறையும், சூறைகொண்ட பறையும், செய்தி - ஆறலைத்தல் பண் - பாலை, பிறவும் என்றதனால், - பூ - மராம்பூ நீர் - அறுநீர்க் கூவலும்[7] அறுநீர்ச் சுனையும், பிறவும் இந்நிகரன கொள்க.

மருதத்திற்குத் தெய்வம் இந்திரன் ; 'தீம்புனல் உலகம்' (அகத்-5) எனவும் 'வைகறை விடியல்' (அகத் - 9) எனவும், ஓதினமையால், அவ்விடத்தினும் காலத்தினும் நிகழ்பவை கொள்க.

---

4. ஐவனம்—ஒரு வகை நெல்.
5. வெதிர் நெல்—மூங்கில் நெல்.
6. ஆறு அலைத்தல்—வழிப்போவாரைத் துன்புறுத்தல்.
7. அறு நீர்க் கூவல்—நீர் அற்றகிணறு.

உணவு - நெல். மா - எருமையும், நீர் நாயும் - மரம் - மருதும் காஞ்சியும். புள் - அன்னமும், அன்றிலும் - பறை - நெல்வரி பறை. செய்தி - உழவு - பண் - மருதம், பிறவும் என்றதனால், பூ - தாமரையும் கழுநீரும். நீர் - ஆற்றுநீரும் பொய்கை நீரும் பிறவும் அன்ன.

நெய்தற்குத் தெய்வம் வருணன். 'மணல் உலகம்' (அகத்-5) என்றதனானும், 'எற்பாடு' (அகத்-10) என்றதனானும், ஆண்டு நிகழ்புவை கொள்க. உணவு-உப்பு விலையும் மீன் விலையும். மா-கராவும்[8] சுறவும், மரா - புன்னையும் கைதையும்[9]. புள்-கடற்காக்கை. பறை - நாவாய்ப் பறை. செய்தி - மீன் படுத்தலும் உப்பு விளைத்தலும். பண்-செவ்வழி. பிறவும் என்றதனால், பூ - நெய்தல். நீர் - கேணி நீரும் கடல் நீரும். பிறவும் அன்ன.

நச்சினார்க்கினியர்

18 தெய்வ முணாவே ........மொழிப.

இது நிறுத்த முறையானே யன்றி அதிகாரப்பட்டமையின் உரிப்பொருள் கூறி ஒழிந்த கருப்பொருள் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :- தெய்வம் உணாவே மா மரம் புள் பறை செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ - எல்லாத் திணைக்குந் தெய்வம் உணா விலங்கு மரம் புள்ளும் பறை தொழிலென்று இவற்றை யாழின் கூற்றோடே கூட்டி, அவ்வகை பிறவும் கரு என மொழிப-அவை போல்வன பிறவுங் கருவென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

'யாழின்பகுதி' என்றதனான்[1] மற்றையபோலாது பாலைக்குப்

---

8. முதலை

9. தாழை

1. உணா, மா, மரம் புள் என வாளா கூறியதுபோல் யாழ் எனக் கூறாது யாழின் பகுதி என்றதனால்.

பாலையாழெனவேறு வருதல் கொள்க.[2] 'அவ்வகை பிறவும்' என்றதனான் எடுத்தோதிய தெய்வம் ஒழிய அவற்றுள் உட்பகுதியாகிய தெய்வமும் உள. அவை 'மாயோன்மேய' (5) என்புழிக் காட்டினாம் இதனானே பாலைக்குத் தெய்வமும் இன்றாயிற்று. இன்னும் 'அவ்வகை' என்றதானானே பாலைக்கு நிலம் பற்றாது காலம் பற்றிக் கருப்பொருள் வருங்கால் தம்மியல்பு திரியவருவனவும்[3] வருமென்று கொள்க 'எந்நில மருங்கிற் பூ' (19) என்பதனாற் பூவும் புள்ளும் வரைவின்றி மயங்குமெனவே ஒழிந்த கருவும் மயங்குமென்பது 'சூத்திரத்துப் பொருளன்றியும்' (659) என்பதனான்[4] உரையிற் கொள்க. அது 'அயந்திகழ் நறுங் கொன்றை' என்னும் நெய்தற்கலியுட்[5] காண்க.

முல்லைக்கு உணா, வரகுஞ் சாமையும் முதிரையும்; மா, உழையும் புல்வாயும் முயலும்; மரம், கொன்றையுங் குருந்தும்; புள், கானக்கோழியுஞ் சிவலும்; பறை, ஏறுகோட்பறை; செய்தி, நிறை மேய்த்தலும் வரகு*முதலியன களை கட்டலுங் கடாவிடுதலும்; யாழ், முல்லையாழ், பிறவுமென்றதனால் பூ, முல்லையும் பிடவுந் தளவுந் தோன்றியும்; நீர், கான்யாறு; ஊர், பாடியுஞ் சேரியும் பள்ளியும்.

குறிஞ்சிக்கு உணா, ஐவனநெல்லுந் தினையும் மூங்கிலரிசியும்; மா, புலியும் யானையும் கரடியும் பன்றியும்; மரம அகிலும் ஆரமுந் தேக்குந் திமிசும் வேங்கையும்; புள், கிளியும், மயிலும் பறை, முருகியமுந் தொண்டகப் பறையும்; செய்தி

---

2. பாலை தனி நிலமன்மையின் மாமரம் முதலியன குறிஞ்சி முல்லைக்குரியன திரிந்துவரும். ஆனால் யாழ் அவ்வாறு குறிஞ்சி யாழும் முல்லையாழும் வாராமல் பாலையாழ் ஒன்று சிறப்பாகவே வரும் என்க. பாலை யாழ்-பாலைப்பண்.

3. தம் இயல்பு திரிய வருவன வலியற்ற புலி நாய் யானை முதலியன.

4. 'சூத்திரத்துப் பொருளன்றியும்' ( ) என்னும் சூத்திரம், சூத்திரத்திற்கூறப்பட்ட பொருளேயல்லாமல் சொல்லப்படாத அவ்வவ்விடங்களுக்குத் தேவையான. பிறபொருள்களையும் ஆங்காங்கே கூறிக்கொள்க என்பது கூறலின் அதன்படி உரையிற் கூறிக்கொள்க

5. நெய்தற்கலி

தேன் அழித்தலுங் கிழங்கு அகழ் தலுந் தினை முதலியன விளைத்தலுங் கிளி கடிதலும் ; யாழ், குறிஞ்சியாழ் பிறவுமென்ற தனால், பூ காந்தளும் வேங்கையுஞ் சுனைக்குவளையும் ; நீர் அருவியுஞ் சுனையும் ; ஊர், சிறுகுடியுங் குறிச்சியும்.

மருதத்திற்கு உணா, செந்நெல்லும் வெண்ணெல்லும் ; மா, எருமையும் நீர் நாயும் ; மரம், வஞ்சியுங் காஞ்சியும் மருதமும் ; புள், தாராவும் நீர்க்கோழியும் ; பறை. மணமுழவும் நெல்லரி கிணையும் ; செய்தி, நடுதலுங் களைகட்டலும் அரிதலுங் கடாவிடுதலும் ; யாழ், மருதயாழ், பிறவுமென்றதனால், பூ, தாமரையுங் கழுநீரும் ; நீர், யாற்றுநீரும் மனைக்கிணறும் பொய்கையும் ; ஊர், ஊர்களென்பனவேயாம்

நெய்தற்கு உணா, மீன்விலையும் உப்புவிலையும் ; மா, உமண்பகடு போல்வன ; முதலையுஞ் சுறாவும் மீனாதலின் மாவென்றல் மரபன்று. மரம், புன்னையும் ஞாழலுங் கண்டலும் ; புள், அன்னமும் அன்றிலும் முதலியன ; பறை, மீன் கோட் பறை, செய்தி, மீன்படுத்தலும் உப்பு விளைத்தலும் அவை விற்றலும் ; யாழ், நெய்தல் யாழ் பிறவு மென்றதனால், பூ, கைதையும் நெய்தலும் ; நீர் ; மணற்கிணறும் உவர்க் குழியும் ; ஊர், பட்டினமும் பாக்கமும்.

இனி பாலைக்கு உணா, ஆறலைத்தனவுஞ் சூறை கொண்டனவும் ; மா, வலியழிந்த யானையும் புலியுஞ் செந்நாயும் ; மரம், வற்றின இருப்பையும் ஓமையும் உழிஞையும், ஞெமையு ; புள், கழுகும் பருந்தும் புறாவும் ; பறை, சூறை கோட் பறையும் நிரைகோட் பறையும்; செய்தி, ஆறலைத்தலுஞ் சூறைகோடலும் யாழ், பாலையாழ். பிறவுமென்றதனால், பூ, மராவுங் குராவும் பாதிரியும் ; நீர். அறுநீர்க்கூவலுந் சுனையும் ; ஊர், பறந்தலை.

இன்னும் பிறவு மென்றதனானே இக்கூறியவற்றிற்குரிய மக்கள் பெயருந் தலைமக்கள் பெயருங் கொள்க. அவை 'பெயரும் வினையும்' (20) என்னுஞ் சூத்திரத்துட் காட்டுதும். பிறவுமென்றதனால் கொள்வன சிறுபான்மை திரிவுபடுதலின் பிறவுமென்று அடக்கினார்.

பாரதியார்

### 18. தெய்வம்......மொழிப

கருத்து : இது முதல் உரிப்பொருள்களில் அடங்காவாய் அகத்திணைக்கு உறுப்பாம் கருப்பொருள் வகை உணர்த்துகிறது

பொருள் :- தெய்வம் - வழிபடு கடவுட் பகுதி; உணாவே- ஊண் வகை; மா-விலங்கு வகை; மரம் - மரஞ்செடிகொடி வகை; புள் — பறவை வகை; பறை — அவ்வந் நிலங்களுக்குரிய பறை வகைகள்; செய்தி - தொழில் வகை; யாழின் பகுதியொடு தொகைஇ-யாழ் வகைகளோடு கூட்டி; அவ்வகை பிறவும்-அவை போல அகத்திணைகளுக்குச் சார்பாக வகைப்படுவன மற்றை யனவும்; கரு என மொழிப - கருப்பொருள்கள் என்று கூறுவர் அகப்பொருணூலார்.

குறிப்பு :- முன்னைச் சூத்திரக் குறிப்புரையில் சுட்டியாங்கு முதலும் உரியுமல்லாத அகப்பொருள்களுள் அகத்திணைக்குக் கருவாய் அமைவன யாவும் கருப்பொருள்கள் என்பர் அகப் பொருள் நூலார். இச்சூத்திரத்தில் அளவற்ற கருப்பொருள் வகைகள் அனைத்தையும் வகுத்து நிறுத்தல் கூடாமையின் சிறந்தன சில சுட்டி அவ்வகை பிறவும் கரு என்று கூறி, மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடிய வைத்தார் தொல்காப்பியர்.

**21. எந்நில மருங்கின் பூவும் புள்ளும்**
**அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும்**
**வந்த நிலத்தின் பயத்த ஆகும். (21)**

ஆ. மொ. இல.

The flower and the bird of one region and season when not found in the region and season, ascribed to them, may belong to region where they appear.

இளம்பூரணர்

### 21. எந்நில மருங்கிற் .... ஆகும்.

இது, மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று

(இ-ள்) எ நிலமருங்கின் பூவும் புள்ளும் - யாதானும் ஓர் நிலத்திற்குரிய பூவும் புள்ளும், அ நிலம் பொழுதொடு வாராவாயினும் — அந்நிலத்தொடும் பொழுதொடும் வந்தில

வாயினும், வந்த நிலத்தின் பயத்த ஆகும் - வந்த நிலத்தின் பயத்த ஆகும்.

"வந்தது கொண்டு வாராதது முடித்தல்" (மரபு 112) என்பதனால், சிறுபான்மை ஏனையவும்[1] வந்தவழிக் கண்டு கொள்க இவ்வாறு வருவன திணை மயக்கம் அன்றென்றவாறு.[2]

## நச்சினார்க்கினியர்

19. எந்நில மருங்கிற்......வாகும்.

இது முற்கூறிய கருப்பொருட்குப் புறனடை.

இதன் பொருள்:- எந்நில மருங்கிற் பூவும் புள்ளும், எழுதிணை நிகழ்ச்சியவாகிய நால்வகை நிலத்துப் பயின்ற பூவும் புள்ளும், அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும். தத்தமக்கு உரியவாகக் கூறிய நிலத்தொடுங் காலத்தொடும் நடவாமற் பிற நிலத்தொடுங் காலத்தொடும் நடப்பினும், வந்த நிலத்தின் பயத்த ஆகும்-அவை வந்த நிலத்திற்குக் கருப்பொருளாம் என்றவாறு.

ஒடு 'அதனோடியைந்த ஒருவினைக் கிளவி' யாதலின் உடன் சேறல் பெரும்பான்மையாயிற்று[3], வினைசெய் யிடத்தினிலத்திற் காலத்தின் என்பதனான் நிலத்தின் பயந்தவாமெனப் பொழுதினையும் நிலமென்று அடக்கினார்.[4] பூவைக் கருவென ஓதிற்றிலரேனும்

---

1. ஏனைய-உணா, மா முதலிய கருப்பொருள்கள்
2. இத்தொடர்க் கருத்து ஆய்வுக்குரியது.
3. ஒரு வினைக்கிளவி- உடன்நிகழ்ச்சிக்கிளவி. பூவும் புள்ளும் அந்நிலம் பொழுதொடு வாராவாயினும் என்பது பாடலில் பூவும் புள்ளும் நிலமும் பொழுதும் வர அவற்றுடன் வாராவாயினும் என்னும் பொருளது அதனால் ஒரு வினைக்கிளவியாக ஒரு உருபு வந்தது. நிலமுடனும் பொழுதுடனும் வரும் பூவும் புள்ளுமே பெரும்பான்மையாம்
4. நிலம் பொழுதொடு முன்னர்க் கூறிய ஆசிரியர் பின்னர் பொழுதை விட்டு வந்த நிலம் என நிலத்தை மட்டும் கூறியது ஏன் எனின் பொழுதை நிலத்தில் அடக்கினார். ஒரு செயற்கு நிலம் காலம் முதலிய தேவையாதலின் காலம் நிலத்துள் அடங்கும். இதை வினை செய் இடத்தின் நிலத்தின் காலத்தின் (தொல்-சொல்-வினை) என்னும் சூத்திரத்தால் அறியலாம்.

முற்கூறிய மரத்திற்குச் சினையாய் அடங்கிற்று. ஒன்றென முடித்தலான் நீர்ப்பூ முதலியனவும் அடங்கும்.[5] இங்ஙனம் வருமிடஞ் செய்யுளிடமாயிற்று. உதாரணம் :-

"தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்." (கலி-52)

இது மருதத்துப்பூ, குறிஞ்சிக்கண் வந்தது.

"உடையிவ ளுயிர் வாழா ணீநீப்பி னெனப் பல
விடைகொண்டியா மிரப்பவு மெமகொள்ளா யாயினை
கடைஇய வாற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை
யடையொடு வாடிய வணிமலர் தகைப்பன." (கலி. 8)

இது மருதத்துப்பூ, பாலைக்கண் வந்தது.

"கண்மிசை மயிலாலக் கறங்கியூ ரலர்தூற்றத்
தொன்னல நனிசாய நம்மையோ மறந்தைக்க
வொன்னாதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும்
விரும்பார்கொல்." (கலி-27)

இது குறிஞ்சிக்குப் பயின்ற மயில் பாலைக்கண் இளவேனிற் கண் வருதலிற் பொழுதொடு புள்ளு மயங்கிற்று. கபிலர் பாடிய பெருங்குறிஞ்சியில் வரைவின்றிப் பூ மயங்கியவாறு காண்க. ஒன்றென முடித்தலாற் பிற[6] கருப்பொருள் மயங்குவன உளவேனுங் கொள்க (19

பாரதியார்

### 19. எந்நில... பயந்தவாகும்

கருத்து :- இது கருப்பொருண் மயக்கமும் கடிதலில்லை யென்பது கூறுகின்றது.

பொருள் :- எந்நில மருங்கிற் பூவும் புள்ளும் - எந்த நிலச் சார்பில்கூறப்படும் பூ, புள் முதலிய கருப்பொருள்களும், அந்நிலம் பொழுதொடு வாராவாயினும்-அவ்வக் கருப்பொருட்டுச் சிறந்துரிய

5. நீர்ப்பூ, கொடிப்பூ முதலியனவும் அடங்கும்

6. பூவும் புள்ளு மல்லா மா மரம் முதலியன.

நிலத்தொடும் பொழுதோடும் இயைந்து வந்திலவாயினும்; வந்த நிலத்தின் பயத்த ஆகும் - கூறப்பட்ட ஒழுக்க நிகழிடத்தொடு பொருந்த அதற்கேற்ற பயன் தருவனவாய் அமையும்.

குறிப்பு: பூவும் புள்ளும் என்பனவற்றுள் உம்மை எண்ணும்மை. வாராவாயினும் என்பதிலும்மை யெதிர் மறை சுட்டும்; கருப்பொருள்கள் பெரும்பாலும் தத்தமக்குரிய நிலம் பொழுதொடு இயைந்து வருதலே சிறந்த முறை. ஓரோவிடத்து மாறிவரினும் வந்த இடத்தொடு பொருந்தப் பயன் தருவதால் கடியப்படாமல் அமைத்துக் கொள்ளப்படும் எனும் பொருட்டாதலின்.

உரிப்பொருள்களைப் போலவே கருப் பொருள்களும் முதற் பொருள்களான நிலம் பொழுதுகளின் வகைகளில் இயைபு நோக்கி ஏற்ற பெற்றி ஓரோவொன்றிற்கே சிறப்புரிமையுடன் பொருந்துவனவாகும். நிலம் பொழுது வகைகளின் பொருத்தம் நோக்கி அவ்வவற்றிற்குரிய கருப்பொருள்களமையக் கூறுவதே பெருவழக்காம் எனினும், ஓரோவிடத்து நிலம் பொழுதுகளுக்கு நேருரிமையல்லாத திணைக்குரிய வொழுக்கங்கள் மயங்கக்கூறுவது புலனெறி வழக்கென்று மேலே 12, 13வது சூத்திரங்கள் கூறினதால் அவ்விடங்களில் தம்முரிமையின்றி மாறுபட்ட முதலுரிப் பொருள்களில் எதற்கியையக் கருப்பொருள்களின் அமைவு கருதப்படுமென்ற ஐயம் எழுவதியல்பு. அவ்வையமகற்ற ஈண்டு இச்சூத்திரம் எழுந்தது. நிலம் பொழுதுகளோடு பொருந்தக் கருப்பொருள் கூறுவது பெருவழக்கிற்றாயினும், பயன் நோக்கி அகத்திணையிற் சிறந்த ஒழுக்கங்களுக்கியைய நலந்தருவனவற்றை அமைத்துக் கோடல் பாடல் சான்ற புலனெறி வழக்கேயாம் என்பதை இச்சூத்திரம் வலியுறுத்துகிறது. ''பாடலுட் பயின்றவை நாடுங்காலை'' முதலிற் கருவும் கருவில் உரியுமே முறை சிறந்தன எனுங் தமிழ் மரபை முன் மூன்றாஞ் சூத்திரத்துக் கூறினராதலின், நிலம் பொழுதுகளிலும் சிறந்த உரிப்பொருளொழுக்கத்திற்குப் பொருந்த வரும் கருப்பொருள்கள் முதற் பொருளுக்கியையாவிடத்தும் கடியப்படா என்று இதனால் இந்நூலார் அமைவு காட்டி வற்புறுத்தினார்.

''மாயோன்மேய'' எனும் முன்னைச் சூத்திரத்தில் நானிலங்கள் முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனத் திணைப் பெயரே கொள்ளும் என்றமைத்தும் அகத்துறைகளில் திணைக் குரிப் பொருள்களான ஒழுக்கங்களே சிறப்புடையவாதல் பற்றியே

யாம். ஆனால் ஒரு நிலத்திற் பிறிதொழுக்கம் நிகழ்வதாய்ப் புலனெறி வழக்கஞ் செய்யுமிடத்து அவ்வந்நிலத்தோடு இயற் பொருத்தமில்லாத கருப்பொருள்களைத் திணை நோக்கிக்கூற நேரின், நிகழுமொழுக்கத்துக்கு அக்கருப்பொருள்கள் ஏற்புடையனவாய், அமையும் பயனுடையத்தாதல் வேண்டுமென்று இந் நூலார் ஈண்டு ஒப்பக்கூறியமைத்தார். காடு, மலை, ஊர், கடல் என்பவற்றுள் கூறுவது யாதாயினும் அதற்கியையப் பொருத்த முடைய கருப்பொருள்களமையக் கூறுதலொன்று அன்றி அந்நிலத்தில் நிகழ்வதாய்க் கூறப்படும் திணைக்குப் பொருந்த அமைவதொன்றாம். கருப்பொருள்கள் தமக்குரிய நிலம் பொழுது களோடு இயைய வாராவிடங்களில், அவ்வந்நிலத்து நிகழும் ஒழுக்கத்தோடு அமையும் பயனுடையவாதல் வேண்டும். ஈண்டு 'நிலத்தின் பயத்த' என்பது நிகழும் ஒழுக்கநிலத்தைக் குறிக்கும். அஃதாவது, அந்நிலத்தில் நிகழ்வதாய்க் கூறப்படும் திணையைச் சுட்டும். (நெய்தற்) கடற்கருப் பொருள்களை காட்டொடு சேரக் கூறுமிடங்களில் அப்பொருள்கள் காட்டிற்குரியபயன் தருமென் பது இச்சூத்திரக் கருத்தன்று; காட்டில் நெய்தற்றிணை நிகழு மிடத்துக் காட்டிற்குரிய வல்லக் கருப் பொருள்கள்வரின், அவை ஆங்கே நெய்தற்றிணைக்கேற்பனவாய் அமையக் கூறுவது புலனெறி வழக்காம் என்பதே இச்சூத்திரம் நுதலிய பொருளாகும்.

> ''பொரியரைக் கோங்கின் பொன்மருள் பகவீ
> விரியிணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி
> விரவுமல ரணிந்த வேனிற் கான்யாற்றுத்
> தேரொடு குறுக வந்தோன்
> பேரொடு புணர்ந்தன் றன்னையிவ ளுயிரே ''
>
> (ஐங்குறு-376)

இதில் பாலைக்குரிய வேனிற் காலத்து முல்லைக் கான்யாற்றில் புணர்வுத் திணையில், பாலைக்கோங்கின் பசு மலரோடு குறிஞ்சி வேங்கைப் பூவும் விரவிப் புணர்ந்து பிரிந்தோர் ஒழுக்கொடு பொருந்தவந்த செவ்வியும் வாய்ப்புந் திகழ்வது காண்க.

## சிவலிங்கனார்

ஒரு நிலத்துப்பூவும் புள்ளும் அந்நிலத்திற்குரிய நிலத்தொடும் பொழுதொடும் வாராமல் வேற்று நிலத்து நிலத்தொடும் பொழு தொடும் வந்தாலும் அவ்வந்த வேற்றுநிலத்தின் வேற்றுப்

பொழுதின் உரிப்பொருளின் பயனையே தாமும் உடையனவாகும் என்பது இச்சூத்திரப்பொருள். இதனால் கருப்பொருள் மயக்கம் கூறப்பட்டது.

தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின் (கலித். 52)

இது குறி விலக்கல் ஒழுக்கமாய்க் குறிஞ்சிக்குரியது. இதில் தலைவன் தாமரைக் கண்ணியனாய் வந்தான் என்பதால் தாமரை மருத நிலக்கருப்பொருளாதலின், அது அதற்கேற்ப ஊடற் பொருள் இன்றிக் குறிஞ்சிப் பொருளுக்கே துணை செய்வதாய்ப் பயன்பட்டது என்க.

வந்த நிலத்தின் பயத்த என்பதற்குத் தாம் மயங்கி வந்த நிலத்தின் பொருளே தமக்கும் ஏற்புடையனவாகத் தம் நிலத்தின் பொருளைவிட்டுப் பயன்படுவனவாம் என்க.

22. பெயரும் வினையும் என்று ஆயிரு வகைய திணை
தொறும் மரீஇய திணை நிலைப் பெயரே. (22)

ஆ. மொ. இல.

The names of particular region current in the said region are of two kinds-the name of noun and the name of verb.

இளம்பூரணர்

22. பெயரும் வினையுமென்று.........பெயரே.

இதுவும், கருப்பொருளின் பாகுபாடாகிய மக்கட்டிறம்[1] உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பெயரும் வினையும் என்று அ இருவகைய - குலப் பெயரும் தொழிற்பெயரும் என அவ்விருவகைப்படும், திணை தொறும் மரீஇய திணைநிலைப்பெயர் - திணைதொறும் மருவிப் போந்த திணைநிலைப்பெயர்.

1. தெய்வம் உணரவே ( ) என்னும் சூத்திரத்தில் அவ் வகை பிறவும் என்றதனால் தழுவிக் கொள்ளப்பட்ட மக்களது திறம்.

திணைநிலைப்பெயர் என்றதனான் அப்பெயருடையார் பிற நிலத்து இலர் என்று கொள்ளப்படும். அதனானே எல்லா நிலத்திற்கும் உரியராகிய மேன்மக்களை[2] ஒழித்து நிலம்பற்றி வாழும் கீழ்மக்களையே[3] குறித்து ஓதினார் என்று கொள்க. பெயர் என்றதனால் பெற்ற தென்னை? மக்கள் என அமையாதோ? எனின்,[4] மக்களாவார் புள்ளும் மாவும்போல வேறு பகுக்கப் படார், ஒரு நீர்மைய[5] ராதலின். அவரை வேறுபடுக்குங்கால் திணைநிலைப்பெயரான்[6] அல்லது வேறுபடுத்தல் அருமையின், பெயர் என்றார்.

## நச்சினார்க்கினியர்

20. பெயரும் வினையுமென்.........பெயரே

இது 'பிறவும்' (18) என்றதனால் தழுவிய பெயர்ப்பகுதி கூறுகின்றது.

இதன்பொருள் :- திணைதொறும் மரீஇய பெயர்-நால்வகை நிலத்தும் மரீஇப்போந்த குலப்பெயரும், திணைநிலைப்பெயர்-உரிப் பொருளிலே நிற்றலையுடைய பெயரும், பெயரும் வினையு மென்று ஆயிருவகைய - பெயர்ப்பெயரும் வினைப் பெயரு மென்று அவ்விரண்டு கூற்றையுடையவாம் என்றவாறு.

நால்வகை நிலத்தும் மருவிய குலப்பெயராவன :-
குறிஞ்சிக்குக் கானவர் வேட்டுவர் குறவர் இறவுளர் குன்றுவர்

---

2. மேன்மக்கள் - அந்தணர் அரசர் வணிகர் வேளாளர்
3. கீழ்மக்கள் - பொதுமக்கள் நிலங்களில் வாழும் நிலப் பெயர் கொண்டமக்கள்.
4. மக்கள் என்னாது அவரைத் திணைநிலைப்பெயர் எனக் கூறியது என்னை எனின்.
5. புட்கள் கிளி குருவி பருந்து எனவும் மாக்கள் புலி மான் எனவும் பகுக்கப்படுதல் போல் மக்கள் பகுக்கப்படுதல் இல்லை.
6. ஆயர் வேட்டுவர் எனப் பகுக்கப்படுதல்

வேட்டுவித்தியர் குறத்தியர் குன்றுவித்தியர் ; ஏனைப் பெண் பெயர்[7] வருமேனும் உணர்க.

முல்லைக்குக் கோவலர் இடையர் ஆயர் பொதுவர் இடைத்தியர் கோவித்தியர் ஆய்த்தியர் பொதுவியர்

நெய்தற்கு நுளையர் திமிலர் பரதவர் நுளைத்தியர் பரத்தியர் ; ஏனைப் பெண்பெயர்[1] வருமேனும் உணர்க.

மருதத்திற்குக் களமர் உழவர் கடையர் உழத்தியர் கடைச்சியர் ; ஏனைப் பெண்பெயர்[2] வருமேனும் உணர்க.

முன்னர் 'வந்த நிலத்தின் பயத்த' (19) என்புழிக் காலத்தையும் உடன் கோடலின் ஈண்டுந் திணைதொறு மருவுதலும் பொழுதொடு மருவுதலும் பெறப்படுதலிற் பொழுது முதலாக வரும் பாலைக்குத் திணைதொறுமரீஇயபெயருந் திணைநிலைப் பெயருங் கொள்க, எயினர் எயிற்றியர் மறவர் மறத்தியர் எனவும் மீளி விடலை காளை எனவும் வரும்.

இனி உரிப்பொருட்குரிய தலைமக்கள் பெயராவன, பெயர் பெயரும்[3] நாடாட்சி பற்றி வரும் பெயருமாம். குறிஞ்சிக்குவெற்பன் சிலம்பன் பொருப்பன்; கொடிச்சி ; இஃது[4] ஆண்பாற் கேலாத பெயராயினும் நிலை யென்றதனாற் கொள்க. முல்லைக்கு அண்ணல் தோன்றல் குறும்பொறைநாடன், மனைவி நெய்தற்கு கொண்கன் துறைவன் சேர்ப்பன் மெல்லம் புலம்பன், தலைவி பெயர் வந்துழிக் காண்க. மருதத்திற்கு மகிழ்நன் ஊரன்

---

7. கானவர் இறவுளர் எனும் ஆண்பாற்கேற்ற பெண்பாற் பெயர்கள். இக்காலத்து இறுளச்சி என்பது இறவுளர்க்குப் பெண்பாற் பெயர் போலும்.

1. ஏனைப் பெயர் திமிலர்க்கு ஏற்ற பெண்பாற் பெயர்.

2. களமர்க்கேற்ற பெண்பாற் பெயர்.

3. பெயர்ப் பெயர்-நிலப்பெயர்

4. இஃது-கொடிச்சி. கொடிச்சிக்கேற்ற ஆண்பாற் பெயர் இல்லை. கொடியன் எனின் ஏலாது.

மனையோள் எனவரும். இக்காட்டிய இருவகையினும் பெயர்ப் பெயரும் வினைப்பெயரும் பாடலுட் பயின்ற வகையாற் பொருணோக்கி யுணர்க

ஈண்டுக் கூறிய திணைநிலைப்பெயரை 'ஏவன் மரபின்' (24) என்னுஞ் சூத்திரத்து அறுவகையரெனப் பகுக்குமாறு ஆண்டு ணர்க.

பாரதியார்

20. பெயரும்...........பெயரே.

கருத்து :- இது, கருப்பொருள்களோடு அடைவுடைய அகத்திணைக் குரியரான அவ்வந் நிலமக்களின் பெயர்ப் பாகுபாடு கூறுகிறது.

பொருள் :- திணைதொறு மரீஇய திணைநிலைப் பெயரே- ஒவ்வொரொழுக்கத் தொடும் பொருந்திய முல்லை முதலிய நிலங்களில் புலனெறி வழக்கில் அகத்திணைக் குரியராய்க் கூறப்படும் மக்கட் பெயர்கள் ; பெயரும் வினையுமென்றாயிரு வகைய - அவ்வந்நிலத்தானமையும் பெயர்ப்பெயரும் அந்நிலத்து மக்களின் தொழிலான் அமையும் வினைப்பெயரும் என்று அவ்விரண்டு கூறுபாட்டினை யுடையவாகும்.

குறிப்பு :- ஈற்றேகாரம் அசைநிலை. பெயரும் வினையும் என்பவற்றுள் உம்மை எண்ணும்மை 'திணைநிலை' என்பது ஆகுபெயராய்த் திணைநிலை யினரைக் குறிக்கும்.

நானிலங்களினும் உள்ள மக்கள், அகத்திணைக் குரியராய்ச் செய்யுளிற் கூறப்படுங்கால், முல்லை முதலிய அவ்வத்திணை நிலங்களுக்குரிய இயல் இயைபுடைய பெயர் கொள்ளுதல் ஒன்று; அவ்வாறன்றித் தத்தம் தொழிற்கியைபுடைய பெயர் கொள்ளுதல் ஒன்று. அவ்விரு முறைகளே தமிழகத் தொல்லை மரபொடு அடைவுடையவாகும். தொல்காப்பியர் காலத் தமிழுலகில் தமிழரிடைப் பிறப்பளவில் என்று உயர்வு தாழ்வுடன் வேறுபாடு உடைய சாதி வகுப்புகள் கிடையா. அதனால் அக்காலத் தமிழ்மக்கள் தத்தம் நிலத்துக்கேற்றாங்கு ஆயர், குறவர், உழவர், மறவர் என்றழைக்கப்பட்டார்கள்.

இனி, ஒரு நிலத்துள்ளார் அந்நிலத்திற்குரிய தொழில் மேற்கொள்ளாது பிறிது தொழில் கையாளுவராயின், அவரவர் செய்தொழில் வேற்றுமையால் தொழில் குறிக்கும் ஏற்புடை வினைப்பெயர்களாலும் அழைக்கப்படுவர். நுளைஞர், பரவர் என்பன நெய்தனிலஞ் சுட்டிய மக்கட் பெயர். வலையர். உமணர் என்பன நிலஞ்சுட்டாது வலைவீசிப் பிழைக்குந் தொழிலுடையாரையும், உப்பு உண்டாக்கி விற்கும் தொழிலுடை யாரையும் சுட்டும் வினைப் பெயர்கள். தொழில் எதுபுரிந்தும் நெய்தனிலம் வதிபவரைப் - பரவர் அல்லது நுளைஞர் என வழங்கல் ஒருமுறை ; அப்போது அப்பெயர் நெய்தனிலமக்கள் என்னும் பொருட்டாகும் இனி, எந்நிலத்துறையினும் வலைத் தொழில் புரிந்து வாழ்வார் என்பதைக் குறிக்குங்கால், வளையர் என்னும் வினைப்பெயரால் அத்தொழிலுடையாரைச் சுட்டுவது ஒருமுறை. தமிழகத்திற் பண்டைக் காலத்தில் பிறப்பால் சாதி வகுப்புகள் இல்லாமையானும், தமிழ் மக்களெல்லாரும் விரும்பி யாங்குத் தத்தமக்கேற்புடைய தொழில் கொள்ளும் உரிமை யுடையராதலாலும், நிலம் தொழில் வகைகளால் வேறுபடினும் உணவு, மணங்களில் வேறுபாடுன்றி யாண்டும் எல்லாரும் ஏற்ற பெற்றி கலந்து ஒன்றிவாழ்ந்தாராதலானும், அவர் அக வொழுக்கங்கூறும் புலனெறி வழக்கில் அக்காலத்தவரிடை நிலை பேறுற்ற நிலப்பெயர் வினைப்பெயர்மளால் தமிழ் மக்கள் அழைக்கப்படும் மரபுண்மையைத் தொல்காப்பியர் ஈண்டு விளக்கிப் போந்தார். நிலம்பற்றிய மக்கட் பெயர், பெயர்ப்பெயர் ; செய்யும் வினைபற்றிய மக்கட் பெயர் வினைப் பெயர்.

அகம் 110- ஆம்பாட்டில், போந்தைப் பசலையார், நுளர்ச்சியைத் தலைவியாகவும், நெடுந்தேரூரனைத் தலைவ னாகவும், திணைநிலைப்பெயர் அமைத்துக் கூறியுள்ளார். நற்றிணை 45-ஆம் பாட்டில்,

''நெடுங்கொடி நுடங்கு நியமமூதூர்க்
கடுந்தேர்ச் செல்வன் காதற்''. றலைமகனாகவும், நிணைச் சுறா வறுத்த வுணக்கல் வேண்டி, யினப்புள்ளோப்பும்'' புலவு நாறும் பரவர் மகள் தலைமகளாகவும், இவ்வாறு இவ்விருவேறு நிலமக்கள் காதற்றலைமக்களாய் அகத்திணைக்குரியராயமைந் திருப்பது இங்குக் கருதத் தக்கது - அகம் - 280 - ஆம்

பாட்டில், பரவர் மகளைத் தலைவியாகவும், பிறிதொரு நிலை மகனைத் தலைவனாகவும் அமைத்து அம்மூவனார் கூறியதும் அக்காலத் தமிழ் மரபு அதுவாதலான் என்பது வெளிப்படை. இன்ன பல பழம் பாட்டுகளால் பண்டைத் தமிழகத்தில் நானில மக்களுள் மணமும் உணவும் பிறப்பு நிலை வினைகள் பற்றி வரையப்படாமல் கலந்து கையாளப்பட்டன என்பது தெள்ளத்தெளியக் கொள்ளப்படும். மரபியலில் காணப்பெறும் வருணவகை பற்றிய சூத்திரங்கள் இடைச்செருகல் என்பது பிறாண்டு விளக்கப்படும்.

"யாயும் ஞாயும் யாரா கியரோ ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர் ?
யானும் நீயும் எவ்வழி யறிதும் ?
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சத் தாங்கலந் தனவே"

என்னும் குறுந்தொகை 40-ஆம் பாட்டானும் பிறப்பு, தொழில்வகை கருதாமல் ஒத்த அன்பே மணத்திற்குப் போதியது என்னுந் தமிழ் மரபு விளக்கமாகும்.

நானிலத் தமிழ்மக்களுள் தம்முள் வேறுபாடின்றி மணந்து கொள்ளும் பழைய வழக்குண்மை, சாதி வெறியலைக்கும் பிற்காலக் கோவைகளும் பலநில மக்களின் கலப்புமணம் குறித்துத் தமிழ்மரபு வழுவாமல் அகத்துறைகமைத்துக் கூறுவ தாலும் வலிபெறுகின்றது.

"கழைகோடு வில்லியைச் செற்றா தியாகர் கமலைவெற்பின்
உழைகோடி சுற்றுங் கிரியெம தூரும தூர்மருதம் ;
தழைகோடி கொண்டு சமைத்ததெம் மாடை தனித்தனியோர்
இழைகோடி பொன்பெறு மேயும தாடை யிறையவரே."

(எல்லப்பநயினர் திருவாரூர்க்கோவை. செய்-101)

இவ்வுண்மைய மறந்து தொல்காப்பியர் நூலின் உரைகாரர் இப்பண்டைத் தமிழிலக்கண (நூற்) சூத்திரத்திற்கு, அவர் கால இயைபற்ற புராணக் கதைகளையும் இயல்வழக்கற்ற ஆரியக் கொள்கைகளையும் புகுத்திப், பொருந்தாப் புத்துரைகள்

கூறி மயங்கவைத்தார். ஆரியருள் நான்கு வருணத்தாருக்குமே தமிழரின் அகத்திணைக் களவியல் ஒழுக்க ஆட்சியுரிமை அவர் தம் தரும சாத்திரங்களிலும் வழக்கிலும் இன்மையானும் ஆரிய தரும நூல்கள் கூறும் உயர்பிறப் புரிமையுடைய இடை யிருவருணத்தார் தமிழகத்தென்று மில்லாமையானும், இவருரைகள் பொருந்தாமை யறிக. அன்றியும், தமிழிலக்கண நூல் "......... வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பில் நாற்பெயரெல்லை யகத்தவர் வழங்கும் யாப்பின் வழியது" எனத் தொல்காப்பியர் தாமும் "வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்து வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடி, செந்தமிழியற்கை சிவணிய நிலத் தொடுமுந்து நூல் கண்டு முறைப்பட எண்ணிப் புலந்தொகுத் தேனே ......... தொல்காப்பியன்" எனத் தொல்காப்பியரின் பாயிரமும் வற்புறுத்துவதானும், இங்குத் தொல்காப்பியரின் சூத்திரங்கள் குறிப்பன எல்லாம் ஆரியவருண அறங்களை யல்ல. தமிழ் மரபும் தமிழர் வழக்கங்களுமே யாமென்பது தோற்றம், இவ்வுண்மைகள் இனிவருஞ் சூத்திரங்களுக்கும் ஒக்கும்.

(20)

## சிவலிங்கனார்

அகன்ஐந்திணைப் பாடல்களில் வரும் தலைவன் தலை வியர்ப் பெயர்கள் அவர்தம் இயற் பெயர்களாற் சுட்டிக்கூறப் பெறா என்று இவ்வியலின் இறுதியில் ஆசிரியர் கூறுவர். அப்படியானால் அவர்கள் எப்பெயரால் கூறப்படுவர் என்பதற்கு விடையாக இச்சூத்திரம் அமைந்தது.

நிலத்தின் அடிப்படையிலும் நிலத்தில் ஆற்றும் தொழிலின் அடிப்படையிலும் அப்பெயர்கள் அமையும். அப்பெயர்கள் திணைதொறும் மரீஇய திணை நிலைப்பெயர்களாம்.

திணைதொறும் மரீஇய திணை நிலைப்பெயர் என்பதைத் திணைதொறும் மரீஇய பெயர் என்றுப் திணைநிலைப் பெயர் என்றும் இரண்டாகக் கொண்டு திணைதொறும் மரீஇய பெய ராவது குலப்பெயர்; அதற்குதாரணம் குன்றவர் என்றும் திணை நிலைப்பெயராவது உரிப்பொருளுக்கேற்பவரும் பெயர்

அதற்கு உதாரணம் வெற்பன் என்றும் பாகுபடுத்திக்காட்டுவர் நச்சினார்க்கினியர். அப்பெயர் இரண்டும் நிலத்தினடிப்படையி லும் வரும். இளம்பூரணர் திணைதொறு மரீஇய திணைநிலைப் பெயர் என்பதை ஒரு பெயராகவே கொண்டு அது நிலப்பெயராக வும் வினைப்பெயராகவும் வரும் என்பர்.

செய்யுளில் வரும் ஐந்திணைத் தலைவர் பெயர் எவ்வாறு வரும் என்பதை ஆசிரியர் அடுத்து வரும் சூத்திரத்திற்குறிப்பர்.

23. ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்
ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே (23)

ஆ.மொ.இ ல.

'Ayar' (shephered) and 'Vettuvar' (Hunter)
are the male names of the region
among whom there are chiefs.

இளம்பூரணர்

23. ஆயர் வேட்டுவர்......உளரே

இது, நிறுத்தமுறையானே[1] முல்லைக்குரிய மக்கட்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஆடூஉ திணைப்பெயர் ஆயர் வேட்டுவர் - ஆண் மக்களைப் பற்றி வரும் திணைப்பெயர் ஆயர் எனவும் வேட்டுவர் எனவும் வரும், அ வயின் வரும் கிழவரும் உளர் - அவ்விடத்து வரும் கிழவரும்[2] உளர்.

ஆயர் என்பார் நிரை மேய்ப்பார். வேட்டுவர் என்பவர் வேட்டைத் தொழில் செய்வார். அஃது[3] எயினர் என்னும் குலப்

1. 'மாயோன்மேய' (3) என்பதில் முல்லையை முதலில் நிறுத்த முறை.

2. கிழவர் - திணைக்குரிய தலைமக்கள்

3. அஃது - வேட்டுவர் என்பது.

பெயருடையார் மேல் தொழிற் பெயராகி வந்தது.[4] ''வந்தது கொண்டு வாராதது முடித்தல்'' (மரபு - 112) என்பதனான்[5] ஆய்ச்சியர் எனவும் கொள்க. அவ்விருதிறத்தாரும்[6] காடு பற்றி வாழ்தலின் அந்நிலத்தின் மக்களாயினார். அவ்வயின் வரூஉம் கிழவர் இருவகையர். அந்நிலத்தை ஆட்சி பெற்றோரும், அந் நிலத்து உளளோரும் என. 'குறும்பொறை நாடன்' என்பது போல்வன ஆட்சி பற்றி வரும். 'பொதுவன், ஆயன், என்பன குலம் பற்றி வரும்.* (23)

## நச்சினார்க்கினியர்

### 21. ஆயர் வேட்டுவ..... முளரே

இது முன்னர்த் திணைதொறுமரீஇய பெயருடையோரிலுந் திணை நிலைப்பெயராகிய தலைமக்களாய் வழங்குவாரும் உள ரென முல்லைக்குங் குறிஞ்சிக்கும் எய்தாததெய்துவித்தது

இதன் பொருள் : ஆடூஉத் திணைப்பெயர் - முற்கூரிய ஆண் மக்களாகிய திணைதொறு மரீஇய பெயர்களுள், ஆயர் வேட்டுவர் வரூஉங் கிழவரும் உளர் - ஆயரிலும் வேட்டுவரிலும் வருங் கிழ வரும் உளர், ஆவயின் - அவ்விடத்து வருந் தலைவியரும் உளர் என்றவாறு

ஆயர் வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்தோதினா ரேனும் ஒன்றென முடித்தலான் அந்நிலங்கட்கு உரிய ஏனைப் பெயர்களான் வருவனவுங் கொள்க [1]

---

4 எயினர் பாலை நிலப்பெயர் இவர் கூறியது தவறு.

5. வந்தது ஆண்பாற் பெயர்; வாராதது பெண்பாற் பெயர்

6. நிலப் பெயர், தொழிற் பெயர் உடையார். ஆயர் நிலப் பெயர் என்பதும் வேட்டுவர் தொழிற் பெயர் என்பதும் இவர் கருத்து.

* இச்சூத்திரம் முல்லை நிலம் பற்றியது என்பது இளம் பூரணர் கருத்து. நச்சினார்க்கினியர் முல்லை குறிஞ்சி நிலங்கள் பற்றியது என்பர்

1. முன் சூத்திரத்தில் இவர் காட்டிய உதாரணங்களிற் காண்க.

"தீம்பால் கறந்த கலமாற்றிக் கன்றெல்லாந்
தாம்பிற் பிணித்து மனைநிறீஇ யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப் பாங்கரு
முல்லையுந் தாய பாட்டங்காற் றோழிநம்
புல்லினத் தாயர் மகளிரோ டெல்லா
மொருங்கு விளையாட வவ்வழி வந்த
குறுந்தம்பூங் கண்ணிப் பொதுவன் மற் றென்னை
முற்றிழை யேஎர் மடநல்லாய் நீயாடுஞ்
சிற்றில் புனைகோ சிறிதென்றா னெல்லாநீ
பெற்றேய்யா மென்று பிறர்செய்த வில்லிருப்பாய்
கற்ற திலைமன்ற காணென்றேன் முற்றிழாய்
தாதுசூழ் கூந்தற் றகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினைக்கென்றா னெல்லாநீ
யேதிலார் தந்தபூக் கொள்வாய் நனிமிகப்
பேதையை மன்ற பெரிதென்றேன் மாதரா
யைய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேற்
றொய்யி லெழுதுகோ மற்றென்றான் யாம்பிறர்
செய்புற நோக்கி யிருத்துமோ நீபெரிது
மையலை மாதோ விடுகென்றேன் றையலாய்
சொல்லிய வாறெல்லா மாறுமா றியான்பெயர்ப்ப
வல்லாந்தான் போலப் பெயர்ந்தா வைனைநீ
யாயர் மகளி ரியல்புரைத் தெந்தையும்
யாயு மறிய வுரைத்தீயின் யானுற்ற
நோயுங் களைகுவை மன்" (கலி - 111)

"ஆயர் மகளையுங் காதலை கைம்மிக
ஞாயையு மஞ்சுதி யாயி னரிதரோ
நீயுற்ற நோய்க்கு மருந்து." (கலி - 107)

"தோழிநாம்
காணாமை யுண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணாது சென்று நடுங்க வுரைத்தாங்குக்
கரந்ததூஉங் கையொடு கோட்பட்டாங் கண்டாய்நம்
புல்லினத் தாயர் மகன். (கலி - 115)

என்றாற் போல்வன பிறவும் வருவன கொள்க.[2]

2. பொதுவன் என்பது முல்லை நிலத்தலைமகன் பெயர் ஆயர் மகன் ஆயர் மகள் என்பன ஆயர் என்னும் முல்லை நிலமக்களின் பெயரிலிருந்து வந்த தலை மக்கள் பெயர். இதுபற்றிச் சிவலிங்கனார் விளக்கம் பார்க்க.

இன்னும் 'ஏனலு மிறங்குகதி ரிறுத்தன' என்னும் அகப் பாட்டினுள் 'வானிணப் புகவிற் கானவர் தங்கை' எனவும் 'மெய்யீற்றீரா' என்பதனுள் 'வேட்டுவற் பெறலோடமைந்தனை) எனவும் வருவனவும் பிறவுங் கொள்க. வேட்டு என்னுந் தொழி லுடையானை வேட்டுவனென்றலிற் குறிப்பு வினைப்பெயர்.

''குன்றக் குறவன் காதன் மடமகள்
வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி
வளையள் முளைவா ளெயிற்ற
ளிளைய ளாயினு மாரணங் கினளே.'' (ஐங்குறு - 256

இது வருத்தும் பருவத்தளல்லள் என்ற தோழிக்குக் கூறியது. இப்பத்தினுள் 'குறவன்......மகள்' எனக் கூறுவன பல பாட்டுக் கள் உள; அவையுங் கொள்க. இவ்வாற்றான் இந்நிலத்து மக்கள் பெயரும் பெற்றாம். ஏனைய பெயர்களில் வந்த னவுளவேற் கொள்க.

பாரதியார்

**21 ஆயர்.........உளரே**

கருத்து :- இது மேற்சூத்திரத்திற் கூறிய திணை நிலைப் பெயர் வகைகளும் அப்பெயருடையாரின் அகத்திணைக்குரி மையும் விளக்குகிறது.

பொருள்;- ஆயர் வேட்டுபவர் ஆடூஉத்திணைப் பெயர்- ஆயர் வேட்டுபவர் என்பன ஆண்பால் சுட்டும் முல்லை நில மக்களின் திணைநிலப் பெயர்களாம்; ஆவயின் வருஉம் கிழவரும் உளரே – அந்நிலத்து அகத்திணைக்குரிமை கொள்பவரும் உளராம்.

குறிப்பு :— ஈற்றேகாரம் அசைநிலை.

ஆயர் என்பது முல்லை நில மக்களுக்குத் திணைப் பெயராகும் அதுவேபோல், வேட்டுவர் என்பதும் முல்லை நில மக்கட் பெய ரென்று இளம்பூரணரும், குறிஞ்சி நில மக்கட் பெயரென்று நச்சினார்க்கினியரும் கூறுவர். இவருள் இளம்பூரணர் கூற்றுப் பொருட் சிறப்புடையது ''மாயோன் மேய'' என்னும் முன் 5 ஆஞ் சூத்திரத்தில் திணை நிலங்களில் முதலில் வைத்தெண்ணிய

முல்லை நில மக்களுக்குரிய பெயர்களுள் ஆயரென்னும் நிலப் பெயரும் வேட்டுவரென்னும் வி னைப் பெயரும் அந்நிலத்தான் மக்களின் திணைப் பெயர்களாக இச்சூத்திரத்தில் தொல்காப்பியர் எடுத்துக் காட்டினாரெனக் கொள்வதே – 'பெயரும் வினையு' மென்னும் மேற்சூத்திரக் கருத்தை விளக்குதற்கு அடைவுபட அமைவதாகும். வேட்டுவரென்பது முல்லைத் திணை மக்களின் 'வேட்டு' வினை சுட்டுந் திணைப் பெயராகும். அதனால், இந் நூலார் மேலே "திணை நிலைப் பெயர் பெயரும் வினையுமென்றா யிருவகைய" எனத்தொகுத்துக் கூறியதை இச்சூத்திரத்தில் வகுத்து மெய்ந்நிறுத்து விளக்கினார்.

இதில் திணைப்பெயரென்றும், இதற்குமுன்னும் பின்னும் வரும் சூத்திரங்களில் திணை நிலைப்பெயரென்றும் வருவன அக வொழுக்கத்துக் குரிமை கொள்வார் பெயரையே குறிக்கும். அக் காலத் தமிழ் மரபுக்கும், உண்மை யுலகியல் வழக்குக்கு மேற்பத் தமிழ் மக்களெல்லாம் அகத்திணைத் துறைகளில் காதற்றலை மக்களாதற்குரியர் என்பதை இந்நூலார் இங்குப் பல சூத்திரங் களாற் றெளிக்கின்றார். நாடாட்சிக்குரியரே அகத்திணைக் கிளவித் தலை மக்கள் ஆவதற்குரியர் போலவும், அல்லாத நானில மக்களும் வினைவலர் அடியார் முதலாயினாரும் அன் பினைந்திணைத்துறைகளில் கிளவித் தலைவர் ஆகார் போலவும், பொருள் படுமாறு இச்சூத்திரங்களுக்குப் பிறர் கூறுமுறை பொருந் தாது. 'தலை மக்கள்' என்பது ஈண்டு அகத்திணைக் கிளவித் தலைமக்களையே குறிக்கும்; நாடாட்சித் தலைமை குறிப்பது ஈண்டைக்கு வேண்டப்படா.

பரத்தி ஒருத்தி, "நியமமூதூர்க் கடுந்தேர்ச் செல்வன் மகனின்" மெய்க்காதலை யிகழ்ந்து, யாம் "புலவுநாறுதும், செல நின்றீமோ; (கடலின்) பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை நும்மொடு புரைவதோ? அன்றே" என மறுப்பவள் தமக்கேற்ற தலைவர் தம்மினத்தவருள்ளுமுளர் என தெளித்து, "எம்மனோ ரிற் செம்மலுமுடைத்தே" (நற்-45) என விளக்கும் தருக்குரை தமிழர் எவரேனும் அகத்துறையிற் றலை மக்களுரிமையனைத்து முடையர் என்னுமுண்மையை வலியுறுத்துதல் காண்க. இன்னும் இதுபற்றி மேற்சூத்திர உரையிற் காட்டிய பாட்டுகளுடன் பின் வரும் பண்டைச் சான்றோர் செய்யுளடிகளாலும் தமிழரிடை நிலம், தொழில், நிலை, பிறப்பு வகைகளால் அகத்திணைக்குரிமை

யாருக்கும் விலக்கில்லையென்பது தெற்றெனா விளங்கும். "நெல்லும் உப்பும் நேரே யூரீர், கொள்ளீரோ வெனச்சேரி தோறும்" உப்புச் சுமந்து விற்றுத் திரியும் உமண்மகளைத் தலைவியாக்கி, அம்மூவனார் கூறிய அகம் 390-ஆம் பாட்டு இவ்வுண்மையை வலியுறுத்தும்.

"— — — — சாரற் சிறுகுடிக் குறவன் பெருந்தோட் குறு மகளைத்" தலைவியாக்கும் "மால்வரை" என்னும் கபிலர் குறும்பாட்டும், (குறுந் — 95)

"வரையகச் சிறுதினைச் செவ்வாய்ப் பாசினம் கடியும் கொடிச்சி"யைத் தலைமகளாக்கும் நற்றிணை—134—ஆம் பாட்டும்,

இன்னும் இதுவேபோல் பல பழம் பாட்டுகளும் பிறப்பாற் சிறப்பெதுமில்லாத ஆயர், குறவர், நுளையர் முதலிய யாரும் காதற்றலை மக்களாதற்குரியர் என்பதைத் தெளிவாக்கும் : —

1. "பாங்கரும் பாட்டங்காற் கன்றொடு செல்வோம்எம்
தாம்பி னொருதலை பற்றினை, ஈங்கெம்மை
முன்னைநின் றாங்கே விலக்கிய எல்லா !நீ
என்ஏ முற்றாய் ? விடு.
விடேன், தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டும்
கருவய நாகுபோ னோக்கிக் கொடுமையா
னீங்கிச் சினவுவாய் மற்று
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
கலத்தொடியாஞ் செல்வுழி நாடிப் புலத்தும்
வருவையா னானிலை நீ. (முல்லைக்கலி-16)

2. கடிகொள் ளிருங்காப்பிற் புல்லினத் தாயார்
மடிதொறும் நல்லாரை வேண்டுதி எல்லா !
இடுதேள் மருந்தோ நின் வேட்கை ? தொடுதரத்
துன்னித்தந் தாங்கே நகைகுறித் தெம்மைத்
திளைத்தற் கெளியமாக் கண்டை, அளைக்கெளியள்
வெண்ணெய்க்கும் அன்னளெனக் கொண்டாய் ;
ஆங்குநீ கூறி னனைத்தாக ; நீங்குக. [ஒண்ணுதால் !]
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
நின்றாய் நீ சென்றி, எமர் காண்பர் ; நாளைஎங்
கன்றொடு சேறும் புலத்து. (முல்லைக்கலி-10)

3\. யாரிவன் என்னை விலக்குவான் ? நீருளர்
பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்
கல்லாப் பொதுவனை ! நீமாறு, நின்னொடு
சொல்லல் ஓம்பென்றார் எமர்.''

(முல்லைக்கலி-12)

இவற்றால் முல்லை நிலத்தில் ஆயர் அகவொழுக்கத்தலை மக்களாதற் குரிய ரென்பது தெளிவு.

''சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்
கொலைவில் எயினர் தங்கை நின்முலைய
சுணங்கென நினைதி நீயே ;
அணங்கென நினையுமென் னணங்குறு நெஞ்சே''

(ஐங்குறு-363)

என்னும் ஐங்குறு நூற்றுப்பாட்டால், முல்லை நிலத்தில் வேட்டுவத் தொழிலுடைய எயினர் தங்கை தலைமகளாதலறிக.

இனி, ''என்னுள் வருதியோ நன்னடைக்கொடிச்சி'' என்னும் நற்றிணை 82-ஆம் பாட்டில் வரும் அம்மள்ளனார் செய்யுளடியும்,

''உறுகழை நிவப்பிற் சிறுகுடிப் பெயரும்
கொடிச்சி செல்புறம் நோக்கி
விடுத்த நெஞ்சம் விடலொல் லாதே''

என்னும் நற்றிணை 204-ஆம் பாட்டில் மள்ளனார் கூறும் அடிகளும் குறிஞ்சிக்குறத்தி தலைமகளாதற்கு மேற்கோள். அவ்வாறே,

''மீனெறி பரதவர் மடமகள்
மானமர் நோக்கங் காணாவூங்கே.''

என்னும் வெள்ளியந்தின்னனார் நற்றிணை 101—ஆம் பாட்டடிகளும்,

''முடிமுதிர் பரதவர் மடமொழிக் குறுமகள்
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
கொலை வெஞ் சிறாஅர் பாற்பட் டனளே''.

என்னும் நற்றிணை 207—ஆம் பாட்டடிகளும் நெய்தற் பரத்தி தலை மகளாதற்கு மேற்கோளாம்.

இவ்வாறு, தமிழருள் யாரும் காதற்றலை மக்களாய் அகத் திணைக்கு உரிமைகொள்வர் என்பதைச் சுட்டுதற்காகவே 'ஆவயின் வரூஉங் கிழவரு முளரே' என்று இதில் இந்நூலார் அமைவு பெறக்கூறித் தெளியவைத்தார்.

''பெருநீர் விளையுளெஞ் சிறுநல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ அன்றே;
எம்ம னோரிற் செம்மலு முடைத்தே''
என்று (நற்றிணை-45)

'உணக்கல் வேண்டி யினப்புள்ளோப்பும் புலவு நாறும்' பரதவர் மகளை கிளவித்தலைவியாக் கூறும் நற்றிணையடி களானும் இவ்வுண்மையறிக.

## சிவலிங்கனார்

முன் சூத்திரத்தில் பாடலுள் பயிலும் பெயர்கள் கூறினார் இச்சூத்திரத்துள் அவை பயிலுமாறு கூறுகின்றார்.

திணைதொறும் மரீஇய திணை நிலைப்பெயர் முல்லைக்கு ஆயர் என்பது; அப்பெயர் முல்லைத் திணைப் பாடலில் ஆளப்படுவதோடு அப்பெயரால்வரும் ஆயர்மகன் (ஆயர் மகள்) என்பது முல்லைத் திணைத்தலை மக்கள் பெயராக ஆளப்படும் என்பது இச்சூத்திரப் பொருளாக இளம்பூரணர் கூறினார் எனவே முல்லை நில மக்கள் பெயர் ஆயர் என்பது பொதுமக்கள் பெயராகவும், அதனால் வரும் ஆயர்மகன் ஆயர்மகள் என்பன உரிப்பொருள் தலைமக்கள் பெயராகவும் பொதுவன் என்னும் நிலப்பெயர் அப்படியே உரிப்பொருள் தலைமக்கள் பெயராகவும் பாடலில் பயின்று வரும் என்பது இளம்பூரணர் கருத்து என்பது புலப்படும்.

இது நச்சினார்க்கினியர் கருத்தும் ஆம்; எனினும் இச் சூத்திரத்துக்குப் பொருள் கூறும் முறையில் மாறுபடுவர்.

ஆயர் வேட்டுவர் என்னும் திணைதொறும் மரீஇய பெயரி லிருந்து திணைநிலைப்பெயர் (உரிப்பொருள் தலைவர் பெயர்) (அதாவது கிளவித்தலைவர் பெயர்) கூறப்படும் என்பர். அதற்கேற்ப அவர் இச்சூத்திரத்தை,

"ஆடூஉத் திணைப்பெயர் ஆயர் வேட்டுவர்
வரூஉம் கிழவரும் உளர் ஆவயின் வரும்
கிழவியரும் உளர்"

எனக் கொண்டு கூட்டித் திணைப்பெயர் என்பதற்குத் திணை தொறும் மரீஇய பெயர் எனக்கூறி, திணைதொறும் மரீஇய பெயராகிய ஆயர் வேட்டுவர் என்பதிலிருந்து திணைக்கு உரிமை யுடைய பெயராகிய ஆயர்மகன் வேட்டுவர் தலைவன் போலும், திணை நிலைப்பெயர் (கிளவித் தலைவர் பெயர்) முல்லை குறிஞ்சி களுக்கு வரும் எனப்பொருள் கூறினார்.

இளம்பூரணர் திணைதொறு மரீஇய பெயரிலிருந்து திணை நிலைப்பெயர் வரும் என்று கூறவில்லை. கருத்து வகையால் இருவரும் ஒருவரே. பாரதியார் விளக்கங்களும் இக்கருத்துள் அமையும்.

முன் சூத்திரத்தும் இச்சூத்திரத்தும் கூறப்பட்டவற்றிலிருந்து, பாடலில், நிலப்பெயரும், தொழிற் பெயரும் உரிப் பொருட் பெயராகிய திணைநிலைப் பெயரும் (கிளவித்தலைவர் பெயரும்) ஆகிய மூன்று பெயர்கள் ஆளப்படும் என்பது புலனாம். கிளவித் தலைவர் பெயர் பொதுவன் சிலம்பன் போலும் நிலச் சிறப்புப் பெயராலும் ஆயன் வேட்டுவன் போலும் தொழிற் சிறப்புப் பெயராலும் ஆயர் மகன் குறவர் மகன் போலும் பொதுப்பெயரடி யாக வரும் பெயராலும் ஆளப்படும் என்பதும் புலனாம்.

**24. ஏனோர் மருங்கினும்[1] எண்ணுங் காலை
ஆனா வகைய திணைநிலைப் பெயரே (24)**

ஆ. மொ. இல.

Among others also, if we examine, there may be found the names of region.

## இளம்பூரணர்

ஏனோர் மருங்கினும்..........பெயரே.

இது, குறிஞ்சி முதலாய திணைக்கண் வரும் திணைநிலைப் பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. பாங்கினும் — பாடம்.

(இ-ள்) ஏனோர் மருங்கினும் எண்ணும் காலை - ஏனை நிலத்துள்ள மக்கண்மாட்டும் ஆராயுங் காலத்து, ஆன் அ வகைய திணை நிலைப்பெயர் - அவ்விடத்து அவ்வகைய திணை நிலைப்பெயர்.

என்றது, திணைதொறும் குலப்பெயரும் தொழிற் பெயரும் கிழவர் பெயரும் வரும் என்றவாறு[1]. ஆன் என்பது அவ்விடம்; அ என்னும் சுட்டு நீண்டிசைத்தது. அவை வருமாறு :-குறிஞ்சிக்கு மக்கட்பெயர் குறவன் குறத்தி என்பன தலை மக்கட்பெயர்: மலைநாடன் வெற்பன் என்பன பாலைக்கு மக்கட்பெயர்; எயினர் எயிற்றியர் என்பன; தலைமக்கட்பெயர், மீளி விடலை என்பன. மருதத்திற்கு மக்கட்பெயர்; உழவர் உழத்தியர் என்பன; தலைமக்கட்பெயர் ஊரன் மகிழ்நன் என்பன நெய்தற்கு மக்கட்பெயர், நுளையர் நுளைச்சியர் என்பன; தலைமக்கட் பெயர் சேர்ப்பன் துறைவன் கொண்கன் என்பன. பிறவும் அன்ன.

"கைக்கிளை முதலா" (அகத்-1) என்னும் சூத்திரம் முதலாக இத்துணையும் கூறப்பட்டது, நடுவணைந்திணை நிலத்தானும் காலத்தானும் கருப்பொருளானும் உரிப்பொருளானும் நிலமக்க ளானும் தலைமக்களானும் வரும் எனவும், அவை இலக்கண நெறியானும் வழக்குநெறியானும்[2] வரும் எனவும், கைக்கிளை பெருந்திணை உரிப்பொருளான் வரும் எனவும், அகத்திணை ஏழிற்கும் இலக்கணம் ஓதியவாறு.

உதாரணம்

முல்லைத் திணைக்குச் செய்யுள்

"முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு
பைங்காற் கொன்றை மென்பிணி அவிழ
இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்
பரலவல் அடைய இரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்பக்
கருவி வானம் கதமுறை சிதறிக்

---

1. இத்தொடர் முன் இரு சூத்திரங்களாற் பெறப்பட்ட தெளிந்த கருத்தாகும்.
2. வழக்கு—நாடக வழக்கு, உலகியல் வழக்கு

கார்செய் தன்றே கவின்பெறு கானம்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்த் தன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்
உவக்காண் தோன்றும் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவின் உறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத்து அமன்ற காந்தள்
போதவிழ் அலரின் நாறும்
ஆய்தொடி அரிவைநின் மாணலம் படர்ந்தே''.
(அகம் - 4)

இதனுள், முல்லைக்கு உரித்தாகிய நிலமும் காலமும் கருப் பொருளும், இருத்தலாகிய உரிப்பொருளும் வந்தவாறு கண்டு கொள்க.[3]

''இல்லொடு மிடைந்த கொல்லை முல்லைப்
பல்லான் கோவலர் பையுள் ஆம்பல்
புலம்புகொள் மாலை கேட்டொறும்
கலங்குங்கொல் அளியற்றாங் காதலோளே.''

என்பதும் அது.[4]

''திருநகர் விளங்கு மாசில் கற்பின்
அரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு
நின்னுடைக் கேண்மை யென்னோ முல்லை
இரும்பல் கூந்தல் நாற்றமும்
முருந்தேர் வெண்பல் ஒளியுநீ பெறவே''.

---

3. கவின் பெறுகானம் நிலம் ; கார்செய்தன்று பொழுது முல்லை கருப்பொருள் 'மாண் வினைத் தோன் குறும் பொறை நாடன் நின் நலம் படர்ந்து தோன்றும் உவக்காண்' என்பது உரிப்பொருள்.

4. இல்லொடு மிடைந்த கொல்லை - நிலம், முல்லை- கருப்பொருள், மாலை பொழுது காதலோள் கலங்குவள் கொல்—உரிப்பொருள்.

இது, முதற்பொருள் வாராது கருப்பொருளானும் உரிப்பொருளானும் முல்லையாயினவாறு.[5]

"கரந்தை விரைஇய தண்ணறுங் கண்ணி
இளையர்ஏல் இயங்குபரி கடைஇப்
பகைமுனை வலிக்குந் தேரொடு
வினைமுடித் தனர்நங் காத லோரே."

இது, முதலும் கருவும் இன்றி உரிப்பொருளான் முல்லையாயிற்று[6].

"கதிர்கை யாக வாங்கி ஞாயிறு
பைதறத் தெறுதலின் பயங்கரந்து மாறி
விடுவாய்ப் பட்ட வியங்கண் மாநிலம்
காடுகவின் எதிரக் கனைபெயல் பொழிதலின்
பொறிவரி யினவண் டார்ப்பப் பலவுடன்
நறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற
வெறியேன் றன்றே வீகமழ் கானம்
எவன்கொல் மற்றவர் நிலையென மயங்கி
இகுபனி உறைகுங் கண்ணோ டினைபாங்கு
இன்னாது உறைவி தொன்னலம் பெறூஉம்
இதுநற் காலம் காண்டிசின் பகைவர்
மதில்முகம் முருக்கிய தொடிசிதை மருப்பிற்
கந்துகால் ஒசிக்கும் யானை
வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறினே."

((அகம் - 164)

இது, பிரிதற் பகுதியாகிய பாசறைப் புலம்பல் எனினும் நிலம் பற்றி முல்லையாயிற்று.[7]

---

5. முல்லை—கருப்பொருள். 'கற்பின் மாயோளொடு நின் கேண்மை என்னோ' — உரிப்பொருள் — கற்பாவது ஆற்றியிருத்தல்.

6. நம் காதலர் வினை முடித்தனர்; வருவர் அதுவரை ஆற்றுக என்பது உரிப்பொருள்.

7 பாசறையில் தலைவன் தலைவியை நினைந்து 'வேந்தன் வினை நிகழ்ந்து முற்றுப்பெறின் இக்காலம் துன்பத்தோடு உறையும் தலைவியின் துயர் துடைத்தற்குரிய தாகும்; அது நிகழவில்லையே எனப் புலம்புதல் பாலை. கனைபெயல் பொழிதலின்...வெறியேன்றன்று கானம்' என்பது காடு பற்றியது.

"மலிதிரை யூர்ந்துதண் மண்கடல் வெளவலின்" (கலி. முல்லை 4) என்னும் முல்லைக்கலி, புணர்தற் பொருண்மைத் தாயினும் முல்லைக்குரிய கருப்பொருளான் வருதலின் முல்லை யாயிற்று. பிறவும் அன்ன.

குறிஞ்சித் திணைக்குச் செய்யுள்

"விடிந்த ஞாலம் கவின்பெறத் தலைஇ
இடிந்த வாய எவ்வங் கூர
நிலமலி தண்துளி தவிராது புலந்தாய்
நீர்மலி கடாஅம் செருக்கிக் கார்மலைந்து
கனைபெயல் பொழிந்த நள்என் யாமத்து
மண்புரை மாகணம் விலங்கிய நெறிய
மலைஇ மணந்த மயங்கரி லாரலிற்
நிலைபொலிந் திலங்கு வைவே லேந்தி
இரும்பிடி புணர்ந்த செம்மல் பலவுடன்
பெருங்களிற்றுத் தொழுதியோ டெண்குநிரை இரிய
நிரம்பா நெடுவரை தத்திக் குரம்பமைந்து
ஈண்டுபயில் எறும்பின் இழிதரும் அருவிக்
குண்டுநீர் மறுசுழி நீந்தி ஒண்தொடி
அலமரல் மழைக்கண் நல்லோள் பண்புநயந்து
சுரன்முத லாரிடை நீந்தித் தந்தை
வளமனை ஒருசிறை நின்றனே மாகத்
தலைமனைப் படலைத் தண்கமழ் நறுந் தாது
ஊதுவண் டிமிரிசை யுணர்ந்தனள் சீறடி
அரிச்சிலம் படக்கிச் சேக்கையின் இயலிச்
செறிநிலை நல்லில் எறிகத வுயவிக்
காவலர் மடிபத நோக்கி ஓவியர்
பொறிசெய் பாவையி னறிவுதளர் பொல்கி
அளக்க ரன்ன வாரிருள் துமிய

விளக்குநிமிர் பனைய மின்னிப் பாம்பு
படவரைச் சிமையக் கழலுறு மேறோ
டிணைப்பெய லின்னலங் கங்குலும் வருபவோவென்றுதன்
மெல்விரல் சேப்ப நொடியின ணல்யாழ்
வடிவுறு நரம்பிற் றீவிய மிழற்றித்
திருகுபு முயங்கி யோளே வென்வேற்
களிறுகெழு தானைக் கழறொடி மலையன்

ஒளிறுநீ ரடுக்கங் கவைஇய காந்தள்
மணங்கமழ் முள்ளூர் மீமிசை
அணங்குகடி கொண்ட மலரினும் கமழ்ந்தே.''

இது, முதலும் கருவும் புணர்தலாகிய உரிப்பொருளும் வந்த குறிஞ்சிப் பாட்டு.[8]

''நறைபடர் சாந்தம் அறவெறிந்து நாளால்
உறையெதிர்ந்து வித்திய ஊழ் ஏனற் - பிறையெதிர்ந்து
தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
ஏமரை போந்தன வீண்டு.'' (திணைமாலை நூற்-1)

இது முதற்பொருள் இன்றிக் கருப்பொருளும், உரிப்பொருளும் வந்தமையாற் குறிஞ்சித் திணையாயிற்று.[9]

''முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே.''

இஃது உரிப்பொருள் ஒன்றுமே வந்த குறிஞ்சிப்பாட்டு.[10]

''பருவ மென்தினை பாலும் பெய்தன
கருவிரற் கிள்ளை கடியவும் போகா
பசுமூ தந்திக் கடைவன வாடப்
பாசிப் பக்கப் பனிநீர்ப் பைஞ்சுனை
விரியிதழ்க் குவளை போல வில்லிட்டு
எரிசுடர் விசும்பின் ஏறெழுந்து முழங்கக்

---

8. கனைபெயல் பொழிந்த நள்ளென்யாமம் என்றதால் கூதிரும் யாமமுமாகிய பொழுது முதற் பொருள் வன மலை நில முதற் பொருள் கருவி எண்கு (கரடி) கருப்பொருள் 'தீவியமிழற்றி முயங்கியோள்' என்பது புணர்தல் உரிப்பொருள்.

9. சாந்தம்ஏனல் கருப்பொருள் அம்பு பாய்ந்த மரை (மான் ஈண்டு போந்தன காணீரோ என்பது புணர்தல் நிமித்த மான கெடுதி வினாதல் என்னும் உரிப்பொருள்

10. தலைவி பருவம் வாய்ந்தவள் எனும் புணர்தல் நிமித்த மான உரிப்பொருள்.

குன்றுபனி கொள்ளுஞ் சாரல்
இன்றுகொல் தோழி அவர்சென்ற நாட்டே.''

இஃது இருத்தற் பொருண்மைக்கண் வந்ததேனும், முதற் பொருளானும் கருப்பொருளானும் குறிஞ்சியாயிற்று.[11]

''வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்பி னல்லது—கோடா
எழிலு முலையும் இரண்டிற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து.''

(திணைமாலைநூற்—15)

இது கற்பிற் புணர்வு ; பொருளாற் குறிஞ்சியாயிற்று[12].

''படாஅ தோழி யெங்கண்ணே கொடுவரி
கொன்முரண் யானை கனவு
நன்மலை நாடன் நசையி னானே.''

இஃது இரங்கற்பொருண்மையேனும் முதற்பொருளானும் கருப் பொருளானும் குறிஞ்சியாயிற்று[13]. பிறவும் அன்ன.

பாலைத்திணைக்குச் செய்யுள்.

''அறியாய் வாழி தோழி இருளற
விசும்புடன் விளக்கும் விரைசெலல் திகிரிக்
கடுங்கதிர் எறித்த விடுவாய் நிறைய

---

11. 'அவர் சென்ற நாட்டில் குன்றுபனி படரும் சாரல் இன்று சொல் எனத்தலைவி கூறி ஆற்றியிருப்பது முல்லை யுரிப்பொருள். குன்று சாரல் குறிஞ்சி முதற் பொருள். தினை, கிளி சுனை குறிஞ்சிக் கருப்பொருள்.

12. தோழி அறத்தொடு நின்றது. தலைவியைத் தலை வனுக்கு மணம் செய்து கொடுக்க எனக்களவை வெளிப் படுத்தலின் களவொழுக்கத்தின் பாற்பட்டதாயினும் கற்பாகும். களவுவெளிப்பாடே கற்பாகும் ஆதலின். பொருள் என்ற அறத்தொடு நிற்றலாகிய உரிப்பொருள்.

13. 'மலைநாடனை விரும்பியதால் என் கண்கள் துயிலா' எனத்தலைவி கூறியிரங்குதலின் நெய்தற்குரிய இரங்கல் உரிப்பொருளாயினும் புலி யானைகளால் கருப் பொருளும் மலைநாடன் என்பதால் நில முதற்பொருளும் வந்தனவாம்.

நெடுங்கால் முருங்கை வெண்பூத் தாஅய்
நீரற வறந்த நிரம்பா நீளிடை
வள்ளெயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு
கள்ளியங் காட்ட கடத்திடை உழிஞ்சில்
உள்ளூன் வாடிய சுரிமூக்கு நொள்ளை
பொரியரை புதைத்த புலம்புகொள் இயவின்
விழுத்தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோர்
எழுத்துடை நடுகல் இன்னிழல் வதியும்
அருஞ்சுரக் கவலை நீந்தி யென்றும்
இல்லோர்க் கில்லென் றியைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்
பொருளே காதலர் காதல்
அருளே காதலர் என்றி நீயே.'' (அகம்—53)

இதனுள் பாலைக்குரிய முதற்பொருளும் கருப்பொருளும் பிரிவும் வந்தவாறு கண்டு கொள்க[14]

வளங்கெழு திருநகர்ப் பந்துசிறி தெறியினும்
இளந்துணை யாமொடு கழங்குடன் ஆடினும்
உயங்கின் றன்னையென் மெய்யென் றசைஇ
மயங்குவியர் பொறித்த நுதலள் தண்ணென
முயங்கினள் வதியு மன்னே இனியே
தொடிமாண் சுற்றமும் எம்மும் உள்ளாள்
நெடுமொழி தந்தை அருங்கடி நீவி
நொதும லாளன் நெஞ்சுறப் பெற்றவென்
சிறுமுதுக் குறைவி சிலம்பார் சீறடி
வல்லகொல் செல்லத் தாமே கல்லென
ஊரெழுந் தன்ன உருகெழு செலவின்
நீரில் அத்தத் தாரிடை மடுத்த

---

14. நீரறவிறந்த நீளிடைஎனவும் கள்ளியங்காடு எனவும் வந்தமையால் பாலை நிலமும், விசும்பில் விளங்கும் ஞாயிற்றின் கடுங்கதிர் தெறுதலின் என வந்ததால் முதுவேனிற்பொழுதும் ஆகிய முதற்பொருளும், செந்நாய், முருங்கை உழிஞ்சில் கள்ளி என்பனவற்றால் பாலைக் கருப்பொருளும் பொருள்வயிற் பிரிவாகிய உரிப்பொருளும் காண்க.

கொடுங்கோல் உமணர் பகடுதெழி தெள்விளி
நெடும் பெருங் குன்றத் திமிழ்கொள வியம்புங்
கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கல்
பெருங்களி றுரிஞ்சிய மண்ணரை யாஅத்து
அருஞ்சுரக் கவலை அதர்படு மருங்கின்
நீழரை இலவத் தூழ்கழி பன்மலர்
விழவுத் தசைக்கொண்ட பழவிறன் மூதூர்
நெய்யுமிழ் சுடரிற் கால்பொரச் சில்கி
வைகுறு மீனில் தோன்றும்
மைபடு மால்வரை விளங்கிய சுரனே.'' (அகம்-17)

இஃது உடன்போக்கின்கண் வந்தது.[15]

''நாளு நாளு மாள்வினை யழுங்க
இல்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழெனா
ஒண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி நீயே.'' (சிற்றட்டகம்)

இது பிரிவுப் பொருளாற் பாலையாயிற்று.[16]

''உயர்கரைக், கானியாற் றவிரறல் அகன்றுறை
வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரன் மகளே

---

15 நீரில் அத்தத்து ஆரிடை, அருஞ்சுரக் கவலை சுரன் என வந்தன நிலமுதற் பொருளையும் கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கல் என வந்தது. முதுவேனிலாகிய பொழுது முதற் பொருளையும், கதிர் திருகிய வேய் யாமரம் ஆகிய கருப்பொருளையும், 'பந்தாடினும் கழங் காடினும் உடம்பு வருந்திற்று என்று கூறித் தாயுடன் அணையும் மென்மையுடைய மகள், தந்தை காவலையும் நீங்கி அயலான் ஒருவனுடன் சுரத்தில் நடக்க வல்லமை யுடையளோ' எனத் தாய் கூறலின் உடன் போக்காகிய உரிப் பொருளும் காண்க.

16. முதற்பொருளும் கருப்பொருளும் இன்றிப் பிரிவு உரிப் பொருளாற் பாலையாயிற்று

கண்ணினுங் கதவநின் முலையே
முலையினுங் கதவநின் தடமென் தோளே''.

(ஐங்குறு, 361)

இது புணர்தற் பொருளாயினும் கருப்பொருளாற் பாலையாயிற்று[17]

''சிலைவிற் பகழிச் செந்துவராடை'' (ஐங்குறு 363) என்னும் பாட்டினுள் ''கொலைவி லெயினர் தங்கை'' எனப் புணர்தற் பொருண்மை வந்ததாயினும் பாலைக்குரிய மக்கட்பெயர் கூறுதலிற் பாலையாயிற்று. பிறவும் அன்ன.

மருதத்திணைக்குச் செய்யுள்

''சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து
கூர்முள் மேலி கோட்டின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமலர் ஆரும் ஊர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்று
உரையிறந் தொளிருந் தாழிருங் கூந்தல்
பிறரும் ஒருத்தியை எம்மனைத் தந்து
வதுவை அயர்ந்தனை யென்ப அஃதியாங்
கூறேம் வாழியர் எந்தை செறுநர்
களிறுடை யருஞ்சமந் ததைய நூறும்
ஒளிறுவாள் தானைக் கொற்கைச் செழியன்
பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎன்
ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க
சென்றீ பெருமநின் தகைக்குநர் யாரே.''. (அகம்-46)

இதனுள் மருதத்திற்கு ஓதிய நிலனும் பொழுதும் கருப்பொருளும் ஊடற் பொருண்மையும் வந்தன. ''தாமரை வண்டூது பனிமல

---

17. கான்யாற்று அவிரறல் அகன்துறை என்றது பாலைக் கருப்பொருள் பின்னுள்ளன. புணர்ச்சியின் மகிழ்தல் உரிப்பொருள்.

ராகுமூர'' என்றமையான் வைகறை வந்தமை அறிக[18].

"பூங்கொடி மருங்கின் எங்கை கேண்மை
முன்னும் பின்னும் ஆகி
இன்னும் பாணன் எம்வயி னானே."

இஃது உரிப்பொருளால் மருதமாயிற்று.

"ஒரே ஆயம் அறிய ஊரன்
நல்கினன் தந்த நறும்பூந் தண்தழை
மாறுபடின் எவனோ தோழி வீறுசிறந்து
நெடுமொழி விளங்குந் தொல்குடி
வடுநாம் படுதல் அஞ்சுதும் எனவே."

இது புணர்தற் பொருண்மையேனும், திணைநிலைப் பெயரால் மருதமாயிற்று.[19] பிறவும் அன்ன.

நெய்தல் திணைக்குச் செய்யுள்

"கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
அசைவண் டார்க்கும் அல்குறு காலைத்
தாழை தளரத் தூங்கி மாலை
அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறுபு இனையத்
துயரஞ் செய்துநம் அருளா ராயினும்
அறாஅ லியரோ வவருடைக் கேண்மை
அளியின் மையின் அவணுறை முனைஇ
வாரற்க தில்ல தோழி கழனி

---

18. "ஊர! ஒருத்தியைத் தந்து எம்மனையில் வதுவை அயர்ந்தனை என்று யாம் கூறேம். நின்னைப் புலக்க யாங்கள் யார்" என்றலின் ஊடலாகிய உரிப்பொருளும் வேற்றுநிலை, நீர்முதிர்பழனம் என்றலின் கருப்பொருளும் வண்டு ஊதும் தாமரையாகிய பனிபலர் என்றதால் தாமரை விரிய வண்டு ஊதுவது வைகறையில் ஆதலின் வைகறைச் சிறுபொழுதும் காண்க.

19. ஊரன் என்பது மருதநிலக் கிளவித் தலைவன் பெயர். அதனால் இச்செய்யுள் மருதமாயிற்று.

வெண்ணெல் லரிஞர் பின்றைத் ததும்புந்
தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
அகமடற் சேக்குந் துறைவன்
இன்துயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே'' (அகம் 40)

இது முதலும் கருவும் இரங்குதற் பொருண்மையும் வந்த நெய்தற் பாட்டு.[20]

''அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பூசல் வாயாப் புலம்புனைக் கலங்கி
ஏதின் மாக்களும் நோவர் தோழி
என்றும் நோவார் இல்லைத்
தெண்கடற் சேர்ப்பன் உண்டவென் நலக்கே.''

இது திணைநிலைப்பெயரானும் [21]இரங்கற்பொருண்மையானும் நெய்தலாயிற்று.

''கங்குலும் பகலுங் கலந்துக ஒன்றி
வன்புறை சொல்லி நீந்தோர்
அன்புறு செய்தி உடையரோ மற்றே.''

இஃது இரங்கற்பொருண்மையான் நெய்தலாயிற்று.

''சுறவுப்பிறழ் இருங்கழி நீந்தி வைகலும்
இரவுக்குறிக் கொண்கலும் வந்தனன்
விரவுமணிக் கொடும்பூண் விளங்கிழை யோயே.''
(சிற்றடக்கம்)

---

20. கானல் பெருங்கடல் எனநில முதற்பொருளும் கழிப்பூ புன்னைமீன் எனக்கருப் பொருளும், காண்க. துறைவன் என நெய்தல் திணை நிலைப் பெயர்காண்க. துறைவன் மார்பிற் சென்ற என் நெஞ்சம். அவர் நம்மைத் துயரம் செய்து அருளாராயினும் அவர்பால் கொண்ட கேண்மை அறாதாகுக; அவரிடம் இரக்கம் இன்மை கண்டு மீண்டு வராததாகுக'' என இரங்குதல் உரிப்பொருள்.

21. சேர்ப்பன் - நெய்தல் திணை நிலைப் பெயர்.

இது,புணர்தற்பொருளாயினும் நிலத்தான் [22]நெய்தலாயிற்று.

"கோட்டக மலர்ந்த கொழுங்கொடி அடம்பின்
நற்றுறை அணிநீர்ச் சேர்ப்பஇப்
பொற்றொடி அரிவையைப் போற்றினை அளிமே."

இது பாலைக்குரித்தாகிய பிரிவு நிமித்தமாயினும் நிலத்தான் நெய்தலாயிற்று.

## நச்சினார்க்கினியர்

**22. ஏனோர் பாங்கினு......பெயரே.**

இது முல்லையுங் குறிஞ்சியும் ஒழிந்தவற்றுள் திணை தொறு மரீஇய பெயருடையோரிலுந் திணைநிலைப் பெயராகிய தலை மக்களாய் வழங்குவாரும் உளரென எய்தாத தெய்துவித்தது.

இதன் பொருள் :- ஏனோர் பாங்கினுந் திணைநிலைப் பெயர் எண்ணுங் காலை ஒழிந்த பாலைக்கும் நெய்தற்கும்[1] உரிய ராகக் கூறிய மக்கள் கூற்றினும் வருந் தலைமக்கள் பெயரை ஆராயுங் காலத்து, ஆனாவகைய-அவை பெருும் பான்மையாகிய கூறுபாட்டினையுடைய என்றவாறு.

உதாரணம் :—

சிலைவிற் பகழிச் செந்துவ ராடைக்
கொலைவி லெயினர் தங்கைநின் முலைய
சுணங்கென நினைதி நீயே
யணங்கென நினையுமென் னணங்குறு நெஞ்சே"
(ஐங்குறு-363)

---

22. சுறவுப்பிறழ் இருங்கழி என நெய்தல் நிலம் வந்ததால்.

23. அணி நீர்ச்சேர்ப்பு என்பதால் நெய்தல்நிலம். சேர்ப்ப என்பதால் திணைநிலைப் பெயரும் அடம்பு என்னும் கொடியால் கருப்பொருளும் காண்க. நிலத்தானும் கருப் பொருளானும் என்றிருப்பின் நன்று.

1. மருதம் விடுபட்டது. காரணம் பின்னர்க் கூறுவர்.

இவ்வைங்குறுநூறு உடன் போகின்றான் நலம்பாராட்டிய கூற்றாயு[2].

"முளவுமா வல்சி யெயினர் தங்கை
யிளமா வெயிற்றிக்கு நின்னிலை யறியச்
சொல்லினே னிரக்கு மளவை
வென்வேல் விடலை விரையா தீமே". (ஐங்குறு-364)

இவ் வைங்குறுநூறு கொண்டுடன் போங் காலத்திற்குக் கொண்டுடன் போக்கு ஒருப்படுத்துவ லென்றது

"கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பு
நலமா ணெயிற்றி போலப் பலமிக
நன்னல நயவர வுடையை
யென்னோற் றனையோ மாவீன் றளிரே." (ஐங்குறு 365)

இவ் வைங்குறுநூறு வரைவிடை வைத்துப் போகின்றான் மாவினை நோக்கிக் கூறியது. ஏனைப்பெயர்க்கண் வருவன வந்துழிக் காண்க.

"முற்றா மஞ்சட் பசும்புறங் கடுப்பச்
சுற்றிய பிணர சூழ்கழி யிறவின்
கணங்கொள் குப்பை யுணங்குதிற நோக்கிப்
புன்னையங் கொழுநிழன் முன்னுய்த்துப் பரப்புந்
துறைநனி யிருந்த பாக்கமு முறைநனி
யினிதும னளிதோ தானே துனிதுறந்
தகன்ற வல்கு லைதமை நுசுப்பின்
மீனெறி பரதவர் மடமகள்[3]
மானேர் நோக்கங் காணா வூங்கே" (நற்றினை 101)

---

2. எயினன் எயிற்றி எனப்பாலைத் திணை நிலைப் பெயர்கள் வந்தன.

3. பரதவர் மடமகள் திணை நிலைப்பெயர் (நெய்தல்)

இது வரைதற் பொருட்டுத் தலைவி வேறுபாட்டிற்கு ஆற்றாத தோழி சிறைப்புறமாகக் கூறியது.

"அறிகரி பொய்த்த லான்றோர்க் கில்லைக்
குறுக லோம்புமின் சிறுகுடிச் செலவே
யிதற்கிது மாண்ட தென்னா ததற்பட்
டாண்டொழிந் தன்றே மாண்டகை நெஞ்ச
மயிற்க ணன்ன மாண்முடிப் பாவை
நுண்வலைப் பரதவர் மடமகள்[3]
கண்வலைப் படூஉங் கான லானே." (குறுந்-184)

இது கழறிய பாங்கற்குக் கூறியது.

"கடுந்தே ரேறியுங் காலிற் சென்றுங்

என்னினை யுங்கொல் பரதவர் மகளே." (நற்றிணை-349)
இது நற்றிணை.

'இவளே, கான ணண்ணிய' என்னும் நற்றிணைப் பாட்டினுள், 'கடுந்தேர்ச் செல்வன் காதன் மகனே' என்றது அருமை செய்தயர்த்தலின் அவனை இகழ்ச்சிக்குறிப்பால் தலைமையாகக் கூறினாள். ஏனைப் பெண் பெயர்க்கண்[4] வருவனவும் வந்துழிக் காண்க.

'ஏனோர் பாங்கினும்' எனப் பொதுப்படக்கூறிய அதனான் மருத நிலத்து மக்களுள் தலைமக்கள் உளராகப் புலனெறி வழக்கஞ் செய்த செய்யுட்கள் வந்தன உளவேற் கண்டு கொள்க[5].

---

3. பரதவர் மடமகள்—நெய்தல் திணைநிலைப்பெயர்.

4. நுளைச்சியர் போல்வன.

5. இதனால்தான் உரையில் ஏனோர் என்பதற்கு மருதத்தை விட்டுப் பாலை நெய்தல் என இரண்டே கூறினார்.

பாரதியார்

22. ஏனோர்...... பெயரே

கருத்து:- இது, மேற்சூத்திரத்திற் கூறிய முல்லை நிலம் ஒழியப். பிறநில மக்களின் திணை நிலைப் பெயர்களும் அவ்வாறே யமையும் என்பது கூறுகின்றது.

பொருள் :- எண்ணுங்காலை - ஆராயும் பொழுது; ஏனோர் மருங்கினும் - (மேற்கூறிய ஆயர் வேட்டுவ ரென்னும் முல்லை நில மக்கள் தவிரப்) பிறநில மக்கள் பாலும்; திணை நிலைப் பெயர் ஆனா வகைய - அவர்க்குரிய அகத்திணைக்குரிப் பெயர்கள் சுருங்கக் கூறியமையாப் பல திறப்பட்டனவாகும்.

குறிப்பு ;- ஈற்றேகாரம் அசை. ஏனோர்மருங்கினும் என்ப திலும்மை முன் ஆயர் வேட்டுவரொப்ப அவரல்லாப் பிறநில மக்க ளிடத்தும் என்னும் பொருட்டாதலால், எச்சவும்மையாகும்.

நிலம் பற்றியும் தொழில் பற்றியும் தமிழ்மக்கள் கொள்ளும் பெயர் பலவாதலானும், அவ்வாறு வேறுபடும் பெயர்க்குரியார் யாவரும் அகப்பகுதியில் எல்லாத் திணைகளிலும் கிழவராதற் குரியராதலானும், திணைக்குரிய அன்னோர் பெயர்கள் கூறிய மையா ஆதலின் 'ஆனாவகைய திணை நிலைப்பெயர், என்று இங்குக் கூறப்பட்டது.

இப்பெயர் வகைகளைப் ''பெயரும் வினையு'' மென்னும் முன் சூத்திரத்தின் கீழ் நச்சினார்க்கினியர் கூறுமுரைக் குறிப்புக்களா னோராங்கறிக.

மேற்சூத்திரத்தில் முல்லை நில மக்கள் தலைமக்களாதல் கூறப்பட்டது. அந்நிலத்துப் பெயர்ப்பெயருடைய ஆயரும் வினைப் பெயருடைய வேடரும் தலைமக்களாய குறிப்புடைய பழைய பாட்டுக்களுமாங்கே காட்டினோம், இனி, முல்லை யொழிந்த மற்றைய மூன்று நிலமக்களு மவ்வாறே காதற்றலை மக்களாவர் என இச்சூத்திரம் கூறுதலால், அதற்குச் செய்யுள் வருமாறு.

(1) குறிஞ்சிநில மக்கள் தலைமக்களாதற்கு

(அ) "யானை யுழலு மணிகிழர் நீள்வரைக்
கானக வாழ்க்கைக் குறவர் மகளிரேம் ;
எனலு ளைய வரவுமற் றென்னைக்கொல் ?
காணினுங் காய்வ ரெமர்." (திணைமொழி-6)

இதில், கானக்குறத்தி தலைவியாவதைக் காண்பாம்.

(ஆ)" குன்றக் குறவன் காதல் மடமகள்" (ஐங்குறு-256)
எனுங் கபிலர் குறுநூற்றாடியுமது.

குறத்தியர் தலைமகளிராகச் சுட்டும் பிற பாட்டுக்களை மேலே குறித்தோம்.

எனும் குறும்பாட்டில் நுண்வலைப் பரதவர் மடமகள் தலை மகளாதலறிக.

இன்னும்,

(ஆ) "பெருங்கடல் வெண்சங்கு காரணமாப் பேணா
திருங்கடன் மூழ்குவார் தங்கை-இருங்கடலுன்
முத்தன்ன வெண்முறுவல் கண்டுருகி நைவார்க்கே
ஒத்தனம் யாமே யுளம்"
(திணைமாலை நூற்றைம்பது-33)

எனும் திணைமாலை வெண்பாவிலும் சங்கு குளிப்பாரின் தங்கை தலைமகளாவதறிக.

(3) (அ) மருதநில மக்கள் தலைவராதலை,

(அ) "தொண்டி யன்ன என்னலந் தந்து
கொண்டனை சென்மோ மகிழ்ந நினசூளே."
(குறுந்-238)

எனுங்குன்றியன் குறும்பாட்டிற் காண்க.

அன்றியும்

(ஆ) மேகந்தோய் சாந்தம் விசைதிமிசு கா··கி
னாகந்தோய் நாக மெனவிவற்றைப்-போக
எறிந்துழுவார் தங்கை யிருந்தடங்கண் கண்டு
மறிந்துழல்வா னோவிம் மலை"
(28 திணைமாலை-150)

எனும் வெண்பாவில் நிலந்திருத்தி உழுவாரின் பெண் தலை மகளாதலறிக.

**25 அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்[1]**
**கடிவரை யில்புறத்து என்மனார் புலவர் (25)**

ஆ.மொ.இல.

The scholars say that having heroes among servents and officials is not prevented in literature dealing with 'Puram' (matter other than true love).

## இளம்பூரணர்

**25. அடியோர் பாங்கினும்..........புலவர்.**

இது நடுவணைந் திணைக்குரிய தலைமக்களைக் கூறி அதன் புறத்தவாகிய கைக்கிளை பெருந்திணைக்குரிய மக்களை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும் - அடித்தொழில் செய்வார் பக்கத்தினும் வினை செய்வார் பக்கத்தினும், கடிவரைஇல கடிந்து நீக்கும் நிலமையில்லை, புறத்து என்மனார் புலவர் - ஐந்திணைப் புறத்தவாகிய கைக்கிளை பெருந்திணைக் கண் என்று சொல்வர் புலவர்.

'புணர்தல் முதலான பொருள்' என்பது அதிகாரத்தான் வந்தது. 'வினை செய்வார்' என்பதனுல் அடியரல்லாதார் என்பது கொள்க. அகத்திணை கு உரியரல்லரோ வெனின், அகத்திணையாவன அறத்தின் வழாமலும் பொருளின் வழாமலும் இன்பத்தின் வழாமலும் இயலல் வேண்டும் ; அவையெல்லாம் பிறர்க்கு குற்றேவல் செய்வார்க்குச் செய்தல் அரிதாகலானும், அவர் நாணுக்குறைபாடுடைய ராகலானும், குறிப்பறியாது வேட்கை வழியே சாரக் கருதுவராகலானும், இன்பம் இனிது

1. வினைவல பாங்கினும் - நச். பாடம்.

நடத்துவார் பிறரேவல் செய்யாதார் என்பதனுனும் இவர் புறப் பொருட்குரியராயினார் என்க எனவே, இவ்வெழுவகைத் திணையும் அகம் புறம் என இருவகையாயின.

"என்றோற் றனைகொல்லோ,
நீருள் நிழல்போல் நுடங்கிய மென்சாயல்
ஈங்குருச் சுருங்கி
இயலுவாய் நின்னொடு உசாவுவென் நின்றீத்தை;

அன்னையோ, காண்டகை இல்லாக் குறள்நாழிப் போழ்தினான்
ஆண்டலைக் கீன்ற பறழ்மகனே நீயெம்மை
வேண்டுவல் என்று விலக்கினை நின்போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று;

மாண்ட எறித்த படைபோல் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன நிறையோரால் என்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய் பொறீஇ நிறுக்கல்லேன்
நீநல்கின் உண்டென் னுயிர்;

குறிப்புக்காண் வல்லுப் பலகை யெடுத்து நிறுத்தன்ன
கல்லாக் குறள கடும்பகல் வந்தெம்மை
இல்லத்து வாவென மெய்கொளீஇ எல்லாநின்
பெண்டிர் உளர்மன்னோ கூறு;

நல்லாய்சேள் உலகத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லின் நெஞ்சூன்றும் புறம்புல்லின்
அக்குளுத்துப் புல்லலும் ஆற்றேன் அருளீமோ
பக்கத்துப் புல்லச்சிறிது:

போசீத்தை மக்கண் முரியேநீ மாறினித் தொக்க
மரக் கோட்டஞ் சேர்ந்தெழுந்த பூங்கொடிபோல
நிரப்பமில் யாக்கை தழீஇயின ரெம்மைப்
புரப்பே மென் பாரும் பலராற் பரத்தையன்
பக்கத்துப் புல்லீமா யென்னுமாற் றொக்க
உழுந்தினுந் துவ்வாக் குறுவட்டா நின்னின்
இழிந்ததோ கூனின் பிறப்பு:

கழிந்தாங்கே, யாம்வீழ்து மென்றுதன் பின்செலவு முற்றீயாக்
கூனி குழையுங் குழைவுகாண் ;

யாமை, எடுத்து நிறுத்தற்றாற் றோளிரண்டும் வீசி,
யாம்வேண்டே மென்று விலக்கவு மெம்வீழுங்
காமர் நடக்கு நடைகாண் கவர்கணைச்
சாமனார் தம்முன் செலவு காண்க.

ஓ ஒகாண், நம்மு ணுகுதற் றொடீஇயர் நம்முணாம்
உசாவுவங் கோனடிதொட் டேன் ;

ஆங்காக சாயலின் மார்ப அடங்கினேன் ஏ ஏ
பேயும் பேயும் துள்ள லுறுமெனக்
கோயிலுட் கண்டார் நகாஅமை வேண்டுவல்
தண்டாத் தகடுருவ வேறாகக் காவின்கீழ்
போதர் அகடாரப் புல்லி முயங்குவேம்
துகடீர்பு காட்சி அவையத்தார் ஓலை
முகடுகாப்பு யாத்துவிட் டாங்கு.''
(கலி - மரு - 29)

இதனுள் ஒருவரையொருவர் இழித்துக் கூறினமையான் அடியார் என்பதூஉம் மிக்க காமத்தின்[1] வேறுபட்டு வருதலாற் பெருந்திணைப்பாற்படும் என்பதூஉம் கண்டுகொள்க. இது தானே கைக்கிளைக்கும் உதாரணமாம். வினைவலர்மாட்டு வருவன வந்தவழிக் கண்டுகொள்க. (55)

## நச்சினார்க்கினியர்

**23. அடியோர் பாங்கினும்......புலவர்.**

இது, மேல் நால்வகை நிலத்து மக்களுந் தலைமக்களாகப் பெறுவரென்றார், அவரேயன்றி இவருந் தலைமக்களாகுப கைக்கிளை பெருந்திணைக்க ணென்கின்றது.

இதன் பொருள் :- அடியோர் பாங்கினும் - பிறர்க்குக் குற்றேவல் செய்வோரிடத்தும், வினைவலர் பாங்கினும் - பிறர் ஏவிய தொழிலைச் செய்தல் வல்லோரிடத்தும், கடி வரையில்

1. மிக்ககாமம் - மேல்பட்டகாமம். அதாவது ஐந்திணைக் காமம். அதனின் வேறுபட்டு வரும் காமம் பெருந் திணைப்பாற்படும்.

புறத்து என்மனார் புலவர் - தலைமக்களாக நாட்டிச் செய்யுட் செய்தல் நீக்கப்படாது நடுவணைந்திணைப் புறத்து நின்ற கைக்கிளை பெருந்திணைகளுள் என்றவாறு.

கூன்பாட்டினுள்[2]
''நம்மு ணகுதற் றொடீஇயர் நம்முணா
முசாவுவங் கோனடி தொட்டான்.''
எனவும்,

''பேயும் பேயுந் துள்ள லுறுமெனக்
கோயிலுட் கண்டார் நகாமை வேண்டுவல்'' (கலி - 94)

எனவும் பெருந்திணைக்கண் அடியோர் தலைவராக வந்தது. என்னை? கோன் அடிதொட்டேன் என்றமையானுங் கோயில் என்றமையானும்[3] இவர்கள் குற்றேவன்மாக்களாயிற்று.

'ஏ எ யிஃதொத்தன்' என்னும் குறிஞ்சிக் கலியுள்,
''போற்றாய் களைநின் முதுக்குறைமை போற்றிக்கேள்
வேட்டார்க் கினிதாயி னல்லதை நீர்க்கினிதென்
றுண்பவோ நீருண் பவர்.'' (கலி - 62)

தீயகாமம் இழிந்தோர்க்குரிமையின், இதுவும் அடியோர் தலைவராக வந்த கைக்கிளை. ''அடியோர்' எனவே இருபாற் றலை மக்களும் அடங்கிற்று. 'கடிவரையில' என்றதனான் அவருட் பரத்தையரும் ஊரென்று கொள்க.

'இகல்வேந்தன்' என்னும் முல்லைக் கலியுள்,
''மேயு நிறைமுன்னர்க் கோலூன்றி நின்றாயோ
ராயனை யல்லை பிறவொ வமரருண்
ஞாயிற்றுப் புத்தேண் மகள்.'' (கலி-108)

என்பதனால் தலைவன் வினைவல பாங்கனாயினவாறு காண்க. இதனுள்,

---

2. கூனும் குறளும் உறழ்ந்து கூறுவதாக வந்த பாடல்.

3. கோயில்

"புனத்துளா னெந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ
வினத்துளா னெந்தைக்குக் கலத்தொடு செல்வதோ
தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ"

என்றவழி எமரேவலான் யாஞ் செய்வதன்றி யாங்கள் ஏவ நின்னெஞ்சம் இத்தொழில்கள்[4] செய்கின்றனவில்லை என்றலின் வினைவல பாங்கினளாய தலைவி கூற்றாயிற்று.

'யாரிவன்' என்னும் முல்லைக்கலியுள்,
"வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல்
வழங்க லறிவா ருரையாரே லெம்மை
யிகந்தாரே யன்றோ வெமர்." (கலி-112)

இதுவும் வினைவல பாங்கினளாய தலைவியை நோக்கி அத்தலைவன் கூறினது.

"நலமிக நந்திய" என்னும் முல்லைக்கலியுள்,
"பல்கால்யாங் கான்யாற் றவிர்மணற் றண்பொழி
வல்க லகலறை யாயமொ டாடி
முல்லை குருந்தொடு முச்சிவேய்ந் தெல்லை
யிரவுற்ற தின்னுங் கழிப்பி யரவுற்
றுருமி னதிருங் குரல்போற் பொருமுர
ணல்லேறு நாகுட னின்றன
பல்லா னினநிரை நாமுடன் செலற்கே". (கலி-113)

இது தாழ்த்துப் போதற்குத் தலைமையின்றிக் கடிதிற் போகல் வேண்டு மென்றமையானும், நல்லேறும் நாகும் போல நாமுங் கூடப்போகல் வேண்டு மென்றமையானும், தலைவன் வினைவல பாங்கின னாயிற் றென்க. வினைவல்லா னென்னாது

---

4. புனத்துள்ளானாகிய என் ஐக்கு உணவு கொண்டு கொடுப்பதும் தம் கூட்டத்துள்ள எந்தந்தைக்குக் கலத்தில் உணவு கொண்டு கொடுப்பதும் அன்னை போகவிட்ட கன்றுகளைத் தினைக்கால்களில் மேய்ப்பதும் ஆகிய தொழில்கள்.

பாங்கி னென்றதனால் தமரேவல் செய்வது பெறுதும். இஃது அவ்வந்நிலத்து இழிந்தோர்க்கு எஞ்ஞான்றுந் தொழிலேயாய் நிகழுமென்றும், புனங்காவலும் படுபுள்ளோப்புதலும் இவ்வாறன்றி உயர்ந்தோர் விளையாட்டாகி இயற்கைப் புணர்ச்சிப் பின்னர்ச் சின்னாளிற் றவிர்வரென்றும் வேறுபாடுணர்க. இக்கூறிய இருதிறத்தோருந்[5] தமக்குரிய ரன்மையான் அறம் பொருளின்பம் வழாமை நிகழ்த்துதல் அவர்க்குரிதென்பது பற்றி இவற்றை அகப்புறமென்றார்.

## பாரதியார்

### 23. அடியோர்...............புலவர்

கருத்து :— இஃது, மேற்கூறியாங்கு நானில மக்களே யன்றிப் பிற ஏழை மக்களும் அகத்திணைக் குரிமை கொள்வார் என்று கூறுகிறது.

பொருள் :— புறத்து -மேற்கூறிய நானிலமக்களின் திணை பெயர் வகுப்புக்களிலடங்காத; அடியோர் பாங்கினும் - பிறர்க் கடிமையாவாரிடத்தும் ; வினைவலர் பாங்கினும் - அடிமையரல் லாக் கம்மியர் போன்ற தொழிலாளர் இடத்தும் ; கடிவரையில அகத்திணை யொழுக்கங்கடை நாட்டிச் செய்யுட் செய்தல் விலக்கில்லை ; என்மனார் புலவர் - என்பார் பொருள் நூப் வல்லார்.

குறிப்பு :— ஈரிடத்தும், "பாங்கினும்" எனவரும் உம்மைகள் முன்னைச் சூத்திரங்கள் கூறுந்துணை மக்களொப்ப என இறந் தது தழீஇயும், பின்னர் 'ஏவன் மரபினேனோரும்' என்பது நோக்கி எதிரது தழீஇயும் வந்த எச்சவும்மைகளாம்.

ஈண்டுப் புறத்தென்பது, மேற்சூத்திரங்களில் கூறப்பட்ட நானில மக்கள் வகுப்புகளின் ஐந்திணைக்குப் புறத்தேயென பொருள் கொண்டு, பழையவுரைகாரர் இச்சூத்திரம் அடியோர் வினைவலர் போன்றவர்க்கு ஐந்திணை யொழுக்கம் உரித்தன் றெனவும், அவற்றின் புறத்தவான கைக்கிளை பெருந்திணைகளே

---

5. அடியோர், வினைவலர்

அத்திறத்தார்க்குரிய அகவொழுக்கங்களாமெனவும், கூறுவாராயினார் அவர் கூற்றுகள் சூத்திரச் சொற்றொடர்களுக்கு அமையாமையோடு முன்னுக்குப்பின் அவ்வுரையாளர் கூறுவனவற்றிற்கே மாறாக முரணுவதாலும், அவை பொருளன்மையறிக. இளம்பூரணர் இச்சூத்திரத்தின் கீழ், "இது, நடுவணைந்திணைக் குரிய தலைமக்களை (முன்) கூறி, அதன் புறத்தவாகிய கைக்கிளை பெருந்திணைக்குரிய மக்களை யுணர்த்துதல் நுதலிற்று" என்று குறிக்கின்றார். அன்பினைந் திணையான ஒத்தகாமம் மேற்கூறிய நானிலமக்களுக்கு மட்டும் அமையுமன்றி, இச்சூத்திரங்கூறும் அடியோர் வினைவலர்களுக்கு என்றும் இன்றென்பதே இளம்பூரணர் கருத்தென்பது ஈண்டவர் கூறுங் குறிப்பால் அறிகின்றோம். மேன்மக்களே என்றும் அன்பினைந் திணைக் குரியர், மற்றையோர் இழிதகவுடைய கைக்கிளை பெருந்திணைகளுக்கே உரியராவர் என்பதிவர் கருத்தாமேல் முன்முதற்சூத்திர உரையில், பிரமமுதல் தெய்வ மீறாக நான்கு மணமும் மேன்மக்கள் மாட்டு நிகழ்தலானும், இவை உலகினுள் பெருவழக்கெனப் பயின்று வருதலானும், அது பெருந்திணை யெனக் கூறப்பட்டது." என்றிவரே கூறுதல் முரணாகும். ஆனால் பெருந்திணை பெருவழக்கிற் றென்பதும், ஆண்டவர் கூறிப்போந்தார். அன்றியும், 'ஏவன் மரபின்' என்னும் அடுத்த சூத்திரத்தின் கீழ் "ஏவுதன் மரபையுடைய ஏனையோரும் கைக்கிளை பெருந்திணைக்குரியர்" என்றிவரே கூறுகின்றார் எனவே, இச்சூத்திரத்திற்கு முன்னும் பின்னும் இவ்வுரையாசிரியர் கைக்கிளை பெருந்திணைகளுக்கு மேன்மக்கள் பெரும்பாலும் தலைமக்களாதற்குரியர் என்று தம் கருத்தை வலியுறுத்துபவர், இச்சூத்திரத்தின் கீழ் அதற்கு மாறாகக் கீழ்மக்களே கைக்கிளை பெருந்திணைகளுக் குரியர் என்று கூறுவது மாறுகொளக் கூறலென்னுங் குற்றத்திற்கவரை யாளாக்குகிறது.

இவ்வாறே, நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற்குப் பொருள் கூறுவதும் பொருந்தாது. கைக்கிளை பெருந்திணைகளை ஆசிரியர் இவ்வியலின் இறுதியில் 50, 51-ஆம் சூத்திரங்களாக நிறுத்தி, அவற்றிற்கு முன்னெல்லாம் இச்சூத்திரத்திற்கு முன்னும் பின்னும் அன்பினைந்திணைப் பகுதிகளையே கூறிச் செல்வதால் இதில் அவர் கருத்து வேறுபாடு சுட்டப் பெறாத நிலையில் ஐந்திணைகளுக்கு வேறான கைக்கிளை பெருந்திணைகளை அவர் கூறுவதாகப் பொருள் காண முயல்வது அமைவுடையதா

காது. இனி கைக்கிளை, பெருந்திணை போலவே இழிதக வுடைய பொருந்தாக் காமம் என்று இவ்வுரையாளர் கருதுவ தால் ஈண்டுக் கூறப்படும் அடியோர் வினைவலராகிய மேன் மக்களல்லாதார் இழிதகவுடைய அப்பொருந்தாக் காமத்திற்கு உரியரென்று இவர்கள் பொருள் கூறுகின்றனர் போலும். தொல் காப்பியர் பெருந்திணையொன்றையே பொருந்தாக் காமமெனக் கூறி, கைக்கிளையைக் குற்றமற்ற ஒருதலைக் காதல் என வேறு படுத்தி விளக்குகின்றார். ஒரு தலைக் காதல் என வேறு விளக்குகின்றார். ஒரு தலைக் காதல் கைக்கிளை காதலித் தோரைக் காதலிக்கப்பட்டோரும் காதலித்தால், அது ஒத்த காமத்தின் பாலடங்கும். அவ்வாறன்றிக் காதலிக்கப்பட்டோர் பால் காதலின்மை தெளியப்பட்டால், ஆண்டது பெருந்திணையி லடங்கும். அவ்வாறடக்காமல், பொருந்தாக்காமமான பெருந் திணையும் ஒத்த காமமான அன்பினைந்திணையும் வெவ்வேறு கூறி, அவற்றின் வேறுபட்டதாய்க் கைக்கிளை அன்பொத்த இருதலைக் காமம் அன்றாயினும் அன்பற்ற பெருந்திணையுமா காமல், குற்றமற்ற ஒருதலைக் காமமாய் எல்லோர்பாலும், கடியப்படாத நல்லொழுக்கம் என்பதே தொல்காப்பியர் கருத் தென்பது தெளிவாகும். ''பாங்கரும் பாட்டங்காற் கன்றொடு செல்வேம்'' என்னும் முல்லைக்கலியும், ''என்னோற்றனை கொல்லோ'' என்னும் மருதக்கலியும், ''அணிமுகமதியேய்ப்ப'' என்னும் குறிஞ்சிக்கலியும் அடியோர் வினைவலர் அகத்திணைத் தலைமக்களாதற் குதாரணமாகும். அவை தலைமகளின் அன்பு டன்பாடு சுட்டலின், பெருந்திணையுங் கைக்கிளையுமாகா; இரு வரு மொத்த அன்புத் திணையேயாம்.

1. அடியார் அகப்பொருட்டலைவராதற்குச் செய்யுள் :
''என்னோற்றனை கொல்லோ'' (கலி-94)

என்னு மருதக்கலியில்,

ஒஓகாண், நம்முணகுதற் றொடீஇயர் நம்முண்,
நாமுசாஅம்; கோனடி தொட்டேன்;— ஆங்காக
சாயலின் மார்ப அடங்கினேன், ஏஎ
பேயும் பேயுந் துள்ள லுறுமெனக்
கோயிலுட் கண்டார் நகாமை வேண்டுவல்,
கண்டாய் தகடுருவ! வேறாகக் காவின்கீழ்

போதர கடாரப் புல்லி முயங்குவேம்''

(போதரகடாரப் போதரு + அகடார)

என வருவதால் தலைமக்கள். தம்முரியராகப் பிறரடியராதல் தெவிக.

2 இனி வினைவலர் தலைமக்களாதற்குச் செய்யுஇ:
''காராப் பெய்த கடிதொள்வியன் புலத்து''.

(கலி-109)

என்னு முல்லைக்கலியில், ''இவடான், திருந்தாச் சுமட்டினள், ஏனைத்தோள்வீசி வரிக்கூழை வட்டிதழீஇ, அரிக் குழையாடற் றகையள்'' என வருதலால், இதிற்றலை மக்கள் வினைவலராதறிக. இன்னும் ''கடிகொளிருங்காப்பில்'' (கலி-110) ''பாங்கரும் பாட்டங்கால்'' (கலி-116)

''யாரிவன் என்னை விலங்குவான்'' (கலி-112) என்னுங் கலிப் பாக்களும் வினைவலர் பாங்கினும் அகஒழுக்கம் கடிவரை யின்மை குறிப்பன வாகும்.

''பெருங்கட லுள்கலங்க நுண்வலைவீசி
ஒருங்குடன் தன்னைமார் தந்த- கொழுமீன்
உணங்கல் புள்ளோப்பும் ஒளியிழை மாதர்
அணங்காகு மாற்ற வெமக்கு''

(ஐந்திணை ஐம்பது-47)

எனு மாறன்பொறையனார் வெண்பாவும் வினைவலர் காத லுரிமை குறிப்பதறிக.

சிவலிங்கனார்

இச்சூத்திரம் ஐய வினா ஒன்றற்கு விடை கூறுகின்றது. பாடலுட் பயிலும் கிளவித் தலைமக்கள் ஆயர் வேட்டுவர் முதலியவரென்றி அடிமைத் தொழில் செய்பவரும் ஊரவர்க்குப் பொதுவாய் நின்று பொன் இரும்பு முதலிய தொழிலும் ஆடை தோய்த்தல் முதலிய தொழிலும் செய்யும் வினைவலரும் அதன் ஐந்திணைக்கு உரியராவரோ அல்லரோ எனும் ஐய வினாவுக்கு அவரும் ஆவர் என விடை கூறுகிறது

''அடிமைத் தொழில் செய்வார் பக்கத்தும் ஊர்க்குப்
பொதுவாய் நின்று ஊரவர்க்கு வேண்டிய

தொழில்களைச் செயவார் பக்கத்தும் இதுகாறும்
கூறிவந்த முதல்கரு உரிப்பொருள்களும்
கிளவித் தலைமக்கள் பெயரும் அகன்ஐந்
திணைக்குப் புறத்தேயாம் என நீக்கப்படா;
அகன்ஐந்திணைக்கு உரியவாகக்கொள்ளப்படும்''.

என்பது இச்சூத்திரப் பொருள் எனவே நான்கு நிலத்தும் வாழும் மக்கள் யாவரும் அகன்ஐந்திணைக்கும் உரியர் என்பதாம். அடுத்த சூத்திரமும் இதுபோல்வதே.

பாரதியார் கருத்து முற்றும் பொருந்தும்.

**26. ஏவல் மரபின் ஏனோரும் உரியர் ஆகிய நிலைமை யாவரும் அன்னர் (26)**

ஆ. மொ. இல.

Others who are in the position of commanding others are in a similar state.

## இளம்பூரணர்

**26. ஏவல் மரபின்......அன்னர்**

இதுவும், கைக்கிளை பெருந்திணைக்குரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஏவல் மரபின் ஏனோரும் உரியர் - ஏவுதல்[1] மரபை யுடைய ஏனையோரும்[2] உரியர்[3]; அவரும் ஆகிய நிலைமை அன்னர்-அவரும் உரியராகிய நிலையை அத்தன்மையராகலான்

அவருமாகிய நிலைமை என மொழி மாற்றுக. கைக்கிளை பெருந்திணை என்பது அதிகாரத்தான் வந்தது. இதனாற் சொல்லியது. தலை மக்களும் கைக்கிளை பெருந்திணைக்கு

---

1. ஏவுதல் அடியோரையும் வினைவலரையும் ஏவிக் கொள்ளுதல்.
2. ஏனையோர் - தலைமக்கள்
3. உரியர் - கைக்கிளை பெருந்திணைகளுக்கு உரியர்.

உரியவராவர் என்பதாம். உரியராயினவாறு அறம்பொருள் இன்பங்கள் வழுவ மகளிரைக் காதலித்தலான் என்றவாறாயிற்று.

''ஏஎ இஃதொத்தன் நாணிலன் தன்னொடு
மேவேமென் பாரையு மேவினன் கைப்பற்றும்
மே வினு மோவாக் கடையும அஃதெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினேன் எல்லா
தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று;
சுடர்த்தொடீ போற்றாய் களைநின் முதுக்குறைமை
போற்றிக்கேள்
வேட்டார்க் கினிதாயின் அல்லது நீர்க்கினிதென்
றுண்பவோ நீருண் பவர்;
செய்வ தறிகல்லேன் யாதுசெய் வேன்கொலோ
ஐவாய் அரவின் இடைப்பட்டு நைவாராம்
மையின் மதியின் விளங்கு முகத்தாரை
வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று;
அறனு மதுகண்டற் றாயிற் றிறனின்றிக்
கூறுஞ்சொற் கேளான் நலிதரும் பண்டுநாம்
வேறல்ல மென்பதான் றுண்டால் அவனொடு
மாறுண்டோ நெஞ்சே நமக்கு.'' (கலி - குறிஞ் - 26)

இதனுள் ''வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று'' எனவும் ''நீர்க்கினி தென்றுண்பவோ நீருண்பவர்'' எனவும் தலைமகள் கூறுதலானும், தலைமகள் முன்இழித் துரைத்தலானும், ஊடியுணர் வாள்போல உடன்பட்டமையானும், இஃது உயர்ந்தோர்மாட்டு வந்த கைக்கிளை[4]. பெருந்திணை வந்தவழிக் கண்டு கொள்க.

---

4. 'வெளவிக் கொளறும் அறன்' என்றதால் அறன் அறிந்த அறிவினன் தலைவன் எனக் கொண்டு உயர்ந்தோர் என்றார் போலும்

## நச்சினார்க்கினியர்

**24, ஏவன் மரபின் ......... மன்னர்**

இது முன்னர்ப் 'பெயரும் வினையும்' (20) என்பதனுள் திணைதொறுமரீஇய பெயருள் திணைநிலைப் பெயருமெனப் பகுத்த இரண்டனுள் திணைதொறுமரீஇய பெயருள் தலைவராதற் குரியாரை அதிகாரப்பட்டமையிற்கூறி, அங்ஙனந் தலைவராதற் குரிமையின் அடியோரையும் வினைவல பாங்கினோரையும் அதன் பிற்கூறி, பின்னர் நின்ற திணைநிலைப் பெயராதற்குச் சிறந்தார் அறுவகைய[1]ரெனப் பகுக்கின்றது.

இதன்பொருள் :- மரபின் - வேத நூலுட் கூறிய இலக்கணத் தானே, ஏவல் ஆகிய நிலைமை யவரும் - பிறரை ஏவிக்கொள்ளுந் தொழில் தமக்குளதாகிய தன்மையையுடைய அந்தணர் அரசர் வணிகரும், அன்னர் ஆகிய அவரும் - அம்மூவரையும் போலப் பிறரை ஏவிக்கொள்ளுந் தன்மையாகிய குறுநில மன்னரும் அரசாற் சிறப்புப் பெற்றோரும், ஏனோரும் - நால்வகை வருண மென்று எண்ணிய வகையினால் ஒழிந்துநின்ற வேளாளரும், உரியர் - உரிப்பொருட் டலைவராதற்கு உரியர் என்றவாறு.

ஆகிய என்பதனை ஏவலொடும் அன்னரொடுங் கூட்டுக. எனவே, திணைநிலைப் பெயர் அறுவகையாயிற்று 'வேந்து விடு தொழிலிற்... .....பொருளே' (637) என்பதனான் வேளாளரே அரசராற் சிறப்புச் செய்யப் பெறுவ ரென்றுணர்க. இனி 'வில்லும் வேலுங் களிறு...........முரிய' (639) என்பதனான் ஏனோருஞ் சிறுபான்மை சிறப்புப் பெறுவரென்றுணர்க. உரிப்பொருட் டலைவர் இவரேயாதலைத்[2] தான் மேற் பிரிவிற்குக் கூறுகின்ற வாற்றானும் உணர்க.

---

1. அறுவகையர் - அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் குறுநில மன்னர், அரசாற்சிறப்புப் பெற்றோர்.

2. உரிப்பொருட்டலைவர் இவரே எனக்கூறுவது ஆயர் வேட்டுவர் முதலியவாக முன்னர்க் கூறப்பட்ட திணை நிலைப் பெயர்களுக்கு மாறுபட்டிருத்தல் காண்க.

"தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ
மணங்கென வஞ்சுவர் சிறுகுடி யோரே" (கலி-52)
"ஈர்ந்த ணாடைய யெல்லி மாலையை"
எனவரும்[3].

"முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாக
ரினிதெனக் கணவ னுண்டலி
னுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே."
(குறுந் -167)

இது குறுந்தொகை: இது பார்பரனையும்[4] பார்ப்பனியையுந தலைவராகக் கூறியது. கடிமனைச் சென்ற செவிலி கூற்று. வாயினேர் வித்தலு மாம்.

"வருது மென்ற நாளும் பொய்த்தன
வரியே ருண்க ணீரு நில்லா
தண்கார்க் கீன்ற பைங்கொடி முல்லை
வைவாய் வான்முகை யவிழ்ந்த கோதை
பெய்வனப் பிழந்த கதுப்பு முள்ளா
ரருள்கண் மாறலோ மாறுக வந்தி
லறனஞ் சலரே யாயிழை நமரெனச்
சிறிய சொல்லிப் பெரிய புலம் பினும்

---

3. தாமரைக்கண்ணியும் தண் சாந்தும் ஈர்ந்தண் ஆடையுங் கண்டு இதில் கூறப்படும் தலைவன் அந்தணன் எனக் கொண்டார் போலும். இப்பாடலில் தரவில் கல்லுயர் நனத்சாரற் கலந்தியலும் நாட, என விளிவந்துள்ளமை யின் சாரல் நாடன் என்பதே தலைமகன் பெயராதலும் அப்பெயராதலும் அப்பெயர் அந்தணனைக் குறியாது ஆதலினாலும் இவர் கூற்று ஆராய வேண்டுவதாம்.

4. முளிதயிர் கொண்டு சுட்டதீம் புளிப்பாகர் அந்தணர்க்கே யுரிய சிறப்புணவு எனக்கொண்டதால் இது பார்ப் பனிக்குரியதாகக் கூறினார்.

பனிபடு நறுந்தார் குழைய நம்மொடு
துனிதீர் முயக்கம் பெற்றோள் போல
வுவக்கு நள் வாழிய நெஞ்சே விசும்பி
னேறெழுந்து முழங்கினு மாறெழுந்து சிலைக்குங்
கடாஅ யானை கொட்கும் பாசறைப்
போர்வேட் டெழுந்த மள்ளர் கையதைக்
கூர்வாட் குவிமுகஞ் சிதைய நூறி
மானடி மருங்கிற் பெயர்த்த குருதி
வான மீனின் வயின்வயி னிமைப்ப
வமரகத் தட்ட செல்வந்
தமர்விரைந் துரைப்பக் கேட்டு ஞான்றே."

(அகம்-144)

மீண்டவன் நெஞ்சிற்கு உரைப்பானாய்ப் பாதற்கு உரைத்தது.

இம் மணிமிடைபவளத்து வேந்தன் தலைவனாயினவாறும் தான் அமரகத்து அட்ட செல்வத்தையே மிக்கசெல்வமாகக் கருதுதற் குரியாள் அரசவருணத்திற் றலைவியே என்பதூஉம் உணர்க.

"பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகை கொண்ட செம்மனாம் வனப்பார விடுவதோ."

(கலி-31)

இதனுள் வேந்தன் தலைவனாயினவாறு. பகைகொண்ட தலைமையின் அழகை நுகர விரும்பினாள் என்றலிற் றலைவியும் அவ்வருணத்தாளாயவாறும் உணர்க "உலகுகிளர்ந்தன்ன" என்னும் அகப்பாட்டுள் வாணிகன் தலைவனாகவுங் கொள்ளக் கிடத்தலிற் றலைவியும் அவ்வருணத் தலைவியா மென்றுணர்க

"தடமருப் பெருமை மடநடைக் குழவி
தூண்டொறும் யாத்த காண்டகு நல்லிற்
கொடுங்குழை பெய்த செழுஞ்செய் பேதை
சிறுதாட் செறித்த மெல்விரல் சேப்ப
வாழை யீர்ந்தடி வல்லிதின் வகைஇப்
புகையுண் டமர்த்த கண்ண டகைப்பெறப்
பிறைநுதற் பொறித்த சிறுநுண் பல்வியர்
ரந்துகிற் றலையிற றுடையின னப்புலந்

தட்டிலோளே யம்மா வரிவை
யெமக்கே வழிகதில் விருந்தே சிவப்பான்று
சிறிய முள் ளெயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகங்காண் கம்மே.''

(நற்றிணை-120)

விருந்தொடு புக்கோன் கூற்று. செவிலி கூற்றுமாம். இந்நற்றிணை வாழையீர்ந்தடி வகைஇ என்றலின் வேளாண் வருணமாயிற்று

''மலைமிசைக் குலைஇய உருகெழு திருவில்
பணைமுழங் கெழிலி பௌவம் வாங்கித்
தாழ்பெயற் பெருநீர் வலனேர்பு வளைஇ
மாதிரம் புதைப்பப் பொழிதலின் காண்வர
இருநிலங் கவினிய வேமுறு காலை
நெருப்பின் அன்ன சிறுகட் பன்றி
அயிர்க்கண் படாஅர்த் துஞ்சுபுறம் புதைய
நறுவீ முல்லை நாண்மலர் உதிரும்
புறவடைந் திருந்த அருமுனை இயவில்
சீறூ ரோளே ஒண்ணுதல் யாமே
எரிபுரை பன்மலர் பிறழ வாங்கி
அறிஞர் யாத்த வலங்குதலை பெருஞ்சூடு
கள்ளார் வினைஞர் களந்தொறும் மறுகும்
தண்ணடை தழீஇய கொடிநுடங் காரெயில்
அருந்திறை கொடுப்பவுங் கொள்ளான் சினஞ்சிறந்து
வினைவயிற் பெயர்க்குந் தானைப்
புனைதார் வேந்தன் பாசறை யேமே''. (அகம்-84)

இது தூதுகண்டு வருந்திக் கூறியது இக்களிற்றியானை நிரையுட் டன்னூரும் அருமுனையியவிற் சீறூர் என்றலிற் றான் குறுநில மன்னனென்பது பெற்றாம்.

''அகலிருவிசும்பகம்'' என்னும் அகப்பாட்டும் பொருணோக்கினால் இதுவே யாமாறுணர்க.

''இருபெரு வேந்தர் மாறுகொள் வியன்களக்
தொருபடை கொண்டு வருபடை பெயர்க்குஞ்
செல்வ முடையோர்க்கு நின்றன்று விறலெனப்

பூக்கோள் ஏய தண்ணுமை விலக்கிச்
செல்வே மாதல் அறியாள் முல்லை
நேர்கால் முதுகொடி குழைப்ப நீர்சொரிந்து
காலை வானத்துக் கடுங்குரற் கொண்மூ
முழங்குதொறுங் கையற் றொடுங்கிருப் புலந்து
பழங்கண் கொண்ட பசலை மேனியள்
யாங்கா குவள்கொ றானே வேங்கை
ஊழுறு நறுவி கடுப்பக் கேழ்கொள
ஆகத் தரும்பிய மாசறு சுணங்கினள்
நன்மணல் வியலிடை நடந்த
சின்மெல் லொதுக்கின் மாஅ யோளே (அகம்-174)

இது மீள்வான் நெஞ்சிற் குரைத்தது.

இதனுட் "பூக்கோளேய தண்ணுமை விலக்கிச் செல்வே" மென்றலின் அரசனாற் சிறப்புப் பெற்ற தலைவனாயிற்று, இன்னுஞ் சான்றோர் செய்யுட்களுள் இங்ஙனம் வருவனவற்றை அவற்றின் பொருணோக்கி உணர்க.

பாரதியார்

**24. ஏவல்மரபின்..............அண்ணர்**

கருத்து : இதுவும் அகப்பகுதியில் நானில மக்களேயன்றி திணைப்பெயர்க்குரிமை கொள்வாரின்னுஞ் சிலருளர் என்பது கூறுகின்றது.

பொருள் :- ஏவன் மரபின் ஏனோரும்—ஒருவரிடத்தடைந்து, அவர் குற்றேவல் செய்வதையே மரபாகவுடைய (அடியாரும் வினைவலருமல்லாத) பிறரும் ; உரியர்—நானில மக்களைப் போலவே அகத்திணைக்குரிமை யுடையராவர் ; ஆகிய நிலைமையவரும்—அவ்வாறு ஒருவரையுமடையாமல் நாள்தோறும் ஏவுவர் தொழில் ஏற்பதாகிய நிலைமையுடையோரும்; அண்ணர்—(அடைந்தாட்படும் குற்றவேல் மக்களைப் போலவே) அகத் திணைக் குரிமையுடையராவர்.

குறிப்பு :- 'ஏனோரும்' 'நிலைமையவரும்' என்பவற்றினும் மைகள் முன்னர்க் கூறியவரைக் குறித்து நிற்கும் இறந்தது தழீஇய எச்சவும்மைகளாம். இதற்கும் கைக்கிளை பெருந்திணை

களை யிழுத்துப் புகுத்திக்கூறும் உரைகாரர் பழையவுரை பொருந்தாதென்பதை மேற்சூத்திரத்துக்கூறிய குறிப்புகளைக் கொண்டு தெளிக.

ஏவன் மரபு என்பது, குற்றேவற்றொழில் புரிவார் சிறிய நிலைகுறிக்குமல்லால், பிறரை ஏதும் பெருவாழ்வுரிமை குறியாது; ஏவுதல் மரபென்னாது ஆசிரியர் ஏவன் மரபு என்றாராதலின் ஏவலர் ஆட்பட்ட அடியார் வேறு; அடிமைப்படாமல் ஒருவரை யடுத்து அவர்க்கே குற்றவேல் செய்து வாழும் ஏவலர் வேறு; ஒருவரையு மடையாமல் நாள்தோறும் வேண்டுவோர்க்கு அவரேவிய செய்து வாழ்வாராய ஏனையோர் வேறு. இம்மூவருள் அடங்காராய்க் கம்மியர் போன்ற ஏவலரல்லாத் தொழிலாளரான வினைவலர் வேறு. ஆதலின் இந்நால்வரையும் முறையே ஆசிரியர் இச்சூத்திரங்களில் நானில மக்கள் போலவே அக வொழுக்கத்திற் குரிமையுடைய ரென்று விதந்து கூறினார்.

''அறப்பரிசாரமும்...........உரிமைச் சுற்றமோ டொருதனிப் புணர்க்க'' எனுமனையறம் படுத்த காதையடிகள் தமிழ்த் தனிக்குடி மக்களின் கீழ் ஏவலரும் அடிமைத் திரளும் வெவ்வே றாதலை விளக்குகிறது. பரிகாரம், ஏவற்றொழில்; ஈண்டது புரிபவருக்கு ஆகுபெயர். உரிமைச் சுற்றம், அடிமைத்திரள் என்றே சிலப்பதிகார உரைகாரரிருவரும் கூறுதலறிக. ''குற்றிளை யோரும் அடியோர் பாங்கும்'' எனும் கொலைக்களக் காதை யடிகளும் பெருங்குடி தோறும் குற்றேவல் புரிவோரும் அடிமை களும் உண்மையை உறுதிப்படுத்துகிறது. இனி, இந்திரவிழவூ ரெடுத்த காதையில் ''தொழில் பலபெருக்கிப் பழுதில் செய்வினைப் பால்கெழுமாக்களும்; .........சிறுகுறுங் கைவினைப் பிறர் வினை யாளரொடு'' எனவருமடிகளில் உயர்குடிமக்களின் ஏவலரல்லா ''வினைவலரும்'' பிறர்தம் ஏவலை மரபாகக்கொண்ட ஏனோரும் பழந்தமிழகத் துண்மை கூறுகிறது. பின் கட்டுரை காதையில் - ''ஏவலிளைஞர் காவலற் றொழுது'' எனவருதலால், ''ஏவல் மரபு'', பிறரை ஏவும் பெற்றி குறியாது, பிறரேவலைத் தாம்புரியு நிலையையே குறிப்பது தெளிவாகும். இப்பழந்தமிழ்த் தொடர் நிலைச் செய்யுளடிகள், தொல்காப்பியர் சுட்டிய ''அடியார், வினைவலர், தனிக்குடி ஏவலர், ஏனைய ஏவன் மரபினர், எனும் கீழோர் நால்வரும் தமிழகத் துண்மையை வலியுறுத்தல் கருதற்குரியது.

இனி, பிறரேவல் புரியும் ஏவன் மரபினரும் அகத்துறைத் தலைவராதற்குரிய ரென்பதற்குச் செய்யுள் :

"இகல்வேந்தன் சேனை இறுத்த வாய்போல" (கலி-108) என்பதில் "அளைமாறிப் பெயர்தருவா யறிதியோ? என்றானுக்கு"

புனத்துளான் எந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ?
இனத்துளான் என்னைக்குக் கலத்தொடு செல்வதோ?
தினைத்தாளுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ?

எனத் தலைவி கூறுவதால், இது பிறர் ஏவல் புரிவோர் அகத் துறையிற் காதற்றலைமக்க ளாதற்குரிமை கூறுதலுணர்க.

சிவலிங்கனார்

இளம்பூரணர் உரையும் நச்சினார்க்கினியரின் வலிந்த உரையும் பொருந்தா. பாரதியார் உரையே சாலும்.

27. ஓதல் பகையே தூது இவை பிரிவே (27)

ஆ. மொ. இல.

Having higher education fighting the
enemy and serving as an ambassador
are the causes for separation (from wife)

பி.இ.நா.

இறை 35, முத்து கற். 5.

ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்று
ஆங்க ஆறே அவ்வயிற் பிரிவே.

நம்பி. 62

பரத்தையிற் பிரிதல் ஓதற்குப் படர்தல்
அருட்டகு காவலொடு தூதிற்கு அகறல்
உதவிக்கு ஏகல் நிதியிற்கு இகத்தல் என்று
உரைபெறு கற்பிற் பிரிவு அறு வகைத்தே

இல. வி. அ. 58 ஷை ஷை

மாறன் அகப்பொருள் 98

பெருகும் இல்வாழ்க்கை பரத்தையிற் பிரிதல்
செருவினுக்கு உற்றுழிச் செல்வ துடனே
பொருவில் புரத்தலின் பொருள் பயிற் பிரிதல்
தூதில் பிரிதல் சுருதி முதலிய
ஓதப் பிரிதலொடு ஓர்ஏழ் என்ப
கிளந்த கற்பின் கிளவித் தொகையே.

**முத்து. அக. 43.**

இருபிறப் பாளர் இறைவர்என் றிருவர்க்கும்
தூது போதல் தொழில் உரித் தாகும்.

## இளம்பூரணர்

**27. ஓதல் பகையே ... ... ... ... பிரிவே.**

மேல் கைக்கிளை முதலாக எழுதிணையு முணர்த்தினார், அவற்றுள் நிலம் பகுக்கப்பட்ட முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும் நான்கு திணையும் களவு கற்பு என்னும் இருவகைக் கைகோளினும் நிகழ்தலின் அவற்றை யொழித்து நிலம் பகுக்கப்படாத கைக்கிளை பெருந்திணையும் பாலையும் இவ்வோத்தினுள் உணர்த்துகின்றன ராதலின், அவற்றுள் பாலைக் குரித்தாகிய பிரிவு உணர்த்துவான் பிரிவுக்கு நிமித்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஓதல் பகை தூது இவை பிரிவு - ஓதலும் பகையும் தூதும் என்று சொல்லப்பட்ட இத்தன்மைய பிரிவிற்கு நிமித்த மாம்.

'இவை' என்பது இத்தன்மைய என்னும் பொருள்பட நின்றது. நிமித்தம் என்பது உய்த்துணர்ந்து கொள்ளக் கிடந்தது[1] ஓதற்குப் பிரிதலாவது, தமது நாட்டகத்து வழங்காது பிறநாட்டகத்து வழங்கும் நூல் உளவன்றே, அவற்றினைக்

1. சூத்திரத்து நிமித்தம் என்பது இன்மையின் இவ்வாறு எழுதினார். நிமித்தம் என்பது புணர்தல் நிமித்தம் போலப் பாலை நிமித்தம் என்னும் பொருளில் வந்ததன் காரணம் என்னும் பொருளளவில் வந்தது. ஏன்எனின் இவை நிமித்தமாகா வகைகளாம் ஆதலின்.

கற்றல் வேண்டிப் பிரிதல், பகைவயிற் பிரிதலாவது மாற்று வேந்தரோடு போர்கருதிப் பிரிதல், தூதிற்குப் பிரிதலாவது இருபெரு வேந்தரைச் சந்து செய்தற் பொருட்டுப் பிரிதல்.

## 25. நச்சினார்க்கினியர்

இத்துணையும் அகத்திற்குப் பொதுவாகிய முதல் கருவுரிப் பொருளே கூறி இனி இருவகைக் கைகேரளுக்கும் பொதுவாகிய பாலைத்திணை கூறிய எழீஇயது[2]

(இ-ள்) பிரிவே - பாலையென்னும் பிரிதற் பொருண்மை; ஓதல் பகையே தூது இவை - ஓதற் பிரிதலும், பகைமேற் பிரிதலும், பகைவரைச் சந்து செய்தன் முதலிய தூதுற்றுப் பிரிதலு மென மூன்று வகைப்படும் என்றவாறு.

ஒரோவென்றே அறமுந் துறக்கமும் பொருளும் பயத்தற் சிறப்பு நோக்கி இவற்றை இவையென விதந்தோதினுர் இவை யென்றதனை எடுத்தலோசையாற் கூறவே அறங்கருதாது அரசரேவலால் தூதிற் பிரிதலும் போர்த்தொழில் புரியாது திறை கோடற்கு இடை நிலத்துப் பிரிதலுஞ் சிறப்பின்மை பெறுதும். அறங் கருதாது பொருள் ஈட்டுதற்குப் பிரிதலும் பொருள்வயிற் பிரிவிற்கு உண்மையின் இவற்றோடு ஓதாது பிற்கூறினார். அந்தணர்க்குரிய ஓதலுந் தூதும் உடன் கூறிற்றிலர், பகை பிறந்தவழித் தூது நிகழ்தலின்.

## பாரதியார்

### 25. ஓதல் ... ... ... ... ... பிரிவே

கருத்து :- இது, மேல் முதற்சூத்திரத்திற் கூறிய ஏழு திணைகளுள் குறிஞ்சி முதலிய நடுவணைந்திணைகளின் பொது வியல்புகள் இதுவரையுங் கூறி, இனி அவ்வைந்திணைகளுள் நடுவணதானதும், களவு கற்பு என்னும் இருவகைக் கைக்கோள் களுக்கும் பொதுவானதும், தனக்கென நிலம் பகுக்கப்படாதது மாகிய பாலையென்னும் பிரிவொழுக்கத்தின் சிறப்பியல்கள் கூறத்தொடங்கி பிரிவின் வகைகளுள் சில உணர்த்துகிறது.

---

2. கூறியஎழீஇயது கூற எழுந்தது.

பொருள் :- ஓதல் பகையே தூது இவை = கல்வி கற்றலும், பகை கடியப் பொருதலும், தம்முள் பகைத்த பிறரைப் பொருத்தற்பொருட்டு வாயிலாகச் செல்லுதல் ஆகிய இவை ; பிரிவே = பிரிதற்கு நிமித்தமாய்ப் பாலைத் திணையாகும்.

குறிப்பு :- இதில் ஏகாரமிரண்டும் அசை ஓதற் பிரிவாவது பிறாண்டு தான் ஓதற்குரிய கல்விக்குப் பிரிதல் பகைவயிற் பிரிதலாவது தன்னாட்டிற்கும் தன்னரசற்கும் பகையாவாரோடு போர் கருதிப் பிரிதல், தூதிற் பிரிதலாவது பகைத்தார் வேறிருவரைப் பொருத்தற் பொருட்டுப் பிரிதல்.

**28. அவற்றுள்**
**ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன. (28)**

ஆ.மொ.இல.

Among them higher education and Ambassadorship are concerned with eminent people (higher intelligentia)

பி.இ.நா.

**இறை 36**

அவற்றுள்
ஓதலுந் தூதும் உயர்ந்தோர்க்குரிய.

**நம்பி. 69**

ஓதல் தொழில்உரித்து உயர்ந்தோர் மூவர்க்கும்.

**இல.வி.அ. 65** ஷை ஷை

**நம்பி 75**

வேத மாந்தர் வேந்தர்என் றிருவர்க்கும்
தூது போதல் தொழில்உரித் தாகும்.

**இல.வி.அ. 71** ஷை ஷை

**முத்து. அக. 43, 44**

மறையோர் மன்னர் வணிகர்வே ளாளருள்
ஓதல் தொழில் உரித்து உயர்ந்தோர் மேன.
எல்லார்க்கும் உரியன இவையல பிறவே.

## இளம்பூரணர்

**28. அவற்றுள்..................மேன**

இது மேற்கூறப்பட்டவற்றுள் ஓதற்கும் தூது போதற்கும் உரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அவற்றுள் - மேற்கூறப்பட்டவற்றுள், ஓதலும் தூதும்-ஓதல் காரணமாகப் பிரியும் பிரிவும், தூதாகிப் பிரியும் பிரிவும் உயர்ந்தோர்மேன-நால்வகை வருணத்தினும் உயர்ந்த அந்தணர்க்கும் அரசர்க்கும் உரிய.

இவர் ஒழுக்கத்தானும் குணத்தானும் செல்வத்தானும் ஏனையரினும் உயர்புடையராதலின் "உயர்ந்தோர்' என்றார். அரசர் தாம் தூதாகியவாறு வாசுதேவனால்[1] உணர்க.

"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லுச் சிலவே யதற்கே
ஏணியுஞ் சீப்பும் மாற்றி
மாண்வினை யானையு மணிகளைந் தனனே." (புறம்-305)

இதனுள் பார்ப்பார் தூதாகியவாறு கண்டுகொள்க.

## 26. நச்சினார்க்கினியர்

இது முற்கூறியவற்றுள் அந்தணர் முதலிய மூவர்க்கும் இரண்டு பிரிவு உரித்தென்கிறது.

(இ-ள்) அவற்றுள் - அம்மூன்றனுள்; ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன - ஓதற் பிரிவும் தூதிற் பிரிவும் அந்தணர் முதலிய மூவரிடத்தன[2] என்றவாறு.

---

1. வசுதேவன் மகன் வாசுதேவன் - கண்ணன்

2. இளம்பூரணர் உயர்ந்தோராவார் அந்தணர் அரசர் என்ன இவர் வணிகரையும் சேர்த்தார்.

எனவே ஒழிந்த பகைவயிற்பிரிவு அரசர்க்கே உரித்தென மேலே கூறுப. உயர்ந்தோரெனக் கூறலின் வேளாளரை ஒழித்தாரென்றுணர்க

உதாரணம் :-

''அரம்போ ழல்வளை தோணிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
இரங்கா முன்ன அரும்புமுதி ரீங்கை
ஆலி யின்ன வால்வீ தாஅய்
வைவா லோதி மையணல் ஏய்ப்பத்
தாதுறு குவளைப்போதுபிணி யவிழப்
படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅம் மாறிய யானை போலப்
பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குல்
தமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய அலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுள் சான்ற
செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை ஆடுபெற
ஒன்பது குடைய நண்பக லொழித்த
பீடில் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ யெமக்கே.'' (அகம் - 125)

இதனுட் பலருங் கைதொழும் மரபினையுடைய கடவுட்டன்மை யமைந்த செய்வினையெனவே ஓதற்பிரிதலென்பது பெற்றாம். ''சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே[2].'' என்பதனாற் கிழவனும் கிழத்தியும் இல்லத்திற் சிறந்தது பயிற்றாக்கால் இறந்ததனாற் பயனின்றாதலின் இல்லறம் நிரம்பா வாழ்க்கை யென்றார். இல்லறம் நிகழ்கின்ற காலத்தே

2. சிறந்த துறவறத்தைப் புரிதல் கடந்த இல்லற வாழ்க்கையின் பயன்

மேல்வருந் துறவறம் நிகழ்த்துதற்காக அவற்றைக் கூறும் நூல்களையும் கற்று அவற்றின் பின்னர்த் தத்துவங்களையு முணர்ந்து மெய்யுணர்தல் அந்தணர் முதலிய மூவர்க்கும் வேண்டுதலின் ஓதற்பிரிவு அந்தணர் முதலியோர்க்கே சிறந்த தென்றார்.

"பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ" (கலி-15)

என்பதும் அது; மையற்ற படிவம் அந்தணர் முதலியோர் கண்ணதாகலின். "விருந்தின் மன்னர்" அகப்பாட்டில் (54) வேந்தன் பகைமையைத் தான் தணிவித்தமை கூறலின் அந்தணன் தூதிற் பிரிந்தமை பெற்றாம். "வயலைக்கொடியின் வாடிய மருங்குல்" என்னும் புறப்பாட்டில் அந்தணன் தூது சென்றவாறுணர்க. அரசன் தூதுசேறல் பாரதத்து வாசுதேவன் தூது சென்றவாற்றானுணர்க.

அது

"பட ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே."
(சிலப்- ஆய்ச்சியர் குரவை)

என்பதனானுணர்க. வாணிகன் சென்ற தூது வந்துழிக் காண்க.

(26)

பாரதியார்*

26. அவற்றுள்ஓத .. ...மேன

கருத்து :— இது மேற்சூத்திரம் கூறும் பிரிவு மூன்றனுள் இரண்டற்குரியாரை உணர்த்துகிறது.

பொருள் :— அவற்றுள் மேற்குறித்த மூன்றனுள்; ஓதலுந் தூதும் - ஏதற்பிரிவும் தூதுபற்றிய பிரிவும்; உயர்ந்தோர்மேன - பெரும் வினையும் பற்றிய திணை நிலைப் பெயர்க்குரியார் பலருள்ளும் அடியோர் வினைவலர் ஏவலர் போல் வாரல்லாத உயர்ந் தோர்க்கே உரியவாகும்.

---

*இவர் உரையும் விளக்கமுமே சிறந்தன.

குறிப்பு : அடியோர், வினைவலர், ஒருவருக்கு ஏவலர், ஏவன் மரபினேனையோர், இந் நால்வரும் பிறரேவலை எதிர் பார்த்து வாழ்பவராதலின் ஓதலும் தூதுமாகிய உயர்ந்தோர் தொழிலேற்றற்கு உரிமை கொள்ளார். அவரொழிந்த நானிலத் தமிழ்க் குடிமேன்மக்களே அவற்றை மேற் கொள்ளுதற்குத் தகுதியுடையராதலின் இவை அவ்வுயர்ந்தோர் மேலன என்று விளக்கப்பட்டன.

உயர்ந்தோரல்லாத அடியார் முதலிய நால்வர்க்கு அகத்திணை யொழுக்கங்கள் கடியப்படாவென மேல் இரண்டு சூத்திரங்களிற் கூறிய இந்நூலார், அவ்வொழுக்கங்களுள் ஒன்றான பிரிவிற்குரிய நிமித்தங்களுள் ஓதல் தூதாகிய இரண்டிற்கும் அவர் உரியராகாமையான் அவை பற்றிய பிரிவிற்கு அவர் உரியராகார் என்பதை இச்சூத்திரத்தால் தெளிய வைத்தார். மேற் சூத்திரத்திற் கூறிய பிரிவினிமித்தம் மூன்றனுள் இரண்டே உயர்ந்தோர்க்குரியன என இச்சூத்திரம் கூறுதலால், எஞ்சிய பகைவயிற் பிரிவு உயர்ந்தோர் குப் போலவே பிறர்க்கும் உண்டென்பது பெறவைத்தார், உயர்ந்தோரின் ஏவல் மேற்கொண்டொழுகுவாரும், அவரேவியவழிப் பகைவரொடு பொருதற்குரியராதலின், பகைவயிற் பிரிவு அவர்க்கு விலக்கப்படாமையுணர்க. அதுவே போல், பொருட் பிரிவும் எல்லோர்க்கும் பொதுவாகும்.

இனி, இச்சூத்திரத்திற்கு நால்வகை வருணத்துள் அந்தணர் அரசராகிய முதல் இருவகையினரே ஓதல் தூது மேற் கொள்ளற்குரியர் எனப்பிறர் கூறுமுறை பொருந்தாது நான்கு வருணம் ஆரியர் அறநூல்களே கூறும் வகைகளாதலானும், பண்டைத் தமிழருள் பிறப்பளவில் என்றும் உயர்வு தாழ்வுகளுடன் வேறுபடும் அந்நால்வகை வருணங்கள் உலகியலில் வழங்காமையானும், தொல்காப்பியர் தாம் தமிழ் மரபுகளையே கூறுவதாக வற்புறுத்தலானும், அகத்திணையியலில் தமிழ் நாட்டு நானில மக்கள் யாண்டும் கூறப்படாமையானும், அவருரை அமைவுடையதன்று. அது சூத்திரக் கருத்தன்மை, இதில் உயர்ந்தோரென்பதற்கு முதலிரு வருணந்தாரென்று உரையாசிரியரும், முதல் மூன்று வருணத்தார் என்று நச்சினார்க்கினியரும் தம்முள் மாறுபடக் கூறுதலானும் தெளியப்படும். அன்றியும், வணிகரை விலக்கி அந்தணரும் அரசருமே இவ்விருவகைப் பிரிவிற்குரியர் என்று தாம கூறுதற்குக் காரணம், 'ஒழுக்கத்தானும் குணத்தானும் செல்வத்தானும் -

ஏனையரினும் உயர்ந்தோ ரென்றார்' என்பர் இளம்பூரணர். ஒழுக்கம் குணம் செல்வங்களால் வணிகர் மற்றைய இருபிறப்பாளர்க்குக் குறைந்தவர் என்பதுண்மையன்றாகலானும், செல்வத்தால் வணிகர் ஏனையரினும் தாமே உயர்வுடையராதலானும், வணிகரும் நானிலத்தமிழரும் ஓதற்குரியரேயாதலானும் இதுவும் சூத்திரக் கருத்தாகாமை பெறப்படும்.

**29. தானே சேறலும் தன்னொடு சிவணி[1] ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே (29)**

ஆ.மொ.இல.

going himself or others (associated) with him going on his behalf for fighting the enemy is a privilage of the king.

**நம்பி 77, இல அக 445**

**உதவி அந்தணர் ஒழிந்தோர்க்குரித்தே.**

இளம்பூரணர்

**29.தானே சேறலும்..............மேற்றே**

இது, பகைவயிற் பிரிதற்குரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தானே சேறலும் - தானே சேறலும், தன்னொடு சிவணி ஏனோர் சேறலும் - அவனொடு கூடி ஒழிந்தோர் சேறலும், வேந்தன் மேற்று - வேந்தன் கண்ணது.

பகையென்றது மேனின்ற அதிகாரத்தான் உய்த்துணர்ந்து கொள்ளக் கிடந்தது. 'தானே' என்பதன் ஏகாரம் பிரிநிலை; படையை யொழிய என்றவாறு. போரைக் குறித்துப்பிரித்ததும் அரசர்க்கு உரித்தென்று கொள்க. இதனுள் அரசன் தலைமகனாயுழிப் பகைதணிவினைப் பிரிவு எனவும், அவனொடு

1. சிவணிய-நச். பாடம்

சிதனி ஏனோர்[1] தலைவராயுழி வேந்தற்குற்றுழிப் பிரிவு[2] எனவும் இதனை இருவகையாகக் கொள்க.

## 27. நச்சினார்க்கினியர்

இது பகைவயிற் புரிவு அரசர்க்கே உரித்தென்கின்றது.

(இ ள்) தானே சேறலும் - தன் பகைக்குத் தானே செல்லுதலும்; தன்னொடு சிவணிய ஏனோர் சேறலும் - அவனொடு நட்புக்கொண்ட ஒழிந்தோர் அவற்குத் துணையாகிச் செல்லுதலுமாகிய இருபகுதியும்; வேந்தன் மேற்று - அரசன் கண்ணது என்றவாறு.

எனவே, வாணிகர்க்கு உரித்தன்றாயிற்று[3] தானேயென்று ஒருமை கூறிய அதனானே முடியுடைவேந்தர் தாமே சேறலும் ஏனோரெனப் பன்மை கூறிய அதனானே பெரும்பான்மையுங் குறுநிலமன்னர் அவர்க்காகச் சேறலும், முடியுடை வேந்தர் அவர்க்காகச் சிறுபான்மை சேறலும், உணர்க. முடியுடை வேந்தர் உள்வழிக் குறுநில மன்னர் தாமே செல்லாமையுணர்க இதனை "வேந்தர்க்குற்றுழி" யென்ப ஏனையார்.[4] அவ்வேந்தர் இல்வழிக் குறுநில மன்னருந் தாமே சேறல் "வேந்து வினை யியற்கை" என்பதன்கட் கூறுப. இதனானே தன் பகை மேலும் பிறர்பகை மேலும் ஒருகாலத்திற் சேறலின் றென்றார்.

"கடும்புனல் கால்பட்டு" என்னும் பாலைக்கலியுள்,
"மயங்கமர் மாறட்டு மண்வெளவி வருபவர்
தயங்கிய களிற்றின்மேற் றகைகான விடுவதோ."
(கலி - 31)

---

1. ஏனோர்—குறுநில மன்னர், பிறவேந்தர்.
2. தான் அரசனாயிருந்தாலும் வேற்றுவேந்தர் தலைவராயிருக்கும் போக்கோ அல்லது குறுநில மன்னர் பொரும் போர்க்கோ உதவச்செல்வது வேந்தர்க்கு உற்றுழி உதவுதலாகும்.
3. அந்தணர்க்கு உரித்து என்பது இவர் கருத்து. தமிழக அந்தனர் அந்தணராதலின் பொருந்துமா என ஆய்க
4. பிறகால இலக்கண நூலார் இறையனார் களவியல் நூலார் முதலியோர் (இள.ந.சூ. 35)

எனவும்,

"பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்".
(கலி-31)

எனவும் மண்கோடலுந் திறைகோடலும் அரசர்க்கே உரித்தாகக் கூறியது.

"நீளுயர் கூட னெடுங்கொடி யெழவே." (கலி-31)
எனச் சுரிதகத்துக் கூறியவாற்றா னுணர்க.

"பொருபெரு வேந்தர்க்குப் போர்ப்புணை யாகி
யொருபெருங் காதலர் சென்றார் வருவது
காணிய வம்மோ கனங்குழை கண்ணோக்கா
னீணகர் முன்றி லூமே னின்று"
இது வேந்தர்க்குற்றுழி வேந்தன் பிரிந்தது.
"கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட் டியானைப் போர் கிழவோன்
பழையன் வேல்வாய்த் தன்ன நின்
பிழையா நன்மொழி தேறிய விவட்கே." (நற்றிணை 10)

இது குறுநிலமன்னர் போல்வார் சென்றமை தோன்றக் கூறியது.

"மலைமிசைக்குலைஇய" (அகம் 84) என்பதும் அது.

இனி வேட்டைமேற் சேறலும் நாடுகாணச் சேறன் முதலியனவும் பாலையாகப் புலனெறி வழக்கஞ் செய்யாமை உணர்க. வேந்தனென்று ஒருமையாற் கூறினார். "மெய்ந்நிலை மயக்கினாஅகுநவும்" என்னும் விதிபற்றி[1] சிவணிய வென்பதனை வினையெச்ச மாக்கி நட்பாடல் வேண்டியென்றுமாம்[2]

---

1. "மெய்ந்நிலை மயக்கின் ஆஅகுந" (தொல் சொல். எச்ச-53) என்பதில் ஒருமைச்சொல் பன்மைப் பொருளில் வரும் என்பது கூறப்படுகிறது. அதற்கேற்ப தானே என ஒருமையிற் கூறினாலும் தாமே எனப் பன்மை கொள்ளல் வேண்டும்.

2 சிவணிய ஏனோர்-பெயரெச்சத்தொடராக உரை கூறினார். சிவணிய என்பதைச் செய்யிய என்னும் வினையெச்சமாகக் கொண்டு சிவண வேண்டி எனவும் பொருள் கொள்ளலாம் என்றார்.

பாரதியார்

**27. தானே ..........மேற்றே**

**கருத்து:-** இது, உயர்ந்தோர்க்குரிய பிரிவுவகை மூன்றனுள் மேற்சூத்திரம் கூறிய இரண்டு நீக்கி, அதிற்கூறப்படாத பகை வயிற் பிரிவுக்கு உரியாரை உணர்த்துகின்றது.

குறிப்பு :- தானே என்பதன் ஏகாரம் பிரிநிலை; வந்த பகையை யடர்க்கத் தான் ஏவுதற்குரிய படைஞர் பிறரை நீக்கி வேந்தன் தானே சேறல் என்பதைச் சுட்டும். ஈற்றேகாரம் அசை. நாட்டின் பகைவராய் வந்தாரை நலிவது வேந்தனுக்கே கடமையும் உரிமையும் ஆகும். மற்றையோர் மன்னராணையின்றித் தாமே பகைமை பாராட்டிப் பொருதல் அரசனால் ஒறுக்கப்படும் குற்றமாகும். அதனால் தன்கடனாற்ற, மண்ணசையால் வந்த வேந்தனை அஞ்ச எதிர்சென்று பொருதழிக்க அந்நாட்டு வேந்தன் தானே செல்வதும், தன் படைநரை ஏவி அவரைக் கொண்டு அக்கடனாற்றிப் பகையழித்தலும், அவ்வேந்தன் மேலனவாவது வெளிப்படை. நெடுஞ்செழியன் வந்த பகைவர் மேற்சென்று தலையாலங்கானத்துப் பொருதழித்தது வேந்தன் தானே சேறற்குக் காட்டாகும். கருணாகரத் தொண்டைமான் படையொடு சென்று கலிங்கமழித்தது அரசனொடு சிவணிய ஏனோர் சேறற்கு எடுத்துக் காட்டாம்.

(1) பகைதெறவேந்தன்தானே சேறற்குச் செய்யுள்.

1. மயங்கமர் மாறட்டு மண்வெளவி வருபவர்
தயங்கிய களிற்றின்மேல் தகைகாண விடுவதோ

... ... ... ... ... ... ... ... ... ... ... ...

தாள்வளம் படவென்று தகைநன்மா மேற்கொண்டு
வாள்வென்று வருபவர் வனப்பார விடுவதோ

... ... ... ... ... ... ... ... ... ... ... ...

பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
வகைகொண்ட செம்மனாம் வனப்பார விடுவதோ

... ... ... ... ... ... ... ... ... ... ... ...

எனவாங்கு

வாளாதி வயங்கிழாஅய் வருந்துவ ளிவளென
நாள்வரை நிறுத்துத்தாம் சொல்லிய பொய்யன்றி

மீளிவேற் றானையர் புகுதந்தார்
நீளுயர் கூடல் நெடுங்கொடியெழவே''

(பாலைக்கலி-31)

2. ''கார்செய் காலையொடு கையறப் பிரிந்தோர்
தேர்தரு விருந்திற் றவிர்குதல் யாவது
மாற்றருந் தானை நோக்கி
யாற்றவு மிருத்தல் வேந்தனது தொழிலே''
பேயனார் (ஐங்குறுநூறு 451)

(II) வேந்தனொடு சிவணிய ஏனோர் சேறற்குச் செய்யுள் :

1. ''காய்சின வேந்தன் பாசறை நீடி
நற்றோ யறியா வறனி லாளர்
இந்நிலை களைய வருகுவர் கொல்லென
ஆனா நெறிதரும் வாடையொடு
நோனேன் தோழியென் தனிமை யானே''

— கழார்க் கீரனெயிற்றியார் (அகம்-294)

2. ''கூதிர் நின்றன்றாற் பொழுதே; காதலர்
நந்நிலை யறியா ராயினுந் தந்நிலை
யறிந்தனர் கொல்லோ? தாமே யோங்குநடைக்
காய்சின யானை கங்குற் சூழ
அஞ்சுவர விறுத்த தானை
வெஞ்சின வேந்தன் பாசறை யோரே''
— உம்பற் காட்டிளங்கண்ணனார் (அகம்-264)

**30. மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய**
**முல்லை முதலாச் சொல்லிய முறையான்**
**பிழைத்தது பிழையாது ஆகல் வேண்டியும்**
**இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே. (30)**

ஆ. மொ. இல.

Separation for earning money and for setting things right in the region of forest and such others in the offair of others who are emenent.

முத்து. அக. 48

ஏனைக் காவல் இறைவர்க்குரிய

## இளம்பூரணர்

**30. மேவிய சிறப்பின் ............ பிரிவே**

இது, மேற்சொல்லப்பட்ட மூவகை நிமித்தமுமன்றி வருவன உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய - நால்வகை நிலத்தினும் மேவிய சிறப்பையுடைய மக்களையல்லாத தேவரது பூசையும் விழவும் முதலாயினவும், முல்லை முதலா சொல்லிய- முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச் சொல்லிய நிலத்தின் மக்களும், முறையால் பிழைத்தது பிழையாது ஆகல் வேண்டியும். முறைமையில் தப்பிய வழி தப்பாது அறம் நிறுத்தல் காரண மாகவும் இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவு-செய்யப்பட்ட ஒள்ளிய பொருள் ஆக்குதல் காரணமாகவும் பிரிவு உளதாம்.

மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய என்பது நால்வகை நிலத்தினும் மேவிய சிறப்புடைய மக்களையல்லாத தேவரது படிமையவாகிய பொருள்கள் என்றவாறு. முல்லை முதலாச் சொல்லிய என்பது முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லிய நிலத்தின் மக்கள் என்றவாறு. முறையால் பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும் பிரிவே என்பது மேற்சொல்லப் பட்டன முறைமையில் தப்பிய வழிதப்பாது அறம் நிறுத்தற் பொருட்டும் பிரிவுளதாம் என்றவாறு. இழைத்த ஒண்பொருள் முடிய வேண்டியும் பிரிவு உளதாம் என்றவாறு.

(இதன் பொழிப்பு, தேவரது பூசை முதலாயினவும் மக்களும் முறைமை தப்பியவழி தப்பாது அறம் நிறுத்தல் காரணமாகவும், பொருளாக்குதல் காரணமாகவும் பிரிவ உளதாம் என்றவாறு)

காவல், பொருட்பிரிவு எனப் பிற நூலகத்து ஓதப்பட்ட இரு வகைப்பிரிவும்[1] ஈண்டு ஓதப்பட்டதென்று கொள்க[2] 'மேவிய'

1. இறை-களவியல் 35.
2. இப்வாறெழுதினாலும் இச்சூத்திரம் கொண்டே அந் நூல்கள் இருவகைப் பிரிவுகளைக் கூறினர் என்க.

என்பது ''மாயோன் மேய காடுறை யுலகமுஞ், சேயோன் மேயமை வரையுலகமும்'' (அகம்-5) என்பதனால் நால்வகை நிலத்தினும் மேவிய எனப்பொருளாயிற்று. 'சிறப்பினேனோர்' என்றதனால் நால்வகை நிலத்தினும் மேவிய எனப்பொருளாயிற்று. 'சிறப்பி னேறோர்' என்றதனால் சிறப்புடையார் மக்களும் தேவரு மாகலின், மக்களல்லாதாரே தேவர் என்று பொருளாயிற்று, 'படிமை' என்பது ப்ரதிமா[3] என்னும் வடமொழித்திரிபு. அது தேவர்க்கு ஒப்பமையாக நிலத்தின்கண் செய்து அமைத்த தேவர்மேல் வந்தது. அவருடைய பொருளாவன பூசையும் விழாவும் முதலாயின.

'முல்லை முதலாச் சொல்லிய' என்பது ''பிறந்தவழிக்கூறல்'' (சொல்-114) என்னும் ஆகுபெயரான் அந்நிலத்தின் மக்களை நோக்கிற்று. 'பிரிவு' என்பதனை, பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும் பிரிவுளதாம், இழைத்த வொண்பொருண் முடிய வும் பிரிவுளதாம், என இரண்டிடத்துங் கூட்டுக. ஆம் என்பது எஞ்சி நின்றது.

தேவர் காரணமாகப் பிரியும் பிரிவுக்குச் செய்யுள் :

''அரம்போழ் அவ்வளை தோள்நிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
ஈர்ங்கா ழன்ன அரும்பு முதி ரீங்கை
ஆலி யன்ன வால்வீ தாஅய்
வைவா லோதி மையண லேய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்

---

3. படிமை — உருவம். அதாவது போலப்படிந்த தன்மையு டைய உருவம். அதன்படி சொற்படி என வருவன வற்றில் படி என்பது போலும் என்பதை யுணர்த்துதல் காணலாம். இக்காலத்துப் படி (copy) எடுத்தல் வழக்குண்மை காண்க. கண்ணுக்குப் புலப்படாத தேவர் உருவைக் கருத்துக்குப் புலப்பட்டவாறு அமைக்கப்படுவதே கடவுள் படிவம். படிவம் என்னும் தூய தமிழ்ச் சொல்லே ஆரிய மொழியில் பிரதிமா எனக்குறிக்கப்பட்டது.

படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅம் மாறிய யானை போலப்
பெய்துவறி தாகிய பொங்கு செலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்
பனியடூஉ நின்ற பானாட் கங்குல்
தமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய அலைத்தி முரணில் காலைக்
கைதொழு மரபிற் கடவுள் சான்ற
செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற
ஒன்பது குடையும் நன்பக லொழித்த
பீடின் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ யெமக்கே''.

(அகம் - 125)

சேரன் செங்குட்டுவனார் கண்ணகியைக் கடவுள் மங்கலம் செய்தற்குப் பிரிந்த பிரிவு சிலப்பதிகாரத்திற் கண்டு கொள்க. இத்துணையும் பிரிவு அறுவகைப்படும் என்றவாறாயிற்று அஃதேல் பரத்தையிற் பிரிவு என்பதோ எனின், அது நிலம் பெயர்ந்து உறையாமையானும், இவைபோல் சிறக்காமையானும், அறமுறைமை செய்யப் பிரிதலும் பொருள் காரணமாகப் பிரிதலு மின்றிப் பிரிதலினாலும், கற்பியலுள் கூறப்படும் என்க. ஈண்டும் சிறுபான்மை கூறுப.

## நச்சினார்க்கினியர்

28. மேவிய......பிரிவே

இது முறையானே தன்பகை மேற்சென்ற அரசன் திறை பெற்ற நாடுகாத்து அதன்கண் தன்னெறிமுறை அடிப்படுத்து தற்குப் பிரிதலும் ஏனை வணிகர் பொருட்குப் பிரிதலுங் கூறுகின்றது.

(இ-ள்) முல்லை முதலாச் சொல்லிய மேவிய சிறப்பின்தானே சென்ற வேந்தன் றனக்கு முல்லை முதலாக மேற்கூறப்பட்ட நால்வகை நிலனுந் திறையாக வந்து பொருந்திய தலைமையானே;

பிழைத்தது - முன்னர் 'ஆள்பவர் கலக்குறுத்த அலைபெற்று நெறிமுறைமை தப்பிய அந்நாடு ; முறையாற் பிழையாதாகல் வேண்டியும், பிரிவே - தனது பழைய நாடுகளை ஆளும் நெறி முறைமையினாலே தப்பாமல் ஆக்கம் பெறக் காத்தலை விரும்பிப் பிரிதலும் பிரிவே ; ஏனோர் படிமைய இழைத்த ஒண் பொருள் முடியவும் பிரிவே - முற்கூறிய அந்தணர் அரசரை ஒழிந்த வணிகர் தமக்கு விரதங்களுடையவாக வேதநூலிற் கூறிய ஒள்ளிய பொருள் தேடி முடியும்படி பிரிதலும் பிரிவே என்றவாறு.

பிரிவை இரண்டற்குங் கூட்டுக. சிறப்பிற் பிரிதலும் எனச் சேர்க்க. சொல்லிய வென்பதும் பிழைத்ததென்பதுந் தொழிற் பெயர்[1] முறையாற் காக்கவென முடிக்க. விரதமாவன 'கொள் வதூஉம் மிகை கொளாது, கொடுப்பதூஉம் குறைகொடாது பல்பண்டம் பகர்ந்து வீசன்[2] முதலியன.

உதாரணம் :

"ஒருகுழை யொருவன்போ லிணர்சேர்ந்த மராஅமும்
பருதியஞ் செல்வன்போ னனையூழ்த்த செருந்தியு
மீனேற்றுக் கொடியோன்போன் மிறிறார்க்குங் காஞ்சியு
மேனோன்போ னிறங்கிளர்பு கஞலிய ஞாழலு
மானேற்றுக் கொடியோன்போ லெதிரிய விலவமும்
ஆங்கத்

தீதுநீர் சிறப்பி னைவர்க ணிலைபோலப்
போதவிழ் மரத்தோடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றா லிளவேனின் மேதக;

பலவரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் றொருந்தவென் றடமென்றோ ளுள்ளுவா
ரொல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர் ;

---

1. வினையாலணையும் பெயர். சொல்லிய—சொல்லப்பட்ட வாகிய நால்வகை நிலங்கள். பிழைத்தது—பிழைத்த தாகிய நாடு.

2. பட்டினப்பாலை (210—211)

திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த வென்னலம் வாடுவ தருளுவார்
நசைகொண்டு தந்நிழல் சேர்ந்தாரைத் தாங்கித்தம்
மிசைபரந் துலகேத்த வேதினாட் டுறைபவர் ;

அறல்சாயப் பொழுதோடெம் மணிநுதல் வேறாகித்
திறல்சான்ற பெருவனப் பிழைப்பதை யருளுவா
ரூறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
யாறின்றிப் பொருள் வெஃகி யகன்றநாட் டுறைபவர் ;

என நீ,

தெருமரல் வாழி தோழிநங் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந் தெழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே.''
(கலி-26)

இதனுள் 'ஒல்குபு நிழல் சேர்ந்தார்க்கு எனவே, முன்னர் ஆள்பவர் கலக்குறுத்த அலைபெற்றுப் பின் தன்னை நிழலாகச் சேர்ந்தாரென்பதூஉம், அவர்க்குப் பின்னர் உலைவு பிறவாமற் பேணிக் காத்தா னென்பதூஉம், 'விருந்து நாட்டு' என்பதனால் திசைபெற்ற புதிய நாடென்பதூஉம் பெற்றாம். ஏனைய வற்றிற்கும் இவ்வாறே கூறிக்கொள்க.

ஏதினொடு—புதியநாடு. ஆறின்றிப்[3] பவகவர் பொருளை விரும்பின் நாட்டென்றும் அவரை யகன்ற நாட்டென்றும் பொருள் கூறுக. செருவின் மேம்பட்ட[4] என்றது நாடுகளை. அதனாற் பெற்ற வென்றியெனவே நாடு திறைபெற்றமை கூறிற்று.

''படைபண்ணிப் புனையவும்'' பாலைக்கலியுள் (17) ''வல்வினை வயக்குதல் வலித்திமன்'' என்பதற்கு வலிய போர் செய்து அப்பகைவர் தந்த நாட்டை விளக்குதற்கு வலுத்தியென

---

3. அறநெறியின்றி

4. செருவின் மேம்பட்ட - போரில் மேம்பட்டனவாகி நாடுகள் வினையா லணையும் பெயர்.

வுந், ''தோற்றஞ்சா றொருபொருள்'' என்பதற்குத் தோற்றம் அமைந்த திரண்ட பொருளாவன அந்நாடுகாத்துப் பெற்ற அறம் பொருளின்பம் எனவும், ''பகையறு பயவினை'' என்பதற்குப் பகையறுதற்குக் காரணமாகிய நாடாகிய பயனைத்தரும் வினையெனவும், ''வேட்ட பொருள்'' என்பதற்கு அறம் பொருளின்பமெனவும் பொருளுரைத்துக் கொள்க.

பிறவும் இவ்வாறு வருவன உய்த்துணர்ந்து பொருள் கூறுக.

இனிக்,

''கேள்கே டூன்றவுங் கிளைஞ ராரவுங்
கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவு
மாள்வினைக் கெதிரிய வூக்கமொடு புகல்சிறந்து''.
(அகம்-93)

என வாணிகர் பொருள்வயிற் பிரிந்தவா றுணர்க.

''நாட்டோ ராக்கம் வேண்டியு மொட்டிய
நின்றோ ளணிபெற வரற்கு
மன்றோ தோழியவர் சென்ற திறமே'' (நற்றிணை-286)

என்பதனுள் அணியென்றது பூணினை.

பிறவும் இவ்வாறு வருவன உய்த்துணர்ந்து கொள்க.

பாரதியார்

25. மேவிய ................. பிரிவே

கருத்து :- இது, மேற்கூறிய ஓதல் பகைதூது ஒழிய, காவல் பொருளெனப் பிறவசைப் பிரிவுகளையும், அப்பிரிவுகளுக்குரியாரையுங் கூறுகின்றது.

பொருள் : மேவிய சிறப்பின் ஏனோர் - வேந்தனொடு பொருந்திய சிறப்புடைய வேந்தன் கிளைஞர் ஏனாதியர் முதலியோர்; படிமைய முல்லை முதலாச் சொல்லிய - நில வகுப்புக்களான முல்லை முதல் நெய்தலிறுதியாக (மேலே ஐந்தாஞ் சூத்திரத்திற்) சொல்லப்பட்ட நால்வகை உலகங்கள்; முறையாற் பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும்- முறை வழுவித் தப்பியது முறையாற்றப்பாதாதலை விரும்பியும் இழைத்த ஒண்பொருண்முடியவும் - (யாவரும்) வினைசெய்து உயர்ந்த பொருளை ஆக்கவும்; பிரிவே - பிரிதல்நிகழும்.

குறிப்பு : ஈற்றேகாரம் அசை. படிமைய என்பதில் படி நாட்டை அல்லது நிலத்தைக் குறிக்கும். இனி, படிமைய என்பதற்குப் பகைமையுடைய அல்லது கீழ்ப்படிந்த எனப் பொருள் கோடலும் பொருந்தும்.

பாலைத் திணையாகிய பிரிவு அறுவகைப்படும். ஓதல் தூது, பகை, காவல், பொருள் பரத்தை என. அவற்றுள், பரத்தையிற் பிரிவு கைகோளிரண்டில் கற்பளவிலிடம் பெற்றுக், களவுக் கமையாமையின். அப்பிரிவு பின்னர் அத்தொடர்புடன் கூறப்படும். ஆதலின் அதை நீக்கி, மற்ற ஐந்தும் இங்குக் கைகோளிரண்டிற்கும் பொதுவாகக் கூறப்பட்டன. அவ் வறு வகைப் பிரிவுள், ஓதல், தூது, காவல் மூன்றும் உயர்ந் தோர்க்கே யுரியன; பகை பொருட் பிரிவுகள் யாவர்க்கும் ஒப்ப வுரியன.

ஓதல் பகை தூது போலவே, பொருள் பற்றியும் காவல் பற்றியும் பிரிவு நிகழ்தல் உலகியலும் மரபும் ஆதலின், அவற் றுள் முதல் மூன்றும் முன் கூறியதால் காவற்பிரிவும் பொருட் பிரிவும் இச்சூத்திரத்திற் கூறப்பெற்றன. வேந்தனொடு சிவணிய ஏனோர், தம்பொருட்டு ஓதல் நுதலியும், வேந்தன் பொருட்டுத் தூது பகைதெறல் நுதலியும் பிரிவது போலவே, நாடுகாவல் பற்றி யும் பொருள் முடிக்கவும் பிரிவுமேற் கொள்ளுவது மரபு என்பது இச்சூத்திரத்தில் விளக்கப்பட்டது. வேந்தனுக்குப் பகைதெறத் தானே சேறலியல் பாயினும், பிறநாடு காவல் பற்றியும் பொருள்பற்றியும் பிரிதல் சிறந்ததன்றாகும். அதனால், மன்னற்குத்தானே பகைவயிற் சேறலுண்டென மேற்சூத்திரத் திற் கூறிய தொல்காப்பியர் அவனுக்குக் காவல் பொருட் பிரிவுகள் கூறாது, அவனொடு மேவிய சிறப்பினையுடைய ஏனைய உயர்ந்தோர்த்கு இப்பிரிவுகளை இதில் விதந்து கூறினார்.

(I) உயர்ந்தோர் காவற்பொருட்டுப் பிரிதற்குப் பாட்டு:

1. "பல்வரி யினவண்டு புதிதுண்ணும் பருவத்துத்
தொல்கவின் றொலைந்தவென் றாடமென்றோ ளுள்ளுவார்
ஒல்குபு நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புக ழுலகேத்த விருந்துநாட் டுறைபவர் :

2. திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த வென்னலம் வாடுவ தருளுவார்
நசைகொண்டு தந்நிழல் சேர்ந்தாரைத் தாங்கித்த
மிசைபரந் துலகேத்த வேதினாட் டுறைபவர்.

3. அறல்சாஅய் பொழுதோடெம் மணிநுதல் வேறாகித்
திறல்சான்ற பெருவனப் பிழைப்பதை யருளுவார்
ஊறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
யாறின்றிப் பொருள்வெஃகி யகன்நாட் டுறைபவர்''

(கலி-26)

II. அவர் பொருள் வயிற்பிரிதற்குதாரணம் :
'' அஞ்சுரக் கவலை நீந்தி என்றும்
இல்லோர்க் இல்லென் றியைவது காத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப, நம்மினும்
பொருளே, காதலர் காதல் ;
இருளே காதலர் என்றி, நீயே.'' (அகம்-53)

சீத்தலைச் சாத்தனார்.

'' வெயில்வீற் றிருந்த வெம்மலை யருஞ்சுரம்
ஏகுவ ரென்ப தாமே தம்வயின்
இரந்தோர் மாற்றல் ஆற்றா
இல்லின் வாழ்க்கை வல்லா தோரே '' (நற்றிணை 84)

சிவலிங்கனார்

இச்சூத்திரம் காவற்பிரிவும் பொருட்பிரிவும் உண்டு என்கின்றதேயன்றியார்க்கு உரிய என்று கூறவில்லை. அது அடுத்த சூத்திரத்துக் கூறப்படும்.

31. மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே (31)

ஆ.மொ.இல.

The order of the exalted belongs to all the people of four regions.

பி.இ.நூ.

நம்பி 78, இல. அக. 446

.......... பொருள் வயிற் பிரிவும்
உரைத்த நால்வர்க்கும் உரியவாகும்.

## இளம்பூரணர்

**31. மேலோர்............உரித்தே.**

இது, நிறுத்த முறையானே அறம் காரணமாகப் பிரிதற்குரிய தலைமக்களை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்துறு மேலோ ராகிய தேவரது முறைமையை நிறுத்தற்குப் பிரியும் பிரிவு நான்கு வருணத்தார்க்கும் உரித்து. (ஏகாரம் ஈற்றசை)

## நச்சினார்க்கினியர்

**29. மேலோர்...........உரித்தே.**

இஃது எய்தாத தெய்துவித்தது.

(இ-ள்) மேலோர் முறைமை - மேல் அதிகாரப்பட்டு நின்ற வாணிகர்க்கு ஓதிய அறந்தலைப் பிரியாப் பொருள் செயல் வகை, நால்வர்க்கும் உரித்து - அந்தணர்க்கும் அரசர்க்கும் இருவகை வேளாளர்க்கும் உரித்து என்றவாறு.

இதற்கு வாணிகர்க்கு வேத நூலுள் இழைத்த பொருண் முடிவானே இந்நால்வரும் பொருண் முடிப்பரெனிற்[1] பிரிவொன் றாகி மயங்கக் கூறலென்னுங் குற்றந் தங்குமாகலின் அது கருத் தன்று. இந்நால்வருள் அந்தணர் ஓதலுந் தூதும் பற்றிப் பொருண் முடித்தலும், அரசர் பகைவயிற் பிரிவு பற்றிப் பொருண் முடித்தலும் உயர்ந்தவேளாளர்பகைவயிற் பிரிவு பற்றிப் பொருண் முடித்தலும் உழுதுண்பார் வாணிகத்தாற் பொருண் முடித்தலுங் கருத்து.

---

1. வாணிகர்க்கு ஓதிய பொருட்பிரிவே நால்வர்க்கும் உரித்து எனின்.

இவற்றுள் வேள்விக்குப் பிரிந்து சடங்கிற்கு உறுப்பாகியும் அதற்குக் குரவனுகியும் நிற்றல் உரிமையின் ஆண்டு வேள்வி செய்தான் கொடுத்த பொருள்கோடல் வேண்டுதலானும் அறங் கருதித் தூதிற் பிரிவினும் அவர் செய்த பூசனை கோடல் வேண்டு மாகலானும் அவை அந்தணர்க்குப் பொருள் வருவாயாயிற்று· வேள்விக்குப் பிரிதல் ஓதற்பிரிவின் பகுதியாயிற்று.

உதாரணம் :

''நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தா
மஞ்சி தாங்கே யணங்காகு மென்னுஞ்சொ
லின்றீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள
புதுவது பன்னாளும் பாராட்ட யானு
மிதுவொன் றுடைத்தென வெண்ணி யதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண் டென்றோட் கனவுவா ராய்கோற்
றொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ
விடுமருப் பியானை யிலங்குதேர்க் கோடு
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்றெஞ்
செய்பொருண் முற்று மளவென்றா ராயிழாய்
தாமிடை கொண்ட ததுவாயிற் றம்மின்றி
யாமுயர் வாமு மதுகை யிலமாயிற்
றொய்யி றுறந்தா ரவரெனத் தம்வயி
னொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் னுயிர்''. (கலி 24)

இதனுள் 'நடுநின்' றென்றதனான் இருபெரு வேந்தரையுஞ் சந்து செய்வித்தற்கு யான் நடுவே நிற்பலென்று, "எஞ் செய் பொருள் முற்றுமள' வென்றதனான் அது முடிந்த பின்னர் யாம் பெருதற்குரியவாய் அவர் செய்யும் பூசனையாகிய பொருண் முடியுமளவுமென்றும், அந்தணன் பொருள்வயிற் பிரியக் கருதிக் கூறிய கூற்றினை அவன் தலைவி கூறியவாறுணர்க இதனைக் 'கடிமனைகாத்' தென்றதனை இல்லறமாகவும், 'ஓம்ப, வென்ற தனைச் செந்தீயோம்பவென்றுங் கொள்க.

''நன்கலங் களிற்றொடு நண்ணா ரேந்தி
வந்துநிறை கொடுத்து வணங்கினர் வழிமொழிந்து'',
(அகம்-124)

என்புழி, கலந்திறை கொடுத்தோ ரென்றலிற் பகைவயிற் பிரிவே பொருள் வருவாயாயிற்று. ஒழிந்தனவும் இவ்வாறே உய்த்துணர்க.

மேலோர் முறைமை ஏனோர்க்கு முரித்தே என்னாது நால்வர்க்கு முரித்தே என்றது முற்கூறிய வணிகரை யொழிந்த இருவகை வேளாளரையுங் கூட்டியென் றுணர்க. அவர் பொருள் வயிற் பிரிந்தனவுஞ் சான்றோர் செய்யுட்களை நோக்கி உய்த்துணர்ந்து கொள்க. அவர்களுள் உழுதுண்பார்க்குக் கலத்திற்பிரிவும் உரித்து. ஏனையோர்க்குக் காலிற் பிரிவே உரித்தென் றுணர்க

பாரதியார் 29. மேலோர் ............. உரித்தே.

கருத்து : இது, வேந்தர்க்கும் வேந்தரொடு சிவணிய சிறப்பின் ஏனோர்க்கும் உரிய பிரிவெல்லாம் அடியோர் கீழோ ரல்லா நானில மக்களனைவர்க்கும் உரியவென் றுணர்த்துகின்றது

பொருள் : மேலோர் முறைமை — மேலே வேந்தனென்றும் வேந்தனொடு சிவணிய ஏனோரென்றும் மேவிய சிறப்பினே னோரென்றும் குறிக்கப்பட்ட மேலோர்களுடைய பிரிவு பற்றிய மரபெல்லாம் நால்வர்க்கு முரித்தே — தமிழகத்தில் நானில மக்களுக்கும் ஒப்பவுரியன.

குறிப்பு : மேலோர் பிரிவு ஓதல் தூது, காவல் பற்றியா மென்பதும் மேலிரு சூத்திரங்கள் குறித்தன. இதற்குப் பிறர் கூறும் வேறுபொருள்கள் சூத்திரக் கருத்தன்மை, இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் இச்சூத்திரத்திற்குத் தம்முள் மாறுபட வுரை கூறுதலான் விளங்கும். மேலோர் வேரென்பர் இளம்பூரணர் வணிகரென்பர் நச்சினர்க்கினியர் தேவரைப்பற்றிய குறிப்பு ஈண்டு வேண்டப்படாமையானும் நான்கு வருணத்தாருள் வணிகர் மேலோராகா மூன்றாம் வகுப்பினரே யாதலானும், இவ்விருரையும் சூத்திரக் கருத்தோடு மாறுபடும். அது போலவே, நால்வர் என்பதை நான்கு வருணத்தார் என்று இளம்பூரணரும், வணிகரை விலக்கி வேளாளரை இருவகையராக்கி அந்தணரரசரோடு கூட்டி நால்வர் என நச்சினார்க்கினியரும், தம்முள் மாறிக் கூறுவதும்

அவ்விரு கூற்றும் தொல்காப்பியர் கருத்தன்மை காட்டும். தமிழகம் முல்லை முதலிய நானிலமாகத் திணைபற்றிப் பகுக்கப் படுமென்று மேலே 2, 5 ஆம் சூத்திரங்களிலும், அந்நானில மக்களும் திணைதொறு மரீஇய திணைநிலப்பெயரொடு அகத் துறைகளில் கிழவராவரென 20, 21 ஆம் சூத்திரங்களிலும் விளக்கியிருப்பதால், ஈண்டு நால்வரென்பது அந்நானில மக்களையே குறிக்கும். அந்நானிலத்தும் அடியோர் முதலிய கீழோரும், வேந்தர் வேந்தரொடு சிவணிய ஏனாதியர் முதலிய மேலோரும் உளராதலை, மேலே 23, 24, 26, 27, 28 ஆம் சூத்திரங்களில் இந்நூலார் விளக்கியுள்ளார். அதனால் இதில் மேலோரென்றும் நால்வரென்றும் குறிக்கப்படுவோர், இவ்வியலில் முன் விளக்கியுள்ள வேந்தரொடு சிவணியோரும் நானிலத் தமிழ் மக்களுமேயாவர். அந்நால்வகைத் தமிழ் மக்களும் வேந்தரொடு சிவணிய மேலோரொப்ப ஓதல் தூது காவல் மேற்கொள்வதும், அதுபற்றிப் பிரிதலும் மரபென்பது இதில் விளக்கப்பட்டது.

இனி யிவ்வாறன்றி 'நால்வர்' என்பது நான்கு வருணத்தார் என்றும், 'மேலோர்' என்பது அவருள் இருபிறப்பாளராய மேல்வகுப்பினர் மூவரென்றும் அல்லது அவருள்ளுஞ் சிறந்த சிறந்த பார்ப்பனரென்றும் பொருள் கொள்ளின் மேலோரெனப் படுவார் யாவரேயாயினும் அவரைநீக்கியபின் அவரொழிந்த வருண வகுப்பினர் நால்வராதல் கூடாமை வெளிப்படை, அதுவு மின்றி, ஆரியர் அறநூல்கள் கூறும் பிறப்புரிமைகளுடைய இடை யிரு வருணத்தார் என்றும் தமிழகத்து இல்லாமையானும், தொல் காப்பியர் தமிழ் மரபுகளையும் தமிழர் வழக்குகளையுமே தாம் கூறுவதாக வற்புறுத்துவதானும், அவ்வுரை தொல்காப்பியர் கருத்தன்றென்பது தேற்றமாகும்.

(1) பொருள் வயிற் பிரிவுக்குப் பாட்டு :

1. "வேய்மருள் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார்........................
— — — — — — — —
சுரம்புல்லென்ற ஆற்ற காடிறந்தோரே"

— மாமூலனார் (அகம்-1)

2. "நட்டோ ராக்கம் வேண்டியும் ஒட்டிய
நின்றோள் அணிபெற வரற்கும்
அன்றோ தோழி யவர்சென்ற திறமே"

பாலங்கொற்றனார் (நற்றிணை - 286)

3. "ஈதலுந் துய்த்தலு மில்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிக வெண்ணுதி அவ்வினைக்
கம்மா வரிவையும் வருமோ,
வெம்மை யுய்த்தியோ வுரைத்திசி னெஞ்சே"

– உகாய்குடிகிழார் (குறுந்தொகை 63)

(11) தூதுப்பிரிவுக்குச் செய்யுள் :

(2) "மிகைதணித தற்கரி தாமிரு வேந்தர்வெம் போர்மிடைந்த
பகைதணித் தற்குப் படர்தலுற்றார் நமா, பல்பிறவித
தொகை தணித்தற்கென்னை யாண்டுகொண்டோன் றில்லைச்
[சூழ்பொழில்வாய்
முகைதணிதற் கரிதாய் புரிதாழ்தரு மொய் குழலே"

— திருச்சிற்றம்பலக்கோவையார்.

(2) "இகலுமிரு வேந்தர்க் கிடையமரின் தீமை
அகலப் பொருத்த அகன்றார் — நகையாமே
காமப் பகைதணியக் கற்பின் மனைபொருந்தி
ஏம மெமக்கீயா தின்று"

சிவலிங்கனார்

இச்சூத்திரம் பொருள் வயிற் பிரிவானது அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்னும் நால்வர்க்கும் உரியது என்கின்றது.

(இ-ள்) மேல் ஓர் முறைமை — மேற் சூத்திரத்துச் சொல்லப் பட்ட பிரிவுகளுள் பொருள் வயிற் பிரிவு என்பது ஒன்றும், நால்வர்க்கும் உரித்து அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்னும் நால்வர்க்கும உரியதாகும் என்றவாறு.

மேலோர் என்பதை மேல் ஓர் எனப்பிரிக்கா மேற் சூத்திரத்துக் குறிக்கப்பட்ட முறைமைகளுள் ஒன்றாகிய பொருள் வயிற்பிரிவு முறைமை இதில் மேலோர் முறைமை எனப்பட்டது. மேலே சொல்லப்பட்டன அறவழி நிறுத்தும் காவற்பிரிவும் பொருள் வயிற்பிரிவும் ஆம்

தேவர் உருவ வழிபாடும் நானில மக்கள் அறநெறிப்படும் பிழைப்பின் பிழையாமற்காத்தல் என்பது பெரும்பாலும் அரசர்க்கே யுரியதாகும். அறநெறிகூறலால் அந்தணர்க்கும் உரியதாகும். மேற்சூத்திரத்தில் காவற்பிரிவும் பொருட்பிரிவும் கூறப்பட்டனவேயன்றி அவற்றுக்கு உரியார் யாவர் எனக்கூறப் படவில்லை அதனால் இச்சூத்திரத்தில் பொருள்வயிற்பிரிவு நால்வர்க்கும் உரித்து என்று கூறி ஏனைப்பிரிவாகிய காவற்பிரிவு அந்தணர் அரசர்க்கு உரித்து என்பது பெறவைத்தார். அடுத்து வரும் சூத்திரத்தில் காவற்பிரிவுக்குரியார் கூறுவார்.

**32. மன்னர் பாங்கிற் பின்னோர் ஆகுப** **(32)**

ஆ.மொ.இல.

All must follow the king in discharging
the duties of the state

பி.இ.நூ.

**நம்பி 76. இல. அக. 454, தொல் 187**

சிறப்புப் பெயர்பெறின் செப்பிய இரண்டும்
உறற்குரி மரபின ஒழிந்தோர் இருவர்க்கும்.

**முத்து. அக.50**

பெருமா னாற்சிறப்புப் பெயர் பெறினே
ஒழிந்தோர் இருவர்க்கும் உரிய ஆகும்.

## இளம்பூரணர்

**32. மன்னர் ... ... ... ... ஆகுப.**

இது, காவற் பகுதியாகிய முறை செய்வித்தற்கு உரிய மக்களை உணர்த்துதல் நுதலிற்று.

(இள்) மன்னர் பாங்கின் - மன்னர்க்குரிய பக்கத்திற்கு பின்னோர் ஆகுப - அவ்வாறு முறை செய்தற்கு அரசன்தான் சேறல் வேண்டாமையின், அதற்குரியராய் அவனது ஏவல் வழி வரும்) வணிகரும் வேளாளரும் உரியர் ஆகுப.

மன்னர்க்குரிய பக்கமாவது காவல்; அஃதாவது நெறியின் ஒழுகாதாரை நெறியின் ஒழுகப் பண்ணுதல்.

30. மன்னர் ... ... ... ... ஆகுப

நச்சினார்க்கினியர்

இஃது இறுதிநின்ற வேளாளர்க்கு இன்னுமோர் பிரிவு விகற்பங் கூறுகின்றது.

(இ-ள்) மன்னர் பாங்கின் -அரசரைச் சார்ந்து வாழும் பக்கத்த ராகி நிற்றல் காரணமாக; பின்னோர் ஆகுப - பின்னோரெனப் பட்ட வேளாளர் வரையறையின்றி வேந்தன் ஏவிய திறமெல்லா வற்றினும் பிரிதற்கு ஆக்கமுடையராகுப என்றவாறு

மன்னர் பின்னோரென்ற பன்மையான் முடியுடையோரும் முடியில்லாதோரும், உழுவித்து உண்போரும், உழுது. உண் போருமென மன்னரும், வேளாளரும் பலரென்றார். 'வேளாண் மாந்தர்க்கு' 'வேந்துவிடுதொழிலில்' என்னும் மரபியற் சூத்திரங் களான் வேளாளர் இருவகையரென்ப அரசரேவுந் திறமாவன பகைவர்மேலும் நாடு காத்தான் மேலுஞ் சந்து செய்வித்தன் மேலும் பொருள்வருவாய் மேலுமாம்.

அவருள் உழுவித்துண்போர் மண்டிலமாக்களுந் தண்டதி தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும் அழுந்தூரும் நாங்கூரும் நாவூரும் ஆலஞ்சேரியும் பெருஞ்சிக்கலும் வல்லமுங் கிழாரும் முதலிய பதியிற்றோன்றி வேளெனவும் அரசெனவும் உரிமை யெய்தினோரும், பாண்டிநாட்டுக் காவிதிப்பட்ட மெய்தினோருங், குறுமுடிக் குடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடியுடை வேந்தர்க்கு மகட் கொடைக்கு உரிய வேளாளராகும். "இருங்கோ வேண்மானருங்கடிப் பிடவூர்" எனவுஞ் சான்றோர் செய்யுட் செய்தார். உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி அழுந்தூர் வேளிடை மகட்கோடலும் அவன் மகனாகிய கரிகாற்பெருவளத் தான் நாங்கூர் வேளிடை மகட்கோடலுங் கூறுவார்.

இதனானே,

"பகடுபுறந் தருநர் பார மோம்பிக்
குடிபுறந் தருகுவை யாயின் (புறநா - 35)

எனவும்,

'ஞாலத்துக், கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பார மோம்பி" (பதிற்றுப்-13)
எனவுஞ் சான்றோர் கூறியவாறுணர்க.

உதாரணம் :-

வேந்தன் குறைமொழிந்து வேண்டத் தலைப்பிரிந்தார்
தாந்தங் குறிப்பின ரல்லரா லேந்திழாய்
கண்பனி வாரக் கலங்கல் பிரிவரோ
தண்பனி நாளே தளித்து"
எனவரும். (30)

பாரதியார்*

30. மன்னர் பாங்கிற்........ ஒத்தி னை.

கருத்து : இது மன்னரைப் பொருந்திச் சிறந்த வேந்தன் கிளைஞர் ஏனாதியர் முதலிய மேலோர்க்குமேல் 27, 28ஆம் சூத்திரங்களில் கூறிய பகை, காவல், பொருள் பற்றிய பிரிவு ஒழியப் பிற பிரிவுகள் கூறும் ஒழிபுச் சூத்திரமாகும்.

பொருள் : உயர்ந்தோர்க்குரிய - அடியோர் முதலிய கீழோ ரல்லாத சிறப்புடையோர் செய்தற்குப் பொருந்திய ; ஓத்தின் ஆன - கல்வியான் ஆம் பிரிவுவகை அனைத்துக்கும் ; மன்னர் பாங்கிற் பின்னோர் ஆகுப - மன்னர் சார்பில் அவரொடு சிவணிப் பின்னிற்போர் உரியராவர்.

குறிப்பு : பிரிவைந்தனுள் பொருளும் போரும் எல்லார்க்கும் பொது. ஓதலும் தூதும் அடியார் முதலிய கீழோரை விலக்கி மற்ற நானில மேன் மக்களுக்குரிய என்பதை மேல் 25, 26ஆம் சூத்திரங்கள் கூறின. நாடு காவற்பிரிவு மன்னரொடு சேர்ந்து

* இவர் கூறும் உரை ஆராயத்தக்கது. இதையும் அடுத்த சூத்திரத்தையும் ஒரு சூத்திரமாகக் கூறுவர்.

சிறந்தார்க்குரித்தென 28ஆம் சூத்திரமும், அக்காவற் பிரிவு நானில மேன் மக்களுக்கு முரித்தென 29ஆம் சூத்திரமும் பொழிந்தன. இனி, மன்னரொடு சிவணிச் சிறந்த மேலோர், மன்னர் பொருட்டுப் பகைமேற்கொண்டு பிரிதல் மேல் 27ஆம் சூத்திரத்திலும், காவலும் பொருளும் பற்றிப் பிரிதல் 28ஆம் சூத்திரத்திலும் கூறப்பெற்றனவாதலின், அம்மூன்று மொழியத் தூது முதலிய பிறவுயர்ந்தோர் வினைபற்றிய பிரிவனைத்தும் மன்னர் பாங்கிற் பின்னோராகிய அன்னவர்க்குரித்தாம் என்பதை இவ்வொழிபுச் சூத்திரத்தில் இந்நூலார் கூறினார். "அன்பு அறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப் பார்க்கின்றியமையாத மூன்று" என்பது வாய்மொழி. அதனால், மதிநுட்பம் நூலோருடைய உயர்ந்தோர்க்கன்றி மற்றையோர்க்குத் தூது போல்வன கூடாமை ஈண்டு விளக்கப்பட்டது.

இவ்வாறன்றி, இதனை இரண்டு சூத்திரமாகப் பிரித்து பிறவுரையாசிரியர்கள் கூறும் பொருள்கள் இந்நூலாரைக் கூறியது கூறும்குற்றத்திற் காட்படுத்தும். 'மன்னர் பாங்கிற் பின்னோராகுப' எனத் தனியே பிரித்து, அதற்குப் பிறர் கூறும் உரை மேலே 27, 28, 29, ஆம் சூத்திரங்களில் இந்நூலார் கூறியவற்றுள் அடங்குதலின், அஃதவர் கருத்தன்மை யறிக. அதுவேபோல், 'உயர்ந்தோர்க்குரிய. ஓத்தினான' என்பதைத் தனிச் சூத்திரமாக்கிப் பிறர் கூறும் பொருள், முன்' ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன' என்னும் சூத்திரங் கூறுவதிலடங்குமாதலின், அதுவும் அமைவதன்று. ஏடெழுதுவோரால் இவை பிரித்தெழுதப் பெற்று அதனால் பின் உரையாசிரியர்கள் தனிவேறு சூத்திரங்களாகக் கருதி மயங்கி இந்நூலாசிரியரின் முன் சூத்திரப் பொருளொடு பொருந்தாவாறு மாறுபடவுரை கூறியுள்ளார். அன்றியும் இரண்டாய்ப் பிரிப்பின் இரண்டும் பொருள் முடிபின்றிப் பொலிவிழக்கும்.

**33. உயர்ந்தோர்க்கு உரிய ஓத்தின் ஆன. (33)**

ஆ.மொ.இல.

Research studies belong to the people eminence.

இளம்பூரணர் :

**உயர்ந்தோர்க் குரிய ஓத்தினான**

இது வணிகர்க்கு உரியதொரு பிரிவு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உயர்ந்தோர்க்கு - மேல் அதிகரிக்கப்பட்ட பின்னோராகிய இருவகையோரிலும் உயர்ந்தோராகிய வணிகர்க்கு. ஓத்தினான உரிய - ஓதுதல் நிமித்தமாகப் பிரிதலும் உரித்து.

ஓத்துப் பலவாதலின் 'உரிய' என்றார். ஈண்டு ஓத்து என்பது வேதம்; அது நால்வகை வருணத்தினும் மூவர்க்கு உரித்தென்பது இத்துணையெனக் கூறப்பட்டது.

## நச்சினார்க்கினியம்

31. உயர்ந்தோர் .......... ஆன

இது நான்கு வருணத்தோர்க்கும் எய்தாத தெய்வித்தது

(இ-ள்) ஓத்தின் ஆன-வேதத்தினாற் பிறந்த வட நூல்களும் தமிழ் நூல்களும்; உயர்ந்தோர்க்கு உரிய-அந்தணர் அரசர் வணிகர்க்கும், உயர்ந்த வேளாளர்க்கும் உரிய என்றவாறு-

அவை சமயநூல்களும் ஒன்றற்கொன்று மாறுபாடு கூறு தருக்க நூல்களும் தருமநூல்களும் சோதிடமும் வியாகரணம் முதலியனவும் அகத்தியம் முதலாகத் தோன்றிய தமிழ் நூல்களுமாம். வேதந்தோன்றிய பின்னர் அது கூறிய பொருள்களை இவையும் ஆராய்தலின் ஓத்தென்பது வேதத்தையே யாதலின்.

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் அறவொழுக்கங்கள் உயர்ந்தோர்க்கு உரியது என்கின்றது.

(இ-ள்) நூல்களிற் சொல்லப்பட்ட ஒழுக்கங்கள் உயர்ந்தோர்க்கு உரியனவாம். மற்றையோர்க்கு இல்லை என்றவாறு

உயர்ந்தோராவார் 'ஓதலும்தூதும் உயர்ந்தோர் மேன 28) என்பதிற்கூறப்பட்டவர். ஓத்து-நூல். பாடப்படுவது பாட்டு என்பது போல் ஓதப்படுவது ஓத்து ஆயிற்று. 'ஆன' என்றது அதன் கூறப்படும் ஒழுக்கங்களை.

அடியோரும் வினைவலரும் ஏனோரும் தமக்கென ஒரு நெறியுடையரன்றி உயர்ந்தோர்வழி யொழுகுபர் ஆதலின் தம் விருப்பப்படி ஒழுகல் இயலாது இச்சூத்திரம் பிரிவு பற்றிய தன்று.

34. வேந்துவினை யியற்கை வேந்தன்[1]ஒரீஇய
ஏனோர் மருங்கினும் எய்துஇடன் உடைத்தே (34)

ஆ. மொ. இல.

Even those other than the thing may
do the duties of the king.

பி. இ. நா.

இறை 37, 38.

வேந்துவினை யியற்கை பார்ப்பார்க்கும் உரித்தே
அரசர் அல்லா ஏனை யோர்க்கும்
புரைவ தென்ப ஓரிடத் தான.

இளம்பூரணர்

34. வேந்துவினை..............உடைத்தே.

இது, வணிகர்க்கும் உரியதொரு பிரிவு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வேந்துவினை இயற்கை - வேந்தனது வினை இயற்கையாகிய தூது, வேந்தன் ஒரீஇய ஏனோர் மருங்கினும் வேந்தனை ஒழிந்த வணிகர்க்கும் வேளாளர்க்கும், எய்து இடன் உடைத்து - ஆகுமிடன் உடைத்து.

வேந்தனது வினை - வேந்தற்குரிய வினை 'இடனுடைத்து' என்றதனான் அவர் தூதாங்காலம் அமைச்சராகிய வழியே நிகழும் என்று கொள்க. [ஏகாரம் ஈற்றசை] (34)

---

1. வேந்தனின்—நச். பாடம்.

## நச்சினார்க்கினியர்

32. "வேந்துவினை............உடைத்தே"

இது மலய மாதவன்[1] நிலங்கடந்த நெடுமுடியண்ண லுழை நரபதியருடன்[3] கொணர்ந்த பதினெண்வகைக் குடிப்பிறந்த வேளிர்க்கும் வேந்தன்றொழில் உரித்தென்கிறது.

(இ-ள்) வேந்து வினை இயற்கை - முடியுடை வேந்தர்க் குரிய தொழிலாகிய இலக்கணங்கள்[4], வேந்தனின் ஒரீஇய ஏனோர் மருங்கினும் எய்துஇடன் உடைத்து - அம்முடியுடை வேந்தரை யொழிந்த குறுநில மன்னரிடத்தும் பொருந்தும் இடனுடையது என்றவாறு.

அவர்க்குரிய இலக்கணமாவன, தன் பகைவயிற் றானே சேறலுந் தான் திறைபெற்ற நாடுகாக்கப் பிரிதலும் மன்னர் பாங்கிற் பின்னோரெனப்பட்ட வேளாளரை ஏவிக்கொள்ளுஞ் சிறப்புமாம்.

உதாரணம்

"விலங்கிருஞ் சிமயக் குன்றத் தும்பர்
வேறுபன் மொழிய தேஎ முன்னி
விண்ணசைஇப் பரிக்கும் உரன்மலி நெஞ்சமொடு
புண்மா ணெஃகம் வலவயி னேந்திச்
செலன் மான் புற்ற". (அகம் 215)

என்புழி வேறு பன்மொழிய தேஎத்தைக் கொள்ளக் கருதிப் போர்த்தொழிலைச் செலுத்தும் உரன்மிக்க நெஞ்ச மென்றலின், இது குறுநில மன்னன் தன் பகைவயின் நாடு கொள்ளச் சென்றதாம்; வேந்தனெனப் பெயர் கூறாமையின். "பசைபடு பச்சை நெய்தோய்த்து" என்றலிற்றானே குறுநில மன்னன் சென்றதாம். ஏனை வந்துழிக் காண்க. (32)

---

1. அகத்தியன்
2. கண்ணன்
3. நரபதி—அரசர்
4. இயற்கை என்பதை இலக்கணங்கள் என்றார்.

பாரதியார்

31. வேந்துவினை ................ உடைத்தே

கருத்து : இது, முடியுடைய வேந்தரல்லாத குறுநில மன்னர்க்குப் பிரிவுவகை கூறுகின்றது.

பொருள் : வேந்துவினையியற்கை—முடிமன்னரின் பிரிவுக்குரிய வினைபியல்பு : வேந்தனின் ஒரீஇய—அவ்வேந்தரின் வேறாய ; ஏனோர் மருங்கினும்—பிறவேளிர் முதலான குறுநில மன்னரிடத்தும் ; எய்திடனுடைத்தே-பொருந்துதல் உரித்தாகும்.

குறிப்பு : ஈற்றேகாரம் அசை.

குறுநில மன்னர் பிறநாடு கொள்ளப் போர்மேற் செல்லும் பிரிவுக்குப் பாட்டு :

''விலங்கிருஞ் சிமையக் குன்றத் தும்பர்
வேறுபல் மொழிய தேஎம் முன்னி
விண்நசைஇப் பரிக்கும் உரன்மலி நெஞ்சமொடு
புணமாண் எஃகம் வலவயி னேந்திச்
செலமாண் புற்றநும் வயின்வல்லே
வலனா கென்றலும் நன்றுமற் றில்ல
—இறங்கு குடிக்குன்ற நாடன் (அகம்—215)

இவ்வாறே மற்றைப் பிரிவுகளும் வந்துழிக்கண்டு கொள்க.

35. பொருள் வயிற் பிரிதலும் அவர்வயின் உரித்தே[1] (35)
36. உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத்தான்[2] (36)

ஆ.மொ.இல.

(முன் சூத்திரத்தையும் இணைத்துக் காண்க)

Separation for earning wealth belongs to them if they are after the wealth of the superior order.

பி.இ.நா.

இறை 39

வேந்தர்க் குற்றுழிப் பொருட்பிணிப் பிரிவு என்று ஆங்க இரண்டும் இழிந்தோர்க்குரிய.

---

1, 2 இவ்விரு சூத்திரங்களையும் ஒரு சூத்திரமாகக்கொள்வர் நச்சினார்க்கினியரும் பாரதியாரும்.

## இளம்பூரணர்

35. **பொருள்வயின்......... உரித்தே.**

இதுவும் அது.

(இ-ள்) பொருள் வயின் பிரிதலும் அவர்வயின் உரித்து-பொருள் வயிற்பிரிவும் மேற் சொல்லப்பட்ட வணிகர் வேளாளரிடத்தில் உரியதாகும் [ஏகாரம் ஈற்றசை]

36. **உயர்ந்தோர்......... தான**

இஃது அந்தணர் பொருட்டுப் பிரியுந்திறன் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத்தான-உயர்ந்தோராகிய அந்தணர் பொருள்வயிற் பிரியுங்காலத்து ஒழுக்கத்தானே பிரிய.

இதனாற் சொல்லியது, வணிகர்க்கும் வேளாளர்க்கும், வாணிகம் முதலாயின பொருணிமுத்தம் ஆகியவாறு போல அந்தணர்க்கு இவை பொருணிமித்தம் ஆகா என்பதூஉம், அவர்க்கு இயற்கையொழுக்கமாகிய ஆசாரமும், செயற்கையொழுக்கமாகிய கல்வியுமே பொருட்டு காரணமாம் என்பதூஉம் கண்டவாறு. [ஈற்றகரம் சாரியை] (36)

## நச்சினார்க்கினியர் *

33. **பொருள்வயிற்......... தான**

இஃது அக்குறுநில மன்னர்க்குப் பொருள்வயிற் பிரிதலும் உரியவென்கிறது.

(இ-ள்) பொருள் வயினும் - தமக்குரிய திறையாகப் பெறும் பொருளிடத்தும்; உயர்ந்தோர் ஒழுக்கத்துக்கு ஆன பொருள் வயினும்-உயர்ந்த நால்வகை வருணத்தார்க்குரிய ஒழுக்கத்திலேயான ஒத்திடத்தும்; பிரிதல் அவர்வயின் உரித்து - பிரிந்து சேறல் அக்குறுநில மன்னரிடத்து உரித்து என்றவாறு.

---

* உரை பொருந்துமாறு ஆய்க.

பொருள்வயிற்பிரிதல் பொருள் தேடுகின்ற இடத்தின் கண்ணென வினைசெய்யிடமாய் நின்றது. உயர்ந்தோர்க்குரிய வோத்தினான் என்று அவ்வோத்தினை அவரொழுக்கத்திலேயான பொருளென்றார்; அச்சூத்திரத்திற் கூறிய ஓதற்பிரிவே இவர்க்கும் உரித்தென்று கொள்க. இவற்றுக்குச் சான்றோர் செய்யுட்களுள் வழிப்பொருள் படுமாறு உய்ந்துணர்ந்து கொள்க.

## பாரதியார்

### 32. பொருள்வயின் ... ... ... ... ஒழுக்கத்தான

கருத்து : இது மேலதற்கோர் புறனடை; குறுநில மன்னர்க்குப் பொருட்பிரிவும் உண்டென்று கூறுகின்றது.

பொருள் : பொருள் வயிற்பிரிதலும்—பொருள் பற்றிய பிரிவும்; அவர்வயினுரித்தே—மேற்குறித்த குறுநில மன்னர் களுக்குரியதாகும்; உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத்தான— பொருள்பற்றி உயர்ந்தோரின் ஒழுக்கத்தொடு பட்டவிடத்தில்.

குறிப்பு :- வேந்தரனைய குறுநில மன்னர்க்குத், தற்பேணல் முதலிய பொதுவற மாற்றும் பொருட்டு பொருட்பிரிவு பொருந் தாது; காடு திருத்தி நாடாக்கல், குளந்தொட்டுக் கோயிலெடுத் தல், படை பேணி நாடாளல் போன்ற மேலொழுக்கம் பற்றி அஃதமையும் எனக்குறித்தல் இதன் கருத்தாகும். வேந்தர் வினையனைத்தும் குறுநில மன்னர்க்குப் பாலைத்திணையில் உரியவாகும் என மேலே குறிக்கப்பட்டமையால், வேந்தனுக்கு விலக்கப்பட்ட பொருள்வயிற் பிரிவு குறுநில மன்னர்க்கும் விலக்கோ எனுமையமகற்றி அவர்க்கது கடிவரையின்று என்பதை இந்நூலார் இச்சூத்திரத்தால் விளங்க வைத்தார்.

"அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்."

(கலி-11)

என்னும் பாலைக்கலியடிகள் இச்சூத்திரத்தை விளக்குவதறிக.

மேல் 'பெயரும் வினையும்' என்னும் 20 ஆம் சூத்திர முதல் இது வரையுள்ள சூத்திரங்களால், தொல்காப்பியர் தமிழகத்தில் அகத்திணைக்குரியாரை வகைப்படுத்திக் கூறினார். நானில

மக்களும் எல்லாத்திணைக்கு முரியரென்பதை 'ஆயர்வேட்டுவர்' ஏனோர் பாங்கினும் என்னும் 21, 22 ஆம் சூத்திரங்களில் விளக்கினார். அவரைப் போலவே, அடியோர், வினைவலர், ஏவலர், ஏவலரனையவர் ஆகிய கீழோர் நால்வரும் அகத் திணைகளுக்குரிமை கொள்வரென்பது 'அடியோர் பாங்கினும்', ஏவன் மரபின் என்னும் 23, 24 ஆம் சூத்திரங்களில் விளக்கப் பட்டது. பிறகு அகத்திணையைந்தனுள் சிறந்த பாலைத் திணையின் வகைகளும், அவை பற்றிய பிரிவுகளுக்குரியார் வகைகளும், 'ஓதல் பகையே' என்னும் 25 ஆம் சூத்திர முதல் 'பொருள்வயிற் பிரிதலும்' என்னுமிச் சூத்திரம் வரை விளக்கப் பட்டன. அவற்றுள் 25, 26, 29 ஆம் சூத்திரங்கள் நானில மக்களைப் பற்றியும், 27, 28, 30 ஆம் சூத்திரங்கள் வேந்த னையும் வேந்தனோடு பொருந்திய ஏனோரையும் பற்றியும், 31, 32 ஆம் சூத்திரங்கள் வேந்தர் குடியில் வாரா ஏந்தல்களான குறுநில மன்னரைப் பற்றியும் கூறுகின்றன. இதனால் தொல் காப்பியர் காலத் தமிழகத்தில், அகத்திணையொழுக்கம் மேற் கொண்டவர் அடியோர் முதலிய கீழோரும், நானில மக்களும், மூவேந்தரும், வேந்தரைச்சார்ந்து சிறந்த ஏனோரும், வேந்தர் குடிவாரா நாடாட்சி கொண்ட குறுநில மன்னருமாய் அனைவரு மடங்குவரென்பது தேற்றம். தமிழ் நாட்டில் முடிவேந்தர் மூவரே யாவர் என்பது "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப் பின்" என்னும் தொல்காப்பியர் செய்யுளியற் சூத்திரத்தானும் "போந்தை, வேம்பே ஆரெனவரூஉ மாபெருந்தானையர் மலைந்த பூவும்" என்னும் புறத்திணையியற் சூத்திரத்தானும் பண்டைப்பாட்டுக்களானும், விளக்கமாகும்.

## சிவலிங்கனார்

### பொருள்வாயின் ... ... ... ஆன

உயர்ந்தோர் மேற்கொள்ளும் பொருள்வயிற் பிரிவின் ஒழுக்கத்திடமாகப் பொருள்வயிற் பிரிதலும் குறுநில மன்னர்க்கு உரியதாகும்.

பொருள்வயிற் பிரிதலும் என்பதன் உம்மை மற்றைப்பிரிவு களைத்தழுவியது.

37. முந்நீர் வழக்கம் மகடூஉவொடு இல்லை. (37)

ஆ. மொ. இல.

Voyage is not undertaken with the wife

பி. இ. நா.

நம்பி. 84, 85

புலத்திற் சிறந்த புரிநூல் முதல்வர்க்குக்
கலத்திற் சேறல் கடனன் றென்ப
வலனுயர் சிறப்பின் மற்றை மூவர்க்கும்
குலமட மாதரொடு கலமிசைச் சேறலும்
பாசறைச் சேறலும் பழுதென மொழிப

இல. வி. அ. 80, 81
ஷை ஷை

இளம்பூரணர்

37. முந்நீர் வழக்கம்.........இல்லை

இதுவும், பொருள்வயிற் பிரிவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை - (ஈண்டு அதிகரிக்கப்பட்ட பிரிவு காலிற் பிரிவும் கலத்திற் பிரிவும் என இருவகைப்படும்: அவற்றுள்) கலத்திற் பிரிவு தலைமகளுடன் இல்லை.

எனவே, காலிற்பிரிவு தலைமகளை உடன்கொண்டு பிரியவும் பெறும் என்றவாறாம். கலத்திற் பிரிவு,

தலைமகளை ஒழியப் பிரிந்தமைக்குச் செய்யுள்.
" உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ
இரவும் எல்லையும் அசைவின் றாகி
விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்

கோடுயர் திணிமணல் அகன்துறை நீகான்
மாட ஒள்ளெரி மருங்கறிந்து ஒய்ய
ஆள்வினைப் பிரிந்த காதலர் நாள்பல
கழியா மையே அழிபடர் அகல
வருவர் மன்னால் தோழி தண்பணைப்
பொருபுனல் வைப்பின் நம்மூர் ஆங்கண்
கருவிளை முரணிய தண்புதல் பகன்றைப்
பெருவளம் மலர அல்லி தீண்டிப்
பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்
கூதளம் மூதிலைக் கொடிநிரைத் தூங்க
அறன்இன் றலைக்கும் ஆனாவாடை
கடிமனை மாடத்துக் கங்குல் வீசித்
திருந்திழை நெகிழ்ந்து பெருங்கவின் சாய
நிரைவளை ஊருந் தோளென
உரையொடு செல்லும் அன்பினர்ப் பெறினே.''

(அகம் - 255)

எனவரும், காலிற் பிரிவுக்கு உதாரணம் வந்துழிக் காண்க.

## நச்சினார்க்கினியம்

**34. முந்நீர்............இல்லை**

இது முற்கூறிய ஓதல் பகை தூது காவல் பொருள் என்ற ஐந்தனுட் பகையுங் காவலும் ஒழிந்தவற்றுக்கு ஓரிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) ஓதலுந் தூதும் பொருளுமாகிய மூன்று நீர்மை யாற் செல்லுஞ் செலவு தலைவியோடு கூடச் சேறலின்று என்றவாறு.

தலைவியை உடன்கொண்டு செல்லாமை முற்கூறிய உதாரணங்களிலும் ஒழிந்த சான்றோர் செய்யுட்களுள்ளுங் காண்க. இதுவே ஆசிரியர்க்குக் கருத்தாதல் தலைவியோடு கூடச் சென்றாராகச் சான்றோர் புலனெறிவழக்கஞ் செய்யாமை யான் உணர்க.

இனித், தலைவி கற்பினுட் பிரிவாற்றாது எம்மையும் உடன் கொண்டு சென்மினெனக் கூறுவனவுந் தோழி கூறுவனவுஞ் செலவழுங்குவித்தற்குக் கூறுவனவென்று உணர்க. அக்கூற்றுத் தலைவன் மரபு அன்றென்று மறுப்பன 'மரபுநிலை திரியா' என்பதனுள் அமைந்தது.

இனி, இச்சூத்திரத்திற்குப், 'பொருள்வயிற் பிரிவின்கட் கலத்திற்பிரிவு தலைவியுடன் சேரவில்லை; எனவே, காலிற் பிரிவு தலைவியுடன் சேறல் உண்டு' என்று பொருள் கூறுவார்க்குச் சான்றோர் செய்த புலனெறி வழக்கம் இன்மை உணர்க. இனி, உடன் கொண்டு போகுழிக் கலத்திற் பிரிவின்று; காலிற் பிரிவே யுளதென்பாரும் உளர்.

பாரதியார்

33. முந்நீர் ........ இல்லை

கருத்து: இது, பெண்டிரொடு கடல் கடத்தல் தமிழ் மரபன்று என்று கூறுகின்றது.

பொருள்: மகடூ உவோடு முந்நீர் வழக்கம் இல்லை— பெண்ணொடு கடலேறிச் செல்லுதல் மரபன்று.

குறிப்பு: வழக்கம் என்பது செல்லுதற் பொருட்டாதல் "ஆள் வழக்கற்ற சுரத்திடை" (அகம் 51) என்ற பெருந் தேவனார் அகப்பாட்டடியானும், 'யாவரும் வழங்குநரின்மையின்' என்னும் மாமூலர் அகப்பாட்டடியானும், "மான்றமாலை வழங்குநர்ச் செகீஇய, புலிபார்த்துறையும் புல்லதர்ச் சிறுநெறி" என்னும் பூதனார் நற்றிணைப் பாட்டடியானும். 'வளிவழங்கும்' என்னும் குறளடியானுமறிக.

இனி, 'முந்நீர்' என்பது கடலுக்கு இயற்பெயராதல் வெளிப் படையாகவும், அச்செம் பொருளை விட்டு, மூன்று நீர்மையாற் செல்லுஞ் செலவு என்று பொருள் கூறும் நச்சினார்க்கினியர் உரை எவ்வகையானும் பொருந்துவதன்று. அவர் கூறுமாறு ஓதல், தூது, பொருள் காரணமாக மட்டும் தலைவன் தலைவியை உடன் கொண்டு செல்லுதல் கடியப்படுமெனின் மற்றும் பகை காவல் முதலியவற்றில் தலைவியோடு கூடச் சேறல் உண்டு எனக் கொள்ளல் வேண்டும். ஓதல் தூது பொருள் பற்றித் தலைவியை உடன் கொண்டு செல்லுதலினும், பகை பிறநாடு காவல் பற்றிய செலவுகளில் அவளைக்கொண்டு செல்லுதலால் வரும் ஏதம் பெரிதாகலானும், பின்கற்பியலில் "எண்ணரும் பாசறைப் பெண்ணோடும் புணரார்" என பகையில் பெண்ணோடு சேறல் கடியப்படுதலானும், அவ்வாறு போர் காவல்களில்

தலைவியோடு செல்லும் வழக்குண்மை சான்றோர் செய்யுட்களில் யாண்டும் பயிலாமையானும், அவ்வுரை சூத்திரக் கருத்தன்மை தேற்றமாகும்.

இனி, ஓதல், பகை, தூது, பொருள், காவல் அனைத்தும் பிரிவு வகைகளே யாதலானும், பிரிவு தலைமக்கள் தம்முள் பிரிதலையே குறிக்குமாதலானும், இப்பிரிவைந்தனுள் எதுபற்றியுந் தலைமகன் தலைவியுடன் செல்லுமாறில்லை யென்பது தேற்றம். அதனாலும் நச்சினார்க்கினியர் கூறும் பொருள் இந்நூலார் கருத்தாகாமை பெறப்படும்.

பின், இச்சூத்திரம் கூறுவது யாதெனின், அன்பினைந்திணை களுளெதனினு மடங்காதனவும் அகவொழுக்கத்திற்கு உரிப் பொருளா யமைவனவுமான களவில் உடன்போக்கும், கற்பில் ஏற்புழி மனைவியுடன் சேறலும் தமிழ் மரபென்பதும், அவ்வாறு செல்லுங்கால் பெண்டிரொடு கடல் கடத்தல் மரபன் றென்பதுமே யாம். இவற்றுள் முன்னது 'கொண்டுதலைக் கழியினும்' என்னும் இவ்வியல் 15ஆம் சூத்திரத்தானும் பின்னது 'மரபு நிலை திரியா' என்னும் இவ்வியல் 45-ஆம் சூத்திரத்தானும் அமையும்.

(i) களவில், கொண்டுதலைக் கழிதலுக்குச் செய்யுள் :

''அழிவில முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர யாழ......
— — — — — —
நிழல் காண் டோறும் நெடிய வைகி
மணல்காண் டோறும் வண்டல் தைஇ
வருந்தா தேகுமதி, வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்
நறுந்தண் பொழில கானம்
குறும்பல் லூரமாஞ் செல்லு மாறே.

— பாலை பாடிய பெருங்கடுங்கோ
(நற்றிணை-9)

(ii) கற்பில் தன்னை உடன்கொண்டு செல்லக் கொழுநனை மனைவி வேண்டற்குச் செய்யுள் :

''தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரம்

கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றால்
என்னீ ரறியாதீர் போல விவைகூறி
னின்னீர வல்ல நெடுந்தகாய் எம்மையும்
அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ வெமக்கு

(பாலைக்கலி-6)

38 எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்
பொற்புடை நெறிமை இன்மை யான (38)

ஆ.மொ.இல.

In any aspect of love the lady-love cannot have the right of riding on the horse made of palmyra-stem.

இளம்பூரணர்

38. எத்திணை மருங்கினும்..... யான

இத்துணையும் பாலைக்குரித்தாகிய பிரிவிலக்கணம் கூறினார்; இது கைக்கிளை பெருந்திணைக்கு, உரிய இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) எத்திணை மருங்கினும்-எல்லாக் குலத்தினிடத்தினும் மகடூஉ மடல்மேல் (இல்லை) - பெண்பால் மடலேறுதல் இல்லை ; பொற்புடை நெறிமை இன்மையான - பொலிவுபெற நெறிமை இல்லாமையான்.

'மடன்மேல்' என்பது மடலேறுதல் என்னும் பொருள் குறித்தது. இல்லை என்பது மேலைச் சூத்திரத்தினின்று தந்துரைக்கப்பட்டது. 'பொற்புடை நெறிமை' என்பது பெண் பாற்கு இன்றியமையாத நாணம் முதலாயின.மகடூஉ மடலேறுதல் உண்டு என்பது பெற்றாம் இது, "புணரா இரக்கமாகிய கைக் கிளைக்கும், "தேறுதலொழிந்த காமத்து மிகுதிறன்" (அகத்-51) ஆகிய பெருந்திணைக்கும் உரித்தாகியவாறு கண்டு கொள்க.

[ஈற்றகரம் சாரியை]

## 35. நச்சினார்க்கினியர்

35. **எத்திணை......யான**

இஃது இத்துணையும் பாலைக்கு உரிய இலக்கணங் கூறி, மகடூஉ அதிகாரப் படுதலிற் பெருந்திணைக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) எத்திணை மருங்கினும் - கைக்கிளை முதற் பெருந் திணையிறுவாய் ஏழன் கண்ணும்; மகடூஉ மடல்மேல் நெறிமை — தலைவி மடலேறினாளாகக் கூறும் புலனெறி வழக்கம் ; பொற் புடைமை[1] இன்மையான - பொலிவுடைமையின்று ; ஆதலான் அது கூறப்படாது எ-று

"கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்" (குறள் 1137)
எனவரும்.
"கடலன்ன காமத்த ராயினும் பெண்டிர்
மடலூரரார் மைந்தர்மே லென்ப — மடலூர்தல்
காட்டுகேன் வம்மின் கலிவஞ்சி யார்கோமான்
வேட்டமா மேல்கொண்ட போழ்து"
என்றாராலோவெனின் இது மடலேற்றன்று ; ஏறுவல்லெனக் கூறிய துணையேயாம்.

## பாரதியார்

34. **எத்திணை..........யான**

கருத்து : இது, மகளிர்க்கு மடலேற விரும்புதலும் முறை யன்று என விலக்குதல் நுதலிற்று. இதுவும் பெண்ணியல் கூறும் பெற்றித்தாகலின், மகளிர்க்கு முந்நீர் வழக்கம் மறுக்கும் இச் சூத்திரம் அமைக்கப்பட்டது.

பொருள் : எத்திணை மருங்கினும் - அகத்திணை ஏழனுள் எதன் கண்ணும் ; மகடூஉ மடன்மேல் — தலைவி மடலேற விரும்புதல் ; பொற்புடை நெறிமை யின்மையான — அழகிய முறைமை இல்லை.

---

1. இன்மை என்பதிலுள்ள 'மை' இதற்குக் கூட்டப்பட்டது.

குறிப்பு : எத்திணை மருங்கினும் என்றார் ; அன்பினைந் திணைப் பகுதியில் ஆடவர்போல் பெண்டிர் மடல் விரும்புதல் அமையாமை மட்டுமன்று ; பெருந்திணையினும் ஏறிய மடற்றிறம் ஆடவர்க்கன்றி, புலனெறி வழக்கில் மகளிர்க்குக் கூறுவது வழக்காறில்லை என்பதை வற்புறுத்துதற்கு மேவல்-மேல் இடைக் குறை. ஐந்தாம் பரிபாட்டிலும் மலைபடு கடாத்திலும் ஆரல் — ஆல் ஆனதுபோல. மேவல், விருப்பப் பொருட்டு. ''நம்புமேவு நடைசாகும்மே'' (தொல்-சொல், உரிசூத்-33) பேரிசை நவிர மேஎயுரையும்'' என்னும் மலைபடு கடாத்தடியுங் காண்க. 'இல்லை' எனஒரு சொல்லை வருவித்து, 'ஆன' என்பதைக் காரணக் குறியாக்கி, பெண்பால் மடன் மேவவில்லை ; பொலிவு பெறும் நெறிமை இல்லாமையால், என இளம்பூரணர் கொண் டாங்குக் கொள்ளலும் தள்ளும் தன்மைத்தன்று எவ்வாற்றானும் மடலேறுதல் எனப்பொருள் கொள்ளுதல் பொருந்தாது ஆடவர்க்குமே மடலேறுதல் பொற்புடை நெரிமைக்கு மாறாக, ''நோந்திறத்தின் பாற்பட்ட காதலற்ற கழிகாமப்பழி பிறக்கும் இழிதகவுடைய பெருந்திணையின் பாற்படும் என்பது ''ஏறிய மடற்றிறம் பெருந்திணைக் குறிப்பே'' என்னும் சூத்திரத்தானும் வலுயுறும் மடல் ஏறாமல், மடல் ஊர்வேன் எனக் கூறுதலும் ஆடவர்பால் பொற்புடை நெறியாக்காமல் ஓரோவிடத்துப் புலநெறி வழக்கில் அமைத்துக் கொள்ளப்படுகிறது 'மடன்மா கூறும் இடனுமாருண்டே'' எனுந் தொல்காப்பியச் சூத்திரத்தால் மடன்மா கூறுவதும் ஆடவரளவிலும் நன்மரபாகாமல், ஓராங்கு மரபு வழுவமைதியாக மட்டும் கொள்ளப்படும் தமிழ் வழக்குத் தெளிக்கப்பட்டது அதன் காரணமும் எளிதில் அறியப்படும். ''ஊரறிய ஏறிய மடற்றிறம்'' ஆடவருக்கும் பொருந்தாக்காமமாம் பெருந்திணை எனக் கடியப்படுகிறது ஏறாமல் தனியிடத்தே மடலூர்வேன் என மட்டும் தலைமகன் ஓரோவழிக் கூறுதல் அமைத்துக் கொள்ளப்பட்டது ; ஏனெனில் தலைவன் தன் காதற் பெருக்கை விளக்குமள விற்றாகி, தலைவியின் உறு துணையாம் தோழிக்கு அவன் தனித்துத் தலைவியின் இன்றி யமையாமையை வெளியுறுத்தும் கருத்துடைமை காட்டும் கருவி யாக்குதலால், மடன்மா கூறுதல் அகப்பகுதியில் ஆண்மகனுக்கு மரபு வழுவமைதியாக மட்டும் ஆளப்படும். இப்புலனெறி வழக்கு மறுத்ததற்கில்லை என்பதைத் தொல்காப்பியர், ''மடன்மா கூறுமிடனு மாருண்டே' என்று கூறி, உம்மையாலும் ஏகாரத் தாலும் அதுவும் நன்மரபன்றென்பதை இனிதுபெற விளக்கினார்

ஆதலால் மடலேற அவாவுதல் ஒருவாறு ஆடவர்க்கு மரபு வழுவமைதியாக மட்டும் அமையுமெனக் காட்டும் ஆசிரியர், மகளிர்க்கு யாண்டும் பொற்புடை நெறியமையாகாது என்பதைச் சூத்திரத்தால் விலக்குவாரானார். இதுவே தமிழ் மரபென்பது :

"கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்" என்னும் குறளாலும்
"அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல்
மன்னும் மடலூரார் என்பதோர் வாசகமும்
தென்னுரையிற் கேட்டறிவதுண்டு-அதனையாம் தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்"

என்னும் திருமங்கை யாழ்வாரின் பெரிய திருமடலின் அடிகளாலும் தெளியப்படும். மடலேறாப் பெண்ணிற் பெருந்தக்க தில்" என்பதும் தலைவன் கூற்றேயாகலானும் மடல் ஊர்வேனென்று தலைவி கூறுதலாக யாண்டும் ஆன்றோர் செய்யுள் செய்யாமை யானும், மடல் ஏறும் விருப்பமும் மகளிர்க்குப் பொற்புடை நெறியாகாமை தேறப்படும். மேலும்

"உடம்பும் உயிரும் வாடியக் காலும்

......... ................ ..................... ...

கிழவோர் சேர்தல் கிழத்திக் கில்லை"

என்னும் பொருளியற் (10) சூத்திரத்தால் மணந்து கணவனுடன் வாழும் மனைவியும் கணவனுக்குமே தன் காதலைக் கரத்தலே பெண்ணியல்பென வலியுறுத்தப்படுகின்றது. தனியிடத்துக் கொண்ட கணவனுக்கும் கரத்தற்குரிய தன் காதலை ஊரறிய மடலேறிப்பறை அறைவேனெனல், நாணொடு நிறையைப் பூணாகக் கொண்ட பெண்டகைமைக்கு முற்றிலும் இயைபற்ற தாகும். இதனாலன்றோ,

"காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்
நாணும் மடனும் பெண்மைய ஆதலின்
குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை
நெறிப்பட வாரா அவள்வயி னான"

எனுங் களவியற் (17) சூத்திரத்தால் தொல்காப்பியர், களவில் தலைவியரிடம் கடலன்ன காமவேட்கை குறிப்பானன்றி நெறிப்

படாமையையும், அவ்வாறு நெறிப்படின் அது பொற்புடைமை ஆகாமையையும் வற்புறுத்தினார்.

இத்தமிழ் மரபுக்கு மாறாக,
''கடலன்ன காமத்த ராயினும் பெண்டிர்
மடலூரார் மைந்தர்மே லென்ப—மடலூர்தல்
காட்டுகேன் வம்மின் கலிவஞ்சி யார்கோமான்
வேட்டமா மேற்கொண்ட போழ்து''

என நச்சினார்க்கினியர் உரையில் மேற்கொள் காட்டினாரா லெனின் பண்டை நூன் மரபுக்கு மாறாக, பெண்டிரெல்லாரும் யாண்டும், எந்நிலையிலும், ஆடவரெழிலுக்கு உடையுமுள்ளத்தினர் எனக் கூறும் உலா, மடல் முதலிய பனுவல் எழுந்த தகுதியும் மரபும் தலை தடுமாறிய பிற்கால வழக்கென மறுக்க.

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் தலைமகள் மடல்கூறுதலும் மடல் ஏறுதலும் இல்லை என்கின்றது.

(இ ள்) எழுதிணைகளுள் எத்திணையொழுக்கத்திலும் பெண் மடல் விரும்புதலோ கூறுதலோ ஏறுதலோ இல்லை; ஏன்எனின் அது பெண்மைக்குரிய பொலிவுடைமை இல்லையாதலின் என்றவாறு.

மடல்மேல் என்பதையடுத்து இல்லை என ஒரு சொல் வருவிக்க மேவல் என்பது மேல் என நின்றது என்னும் பாரதியார் கூற்று சிறப்புடையது. அதனால் மகடூஉ மடலை விரும்புதலும் அதன் காரணமாகக் கூறுதலும் ஏறுதலும் இல்லை என்க.

'மடன்மா கூறும் இடனுமாருண்டே' (            ) என்னும் சூத்திரத்தை யடுத்து இச்சூத்திரம் கூறப்பட்டிருப்பின் தலைவன் மடல் ஏறுவேன் எனக்கூறுதல் உண்டு; ஆனால் தலைவி கூறுதல் அதன் ஐந்திணையுள் இல்லை எனத் தொடர்பாகக் கொள்ளலாம். 'ஏறியமடற்றிறம்' (      ) என்னும் பெருந்திணைச் சூத்திரத்தின் பின்னர்க் கூறியிருப்பின் பெருந்திணையிலும் மகடூஉ மடல் ஏறல் இல்லைஎனக் கொள்ளலாம். ''காமஞ்சாலா இளமையோர்வயின்'' (          ) என்னும் கைக்கிளைச் சூத்திரத்தின் பின்னர்க் கூறுதற்கில்லை; ஏன்எனின் கைக்கிளை தலைவனைப் பற்றியதாகவே கூறப்படும் செய்யுளும்

தலைவிக்குரியதாக இல்லை. அதனால் ஒருவரை ஒருவர் கூடப் பெறாத காரணத்தால் பிரிவு போலும் உணர்ச்சியுடையராக இருத்தலின் பிரிவு பற்றிக் கூறிவந்து இறுதியில் இச்சூத்திரத்தை வைத்தார் ஆசிரியர் என்க.

அகன் ஐந்திணைக் களவில் தலைவன் மடல் ஏறுதலும் உண்மையில் தலைவிக்கும் உண்டோ எனின் எத்திணையிலும் இல்லை என்பது கூற வேண்டுவதாயிற்று.

கைக்கிளை இலக்கணமோ பெருந்திணையிலக்கணமோ கூற வந்ததன்று இச்சூத்திரம் ஆதலின் உரையாளர் இருவர் கூற்றும் ஏற்பதிற்கில்லை.

39. தன்னும் அவனும் அவளும்[1] சுட்டி
மன்னு நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சம் சார்தல் என்று
அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய காலம் மூன்றுடன் விளக்கி
தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய (39)

ஆ. மொ. இல.

The themes fit for literature are, the mother expressing her concern and love about the lover and daughter because of omen, the sayings of greatmen God, good or bad happenings, her fear, their destination and such other developments which may arise after the elopment of her daughter with the lover, explaining the occurrence in past, Present and future seeing the sorrowful state of mind of attendents and of those who went in search of her, the lamentations of mother and such other actions which exhibit her sorrowful state.

---

1. அவளும் அவனும்—பாடம்.

பி. இ. நா.

**நம்பி 185**

செவிலி அறத்தொடு நிற்றலிற் கவலையிற்
பாங்கி தன்னொடும் பாங்கியர் தம்மொடும்
அயலார் தம்மொடும் பயிலிடந் தம்மொடும்
தாங்கல ளாகிச் சாற்றிய வெல்லாம்
பூங்கொடி நற்றாய் புலம்பற் குரிய
நிமித்தம் போற்றலும் சுரந்தணி வித்தலும்
தன்மகள் மென்மைத் தன்மைக் கிரங்கலும்
இளமைத் தன்மைக்கு உளமெலிந் திரங்கலும்
அச்சத் தன்மைக்கு அச்சமுற் றிரங்கலும்
எனஇவை ஐந்தும் அனைமருட்சிக் குரிய.

**இல. அக. 558.**

வினவிய பாங்கியின் உணர்ந்த காலை
இனையல் என்போர்க்கு எதிரழிந்து உரைத்தலும்
தன்னறி வின்மை தன்னைநொந் துரைத்தலும்
தெய்வம் வாழ்த்தலும் இவ்வொரு மூன்றும்
செவிலி அறத்தொடு நிற்றலிற் கவலையின்
பாங்கி தன்னொடும் பாங்கியர் தம்மொடும்
அயலவர் தம்மொடும் பயிலிடந் தன்னொடும்
தாங்கல ளாகிச் சாற்றிய நான்கும்
நிமித்தம் போற்றலும் சுரந்தணி வித்தலும்
தன்மகள் மென்மைத் தன்மைக் கிரங்கலும்
இளமைத் தன்மைக் குளமெலிந் திரங்கலும்
அச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கலும்
ஆகிய ஐந்தும் (போகிய இறைமகள்
ஆயமும் தாயும் அழுங்கக் கண்டு
காதலின் இரங்கும் கண்டோர் இரக்கமும்)
ஆற்றாத் தாயைத் தேற்றலும் ஆற்றிடை
முக்கோல் பகவரை வினாதலும் மிக்கோர்
ஏதுக் காட்டலும் எயிற்றியொடு புலம்பலும்
குரவொடு புலம்பலும் சுவடுகண் டிரங்கலும்
கலந்துடன் வருவோர்க் கண்டுகேட் டலுமவர்
புலம்பல் தேற்றலும் புதல்வியைக் காணாது

கவலை கூர்தலும்எனும் இவைஒன் பானும் என்று
இத்திறம் இயமபிய எழுமூன்றும் ஒன்றும்
கற்பொரு புணர்ந்த கவ்வையின் விரியே.

## இளம்பூரணர்

**39. தன்னும் அவனும்..... மல்வழி உரிய**

இது, மேற் கூறப்பட்ட இருவகைப் பிரிவினுள் (அகத் - 13) தமரைப் பிரிதலாகிய உடன்போக்கில் நிகழ்ந்த[1] நற்றாய் மாட்டுளதாய கிளவி உணர்த்துதல் நுதலிற்று.

தன்னும் அவனும் அவளும் சுட்டியென்பது, தன்னையும் தலைமகனையும் தலைமகளையும் குறித்த என்றவாறு. மன்னு நிமித்தமாவது ஆட்சி[2] பெற்ற நிமித்தம்; அது பல்லி முதலாயினவாம்[3] மொழிப் பொருளாவது பிறர் தம்முள் கூறும் மொழிப் பொருளை நிமித்தமாகக் கோடல்; அதனை நற்சொல்[4] என்ப. தெய்வம் என்பது, உலகினுள் வாழும் இயக்கர் முதலாயினார் ஆவேசித்துக் கூறும் சொல். நன்மை, தீமை, அச்சம் என்பது தனக்கும் அவர்க்கும் உளதாகிய நன்மையும் தீமையும் அச்சமும் என்றவாறு. சார்தல் என்பது, அவர் தன்னை வந்து சார்தல் என்று என்பது இடைச்சொல்[5] அன்ன பிறவும் என்பது, அத்தன்மைய பிறவும் என்றவாறு, அவற்றொடு தொகைஇ என்பது மேற்சொல்லப்பட்ட நிமித்தம் முதலாயினவற்றோடு கூட்டி என்றவாறு அவ்வழியாகிய கிளவியும் உரிய என்பது அவ்விடத்தாகும் கூற்று உரியஎன்றவாறு*.

---

1. உடன்போக்கில் நிகழ்ந்த கிளவி என்க.
2. ஆட்சி - செய்யுளாட்சி
3. பல்லி-பல்லிசொல்லல், காக்கை கரைதல்முதலியனவுமாம்
4. நற்சொல்—விரிச்சி
5. எண்ணும் மைப்பொருளில் வரும் இடைச்சொல். நிமித்தம் என்று மொழிப்பொருள் என்று இப்படிக் கூட்டவரும்.

* இப்பகுதி இதன்பொருள் என்பதன் பின்னர் இருத்தல் வேண்டும்.

(இ-ள்) போகிய திறத்து நற்றாய் தன்னும் அவனும் அவளும் சுட்டி-தலைமகள் உடன் போகியவழி நற்றாய் தன்னையும் அவனையும் அவவையும் சுட்டி, மன்னும் நிமித்தம் - நிலைபெற்ற நிமித்தம், மொழிப்பொருள் தெய்வம் அவற்றொடு- மொழிப்பொருள் தெய்வம் என்பனவற்றொடு, நன்மை, தீமை அச்சம் சார்தல் - தனக்கும் அவர்க்கும் உளதாகிய நன்மை தீமை அச்சம் சார்தல் என்பனவும், அன்னபிறவும் அவற்றொடு தொகைஇ - அத்தன்மை பிறவும் அவற்றொடு கூட்டி-முன்னிய காலம் மூன்றொடு விளக்கி—குறித்த காலம் மூன்றும் ஒருங்கு தோற்றுவித்தது தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும் புலம்பலும்—தோழி மாட்டும் கண்டோர் மாட்டும் புலம்புதலும், அவ்வழி ஆகிய கிளவியும் உரிய-அவ்வழி நிகழும் கூற்றும் உரிய.

"போகிய திறத்து நற்றாய்" என்றதனை முன்னே[6] கூட்டுக "அவற்றொடு" என்பதனைத் தெய்வம் என்பதனோடும் கூட்டுக[7]. முன்னிய காலம் மூன்றுடன் விளக்குதலாவது, முன்பு இத் தன்மையளாயினாள்; இப்பொழுது இத்தன்மையளாகா நின்றாள்; மேல் இன்னளாகுவள் என மூன்று காலமும் ஒருங்கு தோற்று வித்துப் புலம்புதல். அவ்வழி ஆகிய கிளவியும் என மொழி மாற்றுக.

அவற்றிற்குச் சில உதாரணங்கள்.

"தோழியர் சூழத் துறைமுன்றில் ஆடுங்கால்
வீழ்பவள் போலத் தளருங்கால்—தாழாது
கல்லதர் அத்தத்தைக் காதலன் பின்போதல்
வல்லவோ மாதர் நடை" (ஐந்திணை ஐம்பது—37)

என்பது தலைமகள் உடன் போய வழி நற்றாய் கவன்றுரைத்தது.

"மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபின்நின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்தில் தருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொடு
அஞ்சில் ஓதியை வரக்கரைந் தீமே". (ஐங்குறு 391)

---

6. முன்னே—உரைத்தொடக்கத்தில்

7. நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம் (ஆகிய) அவற்றொடு எனக்கூட்டுக.

என்பது நற்றாய் உடன்போய தலைமகள் பொருட்டாகக் காகத்திற்குப் பாராய்க் கடன் உரைத்தது.

> ''வேறாக நின்னை வினவுவேன் தெய்வத்தால்
> கூறாயோ கூறுங் குணத்தினனாய்—வேறாக
> என்மனைக் கேறங் கொணருமோ எல்வளையைத்
> தன்மனைக்கே உய்க்குமோ தான்''.
>
> (திணைமாலை நூற் - 60)

என்பது நற்றாய் தலைமகளின் உடன்போக் கெண்ணிப் படிமத் தானை[8] வினாஅயது

பிறவும் அன்ன. 'ஈன்றவள் புலம்பலும் என்ற உம்மையால்' செவிலி புலம்பலும் கொள்ளப்படும்.

> ''பெயர்த்தனென் முயங்கான் வியர்த்தனென் என்றனள்
> இனியறிந் தேனது துனியா குதலே
> கழல்தொடி யாஅய் மழைதவழ் பொதியில்
> வேங்கையுங் காந்தளும் நாறி
> ஆம்பல் மலரினுந் தான்தண் ணியளே.'' (குறுந்-84)

என்பது, உடன்போக்கிய செவிலி கவன்றுரைத்தது.

> ''என்னும் உள்ளினள் கொல்லோ தன்னை
> நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொடு
> அழுங்கல் மூதூர் அலரெழச்
> செழும்பல் குன்றம் இறந்தஎன் மகளே.''
>
> (ஐங்குறு-372)

என்பது, தலைமகள் கொடுமை நினைந்து கூறியது.

> ''ஈன்று புறந் தந்த எம்மும் உள்ளாள்
> வான்தோய் இஞ்சி நன்னகர் புலம்பத்
> தனிமணி இரட்டுந் தாளுடைக் கடிகை
> நுழைநுதி நெடுவேல் குறும்படை மழவர்
> முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த

---

8. படிமத்தான்—நோன்பு ஒழுக்கத்துக்கேற்ற தோற்ற முடையான்.

வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வலலாண் பதுக்கைக் கடவட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பிலி கொடுக்கும்
போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரந்
துணிந்துபிறள் ஆயினள் ஆயினும் அணிந்தணிந்து
ஆர்வ நெஞ்சமொடு ஆய்நலன் அளைஇத்தன்
மார்புதுணை யாகத் துயிற்றுக தில்ல
துஞ்சா விழவின் கோவல் கோமான்
நெடுந்தேர்க் காரிகொடுங்கால் முன்துறைப்
பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கும்
நெறியிருங் கதுப்பினென் பேதைக்கு
அறியாத் தேளத் தாற்றிய துணையே.'' (அகம்-35)

என்பது செவிலி தெய்வம் பரா அயதுபிறவும் அன்ன.

## நச்சினார்க்கினியர்

**36. தன்னும்..... உரிய**

இது பிரிவிலக்கணம் அதிகாரப்பட்டு வருதலிற் கொண்டு தலைக்கழிந்துழி வருந்துவோர் தாயரென்பதூஉம் அதனது பகுதியுங் கூறுகின்றது.

(இ-ள்) போகிய திறத்து நற்றாய் - தலைவியுந் தலைவனும் உடன்போய காலத்து அம்மகட் பயந்த நற்றாய், தன்னும் அவனும் அவளுஞ் சுட்டிக்காலம் மூன்றுடன் மன்னும் நன்மை தீமை முன்னிய விளக்கிப் புலம்பலும்-தன்னையுந் தலைவனையுந் தன் மகளையுங் குறித்துக் காலம் மூன்றுடன் நிலைபெற்று வரும் நல்வினை தீவினைக்குரிய காரியங்களைத் தன் நெஞ்சிற்கு விளக்கி வருந்திக் கூறுதலும்; அச்சஞ் சார்தல் என்று அன்ன பிறவும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம் அவற்றொடு தொகை இப் புலம்பலும் - அச்சஞ் சார்தலென்று கூறப்பட்டவற்றையும் அவைபோல்வன பிறவற்றையும் பல்லி முதலிய சொல் நற்சொல் தெய்வங் கட்டினுங் கழங்கினும்[1] இட்டு உரைக்கும் அத்தெய்வப்

---

1. கட்டு = கட்டுவிச்சி (குறத்தி) கூறும் குறி, கழங்கு- கழற்சிக்காய் கொண்டு கணக்கிட்டுக் கூறும்குறி கணக்கு ஒற்றை இரட்டை என்பது.

பகுதியென்றவற்றோடு கூட்டி வருந்திக் கூறலும்; தோழிதே எத்தும் கண்டோர் பாங்கினும் புலம்பலும் - தோழியது ஆற்றாமையைக் கண்டுழியுந் தலைவியைத் தேடிப்போய்க் காணாது வந்தாரைக் கண்டுழியும் வருந்திக் கூறலும்; அவ்வழி ஆகிய கிளவியும் அவ்வுடன் போக்கிடத்தைச் சான்றோர் புலனெறி வழக்கஞ் செய்தற்குரியவாய் வருங் கிளவிகளும்; உரிய - உடன் போகிய திறத்து உரிய எ-று.

நற்றாய் புலம்பலுங் கிளவியும் போகிய திறத்து உரியவென முடிக்க[2] என்றென்பதனையும் புலம்பலென்பதையும் யாண்டுங் கூட்டுக.[3] இங்ஙனம் உடன் போக்கி வருந்துதல் நோக்கித் தாயை முன்கூறித் தலைவன் கொண்டு போயினமை நோக்கித் தலைவி முன்னர் அவனைக் கூறினார். அவளும் அவனும் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

உதாரணம்.

"மள்ளர் கொட்டின் மஞ்ஞையாலும்
உயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்
சுரநனி யினிய வாருக தில்ல
அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே." (ஐங்-371)

இதனுள், 'அறநெறி இதுவெனத் தெளிந்த என்மக' ளென்று தாய் கூறவே உடன்போக்குத் தருமமென்று மகிழ்ந்து கூறி அங்ஙனங் கூட்டிய நல்வினையைத் தன் நெஞ்சிற்கு விளக்கிப் புலம்பியவாறு காண்க.

"நாடோறுங் கலுழு மென்னினு மிடைநின்று
காடுபடு தீயிற் கனலியர் மாதோ

---

2. போகிய திறத்து நற்றாய் போகிய திறத்துப் புலம்பலும், போகிய திறத்துக் கிளவியும் என முடிக்க.

3. நிமித்தம் என்று மொழிப்பொருள் என்று தெய்வம் என்று நன்மை தீமை என்று அச்சம் சார்தல் என்று எனவும் கால மூன்றுடன் முன்னிய விளக்கிப் புலம்பல், அச்சம் சார்தல்—அவற்றொடு விளக்கிப் புலம்பல் தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும் புலம்பல் எனவும் கூட்டுக.

நல்வினை நெடுகைர் கல்லெனக் கலங்கப்
பூப்புரை யுண்கண் மடவரற்
போக்கிய புணர்ந்த வறனில் பாலே.'' (ஐங்-376)

இது தீவினையை வெகுண்டு புலம்பியவாறு காண்க. பால், பழவினை. இவை ஐங்குறுநூறு.

இனி அச்சம் இருவகைத்து ; தலைவி ஆண்டை விலங்கும் புள்ளும் ஆறலைப் போரும் முதலிய கண்டு அஞ்சும் அச்சமுந், தந்தை தன்னையர் பின்சென்றவர் இஃதற மென்னாது தீங்கு செய்கின்றாரோ என்று அஞ்சும் அச்சமுமென.

''நினைத்தொறுங் கலுழு மிடும்பை யெய்துக
புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை
மான்பிணை யணைதர வாண்குரல் விளிக்கும்
வெஞ்சுர மென்மக ளுய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே.'' (ஐங்—378)

இதுவும் ஐங்குறு நூறு.

''கேளாய் வாழியோ மகளைநின் தோழி
திருநகர் வரைப்பகம் புலம்ப அவனொடு
பெருமலை இறந்தது நோவேன் நோவல்
கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி
முடங்குதாள் உடைத்த பொலங்கெழு பூமி
பெரும்புலர் விடியல் விரிந்துவெயில் எறிப்பக்
கருந்தார் மிடற்ற செம்பூழ்ச் சேவல்
சிறுபுன்பெடையொடு குடையும் ஆங்கண்
அஞ்சுவரத் தகுந கானம் நீந்திக்
கன்றுகா ணாதுபுன் கண்ண செவிசாய்த்து
மன்றுநிறை பைதல் கூரப் பலவுடன்
கறவை தந்த கடுங்கான் மறவர்
கல்லென் சீறூர் எல்லியின் அசைஇ
முதுவாய்ப் பெண்டின் செதுகால் குரம்பை
மடமயி லன்னஎன் நடைமெலி பேதை
தோள்துணை யாகத் துயிற்றத் துஞ்சாள்
வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கண்
சேக்கோள் அறையுந் தண்ணுமை
கேட்குநள் கொல்லெனக் கலுழுமென் னெஞ்சே.''
(அகம் - 63)

இவை அச்சம் கூறின.

தந்தை தன்னையர் சென்றாரென்று சான்றோர் செய்யுட் செய்திலர்? அது புலனெறி வழக்கம் அன்மையின்.

இனிச் சார்தலும் இருவகைத்து; தலைவி சென்று சாரும் இடனும், மீண்டு வந்து சாரும் இடனுமென.

உதாரணம் :

''எம்வெங் காமம் இயைவ தாயின்
மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்
கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த
பாக லார்கைப் பறைக்கட் டீவித்
தோகைக் காவின் துளுநாட் டன்ன
வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பிற்
செறிந்த சேரிச் செம்மல் மூதூர்
அறிந்த மாக்கட் டாகுக தில்ல
தோழி மாரும் யானும் புலம்பச்
சூழி யானைச் சுடர்ப்பூண் நன்னன்
பாழி யன்ன கடியுடை வியன்நகர்ச்
செறிந்த காப்பிகந் தவனொடு போகி
அத்த இருப்பை ஆர்கழல் புதுப்பூத்
ருய்த்த வாய துகள்நிலம் பரக்கக்
கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதி
வன்கை யெண்கின் வயநிரை பரக்கும்
இன்றுணைப் பிரிந்த கொள்கையொ டொராங்குக்
குன்ற வேயில் திரண்ட என்
மென்றோள் அஞ்ஞை சென்ற ஆறே. (அகம்—15)
''அருஞ்சுரம் இறந்தவென் பெருந்தோட் குறுமகள்
திருந்துவேல் விடலையொடு வருமெனத் தாயே
புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி
மனைமணல் அடுத்து மாலை நாற்றி
உவந்தினி தயரு மென்ப யானு
மான்பிணை நோக்கின் மடநல் லாளை
யீன்ற நட்பிற் கருளான் ஆயினும்
இன்னகை முறுவல் ஏழையைப் பன்னாட்
கூந்தல் வாரி நுசுப்பிவர்ந் தோம்பிய
நலம்புனை யுதவியும் உடையன் மன்னே
அஃ்நறி கிற்பினோ நன்றுமற் றில்ல

அறுவை தோயும் ஒருபெருங் குடுமிச்
சிறுபை நாற்றிய பஃறலைக் கொடுங்கோல்
ஆகுவ தறியும் முதுவாய் வேல
கூறுக மாதோ நின் கழங்கின் றிட்பம்
மாறாது வருபனி கலுழுங் கங்குலின்
ஆனாது துயருமென் கண்ணினிது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே''

(அகம்—195)

இவ் கைப்பாட்டு இரண்டும் தெய்வத்தொடு படுத்துப் புலம்பியது.

''இல்லெழும் வயலை யிலையு மூழ்த்தன
செல்வ மாக்களிற் செல்லு மஃகின
மயிலடி யிலைய மாக்குரல் நொச்சிப்
பயிலிணர் நறும்பொழிற் பாவையுந் தமியள்
ஏதி லாளன் பொய்ப்பப் பொய்மருண்டு
பேதை போயினள் பிறங்குமலை யிறந்தென
மான்ற மாலைமனையொடு புலம்ப
ஈன்ற தாயு மிடும்பைய ளெனநினைந்து
அங்கண் வானத் தகடூர்ந்து திரிதருந்
திங்களங் கடவுள் தெளித்துநீ பெயர்த்தரிற்
கடிமலர்க் கொன்றைக் காவலன் சூடிய
குடுமியஞ் செல்வங் குன்றினுங் குன்றாய்
தண்பொழில் கவித்த தமனிய வெண்குடை
ஒண்புகழ்த் தந்தைக் குறுதி வேண்டித்
தயங்குநடை முதுமை தாங்கித் தான்றனி
யியங்குநடை யிளமை யின்புற் றீந்த
மான்றே ரண்ண றோன்றுபுகழ் போலத்
துளங்கிரு ளிரவினு மன்றி
விளங்குவை மன்னாலிவ் வியலிடத் தானே.''

(தகடூர் யாத்திரை)

இத் தெய்வத்தை நோக்கிக் கூறியது.
''மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை
யன்புடை மரபினன் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்தினை வல்சி

பொலம்புனை கலத்தில் தருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேல் விடலையோ
டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே.''

(ஐங்குறு -391)

இவ் வைங்குறுநூறு நிமித்தத்தொடுபடுத்துப் புலம்பியது. நற்சொல்லொடு படுத்தன வந்துழிக் காண்க.

இனி 'அன்ன பிறவுமென்றதனால்'

''ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாள்
வான்தோய் இஞ்சி நன்னகர் புலம்பத்
தனிமணி இரட்டுந் தாளுடைக் கடிகை
நுழைநுதி நெடுவேற் குறும்படை மழவர்
முனையாத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுட் பேணமார்
நடுகற் பீலிசூட்டித் துடிபடுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரந்
துணிந்துபிறள் ஆயினள் ஆயினும் அணிந்தணிந்
தார்வ நெஞ்சமொ டாய்நலன் அளைஇத்தன்
மார்பு துணையாகத் துயிற்றுக தில்ல
துஞ்சா முழவிற் கோவற் கோமான்
நெடுந்தேர்க் காரி கொடுங்கான் முன்றுறைப்
பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கு
நெறியிருங் கதுப்பினென் பேதைக்
கறியாத் தேஎத் தாற்றிய துணையே.''

(அகம் - 35)

இவ்வகம் தலைவன் மிகவும் அன்பு செய்கவென்று தெய்வத்திற்குப் பராஅயது.

''நீர் நசைக் கூக்கிய வுயவல் யானை
யியம்புணர் தூம்பி னுயிர்க்கு மத்தஞ்
சென்றனன் மன்றவென் மகளே
பந்தும் பாவையுங் கழங்குமெமக் கொழித்தே.''

(ஐங்குறு - 377)

இவ்வைங்குறுநூறு யாம் இவற்றைக் கண்டு வருந்த இவற்றை மமக்கு ஒழித்துத்தான் நீரிலா ஆரிடைப் போயினாளென்றது.

"என்னு முள்ளினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொ
டழுங்கண் மூதூ ரலரெழச்
செழும்பல் குன்ற மிறந்தவென் மகளே."

(ஐங்குறு-372)

இஃது என்னை நினைப்பாளோவென்றது.

இன்னும் இதனானே செய்யுட்களுள் இவற்றின் வேறுபட வருவனவெல்லாம் அமைத்துக் கொள்க

"செல்லிய முயலிற் பாஅய சிறகர்
வாவ லுகக்கு மாலையாம் புலம்பப்
போகிய வவட்கோ நோவேன் றேமொழித்
துணையிலள் கலுழு நெஞ்சின்
இணைபே ருண்க ணிவட்குநோ வதுவே."

(ஐங்குறு - 318)

இது தோழி தேஎத்துப் புலம்பல். இஃது ஐங்குறுநூறு தோழி தேஎத்துமெனப் பொதுப்படக் கூறியவதனால் தோழியை வெகுண்டு கூறுவனவுங் கொள்க.

"வரியணி பந்தும் வாடிய வயலையு
மயிலடி யன்ன மாக்குர னொச்சியுங்
கடியுடை வியனகர்க் காணவரத் தோன்றத்
தமியேன் கண்டதண் டலையுந் தெறுவர
நோயா கின்றே மகளை நின்றோழி
யெரிசினந் தணிந்த இலையி லஞ்சினை
வரிப்புறப் புறவின் புலம்புகொ டெள்விளி
யுருப்பவி ரமையத் தமர்ப்பன ணோக்கி
யிலங்கிலை வெள்வேல் விடலையை
விலங்குமலை யாரிடை நலியுங்கொ லெனவே."

(நற்றிணை 305)

எனவரும்.

"இதுவென் பாவைக் கினியநன் பாவை
யிதுவென் பைங்கிளி எடுத்த பைங்கிளி
யிதுவென் பூவைக்கினியசொற் பூவையென்

றலம்வரு நோக்கி னலம்வருஞ் சுடர்நுதல்
காண்டொறுங் காண்டொறுங் கலங்க
நீங்கின ளோவென் பூங்க ணோளே.''

(ஐங்குறு 375)

இவ் வைங்குறுநூறு தேடிக் காணாது வந்தாரைக் கண்டு புலம்பியது.

இனி அவ்வழியாகிய கிளவிகளுட் சில வருமாறு :
''ஒருமக ளுடையேன் மன்னே யவளுஞ்
செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளையொடு
பெருமலை யருஞ்சுர நெருநற் சென்றனள்
இனியே
தாங்குநி னவல மென்றனிர் அதுமற்
றியாங்கன மொல்லுமோ வறிவுடையீரே
யுள்ளி னுள்ளம் வேமே யுண்கண்
மணிவாழ் பாவை நடைகற் றன்னவென்
அணியியற் குறுமக ளாடிய
மணியேர் நொச்சியுந் தெற்றியுங் கண்டே.''

(நற்றிணை 184)

இந் நற்றிணை தெருட்டும் அயலில்லாட்டியர்க் குரைத்தது.
''கயந்தலை மடப்பிடி பயம்பிற் பட்டெனக்
களிறுவிளிப்படுத்த கம்பலை வெரீஇ
ஒய்யென வெழுந்த செவ்வாய்க் குழவி
தாதெரு மறுகின் மூதா ராங்கண்
எருமை நல்லான் பொருமுலை மாந்தும்
நாடுபல இறந்த நன்ன ராட்டிக்கு
ஆயமும் அணியிழந் தழுங்கின்று தாயும்
இன்றோள் தாராய் இறீஇயரென் னுயிரெனக்
கண்ணு றுதலு நீவித் தண்ணெனத்
தடவுநிலை நொச்சி வரிநிழ லசைஇத்
தாழிக் குவளை வாடுமலர் சூடித்
தருமணற் கிடந்த பாவையென்
அருமக ளேயென முயங்கின ளழுமே.'' (அகம்-165)

இம் மணிமிடை பவளத்துத்தாய் நிலையும் ஆயத்து நிலையுங் கண்டோர் கூறியவா றுணர்க.

"மாண்பில் கொள்கையொடு மயங்குதுயர் செய்த
வன்பி லறனு மருளிற்று மன்ற
வெஞ்சுர மிறந்த அஞ்சி லோதி
பெருமட மான்பிணை யலைத்த
சிறுநுதற் குறுமகட் காட்டிய வம்மே."

(ஐங்குறு-396)

இவ்வைங்குறுநூறு தலைவி மீண்டு வந்துழித்தாய் சுற்றத் தார்க்குக் காட்டியது

"நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினு
சொல்வி னெவனோ மற்றே வென்வேன்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே."

(ஐங்குறு-399)

இவ் வைங்குறுநூறு தலைவன் மீண்டு தலைவியைத் தன் மனைக்கட் கொண்டு வந்துழி அவன் தாய் சிலம்புகழி நோன்பு செய்கின்றாளெனக் கேட்ட நற்றாய் ஆண்டு நின்றும் வந்தார்க்குக் கூறியது

இன்னுஞ் சான்றோர் செய்யுட்களுள் வேறுபட வருவன வெல்லாம் இதனான் அமைக்க.

35. தன்னும் ... ... ... உரிய

பாரதியார்

கருத்து :- இது தலைவனுடன்போன தலைவியின் பிரிவாற்றாத தாயாரின் பரிவு நிலைமையும், அதுபற்றிக் கூற்று நிகழும் பகுதிகளும் கூறுதல் நுதலிற்று.

பொருள் : போகிய திறத்து நற்றாய் புலம்பலும் - தலைமகள் தலைவனுடன் போனவழி, அவளைப் பெற்ற நற்றாயின் துனி தரும் தனிமையில் மகட்பிரிவின் அகப்பிரிவாற் கூறுவனவும் ; தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி-தன்னையும், தலைமகனையும் (அவனுடன் சென்ற) தன் மகளையும் குறித்து; மன்னு நிமித்தம்- அடிப்பட்ட புள் என்னும் நிமித்தங்களோடும்; மொழிப்பொருள் - விரிச்சி என்னும் நற்சொல்லோடும் ; தெய்வம் - வேலன் வெறியாடல் முதலிய கடவுட் பராவலோடும்; நன்மை தீமை அச்சம் சார்தல் என்பவற்றோடும்; அன்ன பிறவும் - அத்தகைய இடங்களுக்கேற்ற பிற கூற்றுகளையும்; அவற்றொடு தொகைஇ மேற்

கூறியவற்றொடு சேர்த்து ; முன்னிய காலம் மூன்றுடன் விளக்கி; இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய மூன்று காலங்களோடும் இயைய விளக்கி ; தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும் - தலைவியின் தோழியிடத்தும், தலைமக்களைக் கண்டு வருவோரிடத்தும் ; ஆகிய கிளவியும் - நிகழும் கூற்றுகளும் ; அவ்வழி உரிய - அந்நிலையில் உரியனவாகும்

குறிப்பு : போகிய திறத்து என்பதை முன்னே கூட்டிச் சூத்திரத் துறைகள் அனைத்திற்கும் பொதுவாக்கிப் பொருள் கொளலே பொருந்தும். 'ஆகிய கிளவி' என்பதனை, "தன்னும் அவனும் அவளும் சுட்டி " என்பது முதல் 'மூன்றுடன் விளக்க' ஒவ்வொன்றனோடும் என்பது வரை ஒவ்வொன்றனோடும் 'தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும், புலம்பலும்' என்பவற்றோடும் தனித்தனிக் கூட்டுக. 'அவ்வழி' என்பது அவ்வாறு உடன்போகிய மகட்பிரிவுக்கு வருந்தும் பாங்கினும், வருந்திக் கூறலைச் சுட்டலாகப் பொருள் கோடல், 'புலம்பே தனிமை' (உரி-33) என்னும் சூத்திரக் கருத்துக்கு யாறாகும். ஆதலால் நற்றாயின் தனிப்படர் இரக்கத்தையே அச்சொல் உணர்த்துமெனக. 'நிமித்தம் என்பது காக்கை கரைதல், பல்லிஒலி, ஓந்திநிலை, இடத்தோள் இடக்கண் துடிப்பு முதலியவைகளைக் கொண்டு நன்மை தீமை துணிதல் இதற்குப் புள்ளறிதல் என்றே பெயர் வழங்கிற்று. முதலில் பறவையைக் குறிக்கும் புள் என்னும் பெயர் நாளடைவில் எல்லாக் குறிகளையும் குறிக்கும் நிமித்தத்திற்கே வழங்கலாயிற்று. மொழிப் பொருள் என்பது நற்சொல்; விரிச்சி, மொழிப்பொருள் என்பன ஒரு பொருட் கிளவிகள். விரிச்சியை,

"வேண்டிய பொருளின் விளைவுநன் கறிதற்கு
ஈண்டிருண் மாலைச் சொல்லோர்த் தன்று,"

என்பர் புறப்பொருள் வெண்பாமாலையார்.

"இரும்புனிற் றெருமைப் பெருஞ்செவிக் குழவி
பைந்தா தெருவின் வைகுதுயின் மடியுஞ்
செழுந்தண் மனையோ டெம்மிவ ணொழியச்
செல்பெருங் காளை பொய்மருண்டு, சேய்நாட்டுச்
சுவைக்காய் நெல்லிப் போக்கரும் பொங்கர்
வீழ்கடைத் திரள்காய் ஒருங்குடன் தின்று
வீசுனைச் சிறுநீர் குடியினள் கழிந்த
குவளை உண்கண்என் மகளோ ரன்ன
செய்போழ் வெட்டிப் பெய்த லாய

மாலைவிரி நிலவிற் பெயர்புறங் காண்டற்கு
மாயிருந் தாழி கவிப்பத்
தாவின்று கழிகஎற் கொள்ளாக் கூற்றே.''

(நற்றிணை 271)

இச்செய்யுளின் 'எம் இவண் ஒழிய எனவும்,' 'எற்கொள்ளாக் கூற்றே' எனவும் தாய் தன்னையே சுட்டியும், 'செல்பெருங்காளை பொய் மருண்டு' எனத் தலைவனைச் சுட்டியும் 'விசுனைச் சிறுநீர் குடியினள் கழிந்த குவளையுண்கண் என் மகள் என உடன் போன மகளைச் சுட்டியும் கூறுதல் காண்க.

''என்னும் உள்ளினள் கொல்லோ, தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொடு
அழுங்கல் மூதூர் அலரெழச்
செழும்பல் குன்றம் இறந்தவென் மகளே.''

(ஐங் - 372

எனும் செய்யுளுமது.

II நிமித்தத்தோடு சார்த்தி நற்றாய் கூறும் கிளவிக்குச் செய்யுள் :

''மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளியோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்தில் தருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொடு
அஞ்சி லோதியை வரக்கரைந் தீமே.'' (ஐங் - 391)

III மொழிப்பொருள் என்ற நற்சொல்லாம் விரிச்சி யொடு படுத்து கூறுதற்குச் செய்யுள் :

''அருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவி மூலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றி
னுறுதுய ரலமர னோக்கி யாய்மக
ணடுங்குசுவ லசைத்த கையள், கைய

கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
'இன்னே வருகுவர் தாயர்' என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம் ; அதனால்
நல்ல நல்லோர் வாய்ப்புள் ; தெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருதல் தலைவர் வாய்வது ; நீநின்
பருவர லெவ்வம் களைமா யோயென''

(முல்லைப்பாட்டுவரி-7-21)

**IV. தெய்வத் தொடுபடுத்து நற்றாய் கூறும் கிளவி :**

'அருஞ்சுர மிறந்தஎன் பெருந்தோட்குறுமகள்' என்னும் அகம் (195) ஆம் பாட்டில், ''அறுவை தோயும் ஒரு பெருங் குடுமிச் சிறுபைஞ்ஞாற்றிய பஃறலைக்கருங்கோல், ஆகுவதறியும், முதுவாய் வேல, கூறுக மாதோ நின் கழங்கின் திட்பம், ஆறாது வருபனி கலுழும் கங்குலின் ஆனாது துயரும் என்கண் இனிது படீஇயர், எம்மனை முந்துறத் தருமோ, தம்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே'' எனவரும் அடிகள் தெய்வத்தொடு படுத்து நற்றாய் கூறும் கிளவியாகும்.

V. நன்மை சார்தல் :
மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலும்
உயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்
சுரநனி யினிய வாகுக தில்ல,
அறநெறி இதுவெனத் தெளிந்தஎன்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே.''

எனும் ஐங்குறுநூற்று (371) ச் செய்யுள் மகளின் நன்மை கருதிய தாய் கூற்றாம்.

**VI. உடன்போய மகளின் துன்புறு தீமை கருதிய தாய் கூறும் கிளவி :**

''நிழலான் றவிந்த நீரி லாரிடைக்
கழலோன் காப்பக் கடுகுபு போகி
அறுசுனை மருங்கின் மறுகுடி வெந்த
வெவ்வங் கலுழி தவ்வெனக் குடிக்கிய
யாங்குவல் லுநள்கொல் தானே ஏந்திய
செம்பொற் புனைகலத் தம்பொரிக் கலந்த

பாலும் பலவென உண்ணாள்
கோலமை குறுந்தொடித் தளிரன் னோளே.'' (குறு-326)

''நீர்நசைக் கூக்கிய உயவல் யானை
இயம்புணர் தூம்பின் உயிர்க்கும் அத்தம்
சென்றனள் மன்றஎன் மகளே
பந்தும் பாவையும் கழங்குமெமக் கொழித்தே''
என்பதும் அது. (ஐங்-377)

**VII. ''அன்ன பிறவும்'' என்றதால் சூத்திரத்தில் விதந்து கூறியன வல்லாத பிறபொருந்துந் துறைகளும் கூட்டப்பட்டன. தலைவினற்றாய் தன் மகளையுடன் கொண்டு சென்ற தலைவன் தாயை வெறுத்து நொந்து கூறுவது, ''அன்னபிற'' வற்றுள் ஒன்றாகும் அதற்குச் செய்யுள் :**

''நினைத்தொறுங் கவிழும் இடும்பை எய்துக,
புலைக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை
மாண்பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்
வெஞ்சுரம் என்மகள் உய்த்த
வம்பமை வல்வில் விடலை தாயே'' (ஐங்-378)

**VIII. 'முன்னியகாலம் மூன்றுடன் விளக்கிப் போகிய திறத்து' நற்றாய் கூற்றுக்குச் செய்யுள் :**

''பிரசங் கலந்த சிறுமதி கையளே''
எனும் போதனார் நற்றிணைப் பாட்டில்,

''— — — — — பூந்தலைச் சிறுகோல்
'உண்' என றோக்குபு புடைப்ப — — —
அறிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
பரீஇ மெலிந்தொழியப் பந்த ரோடி
ஏவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோ றுள்ளாள் ;
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுது மறுத் துண்ணுஞ் சிறுமதி கையளே.''
(நற்றிணை-110)

எனுமடிகளில், தன் மகளின் கழிந்த இளமைச் செய்தியும் அறிவொழுக்க நிகழ் காலச் செய்தியும், அவள் மனையற எதிர் கால மாட்சியும் கூறுதலறிக.

IX. தோழி தேஎத்து நற்றாய் கூற்றுக்குச் செய்யுள்

"செல்லிய முயலிற் பாஅய சிறகர்
வாவ லுகுக்கு மாலையாம் புலம்பப்
போகிய அவட்கோ நோவேன், தேமொழித்
துணையிலள் கலுழு நெஞ்சின்
இணையே ருண்கண் இவட்குநோ வதுவே"

(ஐங்-378)

X. கண்டோர் பாங்கில் நற்றாய் கூறுதற்கு எடுத்துக் காட்டுச்செய்யுள் :

ஒருமக ளுடையேன் மன்னே ; அவளும்
செருமிகு மொய்ம்பிற கூர்வேற் காளையொடு
பெருமலை அருஞ்சுரம் நெருநற் சென்றனள் ;
இனியே, தாங்குநின் அவலமென்றிர் ; அதுமற்று
யாங்ஙனம் ஒல்லுமோ அறிவுடை யீரே ?
உள்ளின் உள்ளம் வேமே, உண்கண்
மணிவாழ் பாவை நடைகற் றன்னவென்
அணியியற் குறுமகள் ஆடிய
மணியோ நொச்சியுந் தெற்றியுங் கண்டே"

(நற்றிணை-184)

இப்பாட்டில் 'தாங்குநின் அவலமென்றிர், அதுமற்று யாங்ஙனம் ஒல்லுமோ அறிவுடையீரே' என அறிவுடையோராகிய கண்டோர் பாங்கில் நற்றாய் கூறிய கிளவி காண்க.

XI. நற்றாய் தனிமையிற் கூறல் :

"இதுவென் பாவை பாவை, இதுவென்
னலமரு நோக்கி னலம்வரு சுடர்நுதற்
பைங்கிளி எடுத்த பைங்கிளி, என்றிவை
காண்டொறுங் காண்டொறுங் கலங்க
நீங்கின ளோஎன் பூங்க ணோளே". (ஐங்குறு-375)

எனும் ஐங்குறு நூற்றுச் செய்யுள், மகட் பிரிந்த தாய் ஆற்றாமை யால் வருந்தும் புலம்பு சுட்டிய கிளவியாகும்.

40. ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்
தாமே செல்லும் தாயரும் உளரே. (40)

ஆ. மொ. இல.

There are mothers who go themselves to
search of their daughters along the streets
of fortified big cities and through the deserts.

## இளம்பூரணர்

40. ஏமப்பேரூர்ச்..... உளரே.

இது, தலைமகள் உடன்போகிய வழிச் செவிலிக்கு உரியதொரு திறன் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஏமம்பேர் ஊர் சேரியும் - ஏமம் பொருந்திய பெரிய ஊரகத்துச் சேரியின் கண்ணும், சுரத்தும் - ஊரினின்றும் நீங்கிய சுரத்தின் கண்ணும், தாமே செல்லும் தாயரும் உளர் தாமே செல்லும் தாயரும் உளர்.

"தாமே செல்லுந் தாயர்" என்பதனால் செவிலி என்பது பெற்றோரும்; 'தாயரும்' என்றதனால் கைத்தாயர் பலர் என்று கொள்ளப்படும். அவ்வழிச் சேரிறோரை வினாதலும், சுரத்திற் கண்டோரை வினாதலும் உளவாம். சேரியிற் பிரிதலும் பாலையாகுமோ எனின், அது வருகின்ற சூத்திரத்தினால் விளங்கும். (ஈற்றேகாரம் அசை)

சேரியோரை வினாஅயதற்குச் செய்யுள்
"இதுஎன் பாவைக் கினியநன் பரவை
இதுவென் பைங்கிளி எடுத்த பைங்கிளி
இதுவென் பூவைக் கினியசொற் பூவையென்று
அலம்வரு நோக்கி னலம்வரு சுடர்நுதல்
காண்தொறுங் காண்தொறுங் கலங்கி
நீங்கின ளோவென் பூங்க ணோளே."
(ஐங்குறு 375 பி-ம்)

எனவரும்.

சுரத்திடை வினாஅயதற்குச் செய்யுள்
"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்

உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செலல் மாலைக் கொளைநடை யந்தணீர்
வெவ்விடைச் செலல்மாலைக் ஒழுக்கத்தீர் இவ்விடை
என்மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருவனுந்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர்
அன்னார் இருவரைக் காணிரோ பெரும.''

(கலி-பாலை - 8)

''செய்வினைப் பொலிந்த செறிகழல் நோன்தாள்
மையணற் காளையொடு பைய இயலிப்
பாவை அன்னஎன் ஆய்தொடி மடந்தை
சென்றனள் என்றிர் ஐய
ஒன்றின வோஅவள் அஞ்சிலம் படியே.''

(ஐங்குறு 389)

என வருவதும் அது,

''காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாள்இழந் தனவே
அகல்இரு விசும்பின் மீனினும்
பலரே மன்றஇவ் வுலகததுப் பிறரே.''

(குறுந்-44)

எனவருவது, சுரத்திடை வினாஅயது நிகழ்ந்த பின்னர்க் கூறியது.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி*

## நச்சினார்க்கினியர்

37. ஏமப்பேரூர்......உளரே

(இ-ள்) ஏமப் பேர் ஊர்ச் சேரியும் சுரத்தும்-பதியெழுவறியாப் பேரூரிற்[1] றெருவின்கண்ணும் அருவழிக்கண்ணும்; தாமே செல்லும் தாயரும் உளர்-தந்தையுந் தன்னையரும் உணராமுன்னம் எதிர்ப் பட்டு மீட்டற்குத் தாமே போகுந் தாயரும் உளர் என்றவாறு.

---

* முன்சூத்திரம் நற்றாய்க்குரியது. இச்சூத்திரம் செவிலிக் குரியது. ஆதலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி என்பது பொருந்தாது. இருவரும் தாயர் எனப்படுதலின் இவ்வாறு கூறினார் போலும்.

1. தாம் ஊரினின்றும் மக்கள் வாழ்வு வளம்வேண்டிப்பிற ஊர்க்கு அல்லது நாட்டிற்குச் செல்லுதலை அறியாதபடிக் கின்பமும் காவலும் அமைந்த பேரூர்.

உம்மை எண்ணும்மை, தாய ரெனப் பன்மை கூறித்தாமே யெனப் பிரித்ததனாற் சேரிக்கு நற்றாய் சேறலுஞ், சுரத்திற்குச் செவிலித்தாய் சேறலும் புலனெறி வழக்கிற்குச் சிறந்ததென்றுணர்க.

உதாரணம் :

"வெம்மலை யருஞ்சுர நம்மிவ ணொழிய
விருநில முயிர்க்கு மின்னாக் கான
நெருநற் போகிய பெருடத் தகுவி
யைதக லப்குற்றழையணிக் கூட்டுங்
கூழை நொச்சிக் கீழ தென்மகள்
செம்புடைச் சிறுவிரல் வரித்த
வண்டலுங் காணிரோ கண்ணுடையீரே." (அகம் - 275)

வண்டலைக் காணார் தேஎத்து நின்று காணில் ஆற்றீரெனக் கூறினமையின் ஆயத்தினையகன்று இற்புறஞ் சென்று சேரி யோர்க்கு உரைத்ததாயிற்று.

"நிலந்தொட்டுப் புகாஅர் வான மேறார்
பிறங்கிரு முந்நீர்க் காலிற் செல்லார்
நாட்டி னாட்டி னூரி னூரிற்
குடிமுறை குடிமுறை தேரிற்
கெடுநரு முளரோருங் காதலோரே." (குறுந் - 130)

இது செவிலி தேடத் துணிந்தது. இக்குருந்தொகையுள் நம்மாற் காதலிக்கப்பட்டாரென்றது. அவ்விருவரையும் தாயரு முள ரென்றதனாற் றந்தையும் தன்னையரும் வந்தால் இன்னது செய்வலென்றலும் உளவென்று கொள்க.

"நுமர்வரி னோர்ம்பி னல்ல தமர்வரின்
முந்நீர் மண்டிய முழுவது மாற்றாது"

என்றாற் போல்வன அடி புறத்திடாதாள் புறம் போதலும் பிரிவென்றற்கு சேரியுங் கூறினார்; அஃது ஏம இல் இருக்கை யன்றாதலின். (37)

சூத்திரம் :

பாரதியார்

36. ஏமப்போரூர்........உளரே

கருத்து : இது, தலைவி உடன்போன வழி அவள் தாய்மார் அவளைத் தேடிச் செல்லுதலும் உண்டென உரைக்கின்றது.

பொருள் : ஏமப் பேரூர்ச் சேரியும் - தீதுறாக்காவலுடைய பேரூரைச் சார்ந்த சேரியிலும்; சுரத்தும் - தலைவி உடன்போகிய அருவழியிலும்; தாமே செல்லும் தாயரு முளரே - தன்னையர் தமர் முதலியோர் துணையின்றிச் சென்ற மகளைத் தேடித்தாமே செல்லும் தாய்மாரும் உளராவர்

குறிப்பு : ஏமமற்ற ஊராயின் தாயர் மனையிறந்து புறஞ் செல்லாராதலின் 'ஏமப்பேரூர்ச்சேரி' எனப்பட்டது; ஏமப்பேரூர்ச் சேரியாயின், அதனளவு மகட் பெற்ற நற்றாய் தேடிச் செல்லுதல் அமையும் ; நற்றாய் சுரஞ் சென்று தேடுதல் வழக்காறில்லை. செவிலித்தாயர் சுரத்தும் தேடிச் செல்வர். இதுவே பண்டைய ஆன்றோர் செய்யுளிற்கண்ட புலனெறி வழக்கம், சிற்றூராயின் தேடிச் செல்லுதல் வேண்டாவாதலின் சேரியுடைய பேரூரே கூறப்பட்டது தாயரும்' எனும் உம்மையால், தாமே செல்லும் தாயர் சிலரேயாவரென்பதும், தேடப்பிற அயலோரை ஏவும் தாய்மாரே பலராவரென்பதும் பெறப்படும். அடுத்து பின் கூறும் "அயலோரோடு சுரம் செல்லும் தாயருமுளரெனச் சுட்டுவதால் இவ்வும்மை எதிரது தழூஉ எச்சமுமாம்.

இனி, சேரியும் சுரத்தும் என ஒருங்கெண்ணி, 'செல்லுந் தாயரும் உளர்', எனப் பன்மையாற் கூறுதலால், நற்றாய் மனையிருந்து இரங்குவதன்றி மனையிறந்து புறம்பெயர்தல் இன்றெனக் கொண்டு, செவிலித்தாயரே சேரியும் சுரத்தும் செல்வர் எனப் பொருள் கொள்ளினும் தவறாகாது. நற்றாய் பேரூர்ச்சேரி அளவு தேடிச் செல்லுதற்குச் செய்யுள் வருமாறு : "ஓங்குநிலைத்தாழி மல்கச் சார்த்தி (275) என்னும் அகப்பாட்டில் "வெம்மலை அருஞ்சுரம்........கண்ணுடையீரே" என வருமடிகள் ஏமப்பேரூர்ச் சேரியில் தேடிச் சென்ற நற்றாய் கூற்றாகும். "கூழை நொச்சி கீழது என் மகள் செம்புடைச் சிறுவிரல் வரித்த வண்டலுங் காண்டிரோ" என்பதனால் அப்பேரூர் காவல் மதிலுடையதென்பதும், அந்நகர் மதிற் புறத்தே தன் மகள் விரல் கொண்டு வரித்த வண்டல் காணக் கிடப்பதாய்க் குறித்ததனால் அது நகர்ப்புறச்சேரி என்பதும் விளக்கமாகும். அன்றியும், 'நம்மிவணொழிய' என நற்றாய் தன் முன்னிலையோரையும் உளப்படுத்திக் கூறினதால், அவர் தலைமகள் ஊரவராதலும் தன்னைப்போல் அவரையும் தலைமகள் விட்டுச் சென்றாள் எனச்சுட்டுந் தாயினுளக் குறிப்பும் தெளியப்படும்

இனி, செவிலி தேடிச் செல்லுதற்குச் செய்யுள் :

''காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே,
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றஇவ் வுலகத்துப் பிறரே.'' (குறுந் 44)

பாலைக்கலியில், '' எறித்தரு கதிர்தாங்கி '' எனும் பாட்டில்.

''வெவ்விடைச் செலல்மாலை ஒழுக்கத்தீர் ! இவ்விடை என் மகள் ஒருத்தியும் பிறண் மகன் ஒருவனும், தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர்; அன்னார் இருவரைக் காணீரோ பெரும'' எனுமடிகள் சுரஞ்சென்ற செவிலியின் கூற்றாம்.

41. அயலோ ராயினும் அகற்சி மேற்றே (41)

ஆ. மொ. இல.

Even if they are in a place very near, it is to be considered as separation.

இளம்பூரணர்

41. அயலோர்..............மேற்றே.

இதுவும், பாலைக்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அயலோராயினும்—(சேரியினும் சுரத்தினும் பிரிதலன்றித்) தமது மனையயற்கண் பிரிந்தாராயினும், அகற்சி மேற்றே - பிரிவின் கண்ணதே.

எனவே, ஓர் ஊரகத்து மனையயற்கண்ணும் பரத்தையிற் பிரிவு பாலையாம் என்பதூஉம் உய்த்துணர்ந்து கொள்ளப்படும். (41)

நச்சினார்க்கினியர்

38. அயலோர்..............மேற்றே

இதுவும் பாலைக்கு ஓர் வேறுபாடு கூறுகின்றது.

(இ-ள்) அயலோர் ஆயினும் - முற்கூறிய சேரியினுஞ்

சுரத்தினுமன்றித் தம் மனைக்கு அயலே பிரிந்தாராயினும் அகற்சி மேற்று. அதுவும் பிரிவின் கண்ணதாம் என்றவாறு.

எனவே நற்றாய் தலைவியைத் தேர்ந்து இல்லிற் கூறுவனவுஞ் சேரியிற் கூறுவனவும் பிரிந்தாரைப் பின் சென்றதேயாயிற்று. இக்கருத்தான் ''ஏமப்பேரூர்'' என்றார் இதனானே மனையயற்கட் பரத்தையிற் பிரிவும் பாலையென்று உயர்த்துணர்க.

பாரதியார்

37, அயலோர்............ மேற்றே

கருத்து : இது, மேலதற்கோர் புறனடை கூறுகிறது.

பொருள் : அயலோராயினும் - உடன்போயவரைத் தேடிச் சுரஞ்செல்லுஞ் செவிலித்தாயரன்றி, தமர், ஏவலர் முதலிய பிறரேயாயினும் ; அகற்சி மேற்றே - அவர் தேடுதல் அண்மைச் சேரியன்றி அகன்ற சேய்மைச் சுரத்தின் கண்ணதேயாகும்.

குறிப்பு : மேற் சூத்திரத்தில் சொல்லிய இரண்டனுள் தாயரே செல்லும் அண்மைச் சேரியை விளக்கிச் சேய்மைச் சுரத்திற்குத் தாயரல்லாப்பிறர் தேடிச் செல்லுதல் மரபு. ஈற்றேகாரம் தேற்றம். உம்மை, செவிலியர் போல அயலோரும் சேண்சுரம் செல்வரெனச் சுட்டலால் தழீஇய எச்ச உம்மையாம்.

இதற்குப் பழைய உரைகாரர் - வேறு பொருள் கூறுவர். அது வருமாறு : அயலோராயினும் - முற்கூறிய சேரியினும் சுரத்தினு மன்றித் தம்மனைக்கயலே பிரிந்தாராயினும்; அகற்சி மேற்றே - அதுவும் பிரிவின் கண்ணதாம் என இளம்பூரணரும், நச்சினார்க் கினியரும் உரை கூறுவர். மேற்சூத்திரம் கூறும் சேரியுஞ் சுரமும் காதலர் பிரியுமிடம் குறியாது ; உடன்போன தலைமக்களைத் தாய்மார் தேடிச் செல்லும் இடத்தையே குறிக்குமாதலால், அங்குப் பிரியாமல் தம்மனை அயலே பிரிதலை இச்சூத்திரம் கூறுவதாகக் கொள்ளும் அவ்விருவர் உரையும் பொருந்தாது. அன்றியும் மேற்சூத்திரம் பாலையாம் பிரிவைக் குறிப்பதேயன்றி பிரியாமல் உடன்போன தலைமகளை அவள் தாயர் தேடிச் செல்லுதலை மட்டுமே குறிக்கும் பிரிவையே கருதாத இச்சூத்திரம் பிரியுமிடத் தணிமை குறிக்கும் எனல் எவ்வாற்றானும் அமைவ தன்றாம். அதனாலும் அவர் தம் உரை தொல்காப்பியர் கருத் தன்மை அறிக.

இனி, இதற்கு இன்னும் ஒரு பொருள் கூறுவாருமுளர். அது வருமாறு: அயலோராயினும் - உடன் போய தலைமக்கள் சுரம் போகாமல் ஊரகத்தே மனை அயலில் தங்குவாராயினும் அகற்சி மேற்று - அதுவும் பிரிவின் கண்ணதேயாம்.

இவ்வுரையும் இச்சூத்திரத்திற்குப் பொருந்தாது

மனையயல் உறைதல் உடன்போதலா மாறில்லை. உடன்போய தலைமக்கள் மனையயல் உறைந்ததாகப் புலனெறி வழக்கில் யாண்டும் ஆன்றோர். செய்யுளிலாட்சியு மில்லை; 'தாமே செல்லும் தாயரும்' என்னும் முன் சூத்திரத் தொடரொடு அடுத்தியையும் அயலோராயின் எனும் சொற்றொடர் அவ்வாறு செல்லுந் தாயரல்லாப் பிறரையே சுட்டுவது வெளிப்படை. மேலும், 'அகற்சி' என்பது நெடுந்தூரத்தையே குறிக்குமாவின், மனை அயலைக் குறியாது. 'அகற்சி'யை நீங்குதல் எனப்பொருள் கொண்டு, பிரிவெனும் பாலைத்; திணையை இச்சூத்திரம் கூறுவதாக உரையாசிரியர் கொண்டனர் முன், அவர் கொண்டுதலைக் கழிதலைப் பாலைத்திணையாகக் கொண்டது பற்றி இச்சூத்திரத்திற்கும் இவ்வாறு உரை கூறுவாராயினர். உடன் போகும் தலைமக்கள் தம்முட் பிரிதலின்மையின், அவரொழுக்கம் பாலையாதலில்லை. அதனால் ஈண்டு 'அகற்சி' என்பது பிரிதலை உணர்த்தாது சேய்மையையே உணர்த்துமென்க. தலைவிதமர் தேடிச் சுரஞ்செல்லுதற்குச் செய்யுள் வருமாறு; — 'அன்றையனையவாகி' என்னும் நற்றிணை 48 ஆம் செய்யுளில் நீர்எமரிடை உறுதர ஒளித்த காடே" என வருவதும், நற்றிணை 362 ஆம் செய்யுளில், 'நுமர்வரின் மறைகுவென் மா அயோளே' என்பதும் சேண் சென்றுதமர் தேடுதலைக்குறிக்கும். (37)

சிவலிங்கனார்

இச்சூத்திரமே உடன்போக்கில் தாயரின் செயல் கூறுகின்றது.

(இ-ள்) மனையகத்துத் தலைவியைக் காணாத தாயர்தம் மனை அயலில் உள்ள மனையிடங்களிற் சென்று தேடினார் ஆயினும் அதுவும் பிரிவின்மேலதேயாகும் என்றவாறு.

அதற்சிசேய்மையில் நீங்குதல் தலைவியின் பிரிவு அயல் மனையிடத்தாயினும் தாயர்க்குச் சேய்மைப் பிரிவாகவே உணரப்படும் ஆதலின் அகற்சி மேற்றே என்றார்.

காதலர் தலைவி மனைக்கு அயல்மனைக்கண் பிரிந்தாராயினும் பிரிவின்மேலதே என்றும் பொருள் கொள்ளலாம். எனினும் இது சிறவாது; உடன்போக்கு இரவில் தொடங்குவது ஆதலின் ஊரலர் எழுந்த நிலையில் காதலர் அயல்மனையில் இருந்தார் என்றல் பொருந்தாது. தலைவி மனைக்கண் இல்லையெனின் தாயர் அயல் மனையில் (அக்கம்பக்கத்தில்) தேடுதலை முதலிற் கொள்வரேயன்றிச் சேரியிலும் சுரத்திலும் தேடுதல் இல்லை. அதனால் அயலோர் என்பதற்கு அயல்மனையில் தேடும் தாயர் என்பதே சிறக்கும்.

பாரதியார் அயலோர் என்பதற்குத் தமர் ஏவலர் எனக் கொண்டும் அகற்சி என்பதற்குச் சேய்மைச்சுரம் எனக்கொண்டு "தமர் முதலியோர் உடன் போய வரைத் தேடிச் செல்வது சேய்மைச் சுரத்தின் கண்ணது" எனப்பொருளுத்தார். 'அயலோராயின் அகற்சிமேற்றே' என உம்மையின்றிச்சூத்திரம் அமையின் ஓரளவில் ஏற்புடைத்தாகும் அவர் உணர தமர் முதலானோர் சேய்மைச் சுரத்தில் தேடச் செல்லுமுன் அயல்மனை சேரி ஆகிய இடங்களில் தேடுதல் இல்லை என்பது பொருந்துமோ? அவ்வீரிடங்களிலும் இல்லை என்பதைத் தாயர் கூறிய பின்னரே அவர் சேய்மைச் சுரம் செல்வர் எனின் அதுவரை அவர் வாளா இருந்தனர் என்பது பொருந்துமோ? தாயர் அறிவிக்காமல் தாமே தேடி இல்லை என்பது தெரிந்த பின்னரே தமரிடம் கூறுவராதலினாலும் தமரும் தம் காரியமே கண்ணாயிருத்தலின் தாயர் கூறுதற்கு முன் அறியார் ஆதலினாலும் அயலிலும் சேரியிலும் அவர் தேடுதல் இன்றாயிற்று எனின், அயலிலும் சேரியிலும் இல்லை என உணர்ந்த பின்னரே சேய்மைச் சுரத்திடத்தில் தேட முற்படுவர் ஆதலினாலும் அயலிலும் சேரியிலும் இல்லை என்ற உணர்வே பிரிவுக்குரியதாதலினாலும் தமர் முதலியோர் சேய்மைச் சுரம் பிரிவதே பிரிவு எனக் கொண்டு கூறுவது சிறவாது.

அயலோராயினும் என்னும் உம்மை சேரியும் சுரத்தும் தேடினராயினும் என்ற இறந்தது தழீஇயது. அயல்மனைக்கண் தேடுதல் பிரிவின் பாற்படுமோ என்ற ஐயம் நீக்கவே தேற்றேகாரம் கொடுத்து அகற்சி மேற்றே என்றார் ஆசிரியர்.

42. தலைவரும் விழும நிலையெடுத்து உரைப்பினும் போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும் நீக்கலின் வந்த தம்முறு விழுமமும் வாய்மையும் பொய்ம்மை யும் கண்டோற்[1] சுட்டி தாய்நிலை நோக்கித் தலைப் பெயர்த்துக் கொளினும் நோய்மிகப் பெருகி தன் நெஞ்சு கலுழ்ந்தோளை அழிந்தது களையென மொழிந்தது[2] கூறி வன்புறை நெருங்கி வந்ததன் திறத் தொடு என்றிவை யெல்லாம் இயல்புற நாடின் ஒன்றித் தோன்றும் தோழி மேன (42)

ஆ. மொ. இல.

The expressions of the maid-attendant (Tholi) who is very dear and rear to the ladv-love, will take place when she explains the grave state of affairs which may happen to the lover and the beloved if he fails to take her with him When she sends her Companion with him, when consoling the lady-love and advising the lover, when she expresses her sorrow for separating her from her mothers, when she prevents the mother of lady - love from pursuing them explaining the moral of the great who are well - versud in seriptures which illustrate what is truth and what is false ood, and when consoling the mother saying that the lady-love eloped with her lover because of intense love towards him.

தொல் சூ. 39-ல் இலக்கண சூத்திரத்தில் குறிப்பாகக் காண்க.

## இளம்பூரணர்

42. தலைவரும் விழும நிலையெடுத் ......... மேன.

இது பிரிவின்கண்[1] தோழிக்குக் கூற்று நிகழும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. கண்டோர்ச் — பாடம்
2. களைஇய வொழிந்தது — பாடம்

(இ-ள்) தலைவரும் விழும...........தோழிமேன – தலைவரும் விழும நிலையெடுத் துரைத்தல் முதலாகச் சொல்லப்பட்டன தோழிமாட்டுப் பொருந்தித் தோன்றும்.[2]

தலைவரும் விழுமநிலை எடுத்துரைத்தலாவது பின்பு வரும் நோய் நிலையை எடுத்துக்கூறுதல் என்றவாறு.

''பாஅல் அஞ்செவிப் பணைத்தாள் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறதர்ப் பட்ட ஆறுமயங் கருஞ்சுரம்
இறந்துநீர் செய்யும் பொருளினும் யாம்நுமக்குச்
சிறந்தனம் ஆதல் அறிந்தனிர் ஆயின்
நீள்இரு முந்நீர் வளிகலன் வௌவலின்
ஆள்வினைக்கு அழிந்தோர் போறல் அல்லதைக்
கேள்பெருந் தகையோடு எவன்பல மொழிகுவம்
நாளுங் கோள்மீன் தகைத்தலுந் தகைமே ;
கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபின்
புல்லென்ற களம்போலப் புலம்புகொண்டு அமைவாளோ;
ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடுபோல்
பாழ்பட்ட முகத்தொடு பைதல்கொண்டு அமைவாளோ ;
ஓரிரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்
நீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ ;
என வாங்கு,
பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்டு
எந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வது
அந்நாள்கொண் இறக்கும்இவள் அரும்பெறல் உயிரே.''
(கலி. பாலை-2)

---

1. உடன் போக்காகிய பிரிவின்கண்ணும் பொருள் வயிற் பிரிவின் கண்ணும்.

2 'ஒன்றித்தோன்றும் தோழிமேன' என்பதைத் தோழிமேன ஒன்றித்தோன்றும் எனமாற்றி எழுதிய இவர் முடிவில் ஒன்றித்தோன்றும் தோழி என்றே கூறுதல் மாறு பாடுடையதாம்

எனவரும். இதனுள் "யாம் நுமக்குச் சிறந்தனமாதல் அறிந்தனிராயின்" என்றமையாலும், "பொய்ந் நல்கல் புரிந்தனை" என்றமையாலும் வரைவதன் முன்பென்று கொள்ளப்படும். இவள் இறந்துபடும் என்றமையால் உடன்கொண்டு போவது குறிப்பு[3].

போக்கற்கண்ணும் என்பது 'உடன் கொண்டு பெயர்' என்று கூறுதற் கண்ணும் என்றவாறு.

"மரையா மரல் கவர மாரி வறப்ப
வரையோங்கு அருஞ் சுரத்து ஆரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலரவாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற்று அருந்துயரம்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றால்
என்நீர் அறியாதீர் போல இவைகூறல்
நின்னீர அல்ல நெடுந்தகாய் எம்மையும்
அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடின் அதுவல்லது
இன்பமும் உண்டோ வெமக்கு"

(கலி- பாலை-5)

எனவரும்[4]

விடுத்தற்கண்ணும் என்பது தலைமகன் உடன்போக்கொருப்பட்டமை தலை மகளுக்குக்கூறி அவளை விடுத்தற் கண்ணும் என்றவாறு.

"உன்னங் கொள்கையொடு உளங்கரந்து உறையும்
அன்னை சொல்லும் உய்கம் என்னதூஉம்
ஈரஞ் சேரா இயல்பின் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கவ்வையும் ஒழிகம்
நாடுகண் அகற்றிய உதியஞ் சேரல்
பாடிச் சென்ற பரிசிலர் போல
உவவினி வாழி தோழி அவரே

---

3. இச்செய்யுள் கற்பிற் பொருள்வயிற் பிரிதலுக்குரியதாகவும் ஆம்

4. தலைகூற்றென்பர் நச்சினார்க்கினியர் (கலி. நச். உரை)

பொம்மல் ஓதி நம்மொடு ஒராங்குச்
செலவயர்ந் தனரால் இன்றே மலைதொறும்
மால்கழை பிசைந்த நூல்வாய் கூரெரி
மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்
வான்றோய் புணரி மிசைக்கண் டாங்கு
மேவரத் தோன்றும் யாஅஉயர் நனந்தலை
உயவல் யானை வெரிநுச்சென் றன்ன
கல்லூர்பு இழிதரும் புல்சாய் சிறுநெறிக்
காடுமீக் கூறுங் கோடேந்து ஒருத்தல்
ஆறுகடி கொள்ளும் அருஞ்சுரம் பணைத்தோள்
நாறைங் கூந்தல் கொம்மை வரிமுலை
நிரையிதழ் உண்கண் மகளிர்க்கு
அரிய வாலென அழுங்கிய செலவே'' (அகம்-65)

எனவரும். இஃது உடன்போக்கு நயப்பித்தது.[5]

''வேலும் விளங்கின வினைஞரும் இயன்றனர்
தாருந் ததையின தழையுந் தொடுத்தன
நிலநீர் அற்ற வெம்மை நீங்கப்
பெயல் நீர் தலைஇய உலவையிலை நீத்துக்
குறுமுறி யீன்றன மரனே நறுமலர்
வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்
தேம்படப் பொதுளின பொழிலே கானமும்
நனிநன் றாகிய பனிநீங்கு வழிநாள்
பாலெனப் பரத்தரு நிலவின் மாலைப்
போதுவந் தன்று தூதே நீயும்
கலங்கா மனத்தை ஆகி என்சொல்
நயந்தனை கொண்மோ நெஞ்சமர் தகுவி
தெற்றி உலறினும் வயலை வாடினும்
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்
நின்னினும் மடவள் நனிநின் நயந்த
அன்னை அல்லல் தாங்கிநின் ஐயர்
புலிமருள் செம்மல் நோக்கி
வலியாய் இன்னுந் தோய்கநின் முலையே.''
(அகம்-259)

எனவரும். இது விடுத்தவழிக் கூறியது.

---

5. நயப்பித்தது - விரும்பி ஒருப்படச்செய்தது. ஒருபடச் செய்வதும் விடுத்தலாகும் என்பது இவர் கருத்து. அடுத்த உதாரணம் விடுத்தற்குரியது.

நீக்கலின் வந்த தம்முறு விழுமமும் என்பது. தமரை நீக்குதலால் தமக்குற்ற[6] நோயின் கண்ணும் என்றவாறு.

''விளம்பழங் கமழும் கமஞ்சூல் குழிசிப்
பாசந் தின்ற தேய்கால் மத்தம்
நெய்தெரி இயக்கம் வெளிமுதல் முழங்கும்
வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கால்
அரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிப்புனை பந்தொடு வைஇய செல்வோள்
இவைகாண் தோறும் நோவர் மாதோ
அளியரோ அளியர்என் ஆயத் தோர்என
நும்மொடு வரவுதான் அயரவும்
தன்வரைத்து அன்றியுங் கலுழ்ந்தன கண்ணே,''
(நற்-12)

என வரும். இஃது உடன்போக்குத் தவிர்தற்பொருட்டுக் கூறியது[7].

இன்னும் ''நீக்கலின் வந்த தம்முறு விழுமம்'' என்றதனால் தலைமகட்குக் கூறினவும் கொள்க.

''நாளும் நாளும் ஆள்வினை அழுங்க
இல்லிருந்து மகிழ்வோர்க் கில்லையால் புகழென
ஒண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி நீயே'' (சிற்றடக்கம்)
எனவரும்[8].

வாய்மையும் பொய்ம்மையும் கண்டோற் சுட்டித்தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும் என்பதும், மெய்ம்மையும் பொய்ம்மையும் காணப்பட்ட அவனைச் சுட்டித்தாய்நிலை நோக்கி மீட்டுக் கொள்ளுதற் கண்ணும் என்றவாறு.

---

6. தலைவிக்கும் தனக்கும் உற்ற

7. நும்மொடு வரவு தான் அயரவும் என்றமையால் உடன் போக்குத்தவிர்தற் பொருட்டுக் கூறியது என்பது பொருந்தாது. விழுமம் கூறும் அவ்வளவே கொள்ளல் வேண்டும்.

8. ஒண்பொருட் ககல்வர் நம் காதலர் எனப்பொருள் வயிற்பிரிவு கூறியது.

''பால் மருள் மருப்பின் உரல்புரை பாவடி
ஈர்நறுங் கமழ்கடாஅத்து இனம்பிரி ஒருத்தல்
ஆறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து
பொருள்வயின் பிரிதல் வேண்டும் என்னும்
அருளில் சொல்லும் நீசொல் லினையே
நன்னர் நறுநுதல் நயந்தனை நீவி
நின்னிற் பிரியலேன் அஞ்சல்ஓம் பென்னும்
நன்னர் மொழியும் நீமொழிந் தனையே
அவற்றுள்,
யாவோ வாயின மாஅல் மகனே
கிழவர் இன்னோர் என்னாது பொருள்தான்
பழவினை மருங்கின் பெயர்புபெயர்பு உறையும்
அன்ன பொருள்வயிற் பிரிவோய் நின்னின்று
இமைப்புவரை வாழாள் மடவோள்
அமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே''.

(கலி-பாலை-20)

எனவரும்.[9]

இது தலைமகனைச் சுட்டிக் கூறியது. தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொண்டதற்குச் செய்யுள் வந்த வழிக் கண்டு கொள்க.

'நோய் மிகப் பெருகித்தன் நெஞ்சு கலுழந்தோளை அழிந்தது களையென மொழிந்ததுகூறி, வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தொடு, என்றிவை எல்லாம் இயல்புற நாடின், ஒன்றித் தோன்றும் தோழிமேன' என்பது தலைமகன் பிரிதலால் வந்துற்ற நோய் மிகவும் பெருகித் தன் நெஞ்சு கலங்கியோளை அழிந்தது களைதல் வேண்டுமெனத் தலைமகன் சொன்ன மாற்றத்தைக்கூறி வன்புறையின் பொருட்டு நெருங்கி வந்ததன் திறத்தோடு இத்தன்மையவெல்லாம் இயல்புற ஆராயின் தலைமகளொடு பொருந்தித் தோன்றும் தோழிமேலன என்றவாறு.

---

9. இச்செய்யுளும் பொருள் வயிற்பிரிவு பற்றியதே.

"ஒன்றித் தோன்றுந் தோழி" என்றதனால் தோழிமார் பலருள்ளும் இன்றியமையாதாள் என்று கொள்க.[10]

"தோழி தானே செவிலி மகளே" (களவியல் 35) என்றதனான், அவள் செவிலி மகள் என்று கொள்ளப்படும்.

மொழிந்தது கூறி வன்புறை நெருங்குதலாவது, தலைமகன் மொழிந்தது கூறி வற்புறுத்தலாம்.

"அரிதாய அறன் எய்தி அருளியோர்க்கு அளித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலின் புணர்ச்சியும் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயின் சென்றநம் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேஎள்இனி

அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையால்
கடியவே கனங்குழாஅய் காடென்றார் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே'

எனவும்,

"இன்பத்தின் இகந்தொரீஇ இலைதீய்த்த உலவையால்
துன்புறூஉந் தகையவே காடென்றார் அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ரால்ஆற்றும் புறவெனவும் உரைத்தனரே."

எனவும்,

"கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னரூஉந் தகையவே காடென்றார் அக்காட்டுள்
இன்நிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்நிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவும்
உரைத்தனரே."

எனவும் அவன் மொழிந்தது கூறி,

---

10. உரை கூறும்போது தோழிமேன ஒன்றித்தோன்றும் என்றார். இங்கு மாறியுள்ளார்.

"எனவங்கு ;
இனைநலம் உடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுநர் அல்லர் மனைவயின்
பல்லியும் பாங்கொத்து இசைத்தன
நல்எழில் உண்கணும் ஆடுமால் இடனே." *

(கலி-பாலை-11)

என வற்புறுத்தியவாறு கண்டுகொள்க.

'என்றிவை எல்லாம் இயல்புற நாடின்' என்றதனான், பருவம் வந்தது எனவும் பருவம் அன்று எனவும் வருவன கொள்க.

"வல்வருவர் காணாய் வயங்கி முருக்கெல்லாம்
செல்வச் சிறார்க்குப்பொன் கொல்லர்போல்-நல்ல
பவளக் கொழுந்தின்யேற் பொற்றாலி பாய்த்தித்
திவளக்கான் றிட்டன தேர்ந்து"

(திணைமாலைநூற்-66)

இது பருவம் வந்தது என்றது;

"மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங்கு அத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா அளவை நெறிதரக்
கொம்புசேர் கொடியிணர் ஊழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே." (குறுந் 66)

இது பருவம் அன்று என்றது.

இன்னும் 'என்றிவை எல்லாம்' என்றதனால், பிரியுங் காலத்துத் தலைமகட்கு உணர்த்துகின்றேன் எனத் தலைமகற்கு உரைத்தலும், தலைமகட்கு அவர் பிரியார் எனக் கூறுதலும் கொள்க.

"முளவுமா வல்சி எயினர் தங்கை
இளமா எயிற்றிக்கு நின்நிலை அறியச்
சொல்லினேன் இரக்கும் அளவை
வென்வேல் காளை விரையா தீமே." (ஐங்குறு-364)

இது விலக்கிற்று.

"விலங்கல் விளங்கிழாஅய் செல்வாரோ அல்லர்
அழற்பட் டசைந்த பிடியை-எழிற்களிறு

---

* இதனைத் தலைவி கூற்றென்பர் நச்சினார்க்கினியர்

கற்சுனைச் சேற்றிடைச் சின்னீரைக் கையாற் கொண்டு
உச்சி யொழுக்குஞ் சுரம்."

(ஐந்திணை ஐம்-32)

இது தலைமகட்குக் கூறியது.

## நச்சினார்க்கினியர்

### 39. தலைவரு … … … .. தோழிமேன

தாயர்க்கு உரியனகூறி இது தோழிக்குக் கூற்று நிகழுமாறு கூறுகின்றது.

(இ-ள்) தலைவரும் விழுவ நிலைஎடுத்து உரைப்பினும்- தலைவன் கொண்டு தலைக்கழியாவிடிற்றலை விக்கட்டோன்றுந் துன்ப நிலையத்தலைவற்குந் தலைவிக்கும் விளங்கக்கூறினும்; போக்கற் கண்ணும் - அதுகேட்டு இருவரும் போக்கொருப் பட்டுழித் தலைவியைப் போகவிடும் இடத்தும்; விடுத்தற் கண்ணும் – தலைவியை அவனோடு கூட்டி விடுக்குங்காற்றலை விற்குப் பாதுகாவலாகக்கூறும் இடத்தும்; நீக்கலின் வந்த தம் உறு விழுமமும்—தாயரை நீக்குதலாற் றமக்குற்ற வருத்தத் திடத்தும்; வாய்மையும் பொய்ம்மையும் கண்டோர்ச் சுட்டித் தாய்நிலை நோக்கித் தலைபெயர்த்துக் கொளினும்—மெய்யும் பொய்யும் உணர்ந்த அறிவரது தருமநூற் றுணிபும் இதுவெனக் கூறிப்பின் சென்று அவரை மீட்டற்கு நினைந்த தாயரது நிலைமை அறிந்து அவரை மீளாதபடி அவளை மீட்டுக்கொளி னும்; நோய்மிகப் பெருகித் தன் நெஞ்சு கலுழ்ந்தோளை அழிந்தது களைஇய ஒழிந்தது கூறி வன்புறை நெருங்கி வந்த தன் திறத்தோடு தலைவி போக்கு நினைந்து நெஞ்சு மிகப் புண்ணுற்றுத் தடுமாறுந்தாயை அவ்வருத்தத் தீர்த்தல் வேண்டி உழுவலன்பு காரணத்தாற் பிரிந்தாளென்பது உணரக்கூறி அவளை நெருங்கிவந்து ஆற்றுவித்தற் கூற்றோடே; என்று இவையெல்லாம் இயல்புற நாடின் ஒன்றித் தோன்றும் தோழி மேன—என்று இச்சொல்லப்பட்டன எல்லாவற்றுக்கண்ணும் இலக்கண வகையான் ஆராயுங் காலத்துத்தான் அவள் என்னும் வேற்றுமையின்றி ஒன்றுபடத் தோன்றும் தோழி மேன கிளவி என்றவாறு.

''வெல்போர்க் குரிசினீ வியன்சுர ணிவப்பிற்
பல்கா ழல்கு லவ்வரி வாடக்
குழலினு மினைகுவள் பெரிதே
விழவொலி கூந்தனின் மாஅ யோளே.''

(ஐங்குறு - 306)

இவ் வைங்குறுநூற்றுட் குழலினும் இரங்குவளென்று பிரிந் தவள் இரங்குதற் பொருள்படத் தோழி தலைவரும் விழுமந தலைவற்குக் கூறினாள்.[1]

''உன்னங் கொள்கையோ டுளங்கரந் துறையும்
அன்னை சொல்லும் உய்கம் என்னதூஉம்
ஈரஞ் சேரா இயல்பின் பொய்ம்மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையும் ஒழிகம்
நாடுகண் அகற்றிய உதியஞ் சேரன்
பாடிச் சென்ற பரிசிலர் போல
உவவினி வாழி தோழி யவரே
பொம்மல் ஓதி நம்மொ டொராங்குச்
செலவயர்ந் தனரால் இன்றே மலைதொறும்
மால் கழை பிசைந்த கால்வாய் கூரெரி
மீன்கொள் பரதவர் கொடுந்திமி னளிசுடர்
வான்தோய் புணரி மிசைக்கண் டாங்கு
மேவரத் தோன்றும் யாஉயர் நனந்தலை
உயவல் யானை வெரிநுச்சென் றன்ன
கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறிக்
காடுமீக் கூறுங் கோடேந் தொருத்தல்
ஆறுகடி கொள்ளு மருஞ்சுரம் பணைத்தோள்
நாறைங் கூந்தற் கொம்மை வரிமுலை
நிறையிதழ் உண்கண் மகளிர்க்கு
அரிய வாலென அழுங்கிய செலவே.''

(அகம் - 65)

இதனுள் அன்னை சொல்லும் பெண்டிர் கௌவையுந் தலை வரும் விழுமமென்று தலைவிக்குக் கூறினான்.

இனிப் போக்கற்கட் கூறுவன பலவுமுள.

---

1. இச்செய்யுளில் கொண்டு தலைக் கழிதற்குறிப்பேயில்லை. பிறபிரிவுகட்குரியதாகவே உள்ளது.

"இலங்குவீங் கெல்வளை யாய்நுதல் கவின்பெறப்
பொலந்தேர்க் கொண்கனும் வந்தன னினியே
யிலங்கரி நெடுங்க ணனந்த நீர்மதி
நலங்கவர் பசலையை நகுகம் யாமே."

(ஐங்குறு 200)

இவ்வைங்குறுநூற்றில், கண் அனந்தநீர் என்றதனானே உடன்கொண்டு போதற்கு வந்தானெனப் பாயலுணர்த்திக்[2] கூறிற்று.

"வேலும் விளங்கின வினைஞரு மியன்றனர்
தாருந் தையின தழையுந் தொடுத்தன
நிலநீ ரற்ற வெம்மை நீங்கப்
பெயனீர் தலைஇ உலவையிலை நீத்துக்
குறுமுறி யீன்றன மரனே நறுமலர்
வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்
தேம்படப் பொதுளின பொழிலே கானமும்
நனிநன் றாகிய பனிநீங்கு வழிநாட்
பாலெனப் பரத்தரு நிலவின் மாலைப்
போது வந்தன்று தூதே நீயும்
கலங்கா மனத்தை யாகி யென்சொல்
நயந்தனை கொண்மோ நெஞ்சமர் தகுவி
தெற்றி யுலறினும் வயலை வாடினும்
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்
நின்னினும் மடவள் நனிநின் யைந்த
அன்னையல்லல் தாங்கிநின் னையர்
புலிமருள் செம்மல் நோக்கி
வலியாய் இன்னுந் தோய்கநின் முலையே."

(அகம் - 250)

இவ்வகம் போக்குதற்கண் முயங்கிக் கூறியது.[3]

அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த
நன்னெடுங் கூந்த னரையொடு முடிப்பினு
நீத்த லோம்புமதி பூக்கே
வின்கடுங் கள்ளி னிழையணி கொடித்தேர்க்

2. பாயலுணர்த்துதல் - துயிலுணர்த்துதல் (எழுப்புதல்)
3. தலைவியைத் தழுவி தோழி கூறியது.

கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட் டியானைப் போஎர் கிழவோன்
பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி தேறிய விவட்கே.''

(நற்றிணை 10)

இந்நற்றிணை தலைவியைப் பாதுகாக்கவெனத் தோழி கைப்படுத்துவித்தது.

''புதல்வனீன்ற'' (நற்றிணை - 355) என்பதும் அது.

''இவளே நின்னல திலளே யாயுங்
குவளை யுண்க ணிவளல திலளே
யானு மாயிடை யேனே
மாமலை நாட மறவா தீமே.''

இதுவும் அது

''விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசி
பாசந் தின்ற தேய்கான் மத்த
நெய்தெரி யியக்கம் வெளின்முதன் முழங்கும்
வைகுமலர் விடியன் மெய்கரந்து தன்கா
லரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிபுனை பந்தொடு வைஇய செல்வோ
ளிவைகாண் டோறு நோவர் மாதோ
வளியரோ வளியரென் னாயத் தோரென
நும்மொடு வரவுதா னயரவுந்
தன்வரைத் தன்றியுங் கலுழ்ந்தன கண்ணே.''

(நற்றிணை - 12)

இந் நற்றிணை போக்குதல் தவிர்ந்ததாம்.

''அவளே யுடமை ராயமொ டோரை வேண்டாது
மடமான் பிணையின் மதர்த்த நோக்கமொ
டென்னினு நின்னினுஞ் சிறந்த மென்மொழி
யேதி லாளன் காதலி னானாது
பால்பாற் படுப்பச் சென்றன ளதனான்
முழவிமிழ் பந்தர் வினைபுனை நல்லில்
விழவயர்ந் திருப்பி னல்லதை யினியே
நீயெவ னிரங்குதி யன்னை
யாயினுஞ் சிறந்த நோய்முந் துறத்தே.''

என்னும் நின்னினுஞ் சிறந்தோன் தலைவ னென்று தவிர்) தல் தருமநூல் விதி என்பது. இனி விழவ யர்ந்திருப்பினல்லதை எனவே மீட்டற்குச் சேறல் அறனன் றென்று மீட்டாளாயிற்று

''அன்னை வாழியோ வன்னை நின்மக
ளென்னினும் யாயினு நின்னினுஞ் சிறந்த
தன்மை ரிளந்துணை மருட்டலின் முனாது
வென்வேற் புல்லி வேங்கட நெடுவரை
மழையொடு மிடைந்த வயக்களிற் றருஞ்சுரம்
விழைவுடை யுள்ளமொ டுழைவயிற் பிரியாது
வவன்கண் செய்தல் புரைவதோ வன்றே.''
இது தாயை வற்புறுத்தியது.

இயல்புற என்றதனானே தலைவன் கரணவகையால் வரைந் தானாக எதிர்சென்ற தோழிக்கு யான்வரந்தமை நுமர்க்குணர்த்தல் வேண்டுமென்றாற்கு அவள் உணர்த்தினே னென்றலுந் தலைவி மீண்டு வந்துழி ஊரது நிலைமை கூறுதலுங் கொள்க.

''கருவிரன் மந்திக் கல்லா விளம்பார்ப்பு
இருநெதி ரீர்ங்கழை யேறிச் சிறுகோன்
மதிபுடைப் பதுபோற் றோன்று நாட
வரைந்தனை நீயெனக் கேட்டியா
னுரைத்தனெ னல்லனோ வஃதென் யாய்க்கே.''
(ஐங்குறு-280)

''புள்ளு மறியாப் பல்பழம் பழுனி
மடமா னறியாத் தடநீர் நிலைஇச்
சுரநனி யினிய வாகுக வென்று
நினைத்தொறுங் கலுழு மென்னினு
மிகப்பெரிது கலங்கின்று தோழிநம் மூரே.''
(ஐங்குறு-398)

இன்னும் இதனானே செய்யுட்கண் வேறுபட வருவன வெல்லாம் அமைத்துக் கொள்க.

''ஊஉ ரலரெழச் சேரி கல்லென
ஆனா தலைக்கு மறனி லன்னை

---

4. தாயை மீளச் செய்தாள்

தானே யிருக்கதன் மனையே யானே
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க
உணலாய்ந் திசினா லவரொடு சேய்நாட்டு
விண்டொட நிவந்த விலங்குமலைக் கவாஅற்
கரும்பு நடு பாத்தியன்ன
பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே.''

(குறுந் - 262)

இது போக்கு நேர்ந்தமை தோழி கூறியது

பிறவுமன்ன (39)

பாரதியார்

38. தலைவரு..............மேன

கருத்து: இச்சூத்திரம் தோழிக்குக் கூற்று நிகழுமிடம் உணர்த்துகின்றது

பொருள்: தலைவரும் விழும நிலையெடுத்துரைப்பினும் தலைவனுக்கும் தலைவிக்கும் பிரிவால் வரும் ஏதப்பாடுகளை எடுத்துக் கூறுதற்கண்ணும்; போக்கற்கண்ணும்-தலைமகனுடன் தலைவியை அனுப்புமிடத்தும்; விடுதற்கண்ணும்-உடன்கொண்டு செல்லாமல், தலைவன் தலைவியை விட்டுப் பிரியுமிடத்தும்; நீக்கலின் வந்த தம்முறு விழுமமும் - தலைவி தன்னையும் தமரையும் நீத்துச் செல்லுதலால் தனக்கும் நாயர் முதலிய தமருக்கு முற்ற துன்பத்தையும்; வாய்மையும் பொய்மையும் கண்டோர்ச் சுட்டித்தாய் நிலை நோக்கித் தலைபெயர்ந்துக் கொளினும் - மெய்யையும் பொய்யையும் புனைந்து கூறியும் கண்டோரைக் காட்டியும் நற்றாயின் பருவரலைக் கருதி மறுத்தரத் தலைவியை வரவேற்றுக் கொள்ளுதலினும்; நோய் மிகப் பெருகித்தன் நெஞ்சு கலுழ்ந்தோளை-தலைவன் விடுத்தகல ஆற்றாமையால் மிக நொந்து மனங் கலங்கும் தலைவியை அழிந்தது களையென - வருந்துதலை ஒழியென; மொழிந்தது; கூறி-தலைவன் கூறியதை எடுத்துக்கூறி; வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தொடு - வற்புறுத்தி ஆற்றுவிக்கும் கூற்றுகள் நிகழ்த்தும் திறத்தொடு; என்றிவையெல்லாம்-இவை போல்வன பிற பொருந்துவனவெல்லாம்; இயல்புற நாடின் ஒன்றித் தோன்றும் தோழிமேன-அகத்துறை இலக்கணத்தை ஆராயின் தோழிக்குரியனவாய்ப் பொருந்தித் தோன்றும்.

குறிப்பு: விடுத்தற் கண்ணும் என்பதற்குப் பண்டை உரையாளராய இளம்பூரணர் தலைவியைத் தோழி தலைவனுடன் கூட்டி விடுத்தற்கண்ணும் எனப்பொருள் கூறுவர். 'போக்கற் கண்ணும்' என்பதும் இதனையே குறிக்குமாதலின், இவர் பொருள் ஆசிரியர்க்குக் கூறியது கூறல் என்னும் குற்றம்தரும். அன்றியும் பின் தலைவன் கூற்றுக்களைக் கூறும், 'ஒன்றாத் தமரினும்' எனும் சூத்திரத்தில் தலைவன் தலைவியை "ஒன்றிய தோழியொடு வலிப்பினும் விடுப்பினும்" என்று தொல்காப்பியர் கூறுதலான்; தலைவியைத் தலைவன் உடன் கொண்டு செல்லுதலும் விடுத்துச் செல்லுதலும் உண்டெனத் தெளியக் கிடத்தலின், ஈண்டு விடுத்தல் என்பதும் தலைவியைத் தலைவன் விட்டுச் செல்லலையே குறிக்குமென்பது ஒருதலை. இச்சூத்திரத்தில் தலைவன் மொழிந்ததை எடுத்துக் கூறித் தலைவியைத் தோழி ஆற்றுவித்தலைக் கூறுதலானும், தலைவி வருந்தத் தலைவன் அவளைவிட்டுச் செல்லுதலுண்டென்பது போதரும்.

'தலைப்பெயர்த்துக் கொளினும்' என்பதற்கு நச்சினார்க்கினியர் உடன்போய தலைவியைத் தேடிச் செல்லாமல் தாயை மீட்டுக் கொள்ளுதல் எனப்பொருள் கொள்ளுவர் இதற்கு ஆன்றோர் செய்யுள் ஆட்சியின்மையின் இவ்வுரை சிறவாது. இதற்கு நச்சினார்க்கினியர் காட்டும், 'அவளே, உடனமர் ஆயமொடு ஓரை வேண்டாது' எனும் பாட்டில் சுரஞ் செல்லும் தாயை மீட்ட குறிப்பொன்றுமில்லை மகட் பிரிவுக்கு வருந்தும் தாயைத்தோழி ஆற்றுவித்ததையே இச்செய்யுள் குறிக்கிறது.

"பால்பாற் படுப்பச் சென்றனள்; அதனால்
நீஎவ னிரங்குதி அன்னை
விழவயர்ந் திருப்பின் அல்லதை இனியே".

என்பதே ஈண்டுத் தோழி கூற்றாதல் காண்க. 'ஒழிந்தது கூறி' என நச்சினார்க்கினியர் கொண்ட பாடத்தினும், காலத்தால் முற்பட்ட இளம்பூரணர் கொண்ட 'மொழிந்தது கூறி' எனும் பாடமே மரபுநிலை வழாச்சிறப்பும் செவ்வியு முடைத்து-வன்புறை நெருங்குதலாவது, வற்புறுத்திக் கூறலாகும்.

இனி, 'நோய்மிகப் பெருகித் தன் நெஞ்சுகலுழ்ந்தோளை அழிந்தது களைஇய ஒழிந்தது கூறி வன்புறை நெருங்கி வந்ததன்

திறத்தோடு'' எனப் பாடங்கொண்டு, 'மகட் பிரிவாற்றாது அரற்றும் தாயை அவள் வருத்தம் தீர்த்தல் கருதித் தலைவியும் தலைவனும் கூறியனவும் செய்தனவும் எடுத்துச் சொல்லி விரைவில் மீள்வாரென வற்புறுத்தித் தேற்றுங் கூற்றோடே'' எனப் பொருள் கொள்ளுவதும் பொருந்துவதாகும். அதற்குச் செய்யுள் :

''அன்னை வாழியோ அன்னை நின்மகள்'' எனும் கீழ்வருஞ் செய்யுள் இதற்கு எடுத்துக் காட்டாகும்.

தலைவரும் விழுமநிலை எடுத்துரைத்தற்குச் செய்யுள் :

''பொலம்பசும் பாண்டிற் காசுநிரை அல்குல்
இலங்குவளை மென்றோள் இழைநிலை நெகிழப்
பிரிதல் வல்லுவை யாயின்
அரிதே விடலையிவள் ஆய்நுதற் கவினே.''

(ஐங் - 310)

இனித் தோழி தலைவற்குத் தலைவி விழுமம் கூறுதற்குச் செய்யுள் :

'பாஅல் அஞ்செவி' எனும் பாலைக்கலியில்,

''பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்
டெந்நாளோ நெடுந்தகாய் நீசெல்வ
தந்நாள் கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே.''

(பாலைக்கலி-5)

எனவரும் போக்கிய லுமதுவே.

இனி, தோழி தலைவிக்குத் தலைவன் விழுமம் உரைத்தற்குச் செய்யுள் வருமாறு :

''தினைகிளி கடிகெனிற் பகலும் ஒல்லும்;
இரவுநீ வருதலின் ஊறும் அஞ்சுவல் ;
யாங்குச்செய் வாமென் னிடும்பை நோய்க்கென
ஆங்குயான் கூறிய அனைத்திற்கும் பிறிதுசெத்
தோங்குமலை நாடன் உயிர்த்தோன் மன்ற;
ஐதே காமம் ; யானே
கழிமுதுக் குறைமையின் பழியுமென் றிசினே.''

(குறு - 217)

போக்கற்கண் தோழி தலைவற்குக் கூறியதற்குச் செய்யுள் வருமாறு :

''பெருநன் றாற்றிற் பேணாரு முளரே
ஒருநன் றுடைய ளாயினும் புரிமாண்டு
புலவி தீர வளிமதி, இலைகவர்
பாடமை யொழுகிய தண்ணறுஞ் சாரன்
மென்னடை மரையா துஞ்சு
நன்மலை நாட! நின்னல திலளே'' (குறு - 115)

''அண்ணாந்தேந்திய'' எனும் நற்றிணை 10ஆம் செய்யுளில் 'நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும் நத்தல் ஓம்புமதி பூக்கேழூர' என்பதும் போக்கற்கண் தோழி தலைவனுக்குக் கூறியதாகும்.

''இவளே நின்னல திலளே, யாயும்
குவளை யுண்கண் இவளல திலளே
யானு மாயிடை யேனே,
மாமலை நாட! மறவா தீமே.''
எனவரும் செய்யுளுமது.

தலைவனுடன் போக்கற்கண் தோழி தலைவிக்குக் கூறிய தற்குச் செய்யுள் :

''ஊஉர் அலரெழச் சேரி கல்லென,
ஆனா தலைக்கும் அறனில் அன்னை
தானே யிருக்க தன்மகள் யானே
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க
உணலாய்ந் திசினா லவரொடு சேய்நாட்டு
விண்தொட நிவந்த விளங்குமலைக் கவாஅற்
கரும்புநடு பாத்தி யன்ன
பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே.'' (குறு-262)

இது தலைவியொடு தன்னை ஒருப்படுத்துணருந் தோழி கூற்று.

தலைவியைத் தலைவன் விட்டுப் பிரியுமிடத்துத் தோழி தலைவற்குக் கூறியதற்குச் செய்யுள் :

— — — — — — உமணர்ச்
சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்றலை
ஊர்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்காடு
இன்னா வென்றீ ராயின்
இனியவோ பெரும தமியேற்கு மனையே''.

(குறு—124)

இதுவும் தன்னைத் தலைவிபோற் கூறும் தோழிகூற்று.

''மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரம்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றால்,
என்னீர் அறியாதீர்போல இவைகூறின்,
நின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையும்
அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ எமக்கு.'' (கலி - 6)

எனும் பாலைக் கலியுமது,

''ஒன்றில் காலை அன்றில் போலப்
புலம்புகொண் டுறையும் புன்கண் வாழ்க்கை
யானுமாற் றேனது தானும்வந் தன்று
நீங்கல் வாழி யரைய........''

எனும் நற்றிணைப் பாட்டும், தலைவி போற் கூறும் தோழி கூற்று

''மால்வெள் ளோத்திரத்து மையில் வாலிணர்
அருஞ்சுரம் செல்வோர் சென்னிக் கூட்டும்
அவ்வரை இறக்குவை யாயின்
மைவரை நாட வருந்துவள் பெரிதே.''

எனவரும் ஐங்குறு நூற்று 301 ஆம் செய்யுளுமது.

தோழி தலைவிக்குக் கூறியதற்குச் செய்யுள் வருமாறு :-

''நிலந்தொட்டுப் புகாஅர், வான மேறார்,
விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்,

நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரிற்
கெடுநரு முளரோ நங் காதலோரே'' (குறு 130)
''பொன்செய் பாண்டிற் பொலங்கல நந்தத்
தேரக லல்குல் அவ்வரி வாட
இறந்தோர் மன்ற தாமே பிறங்குமலைப்
புல்லரை யோமை நீடிய
புலிவழங் கதர கானத்தானே.'' (ஐங் - 316)

எனும் ஐங்குறு நூற்றுப் பாட்டு மதுவே.

நீங்கலின் வந்த தம்முறு விழுமம் தோழி கூறுதற்குச் செய்யுள் :

''அன்னை வாழியோ அன்னை, நின்மகள்
என்னினும் யாயினும் நின்னினும் சிறந்த
தன்னமர் இளந்துணை மருட்டலின் முனாஅது
வெண்வேற் புல்லி வேங்கட நெடுவரை
மழையொடு மிடைந்த வயக்கலிற் றருஞ்சுரம்
விழைவுடை உள்ளமொடு உழைவயிற் பிரியாது
வன்கண் செய்து சென்றனள்;
புன்கண் செய்தல் புரைவதோ அன்றே.''

தாய்நிலை நோக்கித் தலைப் பெயர்த்துக் கொளற்குச் செய்யுள் :

''புள்ளு மறியாப் பல்பழம் பழுநி
மடமான் அறியாத் தடநீர் நிலைஇச்
சுரநனி இனிய வாகுக வென்று
நினைத்தொறுங் கலுழு மென்னினும்
மிகப்பெரிது புலம்பின்று தோழிநம் மூரே''
(ஐங் - 398)

அழிந்தது களையென மொழிந்தது கூறி வன்புறை நெருங்கித் தோழி கூறுவதற்குச் செய்யுள் :-

'அரிதாய அறனெய்தி' என்னும் பாலைக் கலியில்,

''கடியவே கணங்குழாய் காடென்றார், அக்காட்டுள்
பிடியூட்டிப் பின்னுண்ணும் களிறெனவும் உரைத்தனரோ''
(கலி-10)

என்பது போன்ற தலைவன் மொழிந்தவற்றை எடுத்துக்காட்டி'

"இனைநல முடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர்; மனைவயின்
பல்லியும் பாங்கொத் திசைத்தன;
நல்லெழி லுண்கணும் ஆடுமா லிடனே."

எனக்கூறி அழியும் தலைவியை ஆற்றுவித்தல் காண்க.

"தண்கயத் தமன்ற வண்டுபடு துணைமலர்" எனும் மருதனிளநாகனார் அகப்பாட்டில் (அகம்-59)

"வருந்தினை வாழியர் நீயே;
... ... ... ... ... ... ... ... ... ... ... ..
தாம்பா ராட்டிய காலையு முள்ளார்
பிரிந்து சேணுறைநர் சென்ற வாறே,
புன்தலை மடப்பிடி உணீஇயர் அங்குழை
நெடுநிலை யாஅ மொற்றி நனைகவுள்
படிஞீமிறு கடியும் களிறே."

என்று எடுத்துக்காட்டி அழியும் தலைவியைத் தோழி ஆற்றுவித்தலும் காண்க.

இனி, 'என்றிவை எல்லாம்' எனப் பொதுபடக் கூறுதலான், தோழி 'இது பருவமன்று' என்பது போன்று கூற்றுகள் நிகழ்த்தி ஆற்றுவித்தலையுங் கொள்க. அதற்குச் செய்யுள் வருமாறு.

"மடவ மன்ற தடவு நிலைக் கொன்றை;
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா வளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிணை ரூழ்த்த,
வம்ப மாரியைக் காரென மதித்தே." (குறு-66)

சிவலிங்கனார்

இச்சூத்திரம் உடன்போக்கின்கண் தோழி கூற்று நிகழு மாறு கூறுகின்றது. நச்சினார்க்கினியர் இக்கருத்தினரே.

இளம்பூரணரும் பாரதியாரும் உடன்போக்கின் கண்ணும் பொருள்வயிற்பிரிவின் கண்ணும் தோழி கூற்று நிகழுமாறு கூறுகின்றது எனக்கொண்டனர்.

தலைவரு விழும நிலையெடுத்துரைப்பினும் போக்கற்கண் ணும் விடுத்தற்கண்ணும் நீக்கலின் வந்த தம்முறுவிழுமமும் என்பதுவரை உடன்போக்கில் நிகழும் கூற்றுவகையென்றும்

பிறபொருள்வயிற்பிரிவுக்குரிய கூற்றுவகையெனினும் கொண்டனர் அவ்விருவரும் பொருள்வயிற்பிரிவு என்பதும் தெளிவாகக் கூறவில்லை.

வாய்மையும் பொய்மையும் கண்டோர்சுட்டி என்பதைத் தனியாகக் கொண்டு உதாரணம் காட்டிய இளம்பூரணர் தாய் நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளற்கு உதாரணம் காட்டவில்லை.

பாரதியார் 'வாய்மையும் ... ... ... தலைபெயர்த்துக்கொளினும்' என்பதற்கு ''வாய்மையும் பொய்ம்மையும் புனைந்து கூறியும் கண்டோரைச்சுட்டியும் நற்றாயின் பருவரலைக்கருதி மறுத்தர (– தலைவிமீள)த்தலைவியை வரவேற்றுக்கொள்ளுதலினும்'' எனப்பொருள் எழுதினர். உதாரணம் காட்டவில்லை. தலைவி மீளுதல் என்பது எப்பிரிவிலும் இல்லையாதலின் உரை பொருந்தாது.

43. பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி
வழுவின் ஆகிய குற்றம் காட்டலும்
ஊரது சார்பும் செல்லும் தேயமும்
ஆர்வ நெஞ்சமொடு [1]செப்பிய வழியினும்
புணர்ந்தோர் பாங்இன் புணர்ந்த நெஞ்சமொடு
அழிந்துஎதிர் கூறி விடுப்பினும் ஆங்கு அத்
தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்
சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும்
கண்டோர் மொழிதல் கண்டது என்ப (43)

ஆ.மொ.இல.

The expressions of those who find the couple in their elopement, occur, when warning them about the dangers which may happen because of time and the way they travel, when saying kind words about the nearness of their home and long distance of the country to which they propose to go, when asking the couple to return to their home-town, when preventing the step-

---

1. நெஞ்சமோடு பாடம்.

mother from going in search of them, when directing her (step-mother) to the place they are going, when the couple take long route to a far-off place and when they return to their home-town.

பி. இ. நா.

தொல். சூ. 39ல் இலக்கண விளக்கச் சூத்திரத்தில் காண்க.

## இளம்பூரணர்

**43. பொழுது மாறும் ... ... ... கண்டது என்ப.**

இது கண்டோர் கூற்று நிகழும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றிவழுவின் ஆகிய குற்றம் காட்டலும் ஊரது சார்பும் செல்லும் தேயமும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும் என்பது, காலமும் நெறியும் அச்சம் வருமாறு தோன்றி வழுவுதலினாகிய குற்றம் காட்டலும் ஊரது அணிமையும் செல்லும் தேயத்தின் சேய்மையும் ஆர்வ நெஞ்சமொடு செப்பிய பக்கத்தினும் என்வாறு.

"எம் ஊர் அல்லது ஊர்நணித்து இல்லை
வெம்முரண் செல்வன் கதிரும் ஊழ்த்தனன்
சேந்தனை சென்மோ பூந்தார் மார்ப
இளையள் மெல்லியள் மடந்தை
அரிய சேய பெருங்கல் ஆறே." (சிற்றட்டகம்)

எனவரும்.[1]

"புணர்ந்தோர் பாங்கில் புணர்ந்த நெஞ்சமொடு அழிந்து எதிர் கூறி விடுப்பினும் என்பது, புணர்ந்து செல்கின்றோர்

---

1. செங்கதிர்ச் செல்வன் கதிரும் ஊழ்த்தனன் என்பது பொழுதின் குற்றம் கூறியது அரிய சேய பெருங்கல் ஆறு என்பது ஆற்றின் (வழி) குற்றம் கூறியது எம்மூர் அல்லது ஊர் நணித்து இல்லை என்பது ஊர் அணிமையும் இனிச்செல்லும் ஊர் சேய்மையும் குறித்தவாறு.

பக்கத்து விரும்பின நெஞ்சத்தோடு மனன் அழிந்து[2] எதிர் மொழி[3] கூறி விடுத்தற்கண்ணும் கூற்று நிகழும் என்றவாறு.

"அழுந்துபட வீழ்ந்த பெருந்தண் குன்றத்து
ஒலிவல் ஈந்தின் உலவை யங்காட்டு
ஆறுசெல் மாக்கள் சென்னி எறிந்த
செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய
வல்லியம் பெருந்தலைக் குருளை மாலை
மரல்நோக்கும் இண்டிவர் ஈங்கைய சுரனே
வையெயிற்று ஐயள் மடந்தை முன்னுற்று
எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளங்
காலொடு பட்டமாரி
வால்வரை மிளிர்க்கும் உருமினுங் கொடிதே."

(நற்-2)

எனவரும்.

ஆங்கு அத்தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும் என்பது, ஆண்டுப் பின் சென்ற அச்செவிலித்தாயது நிலைமையைக்கண்டு போகாமல் தடுத்தற்கண்ணும் போக விடுத்தற் கண்ணும் என்றவாறு.

"அறம்புரி அருமறை நவின்ற நாவின்
திறம் புரி கொள்கை அந்தணிர் தொழுவலென்று
ஒண்டொடி வினவும் பேதையம் பெண்டே
கண்டனெம் அம்ம சுரத்திடை அவளே
இன்றுணை இனிதுபா ராட்டக்
குன்றுயர் பிறங்கல் மலையிறந் தோளே"

(ஐங்குறு-387)

எனவரும், இது செவிலி வினாஅயவழிக் கூறியது.

"பெயர்ந்து போகுதி பெருமூ தாட்டி
சிலம்புகெழு சீறடி சிவப்ப
இலங்குவேற் காளையோ டிறந்தனள் சுரனே."

இது தடுத்தற்கண்[4] வந்தது.

---

2. மனன் அழுங்கி—மனம் வருந்தி.

3. எதிர் மொழி கூறி—போவார் எதிரே சில சொற்கூறி.

4. இனித்தேடி அப்பாற்செல்ல வேண்டுவதில்லை எனத் தடுத்தற்கண் வந்தது. இறந்தனள் தான் என்பதால்.

''நெருப்பவிர் கனவி உருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாத்து வரிநியல் இரீஇச்
சிறுவரை யிறப்பிற் காணகுவை செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்வேல் விடலை முன்னிய சுரனே''.

(ஐங்குறு - 388)

இது விடுத்தற்கண்[5] வந்தது.

சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும் என்பது சேய்மைக்கண் அகன்றோர் செல்லுதற்கண்ணும் வரவின் கண்ணும் என்றவாறு.

''வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொல் அளியர் தாமே ஆரியர்
கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்நெற் றொலிக்கும்
வேய்பயில் அழுவம் முன்னி யோரே.'' (குறுந்-7)

எனவரும்.[6]

'கண்டோர் மொழிதல் கண்டது என்ப' என்பது, இவ்விவ் விடங்களில் கண்டோர் சொல்லுதல் வழக்கிற் காணப்பட்ட தென்ப என்றவாறு.

## நச்சினார்க்கினியர்

### 40. பொழுதும் ... ... ... ... ... என்ப

இது, கொண்டு தலைக்கழிந்துழி இடைச் சுரத்துக்கண்டோர் கூறுவன கூறுகின்றது.

(இ-ள்) பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி வழுவின் ஆகியகுற்றம் காட்டலும் - உடன்போயவழி மாலைக் காலமுஞ் சேறற்கரிய வழியும் அஞ்சுவரக் கூறி அவற்றது தீங்கு காரண

---

5. தேடிச்செல்க என விடுத்தல்.

6. பிரிந்த காதலர் செலவுகண்ட போதும் அகன்றவர் மீண்டு வருதல் கண்டபோதும் கூறுதற்கு இச்செய்யுள் இச்செய்யுள் ஒன்றே அமையும்.

மாகப் போகின்றார்க்கு வரும் ஏதம் அறிவித்தலும்; ஊரது சார்வும் செல்லும் தேயமும் ஆர்வநெஞ்சமொடு செப்பிய கிளவியும்-எம்மூர் அணித்தெனவும் நீர்செல்லுமூர் சேய்த்தெனவும் அன்புடை நெஞ்சத்தாற் கூறுங் கூற்றுகளும். புணர்ந்தார் பாங்கில் புணர்ந்த நெஞ்சமொடு அழிந்து எதிர்கூறி விடுப்பினும் புணர்ந்து உடன் போய இருவர் கண்ணுந் தணவா நெஞ்சினராகி ஆற்றாமை மீதூர ஏற்றுக்கொண்டு நின்று இனி இதின் ஊங்குப் போதற்கரிது நும் பதிவயிற் பெயர்தல் வேண்டுமென்று உரைத்து மீட்டலும்; ஆங்கு அத்தாய் நிலைகண்டு தடுப்பினும் விடுப்பினும் அவ்விடத்துத் தேடிச்சென்ற அச்செவிலியது நிலைகண்டு அவளைத் தடுத்து மீட்பினும் அவர் இன்னுழிச் செல்வரென விடுத்துப் போக்கினும்; சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும்-சேய்த்தாகிய நிலமைக்கண்ணே நீங்கின அவ்விருவருடைய போக்கிடத்தும்; வரவினும்-செவிலியது வரவிடத்தும்; கண்டோர் மொழிதல் கண்டது என்ப - இடைச்சுரத்துக் கண்டோர் கூறுதல் உலகியல் வழக்கினுட் காணப்பட்டதென்று கூறுவர் புலவர் என்றவாறு.

"எம்மூ ரல்ல தூர்நணித் தில்லை
வெம்முரட் செல்வன் கதிரு மூழ்ந்தனன்
சேந்தனை சென்மோ பூந்தார் மார்ப
இளையன் மெல்லியண் மடந்தை
அரிய சேய பெருங்க லாறே." (சிற்றடக்கம்)

இதனுட் கதிரும் ஊழ்க்தனனெனவே பொழுது சேறலும் பெருங்கலாறெனவே ஆற்றதருமையும் பற்றிக் குற்றங்காட்டிய வாறு காண்க "எல்லுமெல்லின்று" என்னுங் குறுந்தொகைப் (390) பாட்டும் அது.

நல்லோண் மெல்லடி நடையு மாற்றாள்
பல்கதிர்ச் செல்வன் கதிரு மூழ்த்தனன்
அணித்தாத் தோன்றுவ தெம்மூர்
மணித்தார் மார்ப சேந்தனை சென்மே."

இஃது எம்மூர் அணித்தென்றதனாற் சார்வும் அதனானே செல்லுந் தேயஞ் சேய்த்தெனவுங் கூறிற்று. மகட்பயந்து வாழ்வோர்க்கு இவளைக் கண்டு அருள் வருதலின் ஆர்வு நெஞ்சமென்றார்.

"இதுநும் ஊரே யாவருங் கேளீர்
பொதுவறு சிறப்பின் வதுவையுங் காண்டு
மீன்றோ ரெய்தாச் செய்தவம்
யாம்பெற் றனமான் மீண்டனை சென்மே."

இஃது அழிந்தெதிர் கூறி விடுத்தது[1]. இது கொடுப் போரின்றிக் கரண முண்மை கூறிற்று மீட்டுழி இன்னுழிச் சென்று இன்னது செய்ப ஒன்றல் புலனெறிவழக்கன்று.

"பெயர்ந்து போகுதி பெருமூ தாட்டி
சிலம்புகெழு சீறடி சிவப்ப
விலங்குவேற் காளையோ டிறந்தனள் சுரனே."

"சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே."

"கடன்மேய சங்கங் கழியடைந்த பெண்ணை
மடன்மேய வாழ்குர லன்றில்-கெடலருஞ்சீர்
வாமா னெடுங்கோதை வான்றீண்டு கொல்விமேற்
றேமாவின் மேய கனி."

இவை செவிலியைத் தடுத்தன.

"சிலம்புஞ் சிறு நுதலுஞ் சில்குழலும் பல்வளையு
மொருபாற் றோன்ற
அலங்கலந் திண்டோளும் ஆடெடுத்து ஒண்குழையு
மொருபாற் றோன்ற
விலங்க லருஞ்சுரத்து வேறுருவின் ஒருடம்பாய்
வருவார்க் கண்டே
அலங்கல் அவிர்சடையெம் அண்ணல் விளையாட்டென்
றகன்றேம் பாவம்."

இது தெய்வமென யாங்கள் போந்தேம், நுமக்கெய்தச் சேறலா மென்று விடுத்தது.

---

1. தம் ஊர்க்கண் விடுத்தது. வதுவையும் காண்டும்—திருமணம் செய்து வைப்பேம் - எனவே தலைமக்கள் கொடுப்பதின்றி மணம்உண்டு என்பதற்கு இச்செய்யுள் சான்றாம். மீட்டுழி—மீண்டவிடத்து.

,,நெருப்பவிர் கனலி யுருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாத்த வரிநிழ லசைஇச்
சிறுவரை யியப்பிற் காண்டி செறிதளிர்ப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்வே லண்ணல் முன்னிய சுரனே.'' (ஐங்குறு-388)

இவ் வைங்குறு நூறும் அது.

''அஞ்சுடர்நீள் வாண்முகத் தாயிழையு மாறிலா
வெஞ் சுடர்நீள் வேலானும் போதரக்கண் - டஞ்சி
யொருசுடரு மின்றி யுலகுபா ழாக
விருசுடரும் போந்தன வென்றார்,''
(திணைமாலை நூற்-71)

இஃது இடைச்சுரத்துக் கண்டோர் கூறிய வார்த்தையைக் கேட்டோராகச் சிலர் கூறியது

''அழுந்துபட வீழ்ந்த தெருந்தண் குன்றத்
தொலிவ லீந்தி னுலவை யங்காட்
டாறுசென் மாச்கள் சென்னி யெறிந்த
செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய
வல்லியம் பெருந்தலைக் குருளை மாலை
மானோக்கு மீண்டிவ ரீங்கைய சுரனே
வையெயிற் றையண் மடந்தை முன்னேற்
றெல்லிடை நீங்கு மிளையோ னுள்ளங்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கு முருமினுங் கொடிதே.''
(நற்றிணை-2)

காண்பா னவாவினாற் காதலன் காதலிபின் னடவாநிற்ப
நாண்பால் ளாதலா னன்னுதல் கேள்வன் பின் னடவாநிற்ப
வாண்பான்மை குன்றா வயில்வே லவன்றனக்கு
மஞ்சொ லாட்கும்
பாண்பாலைவண்டினமும் பாவவருஞ்சுரமும் பதிபோன
நன்யே''

''மடக்கண் டகரக் கூந்தற் பணைத்தோள்
வார்ந்த வாலெயிற்றுச் சேர்ந்துசெறி குறங்கிற்
பிணைய லந்தழை தைஇத் துணையிலள்
விழவுக்களம் பொலிய வந்துநின் றோளே
யெழுமினோ வெழுமினங் கொழுநர்க் காக்கம்
ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்

பலருடன் கழித்த வொள்வான் மலையன
தொருவேற் கோடி யாங்குநம்
பன்மைய தெவனோவிவ ணன்மைதலைப் படினே.''
(நற்றிணை-170)

இஃது இடைச்சுரத்தும் குறும்பினுள்ளோர் இவரைக்கண்டு கோள் இழைப்புற்றாக்கு அவர்பெண்டிர் கூறியது. இவை செலவின்கட் கூறியன.

''வில்லோன் காலன கழலே தொடியோண்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொ லளியர் தாமே யாரியர்
கயிறொடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேய்பயி லழுவ முன்னி யோரே.'' (குறுந்-7)

என்பதும் அது.

கடியான் கதிரெறிப்பக் கல்லளையில் வெம்பியவக்
கலங்கற் சின்னீ
ரடியானுலகளந்த வாழியா னாக்கிய
வயிர்தென் றெண்ணிக்
கொடியான் கொடுப்பக் குடங்கையிடங் கொண்டிருந்து
குடித்துச் சென்ற
வடியேர் தடங்கணவ் வஞ்சிக்கொம் பீன்றாரிவ்
வருவோர் போலும்.''

''நமரே யவரெனி னன்ணினீர் சென்மி
னமர்வி லொராவ வதி யாய்நின் - றமரோ
விளக்கி னனையாளைத் தான்கண்டான் கண்டேன்
களக்கனி வண்ணனை யான்.''

''அறம்புரி யருமறை நவின்ற நாவிற்
றிறம்புரி கொள்கை யந்தணிர் தொழுவலென்
றொண்டொடி வினவும் பேதையம் பெண்டே
கண்டென மம்ம சுரத்திடை யவளை
யின்றுணை யினிதுபா ராட்டக்
குன்றுயர் பிறங்கன் மலையிறந் தோளே.''
(ஐயகுறு-387)

இவை செவிலி வரவின்கட் கூறின.

''எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ
லுறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்
வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீ ரிவ்விடை
யென்மக ளொருத்தியும் பிறண்மக னொருவனுந்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சிய
ரன்னா ரிருவரைக் காணிரோ பெரும
காணே மல்லேங் கண்டனங் கடத்திடை
யாணெழி வண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவர றாயிர்நீர் போறிர் ;

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே ;
சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே ;
ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்
சூழுங்கா னும்மக ளுமக்குமாங் கனையளே ;

எனவாங்கு, இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஅச் சென்றன
ளறந்தலை பிரியா வாறுமற் றதுவே'' (கலி-9)

என்னும் பாலைக்கலியும் அது. இக்கூறிய வாறன்றி இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இச்சூத்திரத்தான் அமைக்க.

பாரதியார்

## 39. பொழுதும் ... ... ... ... ... ... எஙப

**கருத்து :** இது, தலைமக்கள் உடன்போக்கின் கண்கண்டோர் கூற்று நிகழுமிடம் கூறுகின்றது.

பொருள் :- பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி வழு வினாகிய குற்றங் காட்டலும்—அவர் போகும் நேரமும் வழியும்

அச்சந்தரத்தக்கவாக, அவை அஞ்சாது சென்று இடையூறு மேதங் கருதாதேகும் பிழையை அவர்கட்கு எடுத்துக்காட்டுத லும் ; ஊரது சார்வும்—உடன் போவார்க்கு வழித்தங்க அண் மையில் ஊருண்மையை ; ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும்—அன்பு நிறைந்த உள்ளத்தொடு தலைமக்கட்கு அவர் நலம் பேணிப் பரிந்து கூறுமிடத்தும் ; புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொடு அழிந்தெதிர் கூறி விடுப்பி னும்...காதலால் கூடின தலைமக்கள் பால் அன்புற்ற உள்ளத் தோடு அவர் நிலைமைக்கு வருந்தி எதிரெடுத்துரைத்து அவரை விடுவிக்குமிடத்தும் ஆங்கத் தாய்நிலை கண்டு தடுப்பினும்— தலைமக்களைத் தாங்கண்ட சுரத்தினிடையே தேடிவரும் செவிலித்தாய் நிலைமை கண்டு அவளைமேற்செல்லின் தலை மக்களைக் காண்பை எனக்கூறி அவளைப்போக விடுக்குமிடத் தும் ; சேய்நிலைக்கன்றோர் செலவினும் வரவினும்–தொலை தலைமக்களின் உடன் போக்கிலும், அவர் மறுதரவிலும் ; கண்டோர் மொழிதல் கண்டதென்ப—உடன் போம் தலை மக்களைக் கண்டவர்கள் கூற்று நிகழ்த்தல், வழக்கின்கண் காணப்பட்ட தென்பர் அகப்பொருள் நூலார்.

பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி வழுவினாகிய குற்றங் காட்டற்குச் செய்யுள் :

''எல்லு மெல்லின்று, பாடுங் கேளாய்,
செல்லா தீமோ சிறுபிடி துணையே
வேற்றுமுனை வெம்மையிற் சாத்துவந் திறத்தென,
வளையணி நெடுவே லேந்தி
மிளைவந்து பெயருந் தண்ணுமைக் குரலே''

(குறுந்-390)

கண்டோர் ஊரணிமை கூறும் கிளவி வருமாறு :

''நல்லோண் மெல்லடி நடையு மாற்றாள்,
பல்கதிர்ச் செல்வன் கதிரும் ஊழ்த்தனன்:
அணித்தாற் றோன்றுவது எம்மூர்,
மணித்தார் மார்ப ! சேர்ந்தனை சென்மோ''.

(பொருள்-புறத்-சூ-40 உரைமேற்கோள்)

ஆர்வ நெஞ்சமொடு கண்டோர் கூறியதற்குக் கூற்று ;

"வில்லோன் காலன கழலே, தொடியோள்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே, நல்லோர்
யார்கொல் அளியர் தாமே, ஆசிரியர்
கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேபயில் அழுவம் முன்னி யோரே."

(குறுந்-7)

"பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து
செங்கால் மராஅத்த வரிநிழல் இருந்தோர்
யார்கொல்? அளியர் தாமே, வார்சிறைக்
குறுங்கால் மகன்றில் அன்ன
உடன்புணர் கொள்கைக் காத லோரே".

எனும் ஐங்குறுநூறு (381) மது,
அழிந்தெதிர் கூறிவிடுத்தற்குச் செய்யுள் :

"இதுநும் மூரே, யாவருங் கேளிர் ;
பொதுவறு சிறப்பின் வதுவையுங் காண்டும் ;
ஈன்றோர் எய்தாச் செய்தவம்
யாம் பெற்றனமால் மீண்டனை சென்மோ."

(பொருள்-40சூ மேற்கோள்)

தாய்நிலை கண்டு கொண்டார் தடுத்தற்குச் செய்யுள் :

"பெயர்ந்து போகுதி பெருமூ தாட்டி !
சிலம்புகெழு சீறடி சிவப்ப
இலங்குவேற் காளையொடு இறந்தனன் சுரனே".

தாய்நிலை கண்டு விடுத்தற்கு மேற்கோள் :

"நெருப்பவிர் கனலி உருப்புச்சினந் தணியக்
கருங்கால் யாத்து வரிநிழ லிசாஇ
சிறுவரை இறப்பிற் காண்குவை செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்வேல் விடலை முன்னிய சுரனே".

(ஐங்குறு-388)

சேய் நிலைக்கன்றோர் செலவிற் கண்டோர் கூறும் கூற்று :

"செய்வினைப் பொலிந்த செறிகழல் நோன்தாள்
மையணற் காளையொடு பைய வியலிப்

பாவை யன்னஎன் ஆய்தொடி மடந்தை
சென்றனள் என்றிர் ஐய!
ஒன்றின வோஅவள் அஞ்சிலம் படியே?
(ஐங்-389)

இதில் செவிலி கொண்டு கூறும் கண்டோர் கூற்றைக் காண்க. மறுவரவின்கட் கண்டோர் கூறுதற்குச் செய்யுள்:

"இவன் இவள் ஐம்பால் பற்றவுனை மிவளிவன்
புன்றலை யோரி வாங்குநள் பரியவும்
காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிராது
ஏதில் சிறுசெறா வுறுப மன்னோ;
நல்லைமன் றம்ம பரலே! மெல்லியல்
துணைமலர்ப் பிணையலன்ன இவர்
மணமகிழ் இயற்கை காட்டி யோயே" (குறுந். 299)
(39)

44. ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும்
ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும்
இடைச்சுர மருங்கின் அவள்தமர் எய்திக்
கடைக்கொண்டு பெயர்தலின் கலங்கு அஞர் எய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை யுளப்பட
அப்பாற்பட்ட ஒருதிறத் தானும்
நாளது இன்மையும் இளமையது அருமையும்
தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும்
இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும்
அன்பினது அகலமும் அகற்சியது அருமையும்
ஒன்றால் பொருள்வயின் ஊக்கிய பாலினும்
வாயினும் கையினும் வருத்த பக்கமொடு
ஊதியம் கருதிய ஒருதிறத் தானும்
புகழும் மானமும் எடுத்துவற் புறுத்ததும்
தூது இடையிட்ட வகையி னானும்
ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்
மூன்றன் பகுதியும் மண்டிலத்து அருமையும்
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
பாசறைப் புலம்பலும் முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்

**காவற்பாங்கின் ஆங்கோர் பக்கமும்**
**பரத்தையின் அகற்சியின் பரிந்தோட் குறுகி**
**இரத்தலும் தெளித்தலும் எனஇரு வகையொடு**
**உரைத்திற நாட்டம் கிழவோன் மேன.** (44)

ஆ. மொ. இல.

When the parents are not favourable to his marriage with his love, when the opportunities are rare for the lady-love to meet him when they have to pass through the desert when he determines to elope with her in consultation with the maid-Companion, when he leaves her at home, when he elopes with the determination to to marry her and when her parents chase them to take her back, if she is firm in her resolve to marry him disregarding her parents, these are all the occasion of one sart to be given expression to by the lover.

The short span of life, importance of youth, the planning of his efforts, the thought of his status, the inferiority of poverty, the exaltedness of possession the extensiveness of love, the inability of separation these are taken into consideration when he thinks upon earning wealth; (these are the occasions to be given expressions on the part of the lover on the part of his emphasis on fame and honour on undertaking the duties of ambassador or helping his friends, and on explaining the importance of three divisions of life ('Aram' 'Porul' and 'Inbam' — Virtue, wealth and love) on describing the inconvenieness in the countries where he sets upon earning on the superiority of enemies, thinking about his love when he is love when he is lovely in the war campus, on addressing the driver of the chariot when the war ends. On the duties owe to his subjects and and dependents on the making of entreaties and consolations to his wife who is grived for his relation with the harlot-these are the themes to farm basis for making expressions on the part of lover.

## இளம்பூரணர்

**44. ஒன்றாத் தமரினும் ... ... ... ... கிழவோன்மேன**

இது பிரிவின் கண் தலைமகற்குக் கூற்று நிகழும் இடன் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும் ஒன்றிய மொழியொடு வலிப்பினும் விடுப்பினும் என்பது, வரைவு உடன் படாத தமர் கண்ணும் பருவத்தின் கண்ணும் சுரத்தின் கண்ணும் பொருந்திய சொல்லொடு தலைமகளை உடன்கொண்டு போகத் துணியினும் விடுத்துப்போகினும் கிழவோற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

உரைத்திற நாட்டம் உளவாம் கிழவோற்கு[1] என்பதை எனைய பகுதிக்கும் ஒட்டுக.

வலித்தற்குச் செய்யுள் :

"ஆறுசெல் வருத்தத்துச் சீறடி சிவப்பவுஞ்
சினைநீங்கு தளிரின் வண்ணம் வடாவுந்
தான்வரல் துணிந்த இவளினும் இவளுடன்
வேய்பயில் அழுவம் உவக்கும்
பேதை நெஞ்சம் பெருந்தகவு உடைத்தே."

"வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்
குளவி மொய்த்த அழுகற் சின்னீர்
வளையுடைக் கையள் எம்மோ டுணீஇயர்
வருகதில் அம்ம தானே
அளியளோ அளியள் என் நெஞ்சமர்ந் தோளே."

எனவும் வரும். (குறுந்-56)

அவ்வழி இடைச்சுரத்திற் கூறியதற்குச் செய்யுள்
"அழிவில முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கண்கண் டாஅங்கு
அலமரல் வருத்தந் தீர யாழநின்
நலமென் பணைத்தோ ளெய்தின மாகலிற்

---

1. கிழவோன்மேன என்பதை இவ்வாறு எழுதினார்.

பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி
நிழல்காண் தோறும் நெடிய வைகி
மணல்காண் தோறும் நெடிய வைகி
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயில் ஆலும்
நறுந்தண் பொழில கானங்
குறும் பல் லூரயாஞ் செல்லு மாறே.'' (நற்-9)

எனவரும்.

விடுத்தற்குச் செய்யுள் :

''இரும்புலிக் கிரிந்த கருங்கட் நெந் நாகு
நாட்டயிர் கடைகுரல் கேட்டொறும் வெரூஉம்
ஆநிலைப் புள்ளி அல்க நம்மொடு
மானுண் கண்ணியும் வருமெனின்
வாரார் ஆயரோ பெருங்க லாறே.''[2]

எனவரும். இஃது உடன் கொண்டு பெயர்தல் வேண்டுமென்ற தோழிக்குக் காட்டது கடுமை கூறி விடுத்தது.

''கிளிபுரை கிளவியாய் எம்மொடு நீவரின்
தளிபொழி தளிரன்ன எழில்மேனி கவின்வாட
முளியரில் பொத்திய முழங்கழல் இடைபோழ்ந்த
வளியுறின் அவ்வெழில் வாடுவை யல்லையோ.''
(கலி-பாலை-12)

என்பது தலைவிக்குக் காட்டது கடுமை கூறி விடுத்தது.

இடைச்சுரம் மருங்கின் அவன் தமர் எய்திக் கடைக் கொண்டு பெயர்தலில் கலங்கு அஞர் எய்திக் கற்பொடுபுணர்ந்த கௌவை உளப்பட அப்பால் பட்ட ஒரு திறத்தானும் என்பது

---

2. இச்செய்யுள் சிதைந்துளது போலும் விடுத்தற்கு ஏற்ற கருத்து இல்லாமையோடு 'நம்மொடு வரும் எனின் வாரார் ஆயரோ' என்பன. தொடர்புபடவில்லை.

தலைமகள் செல்கின்ற இடைச் சுரத்திடைத் தலைகள் தமர் எய்தி மீட்டுக்கொண்டு பெயர்தல் மரபாதலின் அங்ஙனம் பெயர்வர் எனக் கலங்கி வருத்தமுற்றுக் கற்பொடு புணர்ந்த அலர்[3] உளப்பட அப்பகுதிப்பட்ட உடன் போக்கின் கண்ணும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு :

அவ்வழி, வருவரெனக் கூறலும் வந்தவழிக் கூறலும் உளவாம்.

''வினையமை பாவையின் இயலி நுந்தை
மனைவரை இறந்து வந்தனை யாயின்
தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி
அணிமிகு கானத் தகன்புறம் பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டும்
நீ விளை யாடுக சிறிதே யானே
மழகளிறு உரிஞ்சிய பராஅரை வேங்கை
மணலிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி
அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவன்
நுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே.''

(நற்-362)

இது வருவர் என ஐயுற்றுக் கூறியது[4]. 'கற்பொடு புணர்ந்த கௌவை'க்குச் செய்யுள் வந்தவழிக் கண்டு கொள்க.

நாளது சின்மையும் இளமையது அருமையும் தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும் இன்மையது இளிவும் உடைமையது உயர்ச்சியும் அன்பினது அகலமும் அகற்சியது அருமையும் ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும் என்பது, நாளது சின்மை முதலாகச் சொல்லப்பட்ட எட்டனையும் பொருத்தாத பொருட்கண் ஊக்கிய பக்கத்தினும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு

---

3. கற்பொடு புணர்ந்த அலர்—தலைவி தலைவனுடன் போதலே கற்புக்குரிய ஒழுக்கம். அப்போக்கு பற்றிய அலர் கற்பொடு புணர்ந்த அலர் எனப்படும்.

4. அமர்வரின், நுமர்விரின் என வந்தமையால் ஐயுற்ற தாகக் கொள்க.

'ஒன்றா' என்னும் பெயரெச்சம் 'பால்' என்னும் பெயர் கொண்டு முடிந்தது. அது[5] பொருள்வயி னூக்கிய பால் என அடையடுத்து நின்றது.

நாளது சின்மையை ஒன்றாமையாவது, யாக்கை நிலையாது என உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை.

இளமையது அருமையை ஒன்றாமையாவது,
பொறுதற்கரிய இளமை நிலையாது என
உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை.

தாளாண் பக்கத்தை ஒன்றாமையாவது, முயற்சியான் வரும் வருத்தத்தை உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை.

தகுதியது அமைதியை ஒன்றாமையாவது, பொருண்மேற் காதல் உணர்ந்தோர்க்குத் தகாது என உணரும் உணர்ச்சியைப் பொருந்தாமை.

இன்மையது இளிவை ஒன்றாமையாவது, இன்மையான் வரும் இளிவரவினைப் பொருந்தாமை.

உடைமையது உயர்ச்சியை ஒன்றாமையாவது, பொருள் உடையார்க்கு அமைவு[6] வேண்டுமன்றே, அவ்வமைவினைப் பொருந்தாமை; அஃதாவது மென்மேலும் ஆசை செலுத்துதல்.

அன்பினது அகலத்தை ஒன்றாமையாவது, சிறந்தார் மாட்டுச் செல்லும் அன்பினைப் பொருந்தாமை.

அகற்சியது அருமையை ஒன்றாமையாவது, பிரிதலருமையைப் பொருந்தாமை.

பொருள் தேடுவார் இத்தன்மைய ராதல் வேண்டுமென ஒருவாற்றான் அதற்கு இலக்கணங் கூறியவாறு.

---

5. அது – பால்என்பது. ஒன்றாப் பொருள் என நச்சினார்க்கினியர் முடிக்கும் திறம் காண்க.

6. அமைவு சிந்தையின் நிறைவு.

வாயினும் கையினும் வகுத்த பக்கமோடு ஊதியம் கருதிய ஒரு திறத்தானும் என்பது, வாயான் வகுத்த பக்கமோடும் கையான் வகுத்த பக்கமோடும் பயன் கருதிய ஒரு கூற்றானும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

வாயான் வகுத்த பக்கமாவது—ஓதுதல். கையான் வகுத்த பக்கமாவது—படைக்கலம் பயிற்றலும் சிற்பங் கற்றலும். ஊதியங் கருதிய ஒரு திறனாவது மேற்சொல்லப்பட்ட பொருள்வயிற்பிரிதலன்றி அறத்திறங் காரணமாகப் பிரியும் பிரிவு. இது மறுமைக்கண் பயன் தருதலின் 'ஊதியம்' ஆயிற்று.

"அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு." (குறள்-32)

என்பதனானும் அறிக.

புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும் என்பது, பிரிந்ததனான் வரும் புகழும் பிரியாமையான் வரும் குற்றமும் குறித்துத் தலைமகளை யான் வருந்துணையும் ஆற்றியிருத்தல் வேண்டுமெனக் கூறுதற்கண்ணும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

பொருள்வயின் ஊக்கிய பாலினும் ஊதியம் கருதிய[7] ஒரு திறத்தானும் வற்புறுத்தல் எனக்கூட்டுக.

"அறனு மீகையு மண்புங் கிளையும்
புகழு மின்புந் தருதலிற் புறம்பெயர்ந்து
தருவது துணிந்தமை பெரிதே
விரிபூங் கோதை விளங்கிழை பொருளே."

எனவரும்.

தூதிடை இட்ட வகையினானும் என்பது, இருபெரு வேந்தர் இகலிய வழிச் சந்து செய்தற்குத் தூதாகிச் செல்லும் வகையின் கண்ணும் அவற்குக் கூற்று நிகழும்.

---

7. வாயினும் கையினும் வகுத்தபக்கமொடு ஊதியம் கருதிய என்க.

ஆகித்தோன்றும் பாங்கோர் பாங்கினும் என்பது, தனக்குப் பாங்காகித் தோன்றுவார் பக்கத்துப்பிரியும் வழியும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு. அதுவும்[8] வேந்தற்கு உற்றுழிப் பிரியும் பிரிவு.

மூன்றன் பகுதியாவன, நால்வகை வலியினும்[9] தன் வலியும் துணை வலியும் வினைவலியும் என்பன. அவை[10] பகைவர் மாட்டு உள்ளன.

மண்டிலத்து அருமையாவது, பகைவர் மண்டிலங்[11] கொண்ட அருமை என்றவாறு.

தோன்றல் சான்ற என்பது [இவை]மிகுதல் சான்ற என்றவாறு.

மாற்றோர் மேன்மையாவது, யாற்றோரது உயர்ச்சியானும் என்றவாறு. ஆறன் உருபு எஞ்சி நின்றது.[12]

மூன்றன் பகுதியானும் மண்டிலத் தருமையானும் தோன்றல் சான்ற மாற்றோர் எனக் கூட்டுக.

பாசறைப் புலம்பல் என்பது, பாசறைக்கண் தலைமகன் தனிமை யுரைத்தல்[13] என்றவாறு,

---

8. அது என்றிருத்தல் வேண்டும் அதுவும் பிரிவு எனின் ஆம்.

9. தன்வலி, துணைவலி, வினைவலி, மாற்றான்வலி (குறள்-471) நச். உரை, பாரதியார் உரைபார்க்க.

10. தன்வலி, துணைவலி, வினைவலி.

11. தமக்குப் பகைவரின் நாடு.

12. பிறவுருபுகளும் விரிக்கப்படும் நிலையில் இருத்தலின் ஆறன் உருபு எஞ்சிநின்றது என்றார்.

13. தனிமையுற்றதைத் தலைவன் தானே கூறுதல்.

தூதிடையிட்ட வகையினாலும், வேந்தற்கு உற்றுழியினானும் மாற்றோர் மேன்மையினானும் பாசறைக்கட் புலம்பல் எனக் கூட்டுக. அஃதாவது, தூதினும் வேந்தர்க்குற்றுழியினும் பகை தணிவினையினும் பாசறைக்கட் புலம்பல் உளதாகும் எனக் கொள்க.

''வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
வளைகளைந் தொழிந்த கொழுந்தி னன்ன
தளைபிணி அவிழாச் சுரிமுகப் பகன்றை
சிதரலந் துவலை தூவலின் மலரும்
தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்
வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி
மங்குல் மாமழை தென்புலம் படரும்
பனியிருங் கங்குலுந் தமியள் நீந்தித்
தம்மூ ரோளே நன்னுதல் யாமே
கடிமதிற் கதவம் பாய்தலின் தொடிபிளந்து
நுதிமுகம் மழுங்கிய மண்ணைவெண் கோட்டுச்
சிறுகண் யானை நெடுநா ஒண்மணி
கழிப்பிணிக் கறைத்தோல் பொழிகணை உதைப்பத்
தழங்குகுரல் முரசமொடு மயங்கும் யாமத்துக்
கழித்துறைச் செறியா வாளுடை யெறுழ்த்தோள்
இரவுத்துயில் மடிந்த தானை
உரவுச்சின வேந்தன் பாசறை யோமே''.
(அகம்-24)

இது வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் கூற்று.

''வைகுபுலர் விடியல் மைபுலம் பரப்பக்
கருநனை அவிழ்ந்த ஊழுறு முருக்கின்
எரிமருள் பூஞ்சினை யினச்சிதர் ஆர்ப்ப
நெடுநல் அடைச்சிய கழனியேர் புகுத்துக்
குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர
அரிகால் போழ்ந்த தெரிபகட்டு உழவர்
ஓதைத் தெள்விளி புலந்தொறும் பரப்பக்
கோழிணர் எதிரிய மரத்த கவினிக்
காடணி கொண்ட காண்டகு பொழுதின்

நாம்பிரி அறியா நலனொடு சிறந்த
நற்றோள் நெகிழ வருந்தினள் கொல்லோ
மென்சிறை வண்டின் தண்கமழ் பூந்துணர்
தாதின் துவலை தளிர்வார்ந் தன்ன
அங்கலுழ் மாமைக் கிளைஇய
நுண்பல் தித்தி மாஅ யோளே.'' (அகம் - 41)

என்பது பகையிற் பிரியும் தலைமகன் கூற்று* பிறவும். அன்ன இவ்வாறு வருவன[14] குறித்த பருவம் பிழைத்துழி என்று கொள்க

முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும் என்பது, முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பப் பட்ட வினைத்திறத்தினது வகையின் கண்ணும் அவற்குக் கூற்று நிகழும் என்றவாறு.

அது பாசறைக்கட் கூறலும், மீண்டு இடைச்சுரத்துக் கூறலும் என இருவகைப்படும். இன்னும், 'வகை' என்றதனான் நெஞ்சிற்குக் கூறியனவுங் கொள்க.

''வந்துவினை முடித்தனன் வேந்தனும் பகைவரும்
தந்திறை கொடுத்துத் தமரா யினரே

முரண்செறிந் திருந்த தானை இரண்டும்
ஒன்றென் அறைந்தன பணையே நின்தேர்
முன்னியங்கு ஊர்தி பின்னிலை யீயாது
ஊர்க பாக ஒருவினை கழிய
நன்னன் ஏற்றை நறுங்பூண் அத்தி
துன்னருங் கடுந்திறல் கங்கன் கட்டி
பொன்னணி வல்விற் புன்றுறை யென்றாங்

---

* இச்செய்யுளில் பகைவயிற் பிரிவுக்கோ பிற பிரிவுக்கோ யாதோர் குறிப்பும் இல்லை.

14. தலைவன் பாசறைக்கண் தனிமையுற்றுக் கூறுவதாக வருவன.

கன்றவர் குழீஇய அளப்பருங் கட்டூர்ப்
பருந்துபடப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டது நோனான் ஆகித் திண்டேர்க்
கணையன் அகப்படக் கழுமலந் தந்த
பிணையலங் கண்ணிப் பெரும்பூண் சென்னி
அழும்பில் அன்ன அறாஅ யாணர்ப்
பழம்பல் நெல்லின் பல்குடிப் பரவைப்
பொங்கடி படிகயம் மண்டிய பசுமிளைத்
தண்குட வாயில் அன்னோள்
பண்புடை ஆகத் திண்றுயில் பெறவே.'' (அகம்-44)

எனவும்,

''கேள்கேடு ஊன்றவுங் கிளைஞர் ஆரவும்
கேளல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்
ஆள்வினைக் கெதிரிய ஊக்கமொடு புகல்சிறந்து
ஆரங் கண்ணி அடுபோர்ச் சோழர்
அறங்கெழு நல்லவை உறந்தை அன்ன
பெறலரு நன்கலன் எய்தி நாடும்
செயலருஞ் செய்வினை முற்றின மாயின்
அரண்பல கடந்த முரண்கொள் தானை
வாடா வேம்பின் வழுதி கூடல்
நாளங் காடி நாறு நறுநுதல்
நீளிருங் கூந்தல் மாஅ யோளொடு
வரைகுயின் றன்ன வான்றோய் நெடுநகர்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து
நலங்கேழ் ஆகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகஞ் சென்மோ நெஞ்சே வரிநுதல்
வயந்திகழ்பு இமிழ்தரும் வாய்புகு கடாஅத்து
மீளி முன்பொடு நிலனெறியாக் குறுகி
ஆள்கோட் பிழையா அஞ்சுவரு தடக்கைக்
கடும்பகட் டியானை நெடுந்தேர்க் கோதைத்
திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீர் உயர்கரைக் குவை இய
தண்ணான் பொருநை மணலினும் பலவே.''
(அகம்-93)

எனவும் வருவன நெஞ்சிற்குக் கூறியன.

"கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் புழுகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
அப்புநுனை ஏய்ப்ப அரும்பிய இருப்பைக்
செப்படர் அன்ன செங்குழை அகந்தோ
றிழுதின் அன்ன தீம்புழல் துய்வாய்
உழுதுகாண் துளைய வாகி ஆர்கழல்பு
ஆலி வானிற் காலொடு பாறித்
துப்பின் அன்ன செங்கோட் டியலின்
நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கும்
அத்த நண்ணிய அங்குடிச் சீறூர்க்
கொடுநுண் ணோதி மகளிர் ஓக்கிய
தொடிமாண் உலக்கைத் தூண்டுவரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டும்
குன்றுபின் ஒழியப் போகி உரந்துரந்து
ஞாயிறு படினும் ஊர்சேர்த் தெனாது
துனைபரி துரக்கும் துஞ்சாச் செலவின்
எம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மாண்
ஓங்கிய நல்லில் ஒருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோள் எய்திக்
கைகவியர்ச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாள்நுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறநசைஇச் சென்றஎன் நெஞ்சே."

(அகம்-9)

இஃது இடைச் சுரத்துச் சொல்லியது.[15]

காவல் பாங்கின் ஆங்கு ஓர் பக்கம் என்பது காவற் பக்கத்தின் கண் ஒரு பிரிவினும் கூற்று நிகழும் என்றவாறு.

'ஆங்கு' என்பது இடங்குறித்து நின்றது; "நின்னாங்கு வருஉ மென் நெஞ்சினை" (கலி-பாலை. 22) என்றாற்

---

15. நெஞ்சுக்குச் சொல்லியது.

போலக் கொள்க.[16] இது வாரியுள்[17] யானை காணவும். நாடு காணவும், புனலாடவும், கடவுளரை வழிபடவும் பிரியும் பிரிவு[18] ஒரு பக்கம் நாட்டெல்லையிலிருந்து பகைவரைக் காக்க வேண்டிப் பிரிவது பகைவயிற் பிரிவின் அடங்குதலின். அஃததன் உண்மைக்கண் பிரியும் பிரிவு என்று ஓதப்பட்டது.

பரத்தையின் அகற்சியின் என்பது, பரத்தையரிற் பிரியும் பிரிவின் கண்ணும் என்றவாறு. உம்மை எஞ்சி நின்றது[19].

பிரிந்தோள் குறுகி இரத்தலும்[20] தெளித்தலும்[21] என இரு வகையோடு என்பது, பிரியப்பட்ட தலைமகளைக் குறுகி, இரத்தலும் தெளித்தலும் ஆகிய இரண்டு வகையோடே கூட என்றவாறு.

காவற் பாங்கின் ஆங்கோர் பக்கத்தினும் பரத்தையின் அகற்சியினும் பிரியப் பட்டார் எனக்கூட்டுக. அஃதேல் பரத்தையின் அகற்சி ஊடலாகாதோ வெனின், ஊடலின் மிக்க நிலையே ஈண்டுக் கூறுகின்றதெனக் கொள்க.

கடவுள் மாட்டுப் பிரிந்துவந்த தலைமகனைத் தலைமகள் புணர்ச்சி மறுத்தற்குச் செய்யுள்.

மருதக்கலியுள் கடவுட்[22] பாட்டினுள்,

''வண்டூது சாந்தம் வடுக்கொள நீவிய
தண்டாத்தீஞ் சாயல் பரத்தை வியன்மார்ப
பண்டின்னை யல்லைமண் ஈங்கெல்லி வந்நீயக்
கண்ட தெவன்மற் றுரை :
நன்றும்.

---

16. நின்னிடத்துவரும் நெஞ்சு எனப்பொருள் கொள்ளுதல் போல
17. வாரி—யானையைப் பிடிக்கத்தோண்டப்படும் குழி
18. ''இது வாரியுள் ... ... ... ... பிரியும் பிரிவு'' இத்தொடர் இங்குப் பொருந்த வில்லை.
19. அகற்சியினும் என்றது அகற்சியின் என உம்மை எஞ்சியது.
20. வாயில் மூலம் இரத்தல்.
21. தன் தவறின்மை கூறித் தெளிவித்தல்.
22. கடவுள்—முனிவர்.

தடைஇய மென்தோளாய் கேட்டீவா யாயின்
உடனுறை வாழ்க்கைக் குதவி யுறையும்
கடவுளர் கண்தங்கி னேன்;
சோலை : மலர்வேய்ந்த மான்பிணையன்னார் பலர்நீ
கடவுண்மை கொண்டொழுகு வார்.''

எனவும்.

''சிறுவரைத் தங்கின் வெகுள்வர் செறுத்தக்காய்
தேறினென் சென்றீநீ செல்லா விடுவாயேல்
நற்றார் அகலத்துக் கோர்சார மேவிய
நெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கும்.
முட்டுப்பா டாகலும் உண்டு.''

(கலி-மரு.28)

எனவும் புணர்ச்சிக்கு உடன்படாது கூறுதலானும், குறும்பூழ்ப்[23] பாட்டினுள்

''விடலைநீ நீத்தலின் நோய்பெரி தேய்க்கும்
நடலைப்பட் டெல்லாநின் பூழ்''

என்றவழி மருதநிலத்தின் தலைமகனை விடலை என்றமையானும்

இதனுள்

''பொய்யெல்லாம் ஏற்றித் தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய் பிழைத்தேன் அருள்இனி''

(கலி. மரு-30)

என இரந்தமையானும் கண்டு கொள்க.

''ஒருஉக் கொடியியல் நல்லார் குரனாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிஇய எமக்குநீ யாரை பெரியார்க்கு
அடியரோ ஆற்றா தவர்;
கடியதமக், கியார்சொல்லத் தக்கார் மாற்று,
வினைக்கெட்டு, வாயல்லா வெண்மை யுரையாது கூறுநின்
மாய மருளவார் அகத்து;

---

23. குறும்பூழ்—இக்காலத்துக் காடை எனப்படும் பறவை

ஆயிழாய், நின்கண் பெறினல்லால் இன்னுயிர் வாழ்கல்லா
என்கண் எவனோ தவறு;
இஃதொத்தன், புள்ளிக் களவன் புனல்சேர் பொதுக்கம்போல்
வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவும்
ஒள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியும் நல்லார்
சிரறுபு சீறச் சிவந்தநின் மார்பும்
தவறாதல் சாலாவோ கூறு;
அதுதக்கது, வேற்றுமை என்கண்ணோ ஓராதி தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு;
இனித்தேற்றேம் யாம்,
தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லள்
தார் மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீகூறும் பொய்சூள் அணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு'' (கலி. மரு.23)

இதனுள் இரத்தலும் தெளித்தலும்[24] வந்தவாறு கண்டு கொள்க.

கலித்தொகையிற் கடவுட் பாட்டினுள் உரிப்பொருண்மை பற்றி வரும் பாட்டுக்களுள் மருத நிலத்துத் தலைமகன் பெயர் கூறாது பிறபெயர் படக் கோத்தமையானும் ஊடற்பொருண்மை யின் வேறுபாடுண்மை[25] அறிக.

'உரைத்திறம் நாட்டம் கிழவோன் மேன' என்பது, இவ்விவ்விடங்கள் பற்றி உரையாடுங் குறிப்புத் தலைமகன் மேலன என்றவாறு.

## நச்சினார்க்கினியர்

**41. ஒன்றா......மேன**

இஃது உடன் போக்கினுள் நற்றாயுந் தோழியுங் கண்டோருங் கூறுவன கூறித் தலைவன் ஆண்டும் பிராண்டுங்

---

24. 'ஆயிழாய்........எவனோ தவறு என்பது இரத்தல் 'வேற்றுமை .........தெளிக்கு' என்பது தெளித்தல்

25 ஊடலின் வேறுபட்டதுனி. (வெறுப்பு)

கூறுங் கூற்றுங் கூறுகின்றது. தமர் பருவஞ் சுரமென்னும் மூன்றற்கும் ஒன்றாவென்பதனையும் ஒன்றிய வென்பதனையுங் கூட்டி ஏழனுருபு விரித்துப் பொருளுரைக்க.[1]

(இ-ள்) ஒன்றாத் தமரினும் - உடன் போக்கிற்கு ஒன்றாத் தாயர் முதலியோர் கண்ணும்; பருவத்தும் - இற்செறிப்பாற்புறம் போகற்கு ஒன்றாமையானுந் தலைவனொடு கூட்டம் பெறாது ஆற்றியிருக்கும் பருவம் ஒன்றாததானும் ஒன்றாப் பருவத்தின் கண்ணும்; சுரத்தும் - அரிய சேய கல்லதர் ஆகலிற் போதற்கு ஒன்றாச் சுரத்தின் கண்ணும் ; ஒன்றிய தோழியொடு வலிப்பினும் தலைவி வேண்டியதே தான் வேண்டுதலிற் பின் தமர் கூறுங் கடுஞ்சொற் கேட்டற்கும் ஒருப்பட்டு நொதுமலர் வரைவிற் காற்றாது உடன் போக்கிற்கேலாத கடுங்கோடையெனக்கருதாது கொண்டு தலைக்கழிதற்கு ஒன்றிய தோழியொடு தலைவன் ஆராய்ந்து உடன்போக்கினைத் துணியினும் ; விடுப்பினும் — தலைவியை ஆற்றியிருப்பளெனக் கருதி உடன் கொண்டு போகாது தலைவன் விடுப்பினும் ; இடைச்சுர மருங்கின் அவள் தமர் எய்திக்கடைக்கொண்டு பெயர்த்தலிற் கலங்கு அஞர் எய்திக் கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட அப்பால்பட்ட ஒரு திறத் தானும் - தந்தையுந் தன்னையரும் இடைச்சுரத்திடத்தே பின் சென்று பொருந்தித் தலைவியைப் பெயர்த்தல் வேண்டுதலிற் றலைவி மிக வருந்தித் தமர் பாற்பட்டு உரையாடாது தலைவன் பாற்படுதலின் அவள் கற்பொடு புணர்ந்தமை சுற்றத்தாருஞ் சுரத்திடைக்கண்டோரும் உணர்ந்த வெளிப்பாடு உளப்படக் கொண்டு தலைக் கழிதற் கூற்றின் கட்பட்ட பகுதிக் கண்ணும்.

கடைக்கொண் டெய்தியென்க. கடை-பின் ; தமரெனவே, தந்தை தன்னையரை உணர்த்திற்று "முன்னர்த் தாய்நிலை கண்டு தடுப்பினு" மென்றலின், தாயர்தாமே சென்றமை

1. ஒன்றாத்தமரின் கண்ணும் ஒன்றிய தோழியொடு ஒன்றாப் பருவத்துக் கண்ணும் ஒன்றிய தோழியொடு, ஒன்றாச் சுரத்துக் கண்ணும் ஒன்றிய தோழியொடு எனக் கூட்டுக.

முன்னத்தாற்[2]றமர் உணர்ந்து வலிதிற்கொண்டு அகன்றானோ வென்று கருதியும் அவ்வரைவு மாட்சிமைப் படுத்தற்கும்[3] பின் சென்று அவள் பெயராமற் கற்பொடு புணர்ந்தமை கண்டு தலைவன் எடுத்துக் கொண்ட வினைமுடித்தலும் ஒருதலை யென்றுணர்ந்து பின்னர் அவரும் போக்குடன்பட்டு மீள்பவென்று கொள்க. அவ்வெளிப்பாடு கற்பாதலிற் கற்பென்றார். உளப் படவென்றதனால் வலித்தலும் விடுத்தலும் அகப்பட வென்றா ராயிற்று

நாளது சின்மையும் இளமையது அருமையும் தாளாண் பக்கமும் தகுதியது அமைதியும் இன்மையது இளிவும் உடை மையது உயர்ச்சியும் அன்பினது அகலமும் அகற்சியது அருமையும் ஒன்றாப் பொருவையின் ஊக்கிய பாலினும்— வாழ்க்கை நாள் சிலவாதல் ஏதுவாகப் பொருள் செய்தல் குறித்தாரை இளமையது அருமை இன்பத்தின் கண்ணே ஈர்த்து ஒன்றாமையும், மடியின்மை ஏதுவாகப் பொருள் செயல் குறித்தாரையாதானும் ஓர் ஆற்றாற் பொருள் செய்யலாகாது தத்தநிலைமைக்கேற்பச் செயல்வேண்டு மென்னுந் தகுதியதமைதி ஒன்றாமையும், இன்மையான் வரும் இளிவரவு நினைத்துப் பொருள் செய்ய நினைந்தாரைப் பொருளுடைமைக் காலத்து நிகழும் உயர்ச்சி அதற்கு இடையூராகிப் பொருணசையுள்ளதைத் தடுத்து ஒற்றாமையும், பிரிந்துழி நிகழும் அன்பினது அகலங் காரணமாகப் பொருள் செய்யக் குறித்தாரைப் பிரிவாற்றாமை யிடைநின்று தடுத்து ஒற்றாமையுமாய் ஒன்று ஒன்றனொடு ஒன்றாது வரும் பொருட்டிறத்துப் பிரிதற்குத் தலைவன் உள்ளம் எடுத்த பகுதிக்கண்ணும்;

எனவே, நாளது சின்மையுந் தாளாண் பக்கமும் இன்மைய திளிவும் அஞ்பின தகலமும் பொருள் செயல்வகைப்பால ஆதலும் இளமைய தருமையுந் தகுதிய தமைதியும் உடைமைய துயர்ச்சி யும் அகற்சிய தருமையும் இன்பத்தின் பால ஆதலுங் கூறினார்.

---

2. முன்னத்தால்—குறிப்பால்

3. அப்பிரிவைச் சிறப்புடையதாக்குதற்கும் தமர் சென்றும் அவள் மீளாமை சிறப்புடையதாயிற்று.

இவ்வெட்டும் பொருள் செயற்கு ஒன்றாவென்னாமோ* எனின், வாழ்நாள் சிறிதென்று உணர்ந்து அதற்குள்ளே பொருள் செய்து அறமும் இன்பமும் பெறுதற்குக் கருதிய வழி ஆண்டு முயற்சியும் இன்மையால் வரும் இளிவரவும் அதற்கு ஒருப்படுத்துங் கருவி யாதலானும் பொருள் பின்பு அன்பிற்குப் பெருக்கந்தருமாதலானும் இந்நான்கும் பொருள் செய்தற்கு வேண்டுமென மறுக்க இவ்வெட் டற்குந் தலைவன் கூற்றாக உதாரணம் வருவன உளவேற்கண்டு கொள்க.[4]

''ஈதலுந் துய்த்தலு மில்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிக வெண்ணுதி யவ்வினைக்
கம்மா வரிவையும் வருமோ
வெம்மை யுய்த்தியோ வுரைத்திசி னெஞ்சே''
(குறுந் - 93)

இக் குறுந்தொகையுள் இன்மையதிளிவு நெஞ்சிற்குக் கூறிய வாறு காண்க. பகுதியென்றதனானே, தலைவன் பிரிவலெனக் கூறுவனவும் பிறவுங் கொள்க.

''இன்றே சென்று வருது நாளைக்
குன்றிழி யருவியின்.........'' (குறுந் - 189)

எனவரும்.

இது குறுந்தொகை,

இவை வாணிகர்க்கே உரியன.

இனித்தலைவன் கூற்றிணைத் தலைவியுந்தோழியுங்கொண்டு கூறுவன பெரும்பான்மை. அவையெல்லாம்[5] நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே (தொல்-பொ-அக-44) என மேல்வருஞ் சூத்திரத்துட் காட்டுதும்.

---

* என்பவர் இளம்பூரணர்.

4. ''அரும் பொருள் வேட்கையின்'' (கலித்) என்பதில் தோழி கூற்றாக வந்துள்ளது.

5. தலைவன் நாளது சின்மை முதலிய எட்டும் கூறுவதும் பிரிவில் எனக்கூறுவதும் ஆகியவற்றையெல்லாம் தோழியும் தலைவியும் கொண்டுகூறுவன.

வாயினுங் கையினும்[6] வகுத்த பக்கமொடு ஊதியம் கருதிய ஒரு திறத்தானும்—உண்மைப் பொருளிடத்தும் அதற்கேற்ற ஒழுக்கத்திடத்துங் கூறுபடுத்துக் கூறிய நூல்களாற் பெறும் பெறும் பயனைக் கருதிய ஒரு கூற்றின்கண்ணும்;

என்றது, வீடுபேற்றுற்கு உதவியாகிய நூல்களை ஓதற்குப் பிரிவுழியு மென்றதாம். இதற்குத் தலைவன் கூற்றாக உதாரணம் வருவன உளவேற் கொள்க.

புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும்—போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறுத்தல் அரசியலன்றாதலிற் நமக்கேற்ற புகழும் பெருமையும்[7] எடுத்துக்காட்டி இதனாற் பிரிதுமெனத் தலைவியையுந் தோழியையும் வற்புறுத்தற்கண்ணும்.

இதற்குத் தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

தூது இடையிட்ட வகையினானும் - இருபெருவேந்தர் பொருவது குறித்துழி இருவரையுஞ் சந்து செய்வித்தற் பொருட் டுக் கூட்டத்திற்கு இடையிட்ட பிரிதற் பகுதிக் கண்ணும்;

ஒருவனுழை ஒருவன் மாற்றங்கொண்டுரைத்தலிற்[8] தூதா யிற்று. வகையென்றார், வாணிகரில்[9] அரசர்க்கும் அரசரில் அந்தணர்க்குந் தூது சிறந்ததென்றற்குங், குறுநிலமன்னர்க்குப் பெரும்பான்மை யென்றற்கும், வேந்தர் தம்மின் இழிந்தாருழைத் தூதுசேறல் உரித்தென்றற்கும். இதற்குத் தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

ஆகித்தோன்றும் பாங்கோர் பாங்கினும்- தனக்கு ஆக்கஞ் சிறந்த நட்புடையோராகித் தோன்றும் நட்புடையோர்க்கு உற்றுழி உதவச் சேறற்கண்ணும்.

---

6 வாய்—வாய்மை, கை—ஒழுக்கம் வாயான் வகுத்த பக்கம் படைக்கலம் பயிறல் என்றும் கூறுவர் இளம்பூரணர்

7. மானம்—குற்றம்என்பர் இளம்பூரணர்.

8. ஒரு வேந்தனிடத்து ஒருவேந்தன் சொன்னவற்றை உளங்கொண்டு சென்று கூறலின்.

9. வாணிகரில்—வாணிகரைக்காட்டிலும்

இதற்கு "மலை மிசைக் குலைஇய" (அகம்-84) என்பதும் "இருபெரு வேந்தர் மாறுகொள்" (அகம்-173) என்பதூஉம் முன்னர்க் காட்டினாம். அவற்றை உதாரணமாகக் கூறிக் கொள்க.

மூன்றன் பகுதியும்[10] - அறத்தினாற் பொருளாக்கி அப் பொருளாற் காம நுகர்வலென்று பிரிதற்கண்ணும்; மண்டிலத்து அருமையும் - அங்ஙனம் பொருள் வருவாய்க்கு ஏதுவாகிய வேற்றுப் புலங்களின் அருமை கூறிப் பிரிதற்கண்ணும்;

இதற்குத் தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும் - தோற்றஞ் சான்ற புகழினராகிய வேற்று வேந்தர் தமது மீக்கூற்றங்[11] கருதிப் பிரிதற்கண்ணும்;

இதற்குத் தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

தோன்றல் சான்ற என்றதனாற் றெவ்வர் தன்னின் மிக்கா ரெனக் கேட்டுழி அழுக்காறு தோன்றலின் அதுவும் பிரிதற்கு ஏதுவா மென்றுணர்க. இஃது அரசர்க்கே யுரித்து.

பாசறைப் புலம்பலும் - தலைவன் பாசறைக்கண் இருந்து தனக்கு வெற்றி தோன்றிய காலத்துத் தான் அவட்குக் கூறிப் போந்த பருவம் வந்துழியுந் தூது கண்டுழியும் அவள் வருந்து வளென நினைத்துத் தனிமை கூறும் இடத்தும்;

இதனைக்[12] 'கிழவி நிலையே' (தொ பொ-கற்-சரு) என்னுஞ்

---

10. இளம். உரைபார்க்க. இது பொருள்வயிற் பிரிவாகும். பாரதியார் உரை பார்க்க.

11. மீக்கூற்றம்—தன்னைப் பற்றி மேலாகக் கூறுதல்.

12. பருவங்கண்டுழியும் தூதுகண்டுழியும் வருந்துவள் எனத் தலைவன் வருந்தும் என்னும் இக்கருத்தை. 'கிழவி நிலை' என்னும் சூத்திரத்தில் தலைவன் பாசறைப் புலம்பல் வெற்றி கொண்ட பின்னரேயாகும் என்று கூறியிருத்தலின் பருவம் கண்டபோதும் அவள் வருந்துவள் எனப் புலம்பல் என்பது மறுக்கப்பட் டுள்ளது. என்பது தடை. அதற்கு விடை: வென்றிக் காலத்தும்' என உம்மை தொடுத்து அவ்வெச்ச உம்மையால் பருவம் வந்துழியும் தூதுகண்டுழியும் என்பனவும் கொள்க.

சூத்திரத்தான் விலக்குவரெனின், அதற்கு உம்மை விரித்துக் கிழவி நிலையை வினைசெய்யா நிற்றலாகிய இடத்து நினைந்து கூறினனாகக் கூறார்[13] வெற்றி நிகழுமிடத்துந் தான் குறித்த பருவம் வந்துழியுந் தூது கண்டுழியும் மூவருத்தம் விளக்கிக் கூற்றுத் தோன்றுமென்று பொருளாமென்றுணர்க.

முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும் - வகையின் வினைத்திறமுமென மாற்றுக. வேந்தன் எடுத்துக் கொண்ட வினை முடிந்த காலத்துத்தான் போக்கொருப் பட்டு நின்று பாகனொடு விரும்பிக் கூறிய வகையின் ட்டோன்றிய வேறொரு வினைத்திறத்திடத்தும் ;

என்றது, அரசனுக்குப் பின்னும் ஒரு பகைமேற் சேறல் உளதாதலை.

காவற்பாங்கின் பக்கமும் - வேந்தன் றன்னாற் காக்கப்படு வனவாகிய பகுதிகளின் கூற்றிற் பிரியுமிடத்தும் ;

பகுதி ஆகுபெயர் ; அவை யானை குதிரை முதலியவற்றைக் காத்தலும் அரசர்க்குத் தருமமாகிய வேட்டையிற் சென்று கடுமா கொன்று ஏனையவற்றைக் காத்தலும் முதலியன.

ஆங்கோர் பக்கமும் - அவன் காத்தற்குரிய பகுதிக்கண்ணே நிற்பார் கூற்றிற் பிரியுமிடத்தும் ;

அவர் தாபதர் முதலியோர் பலருமாம்.

பரத்தையின் அகற்சியிற் பிரித்தோட் குறுகி இரத்தலும் தெளித்தலும் என இருவகையோடு - பரத்தையிற் பிரிதற் காரணத்தாற் பரிபுலம் பெய்திய தலைவியை எய்தி இரத்தலும் இரந்த பின்னர் ஊடலுணர்த்தலும் என்ற இரு பகுதியோடே ; உரைத்திற நாட்டம் கிழவோன் மேன - மேற்கூறிய இடங்களிற் கூற்று நிகழுங் கூறுபாட்டை நிலைபெறுத்தல் தலைமகனிடத் தனவாம் என்றவாறு.

---

13. கூறார் இலக்கண நூலார் கூறார்.
கிழவி நிலையே வினையிடத் துரையார்
வென்றிக்காலத்து விளங்கித் தோன்றும் —
(கற்பியல்15)

"ஆறுசெலல் வருத்தவுஞ் சீறடி சிவப்பவுஞ்
சினைநீங்கு தளிரின் வண்ணம் வாடவுந்
தான்வர றுணிந்த விவளினு மிவளுடன்
வேய்பயி லழுவ முவக்கும்
பேதை நெஞ்சம் பெருந்தக வுடைந்தே".

இது தோழியொடு வலித்தது.

அப்பாற்பட்ட ஒருதிறத்தானும் என்றதனானே, தலைவி யிடத்துத் தலைவன் கூறுவன பலவுங் கொள்க.

"வாள்வரி வயமான் கோளுகிர் அன்ன
செம்முகை யவிழ்ந்த முண்முதிர் முருக்கின
சிதரார் செம்மல் தாஅய் மதரெழின்
மாணிழை மகளிர் பூணுடை முலையின்
முகைபிணி அவிழ்ந்த கோங்கமொ டசைஇநனை
அதிரல் பரந்த அந்தண் பாதிரி
உதிர்வீ அஞ்சினை தாஅய் எதிர்வீ
மராஅ மலரொடு வுராஅய்ப் பராஅம்
அணங்குடை நகரின் மணந்த பூவின்
நன்றே கானம் நயவரும் அம்ம
கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை
அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பிற்
பிடிமிடை களிற்றில் தோன்றுங்
குறுநெடுந் துணைய குன்றமும் உடைத்தே".
(அகம் - 99)

இவ்வகப்பாட்டு தலைவியை மருங்டிக் கூறியது[1]

"உயர்கரைக் கானியாற் றவிரற லகன்றுறை
வேனிற் பாதிரி விரைமலர் குவைஇத்
தொடலை தைஇய மடவரன் மகளே

---

1. பல பூக்களால் கானம் நன்று ; நயவிரும் (விரும்பவரும்) பல குன்றும் உண்டு. ஆதலின் நாம் அவற்றைக்கண்டு கொண்டே சுரவழியைச் செல்லலாம் என மயங்கிக் கூறியது.

கண்ணினுங் கதவநின் முலையே
முலையினுங் கதவநின் றடமென் றோளே".

(ஐங்குறு-391)

இவ் வைங்குறுநூறு உடன் போயவயுத் தலைவன் புகழ்ச்சிக்கு நாணித் தலைவி கண்புதைத்துழி அவன் கூறியது.

"அழிவிலர் முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்
கலமரல் வருத்தந் தீர யாழநின்
னலமென் பணைத்தோ ளெய்தின மாகலிற்
பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்கு கொளத் திமிரி
நிழல்காண் டோறு நெடிது வைகி
மணல்காண் டோறும் வண்ட றைஇ
வருந்தா தேகுமதி வாலையிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயி லாலு
நறுந்தண் பொழில கானங்
குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே".

(நற்றிணை - 9)

எனவரும். இது புணர்ச்சி மகிழ்ந்தபின் வழி வந்த நன்மைகூறி வருந்ாது ஏகென்றது. இது நற்றிணை.

பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க.

"இரும்புலிக் கிரிந்த கருங்கட் செந்நாகு
நாட்டயிர் கடைகுரல் கேட்டொறும் வெரூஉ
மாநிலைப் பள்ளி யல்க நம்மொடு
மானுண் கண்ணியும் வருமெனின்
வாரார் யாரோ பெருங்க லாறே".

இது விடுத்தற்கட் கூறியது.

"வினையமை பாவையி னியலி நுந்தை
மனைவரை யிறந்து வந்தனை யாயிற்
றலைநாட் கெதிரிய தண்பத வெழிலி
யணிமிகு கானத் தகன்புறம் பரந்த

கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டு
நீவிளை யாடுக சிறிதே யானே
மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை
மணலிடு மருங்கி னிரும்புறம் பொருந்தி
யமர்வரி னஞ்சேன் பெயர்க்குவ
னுமர்வரின் மறைகுவன் மாஅ யோளே.''
(நற்றிணை-342)

இது நற்றிணை.

''நுமர்வரி னேர்ப்பி னல்ல தமர்வரின்
முந்நீர் மண்டில முழுது மாற்றா
தெரிகணை விடுத்தலோ விலனே
யரிமதர் மழைக்கண் கலுழ்வகை யெவனே.''

இவை தமர் வருவரென ஐயுற்றுக் கூறியன; அவர் வந்து கற்பொடு புணர்ந்தன வந்துழிக் காண்க.[2]

''அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் பெயர்த்தருங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி''
(கலி-11)

இதனுள் எனவென்றதனாற்[3] றலைவன் கூற்றுப் பெற்றாம். இது மூன்றன் பகுதி.

''புகல்சால் சிறப்பிற் காதலி புலம்பத்
துறந்தவந் தோயே யருந்தொழிற் கட்டூர்
நல்லேறு தழீஇ நாகுபெயர் காலை

---

2. கற்பொடு புணர்ந்து மீளாது தலைவனுடன் சென்றமைக்கும் அது கண்டுதமர் மீண்டமைக்கும் உதாரணம் வந்துழிக் காண்க.

3. தரும் என்று சொல்ல எனவருவதால் 'அரிதாய........ தரும்' என்னும் கூற்றுத்தலைவனுடையது என்பது பெற்றாம்.

யுள்ளுதொறுங் கலுழு நெஞ்சம்
வல்லே யெம்மையும் வரவிழைத்தனையே''

(ஐங்குறு- 445)

இது பகைவயி பிரிந்தோன் பருவங்கண்டு[4] தலைவியை நினைந்து நெஞ்சொடு புலம்பியது.

''முல்லை நாறுங் கூந்தல் கமழ்கொள
நல்ல காண்குவ மாஅ யோயே
பாசறை யருந்தொழி லுதவி நங்
காதலன் னாட்டுப் போதரும் பொழுதே''

(ஐங்குறு-446

இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தோன் பருவவரவின்கண் உருவு வெளிப்பட்டுழிப் புலம்பியது. உதவியென்றலின் வேந்தற் குற்றுழி யாயிற்று.

''வந்தாற்றான் செல்லாமோ வாரிடையாய் வார்கதிரால்
வெந்தாற்போற் றோன்றுநீள் வேயத்தந்—தந்தார்
தகரக் குழல்புரளத் தாழ்துகில்கை யேந்தி
மகரக் குழைமறிந்த நோக்கு''

(திணைமாலை-நூற்-77)

இஃது உருவு வெளிப்பாடு. நின்னொடு போதுவே னென்றவளை ஆற்றுவித்தது. திணைமாலையிற் பாலை.

''நனிசேய்த் தென்னாது நற்றே ரேறிச்சென்
றிலங்கு நிலவி னிளம்பிறை போலக்
காண்குவெந் தில்லவவள் கவின்பெறு சுடர்நுதல்
விண்ணுய ரரண்பல வெளவிய

---

4. நல்ல ஆனேற்றைத்தழுவிக் கன்று பெயரும் காலம் என்றதால் கார்ப்பருவம் பெறப்பட்டது.

மண்ணுறு முரசின் வேந்துதொழில் விடினே.''[5]

(ஐங்குறு-448)

இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தோன் தான் குறித்த பருவத்து வினை முடியாமையிற் புலம்பியது.

''முழங்குகுரன் முரசங் காலை யியம்பக்
கடுஞ்சின வேந்தன் றொழிலெதிர்ந் தனனே
மெல்லவன் மருங்கின் முல்லை பூப்பப்
பொங்குபெயற் கணைதுளி காரெதிர்ந் தன்றே
யஞ்சி லோதியை யுள்ளுதொறுந்
துஞ்சா தலமர னாமெதிர்ந் தனமே.''

(ஐங்குறு-448)

இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தோன் பருவம் வந்துழி மீளப் பெறாது அரசன் செய்தியும் பருவத்தின் செய்தியுந்தன் செய்தியுங் கூறிப் புலம்பியது.[6] இப்பாசறைப் புலம்பல் பத்தினுள்ளும் வேறுபாடு காண்க. தூதிற் பிரிந்துழிப் புலம்பின வந்துழிக் காண்க

''நீடின மென்று கொடுமை தூற்றிய
வாடிய நுதல ளாகிப் பிறிதுநினைந்
தியாம்வெங் காதலி னோய்மிகச் சாஅய்ச்
சொல்லிய துரைமதி நீயே
முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே.''

(ஐயகுறு-478)

இது தூதுகண்டு அவள் கூறிய திறங்கூறெனக் கேட்டது.

---

5. வேந்து தொழில் முடிந்து விடின் என்றமையால் முடியாமை பெறப்பட்டது.

6. வேந்தன் தொழில் எதிர்ந்தனன்—அரசன் செய்திகார் எதிர்ந்தன்று—பருவச்செய்தி துஞ்சாது அலமரல் நாம் எதிர்ந்தனம்—தன்செய்தி.

''பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமொ டரும்பட ருழப்போள்
கையறு நெஞ்சத் துயவுத் துணையாகச்
சிறுவரைத் தங்குவை யாயிற்
காண்குவை மன்னாற பாணவெந் தேரே.''

(ஐங்குறு-477)

இது தலைவிமாட்டுப் பாணனைத் தூதாக விடுந் தலைவன் கூறியது.

''படுந்தடங்கட் பல்பணைபோல் வான்முழங்கன் மேலுங்
கொடுந்தடங்கட் கூற்றமீன் னாக—நெடுந்தடங்க
ணீர்நின்ற நோக்கி னெடும் பணைமன் றோளாட்குத்
தேர்நின்ற தென்னாய் திரிந்து.''

(திணைமாலை நூற்-115)

இஃது இளையோரைத்[7] தூதுவிட்டது.

''ஐய வாயின செய்யோள் கிளவி
கார்நா ளுருமொடு கையறப் பிரிந்தென
நோய்நன்கு செய்தன் றெமக்கே
யாமுறு துயர மவ ளறியினோ நன்றே.''

(ஐங்குறு-441)

இது வினைமுடியாமையிற் பருவங்கண்டு மீளப்பெறாத) தலைவன் தூதர் வார்த்தை கேட்டு வருந்தியது. பிறவும் வேறுபட வருவன கொள்க.

''முரம்புகண் ணிடையத் திரியுந் திகிரியொடு
பணைநிலை முனைஇய வயமாப் புணர்ந்து
திண்ணிதின் மாண்டன்று தேரே
யொண்ணுதற் காண்குவம் வேந்துவினை விடினே.''

(ஐங்குறு-449)

இது வேந்தன் திறைகொண்டு மீள்வழித் தானுஞ் சமைந்த தேரை அழைத்துக்கண்டு 'திண்ணிதின் மாண்டன்று தே'ரெனப் பாகனொடு கூறியவழி அவ்வேந்தன் திறைவாங்காது வினை

---

7. இச்செய்யுளில் இளையோர் என்றற்குக்குறிப்பு இல்லை.

சென்றானாகப் பாகனை நோக்கிக் கூறியது.[8]. இவை ஐங்குறு நூறு, ''மலைமிசைக் குலைஇய'' என்னும் (84) அகப் பாட்டும் அது, கலித்தொகையுட் ''புத்தி யானை[9] வந்தது காண்பான்யான் றங்கினேன்'' (மருதக்கலி-32) என்பன முதலிய வற்றான் யானை முதலியவற்றையுங், கடவுட்பாட்டால் (மருதக் கலி-28) தாபதரையுங் காத்தற்குப் பிரிந்தே னெனக் கூறினா னென்பது பெற்றாம்.

''ஒரூஉக், கொடியிய னல்லார் குரனாற்றத் துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பின வாகத்
தொடிய வெமக்குநீ யாரை பெரியார்க்
கடியரோ வாற்றா தவர் ;
கடியர்தமக், கியார்சொல்லத் தக்கார் மற்று;
வினைக்கெட்டு, வாயல்லா வெண்மை யுரையாது கூறுநின்
மாய மருள்வா ரகத்து;
ஆயிழாய், நின்கண் பெறினல்லா லின்னுயிர் வாழ்கல்லா
வென்க ணெவனோ தவறு;
இஃதொத்தன், புள்ளிக்கள்வன் புனல்சேர் பொதுக்கம் போல்
வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவு
மொள்ளிதழ் சேர்ந்தநின் கண்ணணியு நல்லார்
சிரறுபு சீறச் சிவந்தநின் மார்புந்
தவறாதல் சாலாவோ கூறு;
அதுதக்கது, வேற்றுமை யென்கண்ணோ வோராதி தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு;
இனித் தேற்றேம் யாந்
தேர்மயங்கி வந்த தெரிகோதை யந்நல்லார்

---

8. வேந்தன் திறை கொண்டு மீள்வழி என்றும் அவ்வேந் தன் திறை வாங்காது வினைமேற் சென்றானாக என்றும் கூறப்படுதற்குரிய குறிப்புகள் மேற்செய்யுளில் இல்லை.

9. புத்தியானை—புதுயானை.

தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீயுறும் பொய்ச்சூ ளணங்காயின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு."

(கலி-88)

இதனுள் இரத்தலுந் தெளித்தலும் வந்தவாறு காண்க. பிறவும் இவ்வாறு வருவன கொள்க.

## பாரதியார்

### 40. ஒன்றா............மேன

கருத்து:- இது, உடன்போக்கும், பிரிவின் வகையும், பிற காரணங்களும் பற்றித் தலைவனுக்குக் கூற்று நிகழும் இடன் கூறுகின்றது.

பொருள்:- ஒன்றாத்தமரினும் பருவத்தும், சுரத்தும் ஒன்றிய மொழியோடு வலிப்பினும்—வரைவுடன்படாத சுற்றத்தோடும், பருவத்தின் கண்ணும், சுரத்திலும் ஏற்புடைச் சொல்லோடு தலைவியை உடன்கொண்டு செல்லத் துணியுமிடத்தும்; விடுப் பினும்-கொண்டு தலைக்கழியாமல் தலைவியைத்தான் விடுத்துப் பிரியுமிடத்தும் ; இடைச்சுரமருங்கில் அவள் தமர் எய்தி - உடன்போக்கில் அரும் வழியினிடையே தலைவியின் தன்னையர் முதலிய சுற்றத்தாருற்று; கடைக்கொண்டு பெயர்தலில் - தலைவி யைக் கொண்டு திரும்புமிடத்து கலங்கஞரெய்திக் கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட - தலைவி மயங்கித் துன்பமெய்திக் கற்பால் தவைவன்பால் சேறலாலுளவாம் பூசலுட்பட; அப்பாற் பட்ட ஒரு திறத்தானும் - அத்தகைய (பல) பகுதிப்பட்ட ஒரு முறையானும்; நாளது சின்மையும்- வாழ்நாளின் சின்மையால் பொருள் வலித்தலும்; இளமைய தருமையும்-இன்ப நுகர்ச்சிக் குரிய இளமையின் அருமை [பொருட் பிணியை] நலித்தலும்; தாளாண் பக்கமும்-முயற்சியின் பெருமை கருதிப் பொருள் வலித் தலும்; தகுதிய தமைதியும்-தலைவியைப் பேணும் ஒப்புரவாண்மை யறம் பொருட் பிணியை மெலித்தலும்; இன்மையதிளிவும்- இலம் பாட்டின் இழிவு கருதிப் பொருள் வலித்தலும் உடைமைய துயர்ச் சியும் - தனக்குக் கிடைத்திருக்கும் தலைவியின் காதலாகிய புத்துடைமைச்சிறப்பு பொருட்பிணியை மெலித்தலும்; அன்பின தகலமும்-தலைவிபால் அன்பின் பெருக்கால் அவள் பொருட்டுப்

பொருள் வலித்தலும்; அகற்சிய தருமையும் - அவளைப் பிரிந்திருக்க ஒல்லாமை பொருட் பிணியை மெலித்தலும்; ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும் - ஆக இவ்வாறு [ஒன்றுக் கொன்று மாறுபட்டுப்] பொருந்தாத பொருள் பற்றி வலிக்கும் பிரிவின் பகுதிகளிலும்; வாயினுங் கையினும் வகுத்த பக்கமொடு ஊதியங்கருதிய ஒருதிறத்தானும் நூல் முதலிய வாயாற் கற்கும் கல்வியும் படை இயம் ஓவியம் முதலிய கையாற் பயிலும் கலையும் என வகுக்கப்பட்ட இருதிறக்கல்விப் பகுதிகளின் பயனை எண்ணிப்பிரியும் ஒரு பகுதிக் கண்ணும்; புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும் - [இவ்விரண்டிலும்] பிரிவால் வரும் புகழையும் பிரியாமையால் வரும் குற்றத்தையும் விவக்கி வலியுறுத்துமிடத்தும் தூதிடையிட்ட வகையினானும் — தலைவியைப் பிரிந்து வேந்தரிடை செல்லும் வாயில் வகைகளிலும்; ஆகித்தோன்றும் பாங்கோர் பாங்கினும் மூன்றன் பகுதியும்—மேலே கூறியாங்கு பொருள் ஓதல் தூது என்ற பிரிவின் பகுதி மூன்றிலும் கூற்றுக்கு அமைந்து வரும் பகுதிதொறும் ஏற்றவிடத்தும்; மண்டிலத்தருமையும்— பகைபுபுலத்தின் அருமையும் தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும் — புகழாற் சிறந்த பகைவரின் பெருமையும், பாசறைப் புலம்பலும் — போர்க்களக்கட்டூரிற் செரு முடிந்தபின் தலைவியை உள்ளும் தலைவன் தனிமையும் முடிந்த காலத்துப் பாகனொடு விரும்பிய வினைத் திறவகையினும்-வந்தவினை முடிந்தபொழுது தேர்ப்பாகனொடு தலைவன் தான் செய்ய விரும்புவன கூறும் வகையினும்; காவற் பாங்கின் ஆங்கோர் பக்கமும் - பிறர்நாடு காக்குமிடத்தானாம் ஓர் பிரிவின் கண்ணும்; பரத்தையின கற்சியிற் பரிந்தோட்குறுகி-பரத்தைப் பிரிவால்பிரியும் தலைவியை அணுகி; இரத்தலும்- தன் தவறு பொறுக்குமாறு தலைவன் வேண்டுதலும்; தெளித்தலும்-தன் தவறின்மை கூறித் தலைவியைத் தேற்றலும்; என இருவகையொடு- என இவ்விரண்டு வகையொடு கூட; உரைத்திற நாட்டம் - மேற்கூறிய இடங்களிலெல்லாம் கூற்றுவகை நாடுதல்; கிழவோன் மேன - தலைவன்கண் நிகழும்.

குறிப்பு : இச்சூத்திரம், ஒன்றாத்தமரினும், என்பது முதல் ஒரு திறத்தானும் என்றதுவரை உடன்போக்கில் தலைவன் கூற்று நிகழுமிடங்களைச் சுட்டும் பகுதியும், பின் எஞ்சியவெல்லாம் பிரிவின்கண் தலைவன் கூற்று நிகழுமிடங்களைச்

சுட்டும் பகுதியுமாக அமைந்துள்ளது பிற்றைய பிரிவுப் பகுதியில் ஆறுவகைப் பிரிவும் கூறப்படுகிறது நாளது சின்மையும் என்பது முதல், பொருள்வயின் ஊக்கிய பாலினும் என்பதீறாகப் பொருட்பிரிவும் (வாயினும் கையினும் என்பது முதல் எடுத்து வற்புறுத்தலும் என்றதுவரை ஓதற் பிரிவும் (2) தூதிடையிட்ட வகையினும் என்பதால் தூதிற் பிரிவும் (3) மண்டிலத் தருமை முதல் வினைத்திற வகையினும் என்றது வரை பகைவயிற் பிரிவு வகையும் (4) காவற்பாங்கின் ஆங்கோர் பக்கமும் என்பதால் நாடு காவற்பிரிவும் (5) பரத்தையின கற்சி என்பதால் பரத்தையிற் பிரிவும் (6) ஆகப் பிரிவு வகை ஆறும் முறையே வகைப்படுத்திக் கூறப்பட்டன பாசறைப் புலம்பல், பாகனொடு கூறல் முதலிய பகைவயிற் பிரிவின்பாற் பட்டடங்கும் ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும், மூன்றன் பகுதியும் என்பது அதற்கு முன் வகைப்படுத்திக் கூறப்பட்ட "பொருள், ஓதல், தூது என்ற மூன்றன் பகுதிகளிலும் உரிய இடத்துத் தலைவன் கூறும்" - எனத்தொகுத்து உணர்த்தும் தொடராயமை யும்; 'மூன்றன் பகுதி' என்பதற்கு "இப்பகுதியில் தொல்காப்பிய ரால் சுட்டி விளக்கப்பெறாத பிற நூல்களிற் கண்ட நால்வகை வலியுள் மூன்றென" இளம்பூரணரும், "அறம், பொருள் இன்ப மென"-நச்சினார்க்கினியரும்தம்முள் மாறுபட்டு இருவேறு பொருள் கூறுகின்றனர். இவை அறுவகைப் பிரிவிலடங்குதலானும் கூறும் தொகையால் குறிக்கும்வகைகளை நூலீல்விளக்காது சூத்திரிப்பது நூன் மரபாகாமையானும், ஈண்டுப் பிரிவுவகை மூன்றும் விளக்கப் பட்டு அவற்றை அடுத்து 'மூன்றன் பகுதி' எனத் தொகுத்துக் கூறப்படுதலானும், இத்தொடர் இச்சூத்திரத்தில் தெளிக்கப்பட்ட பிரிவுவகை மூன்றனையே குறிப்பது விளக்கமாகும். இவ்வாறே புறத்திணையியல் (24) "மாற்றரும் கூற்றம்" என்னும் சூத்திரத் திடையில் 'ஈரைந்தாகும்' எனத் தொகுத்துப் பிரித்ததும் காண்க.

பொருட்பிரிவுப் பகுதிக்கண், ஒருபுறம் பொருட்பிணியால் பிரியவிரும்புதலும், மறுபுறம் காதலால் பிரிவொல்லாது செலவழுங்குதலுமாகத் தம்முள் முரண்படும் இருவேறுணர்ச்சிகள் தலைவன்பால் நிகழுமியல்பை விளக்கிய பகுதி நயந்து பாராட்டற் பாலது. நாளது சின்மையால் பொருளீட்டும் விருப்பம் காதல் பெருக்கால் தகைக்கப்படுவதும் அன்புபற்றித் தலைவி பொருட்டுப் பொருளீட்டும் விருப்பம் அவ்வன்பிற்குரிய தலைவியின் பிரிவருமை யால் தகைக்கப்படுவதும், இயல்பாதலின் ஒன்றாப் பொருள்வயின்

ஊக்கிய பாலெனப் பொருட் பிரிவில் தலைவன் உள்ளத்தில் நிகழும் விருப்பு தடையுணர்ச்சி முரண் வலியுறுத்தப்பட்டது.

'உரைத்திற நாட்டம் கிழவோன்மேன' என்பதை அப்பாற் பட்ட ஒரு திறத்தானும்; ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும், ஊதியங்கருதிய ஒருதிறத்தானும், தூதிடையிட்ட வகையினானும், மூன்றன் பகுதியும், வினைத்திவகையினும், ஆங்கோர் பக்கமும், இரத்தலும், தெளித்தலும் எனவரும் ஒவ்வொன்றோடும் தனித்தனி கூட்டுக.

பொருள், ஓதல், தூது, பகை, காவல், பரத்தை என அறுவகைப்பிரிவும் வகைபெறக்கூறும் இச்சூத்திரத்தில் முதல் மூன்றையும் 'மூன்றவன் பகுதியு' மெனத் தொகுத்துப் பிரித்தார்; மற்ற மூன்றில் பகை காவலாகிய இரண்டும் தன்னளவிலும் பரத்தை தலைவி அளவிலும் பகைமை சுட்டுதலால் அம்மூன் றையும் வேறாக்கி, எண்ணும்மைகளை எல்லாம் இறுதியில் ஒடுக்கொடுத்துக் கூட்டிப் பிரிவுவகை ஆறும் விளக்கப்பட்டுள.

ஒன்றாத் தமரினும், பருவத்தும், சுரத்தும் என்பவற்றுள் ஒவ்வொன்றின் கண்ணும் தலைவன் வலித்தலும் இயல்பாகும். அவை வருமாறு:— ஒன்றாத்தமர் உடன்படுமாறு தலைமகன் சான்றோரை விடுத்தது கேட்ட தோழி கூற்றாகவரும்.

''எக்கர் ஞாழல் சிறியிலைப் பெருஞ்சினை
ஓதம் வாங்குந் துறைவன்
மாயோள் பசலை நீக்கின னினியே.''

என்னும் ஐங்குறு நூற்று (145) செய்யுளால், தலைதமர் மகட்கொடைக்கு ஒன்றாவழித்தலைவன் உடன்கொண்டு கழியத் துணிதலுண்மை விளங்கும்.

''பெருநன் ருற்றிற் பேணாரு முளரே.
ஒரு நன் றுடைய ளாயினும் புரிமாண்டு
புலவி தீர வளிமதி இலைகவர்
பாடமை யொழுகிய தண்ணறுஞ் சாரன்
மென்னடை மரையா துஞ்சு
நன்மலை நாட! நின்னல திலளே.'' (குறுந்-115)

இக்குறுந்தொகைச் செய்யுளில், 'நன்மலை நாட நின்னல திலளே' எனத்தோழி தலைவற்குக் கூறுதலால் தலைவனுக்குத் தலைவியைத்தரத் தமர் ஒன்றாமையும் அதனால் தலைவன் கொண்டு தலைக்கழிய வலித்தலும் கூறப்பட்டது.[1]

இனி, மணமறுத்த ஒன்றாத்தமரை உடன்படுத்தற் பொருட்டுப் பொருளீட்டக் கருதித் தலைவியை விடுத்துப் பிரிவதற்குச் செய்யுள் :

"இலையிலஞ்சினை" எனும் (254-ஆம்) குறும்பாட்டில்,
"வாரா, தோழி — — — — — —
செய்பொருள் தால்நசைஇச் சென்றோர்
எய்தின ராலென வருஉந் தூதே.

எனப் பொருள் தேடித் தரச் செல்லும் தலைவன் பிரிவு கூறப் படுதலறிக.

"பொத்தில் காழி" எனும் (255) குறும்பாட்டிலும்,
"தங்கடனிறீஇய ரெண்ணி யிடந்தொறும்
காமர் பொருட்பிணிப் போகிய
நாம்வெங் காதலர் சென்றவாறே."
எனத் தலைவன் பொருட்பிரிவு[3] வருதலறிக.[2]

அப்பிரிவில் தலைவன் கூற்றுக்குச் செய்யுள் வந்துழிக் கண்டு கொள்க.

உடன்போக்கில் வலித்துக்கொண்டு செல்லும் தலைவன் தலைவிக்குச் சுரத்திடைக் கூறுவதற்குச் செய்யுள் :

"அழிவில முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கட்கண் டாஅங்

---

1. புலவி தீர அளிமதி, 'நின்னலது இவள்' என்பனவற்றால் உடனபோக்கை வற்புறுத்தி ஓமபடை கூறியது என்க.

2. செய்யுளில் வருதலைக.

3. தங்கடன் நிறீஇயர் எண்ணி என்றது தாமீட்டிய பொரு ளால் வரைதல் தம் கடன் என்பதை நிறுத்த எண்ணி எனப் பொருள்படலால் பொருள் வயிற் பிரிவைக் குறிததது என்பது இவர் கருத்து.

கலமரல் வருத்தந்தீர யாழநின்
நலமென் பணைத்தோள் எய்தின மாகலின்,
பொரிப்பூம் புன்கின் எழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை அணங்குகொளத் திமிரி
நிழல்காண் டோறும் நெடிய வைகி,
மணல்காண் டோறும் வண்டல் தைஇ;
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே ;
மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்
நறுந்தண் பொழில கானம்,
குறும்ப லூரயாம் செல்லு மாறே.'' (நற்றிணை-9)

''வருமழை சுரந்த வானிற விசும்பின்
நுண்டுளி மாறிய உலவை யங்காட்
டால நீழல் அசைவு நீக்கி,
அஞ்சுவழி அஞ்சா தசைவழி யசைஇ,
வருந்தா தேகுமதி வாலிழைக் குறுமகள் !
இம்மென் பேரலர் நும்மூர்ப் புன்னை
வீமல ருதிர்ந்த தேனாறு புலவிற்
கான லார்மணன் மரீஇக்
கல்லுறச் சிவந்தநின் மெல்லடி யுயற்கே.''
(நற்றிணை-76)

எனவரும் நற்றிணைச் செய்யுளுமதுவே.

''புலிபொரச் சிவந்த புலாவஞ் செங்கோட்
டொலிபன் முத்த மாரப்ப வலிசிறந்து
வன்சுவற் பராஅரை முருக்கிக் கன்றொடு
மடப்பிடி தழீஇய தடக்கை வேழந்
தேன்செய் பெருங்கிளை யிரிய வேங்கைப்
பொன்புரை கவளம் புறந்தரூஉ பூட்டு
மாமலை விடரகங் கவைஇக் காண்வரக்
கண்டிசின் வாழியோ குறுமகள் ! நுந்தை
அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கட்
செல்சுடர் நெடுங்கொடி போலப்
பல்பூங் கோங்கம் அணிந்த காடே.''

என்னும் நற்றிணைப் (202) பாலை செய்யுமது.
இனி, சுரத்தினதருமை கருதித் தலைவியை விடுத்தற்குச் செய்யுள்:

"உமணர், சேர்ந்து கழிந்த மருங்கி னகன்றலை
யூர்பாழ்த் தன்ன, வோமையம் பெருங்காடு
இன்னா வென்றி ராயின்
இனியவோ பெரும தமியோர்க்கு மனையே".
(குறுந்-124)

இதில் "என்றிராயின்" என்பதால், விட்டுப்பிரியும் தலைவன் கூறியதைத் தோழிகொண்டு கூறினாளென்றறிக. இனி, விட்டுச் சென்ற தலைவன் இடைச்சுரத்துத் தலைவியை நினைந்து கூறற்குச் செய்யுள் :

"எரிகவர்ந் துண்ட வென்றூழ் நீளிடைச்
சிறிதுகண் படுப்பினுங் காண்கு வென்மன்ற
நள்ளென் கங்குல் நளிமனை நெடுநகர்
வேங்கை வென்ற சுணங்கிற்
தேம்பாய் கூந்தல் மாஅ யோளே".
(ஐங்-324)

"வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்
குளவி மொய்த்த அழுகற் சின்னீர்
வளையுடைக் கையள் எம்மொ டுணீஇய
வருந்தில் லம்ம தானே
அளியளோ அளியளென் நெஞ்சமர்ந் தோளே".
(குறுந்-56)

இடைச்சுர மருங்கில் தமர்வர, தலைவன் அருளால் மறைதற்குச் செய்யுள் :

"அன்றை யனைய வாகி யின்றுமெங்
கண்ணுள் போகச் சுழலு மாதோ
புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ
வைகுறு மீனின் இணையத் தோன்றிப்
புறவணி கொண்ட பூநாறு கடத்திடைக்
கிடினென விடிக்குங் கோற்றொடி மறவர்
வடிநவில் அம்பின் வினையர் அஞ்சா
தமரிடை யுறுதர நீக்கிநீர்!
எமரிடை யுறுதர வொளித்த காடே" (நற்-48)

இதில், முன் தலைவன் செய்ததைத் தோழி கொண்டு கூறியதாகக் காண்கின்றோம்.

"வினையமை பாவையி னியலி நுந்தை
மனைவரை யிறந்து வந்தனை யாயிற்
றலை கெதிரிய தன்பெய லெழிலி
அணிமிகு கானத் தகன்புறம் பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டு
நீவிளை யாடுக சிறிதே ; யானே
மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை
மணலிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி
அமர்வரின் அஞ்சேன், பெயர்க்குவென் ;
நுமர்வரின் மறைகுவென், மாஅ யோளே".

எனும் நற்றிணை (362) செய்யுளுமது. இதில் தேடிப் பின்வந்த தலைவி தமர்க்கு ஊறு செய்யாது அருளான் ஒளிக்கும் தலைவன் தானே கூறியதும் அறிக. கற்பொடு புணர்ந்த கௌவைக்குத் தலைவன் கூற்றாகச் செய்யுள்வரின் கண்டுகொள்க.

இனி, இதில் நாளது சின்மை, தாளாண்பக்கம் இன்மை யினிளிவு, அன்பினதகலம், எனும் நான்கும் பொருள் தேடத் தூண்டுதலும், அப்பொருட்பிணியை முறையே இளமையதருமை, தகுதியதமைதி, உடைமையது (காதல்) உயர்ச்சி, அகற்சிய தருமை எனும் நான்கும் இன்பவிழைவால் தகைப்பதும் கூறப்படுகிறது.

நாளது சின்மை பொருள்தேட வலித்தலும், அப்பொருட் பிணி தகைக்கும் இன்பநுக ரிளமையுப், தம்முள் ஒன்றா மைக்குச் செய்யுள்:

"புணரிற் புணராது பொருளே; பொருள்வயிற்
பிரியிற் புணராது புணர்வே; ஆயிடைச்
செல்லினும் செல்லா யாயினும் நல்லதற்
குரிமை வாழியென் னெஞ்சே; பொருளே
வாடாப் பூவின் பொய்கை நாப்பண்
ஓடுமீன் வழியிற் கெடுவ; யானே
விழுநீர் வியலகந் தூணி யாக

எழுமா ணளக்கும் விழுநிதி பெறினும்,
கனங்குழைக் கமர்த்த சேயரி மழைக்கண்
அமர்ந்தினிது நோக்க மொடு செகுத்தனென்;
எனைய வாகுக வாழிய பொருளே.'' (நற்றிணை-16)

“வங்காக் கடந்த செங்காற் பேடை
எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது
குழலிசைக் குரல குறும்பல அகவும்
குன்றுறு சிறுநெறி அரியவென் னாது
மறப்பருங் காதலி யொழிய
இறப்பல் என்பதீண் டின்மைக்கு முடிவே,'' (குறுந்-151)

எனும் குறுந்தொகைச் செய்யுளுமது.
பொருள் வலிக்கும் நெஞ்சுக்கு அதனொடு பொருந்தா

இளமையதருமை தலைவன் கூறற்குச் செய்யுள்:

‘பைங்காய் நல்லிட மொரீஇ’ என்னும் நற்றிணைச் செய்யுளில்,

“...............பாழ்நாட் டத்தம்
இறந்துசெய் பொருளும் இன்பம் தருமெனில்
இளமையிற் சிறந்த வளமையு மில்லை,
இளமை கழிந்த பின்றை வளமை
காமந் தருதலு மின்றே; அதனால்
நில்லாப் பொருட் பிணிச் சேறி
வல்லே நெஞ்சம் வாக்கநின் வினையே.''
(நற்-126)

எனத்தலைவன் கூறுதல் காண்க. இன்னும், ‘அருவியார்க்கும்,’ எனும் நற்றிணைச் (205) செய்யுளில்,

“துன்னருங் கானம் என்னாய் நீயே;
குவளை யுண்கண் இவளீண் டொழிய
ஆள்வினைக் ககறி யாயின், இன்றொடு
போயின்று கொல்லோ தானே.........
ஆய்திறம் புரையுமிவள் மாமைக் கவினே.''
என வருவது மது.

"முதிர்ந்தோ ரிளமை ஒழிந்தும் எய்தார்;
வாழ்நாள் வகையளவு அறிஞரு மில்லை;
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
கருங்கண் வெம்முலை ஞெமுங்கப் புல்லிக்
கழிவதாக கங்குல்." (நற்-314)

என்று தலைவன் கூறியதைத் தலைவி எடுத்துக் கூறும் செய்யுளில் இளமையதருமையும் நாளது சின்மையும் தம்முள் ஒன்றாது முரணுதலைக் காண்க.

தாளாண்மையால் பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத்தலைவி தகுதி நோக்கித் தலைவன் பிரிவருமை கூறுதற்குச் செய்யுள்

"வினையே ஆடவர்க் குயிரே, வாணுதல்
மனையுறை மகளிர்க் காடவ ருயிரென
நமக்குரைத் தோரும் தாமே;
அழாஅல், தோழி! அழுங்குவர் செலவே."

இ குறுந்தொகை (135) செய்யுளில் தோழிகொண்டு கூறிய தலைவன் கூற்றால், ஆடவர்க்குத் தாளாண்பக்கம் இன்றியமையாதென்பதும், மனையற மகளிரின் தகுதி பேணுதல் அவ்வாடவர் கடனென்பதும், இவ்வாறு இரு வேறுணர்ச்சி தம்முள் ஒன்றாப் பொருட்பிணியின் கண் தலைவற்குக் கூற்று நிகழுமென்பதும் காண்க.

இன்னும்

"ஆறுசெல் வருத்தத்துச் சீறடி சிவப்பவும்
சினைநீங்கு தளிரின் வண்ணம் வாடவுந்
தான்வரல் துணிந்த இவளினும், இவளுடன்
வேய்பயில் அழுவம் உவக்கும்
பேதை நெஞ்சம் பெருந்தக வுடைத்தே."
(பொருள்-சூ-41. நச்சினார்-உரைமேற்கோள்)

என்னும் பொருளதிகாரச் சூத்திரம் 41ன் உரைமேற்கோள் செய்யுளாலும், ஒன்றாப் பொருட்பிணியில் தலைவியின் பிரிவருமை தலைவன் கூறுவதறிக.

இனி, இன்மையது இளிவும் உடைமையது துயர்ச்சியும் கருதித் தலைவன் கூறுதற்குச் செய்யுள்:

"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிக எண்ணுதி; அவ்வினைக்

கம்மா அரிவையும் வருமோ !
எம்மை யுய்த்தியோ! உரைத்திசி னெஞ்சே "
(குறுந்-63)

இச்செய்யுளில் 'இல்லோர்க்கில்லெனச் செல்வினை கைம்மிக எண்ணுதி' என்பதால் இன்மையதிளிவும், 'அம்மா அரிவையும் வருமோ' என்றதால் உடைமையாம் காதலின் உயர்வும், தம்முள் ஒன்றாமை தன் நெஞ்சிற்குத் தலைவன் கூறிச்செலவு தவிர்வது காண்க.

இனி, இவ்வாறு செலவழுங்காமல் தலைவன் பிரிதலும் உண்டு: அதற்குச் செய்யுள்:

"இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுட னிருந்தோர்க் கரும்புணர் வின்மென-
வினைவயிற் பிரிந்த வேறுபடு கொள்கை,
அரும்பவிழ் மலரிச் சுரும்புண் பல்போ
தணிய வருதுநின் மணியிருங் கதுப்பென-
எஞ்சா வஞ்சினம் நெஞ்சுணக் கூறி,
மைசூழ் வெற்பின் மலைபல இறந்து
செய்பொருட் ககன்ற செய்தீர் காதலர்
கேளார் கொல்லோ, தோழி !
... ... ... ... ... ... ... ... ...
.........கார்ப் பெயற் குரலே."

எனவரும் நற்றிணைச் (214) செய்யுளில் இவ்வாறு ஒன்றாப் பொருள்வயின் மாறுபட்டலைக்கும் உணர்ச்சி முரண் கூறித் தலைவன் ஒன்றாப் பொருள்வயிற் பிரிந்தமையும் காண்க. "அரிதாய அறனெய்தி அருளியோர்க்களித்தலும்" எனும் பாலைக் கலியுமதுவே. (பாலைக்கலி-11)

அன்புமிகையால் மனைமாட்சிக்குப் பொருள் வலித்தலும் தலைவியிற் பிரிவருமையால் செல்லத்துணியாமையுமாகிய ஒன்றாப் பொருட்பிணிக்குச் செய்யுள் :

"மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
இரும்பனம் பசுங்குடை பலவுடன் பொதிந்து

பெரும்பெயல் விடியல் விரித்துவிட் டன்ன
நறுந்தண் ணியளே; நன்மாமேனி
புனற்புணை யன்ன சாயிறைப் பணைத்தோள்
மணத்தலும் தணத்தலு மிலமே;
பிரியின் வாழ்தல் அதனினு மிலமே.'' (குறுந்-168)

''மல்குசுனை உலர்ந்த நல்கூர் சுரமுதல்
குமரி வாகைக்கோலுடை நறுவீ
மடமாத் தோகைக் குடுமியிற் றோன்றும்
கான நீளிடைத்தானும் நம்மொ
டொன்றுமணம் செய்தன ளிவளெனில்
நன்றே நெஞ்சம் நயந்தநின் துணிவே.''

என்ற குறுந்தொகை (347) பாட்டிலும், அன்பினதகலமும் அகற்சிய தருமையும் ஒன்றாப் பொருள்வயின் ஊக்குதல் உணர்க.

இனிஓதற் பிரிவில் கூற்று நிகழ்தற்குச் செய்யுள் :

''பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தான் மறுத்தரல் ஒல்வதோ?
தீங்கதிர் மதியேய்க்கும் திருமுகம், அம்முகம்
பாம்புசேர் மதிபோலப் பசப்பூர்ந்து தொலைந்தக்கால்.''

என்னும் பாலைக்கலித் (14) தாழிசையில் 'வாயின்வகுத்த கல்விப் பகுதியின் ஊதியங்கருதிய' தலைவன் பிரிவருமை காண்க.

''பின்னிய தொடர்நீவிப் பிறர்நாட்டுப் படர்ந்துநீ
மன்னிய புணர்ச்சியான் மறுத்தரல் ஒல்வதோ?
புரியவிழ் நறுநீலம் புரையுண்கண் கலுழ்பானாத்
திரியுமிழ் நெய்யேபோற் றெண்பனி யுறைக்குங்கால்''

என்பதால், 'கையின் வகுத்த கல்விப்பகுதியின் ஊதியங் கருதித்' தலைவன் பிரிந்தமை அறிக. இப்பிரிவுகளில் தலைவன் கூற்று வந்துழிக் கண்டு கொள்க.

புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தும் தலைவன் கூற்றுக்குச் செய்யுள் :

''நாளும் நாளும் ஆள்வினை யழுங்க
இல்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழென—

ஒண்பொருட் ககல்வர்நம் காதலர் ;
கண்பனி துடையினித் தோழி! நீயே.'' (சிற்றெட்டகம்)

''இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசை யுடனிருந்தோர்க் கரும்புணர் வினமென
வினைவயிற் பிரிந்த வேறுபடு கொள்கை
— — — — — — — — — —
மைசூழ் வெற்பின் மலைபல இறந்து
செய்பொருட் ககன்றநம் செயிர்தீர் காதலர்

(நற்-214)

எனும் நற்றிணைச் செய்யுளடிகளுமது, இச்செய்யுள் தலைவி கூற்றாயினும், இதில், 'இன்மென' என்பதனால் தலைவன் கூறியதைத் தலைவி கொண்டு கூறியது என விளங்குவதால், புகழும் மனமும் தலைவன் எடுத்து வற்புறுத்தியதறிக.

''மிகைதணித் தற்கரி தாமிரு வேந்தர்வெம் போர்மிடைந்த
பகைதணித்தற்குப் படர்தலுற் றார்நமர்..............''

என்னும் மணிவாசகர் கோவைச் செய்யுளில் தோழி கூற்றால் தலைவன் தூதிடையிட்டுப் பிரிதல் கூறப்படுகின்றது. தூது பற்றிய பிரிவில் தலைவன் கூற்றுக்குச் செய்யுள் வந்துழிக் காண்க. 'கொடுமிடனாம்' எனும் (36) கலியில், தூதொடு மறந்தார் கொல்லோ என்பதனால், தூதின் பொருட்டுப் பிரிதற்கரிய தலைவியையும் தலைவன் பிரிந்ததறியப்படும்.

முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை, மதுரைக் காஞ்சி முதலிய வற்றில் மண்டிலத்தருமையும் தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும் பலவிடத்தும் வருதல் காண்க. தன் வேந்தனின் பகைவராய தோன்றல் சான்ற மாற்றாரைப் பொருது வெல்லப் பிரியும் தலைவன் கூற்று வருமாறு :

''பல்லிருங் கூந்தல்! பசப்பு நீவிடின்
செல்வேந் தில்ல யாமே, செற்றார்
வெல்கொடி அரண முருக்கிய
கல்லா யானை வேத்துபகை வெலற்கே.''

(ஐங்-429)

இனி, பாசறைப் புலம்பல் வருமாறு :

"புகழ்சால் சிறப்பிற் காதலி புலம்பத்
துறந்துவந் தனையே, அருந்தொழிற் கட்டூர்
நல்லேறு தழீஇ நாகுபெயர் காலை
உள்ளு தொறுங் கலிழு நெஞ்சம் !
வல்லே எம்மையும் வரவிழைத் தனையே."

(ஐங் · 445)

வினை முற்றிய தலைமகன் பாகனொடு விரும்பிக் கூறுதற்குச் செய்யுள் :

"விருந்தின் மன்னர் அருங்கலம் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன் தீம்பெயற்
காரு மார்கலி தலையின்று ; தேரும்
ஓவத் தன்ன கோபச் செந்நிலம்
வள்வா யாழி உள்ளுறு புருளக்
கடவுக, காண்குவம், பாக ! ... ... ... " (அகம்-54)

காவலுக்குப் பிரிந்த தலைவன் தான் வருவாய்த் தலைவிக்குத் தூதனுப்பியது :— "ஒருகுழை ஒருவன் போல" என்னும் பாலைக் கலியில்,

ஒல்குபு நிழல் சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
வெல்புகழ் உலகேத்த விருந்துநாட் டுறைபவர்
— — — — — — — — — — — — — —
— — — — — — — — — — நம் காதலர்
வருமென வந்தன்றவர் வாய்மொழித் தூதே."

(கலி-25)

இனி, பரத்தையினகற்சியில் பரிந்த தலைமகளிடத்துத் தலைவன் இரத்தலும், தெளித்தலும் என இருவகையினும் கூற்று நிகழ்தற்குச் செய்யுள் :

'ஒரூஉ, கொடியியல் நல்லார்' என்னும் மருதக்கலியில், ஆயிழாய் நின்கண் பெறினல்லால் இன்னுயிர் வாழ்கல்லா என்கண் எவனோ தவறு" எனவும்,

"அதுதக்கது, வேற்றுமை என் கண்ணே ஓராதி தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு ;" (மருதக்கலி-88)

எனவும் தலைவன் தலைவியிடம் இரந்தும் தெளித்தும் கூறுதலும்,

இனித் தேற்றேம்யாம்

"தேர்மயங்கி வந்த தெரிகோதை அந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீகூறும் பொய்ச்சூள் அணங்காயின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு." (கலி-88)

எனக் கூறித் தலைவி ஊடல் தணிதலும் வந்தமை காண்க.

"நில்லாங்கு நில்லாங்கு" என்னும் மருதக்கலியுள்
"ஆயிம் ஆயிழாய் அன்னவை யானாங் கறியாமை
போற்றிய நினைத் தொடுகு." (கலி-95)

எனத் தன் பரந்தமைக்குப் புலந்த தலைவியைத் தெளிக்கு முகத்தானும்,

"நல்லாய் ! பொய்யெல்லாம் ஏற்றித் தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய், பிழைத்தே னருளினி."
(மருதக்கலி-95)

என இரக்கு முகத்தானும், தலைவன் கூற்று நிகழ்த்தியது காண்க.

45. எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே. (45)

ஆ. மொ. இல.

The act of expression is not prohibited to others also who are not specifically mentioned here.

இளம்பூரணர்

45 "எஞ்சி யோர்க்கு மெஞ்சுதல் இலவே"

இது காறும் பிரிவின் கண் கூறுதலுரியார் பலருள்ளும் நற்றாயும் செவிலியும் கண்டோரும் தோழியும் தலைமகனும் கூறுங்கூற்றுக் கூறினார். இஃது அவரை யொழிந்த தலை

மகட்கும் பாங்கற்கும் பார்ப்பார்க்கும் பாணர்க்கும் கூத்தர்க்கும் உழையோர்க்கும் கூற்று நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இல—முன்னர்க்கூறாது எஞ்சி நின்றார்க்கும் கூற்று ஒழிதல் இல.

'பாங்கர் முதலாயினாரை இச்சூத்திரத்தாற் கூறுப; தலைமகள் கூற்றுத் தனித்துக் கூறல் வேண்டும், இவரோடு, ஒரு நிகரன்மையின், 'எனின், ஒக்கும். தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் காலப் பழமையாற் பெயர்த்தெழுதுவார் விழ எழுதினார் போலும். ஆசிரியர் இச்சூத்திரத்தானும் பொருள் கொள்ளவைத் தமையின், தலைமகள் கூற்று வருமாறு. தலைமகள் பிரிதலுற்ற தலைமகன் குறிப்புக்கண்டு கூறுதலும் பிரிவுணர்ந்து கூறுதலும், பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறுதலும், உடன் போவல் எனக் கூறுதலும், இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லிவிட்டனவும், தமர்வந்துற்றவழிக் கூறுதலும் மீளலுற்றவழி ஆயத்தார்க்குக் கூறிவிட்டனவும், பிரிவாற்றாமையும், ஆற்றுவல் என்பது படக் கூறுதலும், தெய்வம் பராவலும், பருவங்கண்டு கூறுதலும் வன்புறை எதிரழிந்து கூறுதலும் இவையெல்லாம் கூறப்படும்.

பிரியலுற்ற தலைமகன் குறிப்புக்கண்டு கூறியதற்குச் செய்யுள்.

"நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்தும்தாம்
அஞ்சிய தாங்கே அணங்காகும் என்னும் சொல்
இன்தீங் கிளவியாய் வாய்மன்ற நின்கேள்
புதுவது பன்னாளும் பாராட்ட யானும்
இதுவொன் றுடைத்தென எண்ணரி அதுதேர
மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்
பாயல்கொண்டு என்தோள் கனவுவார் ஆய்கோல்
தொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுவள் கொல்லோ
இடுமருப் பியானை யிலங்குதேர்க் கொடும்
நெடுமலை வெஞ்சுரம் போகி நடுநின்றெம்
செய்பொருண் முற்றும் அளவென்றார் ஆயிழாய்
தாமிடை கொண்ட ததுவாயின் தம்மின்றி
யாமுயிர் வாழும் மதுகை இலேமாயில்
தொய்யில் துறந்தார் அவர்எனத் தம்வயின்
நொய்யார் நுவலும் பழிநிற்பத் தம்மொடு
போயின்று சொல்லென் உயிர்". (கலி-பாலை-23)

பிரிவுணர்ந்த தலைமகள் தலைமகனுடன் கூறியதற்குச் செய்யுள்,

"செவ்விய தீவிய சொல்லி அவற்றொடு
பைய முயங்கிய அஞ்ஞான் றவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங் கறிகோமற் றைய
அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுரம் உள்ளல் அறிந்தேன்
மகனல்லை மன்ற இனி;
செல்லினிச் சென்றுநீ செய்யும் வினைமுற்றி
அன்பற மாறியாம் உள்ளத் துறந்தவள்
பண்பும் அறிதிரோ என்று வருவாரை
என்திறம் யாதும் வினவல் வினவின்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலருஞ் செய்வினை முற்றாமல் ஆண்டோர்
அவலம் படுதலும் உண்டு". (கலி-பாலை-18)

பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறியதற்குச் செய்யுள்
"அருளும் அன்பும் நீக்கித் துணைதுறந்து
பொருள்வயிற் பிரிவோர் உரவோர் ஆயின்
உரவோர் உரவோர் ஆக
மடவம் ஆக மடந்தை நாமே".
(குறுந்-20)

செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை" (குறள் - 1151)

என்பதும் அது.

உடன் போக்கு ஒருப்பட்டதற்குச் செய்யுள்,

"சிலரும் பலருங் கடைக்கண் நோக்கி
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தனள் அன்னை அலப்ப
அலந்தனென் வாழி தோழி கானற்
புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவற்
கடுமா பூண்ட நெடுந்தேர் கடைஇ
நடுநாள் வரூஉ மியறேர்க் கொண்கனொடு

செலவயர்ந் திசினால் யானே
அலர்சுமந் தொழிகஇவ் வழுங்கல் ஊரே''.

(நற்றிணை - 149)

இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லிவிட்டதற்குச் செய்யுள்

''சேட்புல முன்னிய விரைநடை அந்தணிர்
நும்மொன் றிரந்தனென் மொழிவல் எம்மூர்
யாய்நயந் தெடுத்த ஆய்நலங் கவின
ஆரிடை இறந்தனள் என்மின்
நேரிடை முன்கைஎன் ஆயத் தோர்க்கே''

(ஐங்குறு-384)

''கடுங்கட் காளையொடு நெடுந்தேர் ஏறிக்
கோள்வல் வேங்கைய மலைபிறக் கொழிய
வேறுபல் அருஞ்சுரம் இறந்தனள் அவளெனக்
கூறுமின் வாழியோ ஆறுசெல் மாக்கள்
நற்றோள் நயந்துபா ராட்டி
எற்கெடுத் திருந்த அறனில் யாய்க்கே.''

(ஐங்குறு - 385)

தமர் வந்துற்றவழிக் கூறியதற்குச் செய்யுள்

''அறஞ்சா லியரோ அறஞ்சா லியரோ
வறனுண் டாயினும் அறஞ்சா லியரோ
வாள்வனப் புற்ற அருவிக்
கோள்வல் என்னையை மறைத்தகுன்றே.''

(ஐங்குறு-312)

மீண்டு வருவாள் ஆயத்தார்க்குக் கூறிவிட்டதற்குச் செய்யுள்

''கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை
குருளைப் பன்றி கொள்ளாது கழியும்
சுரநனி வாரா நின்றனள் என்பது
முன்னுற விரைந்தநீர் உரைமின்
இன்னகை முறுவல் என்ஆயத் தோர்க்கே.''

(ஐங்குறு-397)

பிரிவாற்றாமைக்குச் செய்யுள்

'அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.'' (குறள்-1153)

''அஞ்சுவல் வாழி தோழி சென்றவர்
நெஞ்சுணத் தெளித்த நம்வயின்
வஞ்சஞ் செய்தல் வல்லின வாறே.''

''அரும்பெற்ற காதல ரகலா மாத்திரம்
இரும்புதல் ஈங்கை இளந்தளிர் நடுங்க
அலங்குகதிர் வாடையும் வந்தன்று
கலங்கஞர் எவ்வந் தோழிநாம் உறவே.''

இவை பிரிந்தார் என்றவழிக் கூறியன.

ஆற்றுவல் என்பதுபடக் கூறியதற்குச் செய்யுள்

''தோளுந் தொடியும் நெகிழ்ந்தன நுதலும்
நெய்யுகு பள்ளி யாகுக தில்ல
யானஃ தவலங் கொள்ளேன் தானஃ
தஞ்சுவரு கான மென்றதற்
கஞ்சுவல் தோழி நெஞ்சத் தானே.''

தெய்வம் பராஅயதற்குச் செய்யுள்

''புனையிழாய் ஈங்குநாம் புலம்புறப் பொருள் வெஃகி
முனையென்னார் காதலர் முன்னிய ஆற்றிடைச்
சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ''.
(கலி. பாலை-15)

பருவங்கண்டு கூறியதற்குச் செய்யுள்

''என்னொடு புலந்தனர் கொல்லோ காதலர்
மின்னொடு முழங்குதூ வானம்
நின்னொடு வருவதும் எனத்தெளித் தோரே''.

வன்புறை எதிரழிந்து கூறியதற்குச் செய்யுள்

வெறுக்கைக்குச் சென்றார் விளங்கிழாய் தோன்றார்

பொறுக்கவென் றாற்பொறுக்க லாமோ-ஒறுப்பபோற்
பொன்னுள் உறுபவளம் போன்ற புணர்முருக்கம்
என்னுள் உறுநோய் பெரிது''.

(திணைமாலை-67)

தூதுவிடக் கூறியதற்குச் செய்யுள்

''காண்மதி பாணநீ உரைத்தற் குரியை
துறைகெழு கொண்கன் பிரிந்தென
இறைகேழ் எல்வளை நீங்கிய நிலையே,''

(ஐங்குறு-140)

ஆயத்தார் கூறியதற்குச் செய்யுள்

''மாந்தர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
தான்வரும் என்ப தடமென்தோழி
அஞ்சினள் அஞ்சினள் ஒதுங்கிப்
பஞ்சு மெல்லடிப் பரல்வடுக் கொளவே.''

பாணர் கூறியதற்குச் செய்யுள்

''நினக்கியாம் பாணரும் அல்லேம் எமக்கு
நீயுங் குருசிலை அல்லை மாதோ
நின்வெங் காதலி நன்மனைப் புலம்பி
ஈரிதழ் உண்கண் உகுத்த
பூசல் கேட்டும் அருளா தோயே.''

(ஐங்குறு-480)

பார்ப்பார் கூறியதற்குச் செய்யுள்

''துறந்ததற் கொண்டு துயரடச் சாஅய்
அறம்புலந்து பழிக்கும் அளைக ணாட்டி
எவ்வ நெஞ்சிற் கேம யாக
வந்தன ளேநின் மடமகள்
வெந்திறல் வெள்வேல் விடலைமுந் துறவே.''

(ஐங்குறு-393)

## நச்சினார்க்கினியர்

### 42. எஞ்சி............இலவே

இது முன்னர்க் கூற்றிற்கு உரியரெனக் கூறாதோர்க்குங் கூற்று விதித்தலின் எய்தாத தெய்துவித்தது.

(இ-ள்) எஞ்சியோர்க்கும் - முன்னர்க் கூறாது நின்ற செவிலிக்குந் தலைவிக்கும் ஆயத்தோர்க்கும் அயலோர்க்கும் எஞ்சுதல் இலவே - கூற்றொழிதல் இல என்றவாறு.

செவிலிக்குக் கூற்று நிகழுமாறு :
கிளியும் பந்துங் கழங்கும் வெய்யோள்
அளியும அன்புஞ் சாயலும் இயல்பும்
முன்னாள் போலாள் இறீஇயரென் உயிரெனக்
கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத் தியாத்த
கடுங்கட் கறவையிற் சிறுபுற நோக்கிக்
குறுக வந்து குலவுநுதல் நீவி
மெல்லனத் தழீஇயினே னாக என்மகள்
நன்னர் ஆகத் திடைமுலை வியர்ப்பப்
பல்கால் முயங்கினள் மன்னே அன்னோ
விறன்மிகு நெடுந்தகை பலபா ராட்டி
வறனிழல் அசைஇ மான்புலந்து வருந்திய
மடமான் அசாவினந் திரங்குமரல் சுவைக்குங்
காடுடன் கழிதல் அறியின் தந்தை
அல்குபத மிகுத்த கடியுடை வியனகர்ச்
செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போலக்
கோதை யாயமோ டோரை தழீஇத்
தோடமை அரிச்சிலம் பொலிப்ப அவள்
ஆடுவழி ஆடுவழி அகலேன் மன்னே.

(அகம்-49)

இவ்வகப்பாட்டு உடன்போன தலைவியை நினைந்து செவிலி மனையின் கண் மயங்கியது.

"அத்த நீளிடை யவனொடு போகிய
முத்தேர் வெண்பல் முகிழ்நகை மடவர
றாய ரென்னும் பெயரே வல்லா
றெடுத்தேன் மன்ற யானே
கொடுத்தோர் மன்றவவ ளாயத் தோரே".

(ஐங்குறு-380)

இவ்வைங்குறுநூறு செவிலி தெருட்டு வார்க்குக் கூறியது. "முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின." என்னும் அகப்பாட்டு (7) மகட்போக்கிய செவிலித்தாய் சுரத்திடைப் பின்சென்று நவ்விப் பிணையைக் கண்டு சொற்றது. செவிலி கானவர் மகளைக்கண்டு கூறுயதுமாம்.

"காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
யகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே". (குறுந்-44)

இது குறுந்தொகை. செவிலி கடத்திடைத் தன்நெஞ்சிற்குச் சொல்லியது.

"இடிதுடிக் கம்பலையு மின்னாத வோசையு மிசையினாராக்
கடுவினை யாளர் கடத்திடைப் பைங்குரவே கவன்று நின்றாப்
நெடுவினை மேற்செய்த வெம்மேபோ னீயும்
படுசினைப் பாவை பறித்துக் கேட்பாட்டாயோ பையக் கூறாய்".

இது செவிலி குரவொடு புலம்பியது.

"தான்றாயாக் கோங்கந் தளர்ந்து முலைகொடுப்ப
வீன்றாய் நீ பாவை யிருங்குரவே—யீன்றாண்
மொழிகாட்டா யாயினு முள்ளெயிற்றாள் சென்ற
வழிகாட்ட யிதென்று வந்து".
(திணை-மாலை-நூற்-65)

இது குரவே வழிகாட்டென்றது.

"குடம்புகாக் கூவல் குடிக்காக்குஞ் சின்னீ
ரிடம்பெறா மாதிரியு மேறாநீ ரத்த
முடம்புணர் காத லுவப்ப விறந்த
தடம்பெருங் கண்ணிக்கு யான்றாமையை காண்க.

இது நீயாரென்று வினாயினார்க்குச் செவிலி கூறியது இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைத்துக் கொள்க.

இனித் தலைவிகூற்று நிகழுமாறு :

பைபயப் பசந்தன்று நுதலுஞ் சாஅய்
ஐதா கின்றென் தளிர்புரை மேனியும்
பலரும் அறியத் திகழ்தரும் அவலமும்
உயிர்க்கொடு கழியின் அல்லதை நினையின்
எவனோ வாழிதோழி பொரிகால்;

பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற
ஆலி பொய்ப்பின் தூம்புடைத் திரள்வீ
ஆறுசெல் வம்பலர் நீளிடை யழுங்க
ஈனல் எண்கின் இருங்கிளை கவரும்
சுரம்பல கடந்தோர்க் கிரங்குப வென்னார்
கௌவை மேவல ராகி இவ்வூர்
நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ
புரையா அல்லஎன் மகட்கெனப் பரைஇ
நம்முணர்ந் தாறிய கொள்கை
யன்னை முன்னர்யாம் என்னிதற் படலே."

(அகம்-95)

இது போக்குடன்பட்ட தலைவி தோழிக் குரைத்தது அகம்.

"அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே யினியே
வான்பூங் கரும்பி னோங்குமணற் சிறுசிறை
தீம்புன னெரிதர வீந்துக் காங்குத்
தாங்கு மளவை தாங்கிக்
காம நெரிதரக் கைநில் லாதே." (குறுந்-149)

இக் குறுந்தொகை நாண் நீங்கினமை கூறியது.

"சிலரும் பலருங் கடைக்க ணோக்கி
மூக்கி னுச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டி ரம்ப றூற்றச்
சிறுகோல் வலத்த ளன்னை யலைப்ப
வலந்தனென் வாழி தோழி கானற்
புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவற்
கடுமான் பூண்ட நெடுந்தேர் கடைஇ
நடுநாள் வரூஉ மியறேர்க் கொண்கனொடு
செலவயர்ந் திசினால் யானே
யலர்சுமந் தொழிகவிவ் வழுங்க லூரே."

(நற்றிணை-149)

இந் நற்றிணை அலர் அச்சம் நீங்கினமை கூறியது.

"சேட்புல முன்னிய வசைநடை யந்தணிர்

நும்மொன் றிரந்தனென் மொழிவ லெம்மூர்த்
தாய்நயந் தெடுத்த வாய்நலங் கவின்பெற
வாரிடை யிறந்தன ளென்மி
னேரிறை முன்கையென் னாயத் தோர்க்கே.''
(ஐங்குறு-384)

இவ் வைங்குறுநூறு 'யான் போகின்றமை ஆயத்திற்கு உரைமின்' என்றது.

'கடுங்கட் காளையொடு நெடுந்தே ரேறிக்
கோள்வல் வேங்கை மலைபிறக் கொழிய
வேறுபல் லருஞ்சுர மிறந்தன ளவளெனக்
கூறுமின் வாழியோ வாறுசென் மாக்க
ணற்றோ ணயந்துபா ராட்டி
யெற்கெடுத் திருந்த வறனில் யாய்க்கே.''
(ஐங்குறு-385)

இவ் வைங்குறுநூறு இன்றுயான் தேரேறி வருத்தமின்றிப் போகின்றமை யாய்க்கு உரைமின் என்றது.

''கவிழ்மயி ரெருத்திற் செந்நா யேற்றை
குருளைப் பன்றி கொள்ளாது கழியுஞ்
சுரநனி வாரா நின்றன ளென்பது
முன்னுற விரைந்தனி ருரைமி
னின்னகை முறுவலென் னாயத் தோர்க்கே.''
(ஐங்குறு-397)

இவ்வைங் குறுநூறு மீள்கின்றாளென்று என் வரவு ஆயத்தார்க்குக் கூறுமின் என்றது.

''வேய்வனப் பிழந்த தோளும் வெயிறெற
வாய்கவின் றொலைந்த நுதலு நோக்கிப்
பரியல் வாழி தோழி பரியி
னெல்லையி லிடும்பை தரூஉ
நல்வரை நாடனொடு வந்த வாறே.''
(ஐங்குறு-392)

இவ் வைங்குறுநூறு மீண்டு வந்த தலைவி வழிவரல் வருத்தங் கண்டு வருந்திய தோழிக்குக் கூறியது.

"அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயங்கு பாலினு மினிய வவர் நாட்
டுவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலுழி நீரே."

(ஐங்குறு-203)

இஃது உடன் போய் மீண்ட தலைவி 'நீ' சென்ற நாட்டு நீர் இனியவல்ல; எங்ஙனம் நுகர்ந்தாயென்ற தோழிக்குக் கூறியது.

"அறஞ்சா லியரோ வறஞ்சா லியரோ
வறனுண் டாயினு மறஞ்சா லியரோ
வாள்வனப் புற்ற வருவிக்
கோள்வரு மென்னையை மறைத்த குன்றே."

(ஐங்குறு-312)

இவ் வைங்குறு நூறு ஐயன்மார் வந்துழி நிகழ்ந்தது என்னென்ற தோழிக்குத் தலைவி தலைவனை மறைத்த மலையை வாழ்த்தியது. பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க.

இனி ஆயத்தார் கூற்று நிகழுமாறு:

"மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
தான்வரு மென்ப தடமென் றோளி
யஞ்சின ளஞ்சின ளொதுங்கிப்
பஞ்சி மெல்லடி பரல்வடுக் கொளவே."

இனி அயலோர் கூற்று நிகழுமாறு:

"துரந்ததற் கொண்டு துயரடச் சாஅ
யறம்புலந்து பழிக்கு மங்க ணாட்டி
யெவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன ளோநின் மடமகள்
வெஞ்சின வெள்வேல் விடலைமுந் துறவே."

(ஐங்குறு-393)

செய்யுளியலுட் 'பார்ப்பான் பாங்கன்'

(தொ-பொ-செய்- 190) 'பாணன் கூத்தன்'
(தொ-பொ-செய்-191) என்னுஞ் சூத்திரங்களாற் பார்ப்பான் முதலியோர் கூற்றுக் கூறுமாறு உணர்க.

பாரதியார்

## 41. எஞ்சி ... ... ... இலவே

கருத்து: இது, முன் சூத்திரங்களிற் கூறப் பெறாப் பிறரும் கூற்றுக் குரியராதல் உண்டு என்று எய்தாத தெய்துவிக்கிறது.

பொருள் : எஞ்சியோர்க்கும்—இதுவரை குறித்துக் கூறப் படாத செவிலி, பாங்கர் ஆயத்தார், பரத்தையர், வாயிலாவார், பாகன், பாணன் போன்ற பிறர்க்கும் ; எஞ்சுதலில்—அகத் துறைகளில் கூற்று ஒழிதல் இல்லை.

குறிப்பு :- ஈற்றேகாரம் அசை. இவ்வியலில் தலைமகள் கூற்று தனித்துக் கூறப்படாதது சிந்திக்கத் தக்கது. உரை யாசிரியர் இளம்பூரணர் 'தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம், காலப் பழமையால், ஏடு பெயர்த்தெழுதுவார் வீழ எழுதினர் போலும்' எனக்கூறி, தலைமகள் கூற்று வரும் பல இடங்களைச் சுட்டி விளக்கியுள்ளார். அகத்துறைப் பாட்டு களில் தலைவி கூறுமிடங்கள் பலபடியாகப் பாராட்டப்படுதல் பண்டைப் பாட்டுகளில் பரக்கக் காணலாம். களவியல்-20-ஆம் சூத்திரத்தில் தலைவி கூற்று நிகழுமிடங்களைத் தொல் காப்பியரே கூறியுள்ளார். அவற்றுட் சில துறைகளுக்குச் செய்யுள் வருமாறு :

1. "காணுங்காற் காணேன் தவறாய, காணாக்காற்
காணேன் தவறல் லவை".[1] (குறள்-1286)

2. "உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்".[2] (குறள்-1177)

3. "புலப்ப லெனச்சென்றேன், புல்லினேன் நெஞ்சம்
கலத்த லுறுவது கண்டு"[3] (குறள்-1259)

---

1, 3. இவை தலைவனொடு புலவாமைக்குக் காரணம் யாது என வினவிய தோழிக்குத்தலைவி கூறியன.

2. நின்கண் கலுழ்ந்தன என் என்ற தோழிக்குத் தலைவி கூறியது.

"மன்ற மராத்த பேஎமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉ மென்ப ; யாவதும்
கொடியோ ரல்லரெங் குன்றுகெழு நடார் ;
பசைஇப் பசந்தன்று நுதலே,
ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென் றோளே".[4]

(குறுந்-87)

இனி, செவிலி கூற்றுக்குச் செய்யுள் :

"முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇ
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவ னுண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே."[5]

(குறுந்-167)

"கானங் கோழி கவர்குரற் சேவல்
ஒண்பொறி யெருத்திற் றண்சித ருறைப்பப்
புதனீர் வாரும் பூநாறு புறவிற்
சீறூரோளே மடந்தை ; வேறூர்
வேந்துவிடு தொழிலொடு செலினும்
சேந்துவர லறியாது செம்ம றேரே."[6] (குறுந்-242)

பாங்கன் கூற்றிற்குச் செய்யுள் :

"காமம் காம மென்ப, சாமம்
அணங்கும் பிணியு மன்றே ;
முதைச் சுவற் கலித்த முற்றா விளம்புல்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் ; பெருந்தோ ளோயே."

(குறுந்-204)

---

4. பிரியேன் எனச் சூளுற்ற தலைவன் பிரிதலின் தெய்வம் ஒறுக்கும் என நினைந்து தலைவி தோழியிடம் கூறியது.

5. தலைவியின் மனையற மாண்புகண்டுவந்த செவிலி நற்றாய்க்குக் கூறியது.

6. ஷை

இது தலைமகற்குப் பாங்கன் உரைத்தது [7]

"இடக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்கலாற் றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே."

(குறுந்-58)

இக் குறுந்தொகை (58 ஆம்) பாட்டு, கழறிக் கூறிய பாங்கற்குத் தலைவன் மாறிக் கூறுதலாம்.

ஆயத்தார் கூற்றுக்குச் செய்யுள் :

"தாதிற் செய்த தண்பனிப் பாவை
காலை வருந்தும் கையா றோம்பென
ஓரை ஆயங் கூறக் கேட்டும்."

எனக் குறுந்தொகைச் (48) செய்யுளில் ஆயத்தின் கூற்று நிகழ்ந்தமை காண்க.

பரத்தையர் கூற்றிற்குச் செய்யுள் :

"கூந்த லாம்பல் முழுநெறி யடைச்சிப்
பெரும்புனல் வந்த விருந்துறை விரும்பி
யாமஃ தயர்கஞ் சேறும், தானஃ
தஞ்சுவ துடையளாயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வே லெழினி
முனையான் பெருநிரை போலக்
கிளையொடுங் காக்கதன் கொழுநன் மார்பே."

(குறுந்-80)

"கணைக்கோட்டு வாளை கமஞ்சூல் மாமழை
துணர்த்தேக் கொக்கின் றீம்பழங் கதூஉம்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்க் குணாது
தண்பெரும் பவ்வ மணங்குக, தோழி!

---

7. பாங்கன் கழறியது.

மனையோண் மடைமையிற் புரக்கும்
அனையே மகிழ்நற்கியா மாயின மெனினே.''

எனும் குறுந்தொகைச் (164) செய்யுள் காதற்பரத்தைதலை மகட்குப் பாங்காயினார் கேட்ப உரைத்தது.

''அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூரன்
பொற்கோ லவிர்தொடித் தற்கெழு தகுவி
எற்புறங் கூறுமென்ப; தெற்றென
வணங்கிறைப் பணைத்தோள் எல்வளை மகளிர்
துணங்கை நாளும் வந்தன; அவ்வரைக்
கண்பொர மற்றதன் கண்ணவர்
மணங்கொளற் கிவரும் மள்ளர் போரே.''

எனுங் குறுந்தொகைச் (364) செய்யுளில் இற்பரத்தை பாங்காயினார் கேட்பக் கூறியது காண்க.

''நகைநன் குடையன் பாண! நும் பெருமகன்
மிளைவலி சிதையக் களிறுபல பரப்பி
யரண்பல கடந்த முரண்கொள் தானை
வழுதி வாழிய பலவெனத் தொழுதீண்டு
மன்னெயி லுடையோர் போல வஃதியா
மென்னலும் பரியலோ விலமெனத் தண்ணடைக்
கலிமா கடைஇ வந்தெஞ் சேரித்
தாருங் கண்ணியுங் காட்டி யொருமைய
நெஞ்சங் கொண்டமை விடுமோ வஞ்சக்
கண்ணுடைச் சிறுகோல் பற்றிக்
கதம்பெரி துடையள்யா யழுங்கலோ விலளே.''

எனும் நற்றிணைச் (150) செய்யுளும் பரத்தை கூற்றாகும்.

பாகன் கூற்றிற்குச் செய்யுள்:

''விதையர் கொன்ற முதையற் பூழி
யிடுமுறை நிரப்பிய வீரிலை வரகின்
கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை
யரலை யங்காட் டிரலையொடு வதியும்
புறவிற் றம்மநீ நயந்தோ ளூரே.

எல்லிவிட் டன்று வேந்தெனச் சொல்லுபு
பரியல்; வாழ்கநின் கண்ணி; காண்வர
விரியுளைப் பொலிந்த வீங்குசெலற் கலிமா
வண்பரி தயங்க வெழீஇத்தண் பெயற்
கான்யாற் றிடுமணற் கரைபிற் கொழிய
வெல் விருந் தயரு மனைவி
மெல்லிறைப் பணைத்தோட் டுயிலமர் போயே''

பாணன் கூற்றிற்குப் பாட்டு வருமாறு:

''நினக்கியாம் பாணரு மல்லே மெமக்கு
நீயும் குருசிலை யல்லை மாதோ;
நின்வெங் காதலி தன்மனைப் புலம்பி
ஈரித ழுண்கண் உகுத்த
பூசல் கேட்டு மருளா தோயே.'' (ஐங்-480)

கீழ்வரும் அயலோர் கூற்று 'ஊரும் அயலும்' என்னும் செய்யுளில் (503) சூத்திரத்திற்கு மாறான பிற்கால வழக்காகும்.[8]

''துறந்ததற் கொண்டு துயரடச் சாஅ
யறம்புலந்து பழிக்கு மளைக ணாட்டி!
எவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தன ளோநின் மகளே,
வெந்திறல் வெள்வேல் விடலை முந்துறவே.''

(ஐங்-393)

இது, உடன்போய்த் தலைமகள் மீண்டுவந்துழி அயலோர் அவள் தாய்க்குச் சொல்லியது. (41)

**46. நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதுவும் ஆகும் (46)**

ஆ.மொ.இல.

What happened once may be thought of again

இளம்பூரணர்

**46. நிகழ்ந்தது..............ஏதும் ஆகும்.**

இதுவும் பாலைக்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று

---

8. ஊரவரும் அயலவரும் கூறுவன அவராலேயே நேரே கூறப் பட்டனவாகச் செய்யுளில்வாரா பிறர் கொண்டு கூறுவனவாகவே வரும் என்பது அச்சூத்திரப் பொருள். கீழ்வரும் செய்யுள் அயலோர் நேர் கூற்றாகவருவது தொல்காப்பியர்க்குப் பிற்கால வழக்கு.

நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதும் ஆகும். (46) முன்பு நிகழ்ந்தது பின்பு விசாரித்தற்கு ஏதுவும் ஆகும். உம்மை எதிர்மறை.

"வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை
கந்துபிணி யானை அயாவுயிர்த் தன்ன
என்றூழ் நீடிய வேய்பயில் அழுவத்துக்
குன்றூர் மதியம் நோக்கி நின்றுநினைந்து
உள்ளினேன் அல்லனோ யான்முள் எயிற்றுத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்
எமது முண்டோர் மதிநாட் டிங்கள்
உரறுகுரல் வெவ்வளி எடுப்ப நிழறப்
உலவை யாகிய மரத்த
கல்பிறங்கு மாமலை உம்பரஃ தெனவே."[1]

(நற்றிணை-62)

(46)

## நச்சினார்க்கினியர்

43. நிகழ்ந்தது.........ஆகும்.

இதுவும் பாலையாதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) முன்னர் நிகழ்ந்ததொரு நிகழ்ச்சி பின்னர் நினைத்தற்குரிய நிமித்தமாம் என்றவாறு.

என்றது, முன்னர்த் தலைவன்கண் நிகழ்ந்ததொரு நிகழ்ச்சி பின்னர்த் தலைவன் நினைத்தற்கும் ஏதுவுமா மென்றவாறாம்:

உம்மை எச்சவும்மையாதலிற் கூறுதற்குமாம் என்று கொள்க.

"நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தங்
கண்ணொடு தொடுத்தென நோக்கியு மமையாரென்

---

1. இடைச்சுரத்துத் தலைவன் முன் ஒருகால் இப்படிப் பிரிந்துவந்தபோது தலைவியின் முக உருவெளித் தோற்றம் கண்டமையை நினைந்து இப்போது தன் நெஞ்சுக்குக் கூறியது இச்செய்யுள். "முன் ஒருகால் பிரிந்து வந்தபோது குன்றூர் மதியம் நோக்கி, மதிநாள் திங்கள் எம்முடையதும் மாமலை உம்பரிடத்து உண்டு என நினைந்து உள்ளினேன்" எனத் தலைவன் தன் நெஞ்சுக்கு முன் நிகழ்ந்ததைக் கூறினான்,

ஒண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவ
ரெண்ணுவ தெவன்கொ லறியே னென்னும்.''

(கலி-4)

இது, தலைவன்கண் நிகழ்ந்த மிகுதித் தலையளி வஞ்ச மென்று தலைவி உட்கொண்டு பிரியுங்கொல்லென நினைத்தற்கு நிமித்தமாயிற்று. இதனானே தலைவன் செய்திகளாய்ப் பின்னர்த் தலைவி கூறுவனவற்றிற்கெல்லாம் இதுவே ஓத்தாக அமைத்துக் கொள்க.

இனி,

''அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள்
விளிநிலை கேளாள் தமியள் மென்மெல
நலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்
குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற
வறிதகத் தெழுந்த வாயல் முறுவலள்
கண்ணிய துணரா அளவை யொண்ணுதல்
வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன்
முளிந்த ஓமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை ஈட்டுவட் டேய்ப்ப
உதிர்வன படூஉம் கதிர்தெறு கவாஅன்
மாய்த்த போல மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரனுதி சிதைக்கு நிரைநிலை அதர
பரன்முரம் பாகிய பயமில் கானம்
இறப்ப வெண்ணுதி ராயி னறத்தா
றன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
அன்ன வாக எண்ணுநள் போல
முன்னங் காட்டி முகத்தின் உரையா
ஓவச் செய்தியின் ஒன்றுநினைந் தேற்றிப்
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமோ
டாகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையல்
மோயின ளுயிர்த்த காலை மாமலர்
மணியுரு விழந்த அணியழி தோற்றம்
கண்டே கடிந்தனஞ் செலவே ஒண்கொடி

யுழையம் ஆகவும் இனைவோள்
பிழையலள மாதோ பிரிதுநாம் எனினே."[1] (அகம்-5)
"இருங்கழி முதலை மேந்தோ லன்ன ...ஞான்றே."
(அகம்-3)

இவை அகம்,

"வேர்பிணி வெதிரத்துக் கால்பொரு நரலிசை
கந்துபிணி யானை யயாவுயிர்த் தாஅங்
கென்றூழ் நீடிய வேய்பயி லழுவத்துக்
குன்றூர் மதிய நோக்கி நின்றுநினைந்
துள்ளினெ னல்லனோ யானே முள்ளெயிற்றுத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுத
லெமது முண்டோர் மதிநாட்டிங்க
ளுரறுகுரல் வெவ்வளி யெடுப்ப நிழல்தப
வுலவை யாகிய மரத்த
கல்பிறங்கு மாமலை யும்பரஃ தெனவே."
(நற்றிணை-62)

இது நற்றிணை. இவை தலைவிகண் நிகழ்ந்தனவும் அவடன்மையும் பின்னர்த் தலைவன் நினைந்து செலவழுங்கு தற்கு நிமித்த மாயவாறு காண்க. "அறியாய் வாழி தோழி யிருளற" (அகம்-53) என்பது தலைவன்கண் நிகழ்ந்தது தலைவி நினைந்து தோழிக்குக் கூறியது "நெஞ்சு நடுக்குற" என்னும் (23) பாலைக்கலியும் அது.

"உறலியா மொளிவாட வுயர்ந்தவன் விழவினுள்
விறலிழை யவரொடும் விளையாடு வான்மன்னோ

---

1. கணவன் தலைவிபால் நிகழ்ந்த முன்நிகழ்ச்சியை நினைந்ததற்கு உதாரணம் இச்செய்யுள். முகத்தள் மென்மெலக்குறுகவந்து முறுவலளாய் யான் பிரிவு வினைப்படுதலுக்கு உடன்படாத நினைவுடன் புதல்வன் தலையை மோயினள் உயிர்த்த காலை அவள் தோற்றம் கண்டு செலவு அழுங்கினேன் என முன் நிகழ்ந்த நிகழ்ச்சி கூறி இப்போது செலவழுங்கும் நெஞ்சுக்குக் கூறினான்.

பெறலரும் பொழுதொடு பிறங்கிணர்த் துருத்திசூழ்ந்
தறலாரும் வையையென் றறைகுந குளராயின்.''
(கலி-௩0)

இதுவும் அது.

''ஈன்பருந் துயவும் வான்பெரு நெடுஞ்சினை
பொரியரை வேம்பின் புள்ளி நீழற்
கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்
வில்லே ருழவர் வெம்முனைச் சீறூர்ச்
சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை
யுள்ளினெ னல்லனோ யானே யுள்ளிய
வினைமுடித் தன்ன வினியோண்
மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே.''
(நற்றிணை-௩)

என்னும் நற்றிணையும் (௩) அது. இவ்வாறன்றி வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க.

(௪௩)

பாரதியார்

**௪௨. நிகழ்ந்தது ............ ஆகும்**

கருத்து : இது, ஐந்திணை இயல் விளக்கிய முன் சூத்திரத்தின் அடங்காமல் திணைக்குரிப் பொருளாய் அகத்துறைகளில் வந்துபயில் வனவற்றுள் யிறிதொரு செய்தி கூறுகிறது.

பொருள் : நிகழ்ந்தது—தலைமக்கள் பால்முன் நிகழ்ந்த செய்திகள் ; நினைத்தற்கு—பின் ஏற்றபெற்றி நினைவுறுதற்கு ; ஏதுவுமாகும்—ஏற்புடை ஏதுக்களாதலு முண்டு)

குறிப்பு : இந்நூலார், முன் 'புணர்தல் பிரிதல்'என்னும் (14) சூத்திரத்தால் திணைக்குரிய பொருள் ஐந்தையும் சுட்டினார். அவற்றுள் அடங்காமல் திணைக்குரிப் பொருளாகச் சான்றோர் செய்யுளில் ஆட்சி பெறுவன வேறு சிலவும் உளவாத லின் அவற்றை ''உரிப்பொருளல்லன'' எனும் சூத்திரத்தால் சுட்டி, அவற்றுள் கொண்டு தலைக்கழிதல் முதலிய சிலவற்றை இயைபு நோக்கி ஐந்திணை இலக்கணச் சூத்திரத்தை அடுத்தே கூறி, அவ்வாறு உரிப்பொருளாகும் வேறு சிலவற்றை இச் சூத்திரத்தானும் அடுத்த சூத்திரத்தானும் விளங்க வைத்தார்.

முன் நிகழ்ந்தது காதலர் பின் நினைப்பிற்கு ஏதுவாதல் அகத்துறையில் இயல்பாம் என்பதை இச்சூத்திரத்தானும் அவ்வாறு நினைத்துக் கூற்று நிகழ்தலும் அகத்துறையின் பாற்பட்டதே என்பதை அடுத்த சூத்திரத்தானும் தொல்காப்பியர் விளக்குகிறார்.

இனி, இச்சூத்திரமும் அடுத்த சூத்திரமும் காதற் கூற்றுக்குப் பொருளாமாயினும், கொண்டு தலைக்கழிதல் காட்சி முதலியன போலப் பெருவரவின்மையான் அவற்றொடு கூறாது, ஈண்டுக் கூற்று வகை கூறும் சூத்திரங்களொடு இவற்றை இந்நூலார் கூறினாரென்க.

நிகழ்ந்தது நினைத்தற்குப் பாட்டு வருமாறு :

''யாரு மில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ?
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகு முண்டுதான் மணந்த ஞான்றே''. (குறுந்-25)

இது தலைவி நிகழ்ந்தது நினைத்தற்குச்[1] செய்யுள்.

இனி, தலைவன் நிகழ்ந்தது நினைத்தற்குச் செய்யுள் :

''இரண்டறி கள்வி நங்காத லோளே ;
முரண்கொள் துப்பிற் செவ்வேன் மலையன்
முள்ளூர்க் கான நாற வந்து
நள்ளென் கங்கு னம்மோ ரன்னள் ;
கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே.'' (குறுந்-312)

---

1. நினைந்து தனக்குத்தானே கூறியதற்குச் செய்யுள் என்பது இவர் கருத்துப் போலும். சிறைப்புறமாகத் தலைவன் அது கண்டு தலைவி தோழிக்குக் கூறியதும் ஆம்.

"அயத்துவளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன
நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வாய்
ஆகத் தரும்பிய முலையள, பணைத்தோள்
மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன
மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு
பேயு மறியா மறையமை புணர்ச்சி
பூசற் றுடியிற் புணர்வு பிரிந் திசைப்பக்

"கரந்த கரப்பொடு நாஞ்செலற் கருமையிற்
கடும்புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று
நெடுஞ்சுழி நீத்த மண்ணுநள் போல
நடுங்கஞர் தீர முயங்கி நெருநல்
ஆக மடைதந் தோளே, வென்வேல்
களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி
ஒளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக்
கடவு ளெழுதிய பாவையின
மடவது மாண்ட மாஅ யோளே."[2]

எனும் அகம் (62) செய்யுளுமதுவே.

## சிவலிங்கனார்

(இ-ள்) தலைவன் தலைவரிடையே முன் ஒரு கால் நிகழ்ந்த நிகழ்ச்சிப் பின்னர் ஒரு கால் நிகழும் நிகழ்ச்சியில் நினைவு கூர்தற்குரிய காரணமாகவும் பெறும் என்றவாறு.

தலைவி தொடர்பாக நிகழ்ந்ததைத் தலைவன் நினைப்பதும் தலைவன் பால் நிகழ்ந்த நிகழ்ச்சியைத் தலைவி நினைப்பதும் கொள்க. அந்நினைப்புப் பின்நிகழ்ச்சிக்கு அம்முன் நிகழ்ச்சி காரணமாக அமையும் என்க. தலைவன் தன் கண் நிகழ்ந்த நிகழ்ச்சியும் தலைவி தன் கண் நிகழ்ந்த நிகழ்ச்சியும் நினைதலும் கொள்க

---

2. இச்செய்யுனில் நடுங்கு அஞர் தீர முயங்கி நெருநல் ஆகம் அடைதந்தோளே என்று தலைவியின் நிகழ்ச்சி கூறப்பட்டது.

தலைவன் தன் கண்ணே நிகழ்ந்த நிகழ்ச்சியை நினைதற்கு உதாரணம். "வேர் பிணிவெதிர" (நற்-62) என்பது. தலைவி தன் கண் நிகழ்ந்த நிகழ்ச்சிக்கு உதாரணம் வந்தவழிக்காண்க. "யாருமில்லை தானே கள்வன்" (குறுந் ) என்பது காட்டுதல் இறப்பின்று; தலைவன் தன்கண் செய்த செயலாக அது அமைதலின்.

தலைவி கண் நிகழ்ந்ததைத் தலைவன் நினைதற்குச் செய்யுள் "அளி நிலை பெறாக தமரியமுகத்தள்" (அகம்-5) என்பது. தலைவன் கண் நிகழ்ந்தை அதாவது தலைவன் தன்னிடம் நிகழ்த்தியதை நினைதற்குச் செய்யுள் "நுண்ணெழில் மாமை ......... அறியேன் என்னும்" (கலி-4) என்பது.

'நினைத்தற்கு ஏதுவும் ஆகும்' என்பதை நினைத்தற்கும் ஏதுவாம் என உம்மையைப் பிரித்துக் கூட்டு. உம்மையால் நினையாமையும் கொள்ளலாம். ஆதலின் அது எதிர்மறை. நினைத்தலேயன்றிக் கூறுதற்கும் ஆம் எனக்கொள்ளும் நச்சினார்க்கினியர் கூற்றின்படி எச்சவும்மையாகவும் கொள்ளலாம்.

**47. நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே (47)**

ஆ மொ. இல.

Expression of what once happened also forms the theme of literature on aspects of love.

இளம்பூரணர்

47. **நிகழ்ந்தது.........திணையே.**

இதுவும் அது.

(இ-ள்) நிகழ்ந்தது கூறி நிலையலும் திணை-முன்பு நிகழ்ந்த தனைக் கூறிப்போகா தொழிதலும் பாலைத்திணையாம்.

"ஈன்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழற்
கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்

வில்ஏர் உழவர் வெம்முனைச் சீறூர்ச்
சுரன்முதல் வந்த உரன்மாய் மாலை
உள்ளினென் அல்லனோ யானே உள்ளிய
வினைமுடித் தன்ன இனியோள்
மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே.''[1]

(நற்றிணை-3)

(47)

## நச்சினார்க்கினியர்

**44. நிகழ்ந்தது.........திணையே.**

இஃது 'ஒன்றாத் தமரினும்' (தொல்-பொ-அகத்-41) என்னுஞ் சூத்திரத்திற்கொரு புறனடை கூறுகின்றது

(இ-ள்) நிகழ்ந்தது கூறி- ஒன்றாத்தமரினும் என்னுஞ் சூத்திரத்துத் தலைவன்கண் நிகழ்ந்த கூற்றினைத் தலைவியுந் தோழியுங் கூறி, நிலையலுந்திணையே- அதன்கண் நிலைபெற்று நிற்றலும் பாலைத்திணையாம் என்றவாறு.

''அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்பப்
பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ
யென்றோ னெழுதிய தொய்யிலும் யாழநின்
மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக்காண்
சென்றோர் முகப்பப் பொருளுங் இடவா

தொழிந்தவ ரெல்லாரு முண்ணாதுஞ் செல்லா
ரிளமையுங் காமமு மோராங்குப் பெற்றார்
வளமை விழைதக்க துண்டோ வுளநா
ளொரோஒகை தம்முட் டழீஇ யொரோஒகை
யொன்றன்கூ றாடை யுடுப்பவரோ யாயினு
மொன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை யரிதரோ
சென்ற விளமை தரற்கு.'' (கலி-18)

---

1. ''முன் ஒரு காற்பிரிந்தபொழுது இடச்சுரத்தில் மாலைப் பொழுதுகண்டு இந்நேரம் தலைவி தன் மனைக்கண் சிறந்த விளக்கொடு படரும் காலம் என்று நினைத்தேன் அல்லனோ? அந்நிறைப்பு இன்று பிரியினும் வரும். அதனால் யான் அழுகுவேன்'' என்பது இச்செய்யுட் கருத்து.

இதனுள் 'உளநாள்' என்றது நாளது சின்னம் ; 'அரிதரோ சென்ற இளமை தரற்கு' என்றது இளமைய தருமை; 'உள்ளந் துரப்ப' என்றது உள்ளத்தான் ஊக்கமூற்றுதலால் தாளாண் பக்கம் சென்றோர் 'முகப்ப பொருளுங் கிடவாது' என்றது தகுதியது அமைதி ; தந்தம் நிலைமைக்கேற்பப் பொருள் செய்ய வேண்டு தலின் ; அது பாணிக்கு மென்றலின்; ஒரோஒகை தம்முட்டழீஇ ஒரோஒகை ஒன்றன் கூறாடை உடுப்பவரேயாயினும் என்றது இன்மைய திளிவு; 'வளமை விழை தக்கதுண்டோ' என்றது உடைமைய துயர்ச்சி; 'பிரிந்துறை சூழாதி ஐய' என்றது அன்பின தகலம்; 'பிரிந்துறைந்தன்பு பெருக்கல் வேண்டா தம்முளொன்றி னார் வாழ்க்கையே வாழ்க்கை' என்றலின் ; 'தொய்யிலுஞ் சுணங்கு நினைத்துக்காண்' என்றது அகற்சிய தருமை. இவ் வெட்டுந் தாமே கூறல். வேண்டினமையின் முன்னொருகால் தலவன் கூறக்கேட்டுத் தோழியுந் தலைவியும் உணர்ந்தமை கூறியவாறு காண்க.[1]

"பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்து நீ
மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ."
(கலி. 15)

என்பது ஓதற்குப் பிரிவலெனத் தலைவன் கூறியது கேட்ட தோழி கூறியது.

நோற்றோர் மன்ற தாமே கூற்றம்
கோளுற விளியார்பிறர் கொளவிளிந் தோரெனத்
தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்
நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்து
ஆழல் வாழி தோழி தாழாஅது
உருமெனச் சிலைக்கும் ஊக்கமொடு பைங்கால்
வரிமான் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ
அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்
அண்ணல் யானை வெண்கோடு கொண்டு
நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயருங்

1 இதில் நாளது சின்மை முதலிய நான்கும் தலைவன் முன் ஒரு கால் கூறியதாகவும் இளமையது அருமை முதலிய நான்கும் தோழி அவன் பிரிவுணர்த்திய போது கூறி செலவழுங்குவித்ததாகவும் கொள்க.

கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்
பழகுவ ராதலோ வரிதே முனாஅது
முழவுறழ் திணிதோ ணெடுவே ளாவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி அன்னநின்
ஒண்கேழ் வனமுலைப் பொலிந்த
நுண்பூண் ஆகம் பொருந்துதன் மறந்தே.''
(அகம் - 61)

இவ்வகப்பாட்டின் மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க் களத்து வீழ்ந்தோரே துறக்கம் பெறுவரெனத் தன் சாதிக்கேற்பத் தலைவன் புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலைத் தோழி கூறினாள்.

''வேந்தன் குறைமொழிந்து வேண்டத் தலைப்பிரிந்தார்
தாந்தங் குறிப்பின ரல்லரா—லேந்திழாய்
கண்பனி வாரக் கலங்கல் பிரிவரோ
தண்பனி நாளே தனித்து.''

இது குறை மொழிந்து வேண்டினமை தலைவன் கூறக்கேட்டு தோழி கூறியது. ''அரிதாய வறனெய்தி'' (பாலைக்கலி-10) என்றது மூன்றன் பகுதி தலைவன் கூறக்கேட்ட தலைவி கூறியது.

''யானெவன் செய்கோ தோழி பொறிவரி
வானம் வாழ்த்திப் பாடவும் அருளாது
உறைதுறந் தெழிலி நீங்கலிற் பறையுடன்
மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை
அரம்போழ் நுதிய வாளி அம்பின்
நிரம்பா நோக்கின் நிரையங் கொண்மார்
நெல்லி நீளிடை எல்லி மண்டி
நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடு மெழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்
மொழிபெயர் தேஎந் தருமார் மன்னர்

கழிப்பிணிக் கறைத்தோல் நிரைகண் டன்ன
உவலிடு பதுக்கை ஆளுகு பறந்தலை
உருவில் பேய் ஊராத் தேரொடு
நிலம்படு மின்மினி போலப் பலவுடன்
இலங்குபரல் இமைக்கும் என்பநம்
நலந்துறந் துறைநர் சென்ற ஆறே.'' (அகம்-67)

இது மண்டிலத்தருமை தலைவன் கூறக்கேட்ட தோழி கூறியது.

''நம்நிலை யறியா ராயினுந் தம்நிலை
அறிந்தனர் கொல்லோ தாமே யோங்குநடைக்
காய்சின யானை கங்குல் சூழ
அஞ்சுவர விறுத்த தானை
வெஞ்சின வேந்தன் பாசறை யோரே.''
(அகம்-264)

இது தலைவன் பாசறைப் புலம்பினமை கூறக்கேட்ட தலைவி நம்நிலை அறியாராயினும் எனக் கூறினாள்.[3] ''திசை திசை தேனார்க்குந் திருமருத முன்னுறை'' என்பது (பாலைக் கலி-25) காவற் பாங்கின்கட் டலைவன் கூறியது கேட்ட தலைவி கூறியது. பிறவும் வருவனவெல்லாம் இதனான் அமைக்க.

## பாரதியார்

### 43. நிகழ்ந்தது... ...திணையே

கருத்து: இதுவும், முற்சூத்திரத்தைப் போலவே, ஐந்திணைச் சூத்திரங்களி லடங்காது, அறவே அவற்றின் வேறுமாகாது, திணைக்குரிப் பொருளாய் அகத்துறையில் வந்து பயிலும் பிறி தொன்று கூறுகிறது.

---

2. பாலைநிலமாகிய மண்டிலத்தின் செலற்கரிய நிலை 'என்ப' வரை உள்ளன தலைவன் பிரியுமுன் கூறியன.

3. பாசறையில் புலம்பியது கேட்டதலைவி அவர் பாசறையில் இருந்து நம்மைப் பற்றிய நிலையை அறியாராயினும் நம்மைப் பிரிந்ததால்வந்த துன்பமாகிய தம் நிலையை அறிந்தாரே எனத் தலைவன்கண் நிகழ்ந்தது கூறினாள்.

பொருள்: நிகழ்ந்ததுகூறி - காதலர் தம்முள் நிகழ்ந்த செய்தியை எடுத்துக் கூறி; நிலையலுந்திணையே - நிலை பெறுதலும் அகத்துறை ஒழுக்கமேயாகும்.

குறிப்பு: பழைய உரைகாரர் இவ்விரு சூத்திரங்களையும் பாலைத்திணைக்கே உரியன போலக் கொள்ளுதல் அமைவுடைத்தன்று, பாலையில்லாப்பிற திணைகளிலும் நிகழ்ந்தது நினைத்தலும் நிகழ்ந்தது கூறி நியைலும் வருதலின், அவை எல்லாத்திணைக்கும் உரியவாய் அமையுமென்க. அது பற்றியே, பாலைத்திணை இயல்புகளோடு இவற்றைக் கூறாது. அவை முடிந்து பொதுவியல் கூறும் இவ்விடத்து இச்சூத்திரங்கள் வைக்கப்பட்டன. மேலும், இவை புணர்ச்சி முதலிய ஐந்தனுள் எதனினும் அடங்காமல் உரிப்பொருளாயுமைதலின், "நிலையலும் பாலை" — "நிலையலும் பிரிவு"— என்னாது, ஐந்திணைகள் போல "நிலையலும் திணையே," எனப் பொதுப்படக்கூறிய பெற்றியுமறிக.

தலைவி நிகழ்ந்தது கூறி நிலையலுக்குப் பாட்டு:

"கேட்டிசின் வாழி, தோழி! யல்கற்
பொய்வ லாளன் மெய்யற் மரீஇ
வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட வேற்றெழுந்
தமளி தைவந் தனனே, குவளை
வண்டுபடு மலரிற் சாஅய்த்
தமியேன் மன்ற வளியேன் யானே." (குறுந்-30)

"துறக லயலது மாணை மார்க்கொடி
துஞ்சுகளி றிவருங் குன்ற நாடன்
நெஞ்சுகள னாக 'நீயலென் யா'னென-
நற்றோண் மணந்த ஞான்றை மற்றவன்
தவாஅ வஞ்சின முரைத்தது
நோயோ தோழி நின்வயி னானே" (குறுந்-36)

என்பதுமது.

"கொடியவுங் கோட்டவும் நீரின்றி நிறம்பெறப்
பொடியழற் புறந்தந்த பூவாப்பூம் பொலன்கோதைத்
தொடிசெறி யாப்பமை யரிமுன்கை யணைத்தோளா
யடியுறை யருளாமை யொத்ததோ நினக்கென—
நரந்தநா றிருங்கூந்தல் எஞ்சாது நனிபற்றிப்

பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை யொருகாழ்
விரன்முறை சுற்றி மோக்கலு மோந்தனன்;
நறாஅவிழ்ந் தன்னஎன் மெல்விரற் போதுகொண்டு
செறாஅச் செங்கண் புதைய வைத்துப்
பறாஅக் குருகி னுயிர்த்தலு முயிர்த்தனன்;
றொய்யி ளேமுலை யினிய தைவந்து
தொய்யலந் தடக்கையின் வீழ்பிடி யளிக்கு
மையல் யானையின் மருட்டலு மருட்டினன்;
அதனால் அல்லல் களைந்தனன், தோழி!''

எனவரும் குறிஞ்சிக்கலி (18) செய்யுளடிகளும் முன்நிகழ்ந்ததைத் தலைவி கூறி நிலையலாகும்.

''மின்னொளி ரவிரற விடைபோழும் பெயலேபோற்
பொன்கை தகைவகிர் வகைநெறி வயங்கிட்டுப்
போழிடை யிட்ட கமழ்நறும் பூங்கோதை
யின்னகை யிலங்கெயிற்றுத் தேமொழித் துவர்ச்செவ்வாய்
நன்னுதா னினக்கொன்று கூறுவாங் கேளினி;
நில்லென நிறுத்தா னிறுத்தே வந்து
நுதலு முகனுந் தோளுங் கண்ணு
மியலுஞ் சொல்லு நோக்குபு நினைஇ-
ஐதேய்ந் தன்று பிறையு மன்று,
மைதீர்ந் தன்று மதியு மன்று,
வேயமன் றன்று மலையு மன்று,
பூவமன் றன்று சுனையு மன்று,
மெல்ல வியலு மயிலு மன்று,
சொல்லத் தளருங் கிளியு மன்று,
எனவாங்கு,
அனையன் பலபா ராட்டிப் பையென
வலைவர் போலச் சோர்பத னொற்றிப்
புலையர் போலப் புன்க ணோக்கித்
தொழலுந் தொழுதான் றொடலுந் தொட்டான்
காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன்;
தொழூஉம் தொடூஉ மவன்றன்மை
யேழைத் தன்மையோ வில்லை தோழி.'
(குறிஞ்சிக்கலி—19).

என்பதும், தலைவி நிகழ்ந்தது கூறி நிலையற்றுறையே.

இனித் தலைவன் நிகழ்ந்தது கூறி நிலையலுக்குச் செய்யுள்.

"அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள்,
விளிநிலை கொள்ளாள் தமியள் மென்மெல
நிலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்
குறுக வந்துதன் கூரெயிறு தோன்ற
வறிதகத் தெழுந்த வாயல் முறுவலள்,
கண்ணிய துணரா வளவை யொண்ணுதல்
வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன்
முளிந்த வோமை முதையலங் காட்டுப்
பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப
உதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன்
மாய்த்த போல மழுகுநுனை தோற்றிப்
பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்
விரனுதி சிதைக்கும் நிரைநிலை யுதர
பரன்முரம் பாகிய பயமில் கான
மிறப்ப வெண்ணுதி ராயின் — அறந்தா
றன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
யன்ன வாக வென்னுநள் போல —
முன்னங் காட்டி முகத்தி னுரையா
வோவச் செய்தியி னொன்று நினைந் தொற்றிப்
பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொ
டாகத் தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர் பயந்த துணையமை பிணையன்
மோயினள் உயிர்த்த காலை, மாமலர்
மணியுரு விழந்த வணியழி தோற்றங்
கண்டே கடிந்தனஞ் செலவே; யொண்டொடி —
உழைய மாகவும் இனைவோள் —
பிழையலண் மாதோ பிரிதுநா மெனினே." (அகம்-5)

## சிவலிங்கனார்

உரையாளர் இருவர் கூறியதுபோல இச்சூத்திரம் பாலைத் திணைக் குரியது என்பதே பொருந்தும். முன்னர்ச் சூத்திரமும் அப்படியே. முன்னர் நிகழ்ந்தது பின்னிகழ்ச்சிக்குக் காரணமாவதும் முன் நிகழ்ச்சியைச் சொல்லி அமைதலும் பிரிவை அடிப்படையாகக் கொண்டனவே. பாரதியார் கூறுவதுபோல

எல்லாத்திணைக்கும் இச்சூத்திரம் பொதுவாகாது. எல்லாத் திணையிலும் பிரிவு உண்டு. எனினும் குறிப்பிட்டு ஒரு திணையிற் சார்த்த வேண்டுமாயின் பாலையிலேயே சார்த்தப்படும்.

**48. மரபு நிலை திரியா மாட்சிய வாகி**
**விரவும் பொருளும் விரவும் என்ப** **(48)**

ஆ.மொ.இல.

Without violating the traditional way of making literature new additions may form the themes of expression.

## இளம்பூரணர்

**48. "மரபுநிலை திரியா..............என்ப"**

இதுவும் அது.

(இ-ள்) மரபு நிலை திரியா மாட்சிய ஆகி விரவும் பொருளும் விரவும் என்ப-மரபுநிலை திரியாத மாட்சிமை யுடையவாகி விரவும் பொருளும் விரவும் என்ப.

அஃதாவது பாலைக்கு ஓதிய பாசறைப் புலம்பற்கண்ணும் தேர்ப்பாகற்குக் கூறுதற்கண்ணும், முல்லைக்குரிய முதற்பொருளும் கருப்பொருளும் விரவுதலாம். [1]இந்நிகரான பிறவுங் கொள்க.

மரபுநிலை திரியாமையாவது, பாசறைக்கண் வினை முடித்த வழிக் கார்காலம் வந்ததாயின் ஆண்டுக் கூறும் கூற்று. அஃது அக்காலத்தைப் பற்றி வருதலின் மரபு நிலை திரியாதாயிற்று.

"வேந்து வினை முடித்த" என்னும் அகப்பாட்டினுள் (14) கண்டு கொள்க.

இன்னும் 'மாட்சிய ஆகி விரவும்' பொருளும் விரவும் என்றதனால் பாசறைக்கண் தூது கண்டு கூறுதலும் தலைமகளை இடைச்சுரத்து நினைத்துக் கூறுதலுங் கொள்க.

---

1. இது பொருந்தாது. திணை மயக்கமாதலின் நச்சினார்க்கினியரும் பாரதியாரும் கூறுவன பொருந்தும்.

"நீடினம் என்று கொடுமை தூற்றி
வாடிய நுதல ளாகிப் பிறிதுநினைந்து
யாம்வெங் காதலி நோய்மிகச் சாஅய்ச்
சொல்லியது உரைமதி நீயே
முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே."

(ஐங்குறு-478)

இது தூது கண்டு கூறியது.

"பனிமலர் நெடுங்கண் பசலை பாயத்
துனிமலி துயரமோ டரும்பட ருழப்போள்
கையறு நெஞ்சிற் குசாஅத் துணையாகச்
சிறுவரைத் தங்குவை யாயின்
காண்குவை மன்னாற் பாணவெந் தேரே."

இது தூது விடும் தலைமகன் கூறியது.

"நெடுங்கழை முளிய வேனில் நீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய ஆயின முன்னே இனியே
ஒண்ணுதல் அரிவையை உள்ளுதொறும்
தண்ணிய ஆயின சுரத்திடை ஆறே." (ஐங்குறு-322)

(48)

இஃது இடைச்சுரத்துக் கூறியது.

நச்சினார்க்கினியர்

45. மரபுநிலை ... ... ... ... என்ப

இது மரபியலுட் கூறப்படும் மரபன்றி அகத்திணைக்கு உரிய மரபுகள் கூறுகின்றது.

(இ-ள்) மரபுநிலை திரியா மாட்சிய ஆகி-புலனெறி வழக்கஞ் செய்து வருகின்ற வரலாற்று முறைமை. திரியாத மாட்சியவாய்,[1] விரவும் பொருளும் விரவும் என்ப—பாலைத் திணைக்குங் கைக்கிளை பெருந்திணைக்கும் உரியவாய் விரவும் பொருளும் ஏனைத்திணைக்கு உரியவாய் விரவும் பொருளும் விரவி வருமென்று கூறுவார் புலவர் எ-று.

---

1. மரபு நிலை என்பதற்கு இவ்வுரையே சிறக்கும்.

அவை தலைவி ஆற்றாமை கண்டுழிப் பிரிந்த தலைவன் மீண்டு வந்தானெனத் தோழி கூறுவனவும், வரைவிடை வைத்துப் பிரிந்தோன் தலைவியை நினைந்து வருந்திக் கூறுவனவும் உடன் போயவழி இடைச்சுரத்து நிகழ்ந்ததனை மீண்டும் வந்துழித் தலைவன் றோழிக்குக் கூறுவனவும், யானினைத்த வெல்லை யெல்லாம் பொருள் முடித்து வாராது நின்னல நயந்து வந்தே னெனத் தலைவன் கூறலும், பொருள்வயிற் பிரிந்தோன் தலைவியை நினைந்து வருந்துவனவும், இடைச்சுரத்துத் தலைவன் செலவு கண்டோர் கூறுவனவும், மீட்சி கண்டோர் கூறுவனவும், ஊரின்கட் கண்டோர் கூறுவனவும் பிறவுமாம். அவை பாலைத் திணைக்கு விரவும் பொருளாமென்றுணர்க.

''கோடுயர் பன்மலை பிறந்தன ராயினு
நீட விடுமோ மற்றே நீடுநினைந்து
துடைத்தொறுந் துடைத்தொறுங் கலங்கி
யுடைத்தரும் வெள்ள மாகிய கண்ணே.''
(ஐங்குறு-358)

வ்வைங்குறு நூறு தலைவன் மீண்டானென்றது. ''பாடின்றிப் இபசந்தகண்'' (பாலைக்கலி –15) என்பதும் அது.

''வளைபடு முத்தம் பரதவர் பகருங்
கடல்கெழு கொண்கன் காதன் மடமகள்
கெடலரும் துயர நல்கிப்
படலின் பாயல் வௌவி யோளே.'' (ஐங்குறு-195)

இவ்வைங்குறுநூறு வரைவிடை வைத்துப் பிரிந்தோன் தனிமைக்கு வருந்திக் கூறியது.

''புறந்தாழ் பிறாண்ட கூந்தற் போதி
னிறம்பெறு மீரிதழ்ப் பொலிந்த வுண்க
ணுள்ளம் பிணிக்கொண் டோள்வயி னெஞ்சஞ்
செல்ல றீர்க்குஞ் செல்வா மென்னுஞ்
செய்வினை முடியா தெவ்வஞ் செய்த
லெய்யா மையோ டிளிவுதலைத் தருமென
வுறுதி தூக்கத் தூங்கி யறிவே
சிறிதுநனி விரைய லென்னு மாயிடை
யொளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய

தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்லேன் வருந்திய உடம்பே''
(நற்றிணை-284)

இந்நற்றிணையும் அது.

''கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ
வேனில் அதிரலொடு விரைஇக் காண்வரச்
சில்லைங் கூந்த லழுத்தி மெல்லிணர்த்
தேம்பாய் மராஅம் அடைச்சி வான்கோல்
இலங்குவளை தெளிர்ப்ப வீசிச் சிலம்புநகச்
சின்மெல் லொதுக்கமொடு மென்மெல இயலிநின்
அணிமாண் சிறுபுறங் காண்கம் சிறுநனி
ஏகென ஏகல் நாணி ஒய்யென
மாகொல் நோக்கமொடு மடங்கொளச் சாஅய்
நின்றுதலை யிறைஞ்சி யோளே அதுகண்டு
யாமுந் துறதல் செல்லேம் ஆயிடை
அருஞ்சுரத் தல்கி யேமே இரும்புலி
களிறட்டுக் குழூஉம் ஓசையுங் களிபட்டு
வில்லோர் குறும்பிற் றதும்பும்
வல்வாய்க் கடுந்துடிப் பாணியுங் கேட்டே.''
(அகம்-261)

இது மீண்டு வந்தோன் தோழிக்கு உரைத்தது.

''திருந்திழை யரிவை நின்னல முள்ளி
யருஞ்செயற் பொருட்பிணி பெருந்திரு வுறுகெனச்
சொல்லாது பெயர்தந் தேனே பல்பொறிச்
சிறுகண் யானை திரிதரு
நெறிவிலங் கதர கானத் தானே.'' (ஐங்குறு-355)

இவ்வைங்குறுநூறு பெற்ற பொருள்கொண்டு நின்னலம் நயந்து வந்தேன் என்றது.

''அளிதோ தானே நாணே யாள்வினை
யெளிதென லோம்பன்மி னறிவுடை யீரே
கான்கெழு செலவின் னெஞ்சுபின் வாங்கத்
தான்சென் றனனே தமிய னதாஅன்
றென்னா வதுகொ றானே பொன்னுடை

மனைமாண் டடங்கிய கற்பிற்
புனையி ரோதி புலம்புறு நிலையே.''

இது செலவு கண்டோர் கூறியது.

''மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்
தலந்தலை ஞெமையத் திருந்த குடிஞை
பொன்செய் கொல்லனி னினிய தெளிர்ப்பப்
பெய்ம்மணி யார்க்கு மிழைகிளர் நெடுந்தேர்
வன்பரல் முரம்பி னேமி யதிரச்
சென்றிசின் வாழியோ பனிக்காடு நாளே
யிடைச்சுரத் தெழிலி யுறைத்தென மார்பிற்
குறும்பொறி கொண்ட சாந்தமொடு
நறுங்கண் ணரியன் கொனோகோ யானே.'' (நற். 394)

இது நற்றிணை வரவுகண்டோர் கூறியது (3)

''இனைந்து நொந்தழுதன ணினைந்துநீ டுயிர்த்தன
ளெல்லையு மிரவுங் கழிந்தன வென்றெண்ணி யெல்விரா
நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல
மணியிற் பிறந்தநீர் போலத் துணிவாங்
கலஞ்சிதை யில்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போற் றெளிந்து நலம்பெற்றா
ணல்லெழின் மார்பனைச் சார்த்து.''

(கலி-142)

இது பெருந்திணைக்கட்[1] கண்டோர் கூறியது (4)

''குரவை தழீஇயர் மரபுளி பாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுது
மாசில்வான் முந்நீர் வளைஇய தொன்னிலம்
ஆளுங் கிழமையொடு புணர்ந்த
வெங்கோ வாழியரிம் மலர்தலை யுலகே.''

(கலி-103)

இச் சூரிதகத்துக் குரவையாடல் ஏறுகோடற் கைக்கிளையுள் விராய் வந்தவாறுங் குரவைக்குரிய தெய்வத்தையன்றி அரசனை வாழ்த்திய வாழ்த்து விராய் வந்தவாறுங் கொள்க. ''விரவும் பொருளும் வரவு'' மெனவே ஆய்ச்சியர் குரவைக் கூத்தல்லது

1. காமம்மிக்க கழிபடர் கிளவியாகிய பெருந்திணை.

வேட்டுவவரிக்குரிய வெறியாடல் விரவா தென்றுணர்க. *இஃது எவ்வகைச் சுவையான் வரும் மெய்ப்பாடுங் கூத்தோடும் படுத லின் அச்சுவை பற்றிவரும் மெய்ப்பாட்டிற்கும் உரித்தாயிற்று.

இனிக் 'காவற் பாங்கின் ஆங்கோர் பக்கத்'திற் (தொல்-பொ-81-41) தலைவன் கூறினவற்றைக் கற்பியலுள், 'தலைவன் பகுதியினீங்கிய தகுதிக்கட்' (தொல்-பொ-கற்-6) டலைவி பரத்தையராகக் கூறுவனவும் இச்சூத்திரத்தான் அமைக்க. அவை மருதக்கலியுட் (93) கடவுட் பாட்டு முதலியன. அவற்றை ஆண்டுக் காட்டுதும், கண்டுணர்க.

இனித் தலைவி கற்பினுட் பிரிவாற்றாது எம்மையும் உடன் கொண்டு சென்மினென்பனவும் அவன் அவட்கு மறுத்துக் கூறுவனவும் இதனான் அமைக்க.

''மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்த
முண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றா
லென்னீ ரறியாதீர் போல விவைகூறி
னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு
மன்பறச் சூழாதே யாற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடி னதுவல்ல
தின்பமு முண்டோ வெமக்கு ?'' (கலி-6)

இக்கலி எம்மையும் உடன்கொண்டு சென்மினென்றது.

''செருமிகு சினவேந்தன்'' என்னும் பாலைக்கலியுள்,
''எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியன் மேவந்த சீறடித் தாமரை

---

* இஃது......உரித்தாயிற்று''—இத்தொடர் இடைச்செருகல் போலும். ஈண்டைக்குப் பொருத்தம் இன்று.

யல்லிசே ராயித முரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறி னவ்வடி கறுக்குந வல்லவோ ?'' (கலி-13)

இது தலைவிக்குத் தலைவன் உடன்போக்கு மறுத்துக் கூறியது. இதன் சுரிதகத்து.

''அனையவை காதலர் கூறலின் வினைவயிற்
பிரிகுவ ரெனப்பெரி தழியாதி.'' (கலி-13)

என வினைவயிற் பிரிவு கூறலின் இது கற்பிற் கூறியதாயிற்று.

இன்னும் இச்சூத்திரத்தான் அமைத்தற்குரிய கிளவிகளாய் வருவனவெல்லாம் அமைத்துக் கொள்க. (45)

## பாரதியார்

**44. மரபு.........என்ப**

கருத்து : இது மேற்சூத்திரங்களிலடங்காத அகத்துறைப் பகுதிகளுள், ஐந்திணை அல்லாத உரிப்பொருட்கெல்லாம் ஓர் புறனடை கூறுகிறது.

பொருள் : மரபு நிலைதிரியா மாட்சியவாகி - முறைமை இயல் கெடாமலும், மாண்பு தருவனவுமாகி; விரவும் பொருளும் விரவும் என்ப - திணைக்குரிப் பொருளாய் ஐந்திணை ஒழுக்கத் தோடு அமைய அகத்துறைகளில் கலந்துவரத்தகுவன பிறவும் வந்து பயிலும் என்று கூறுவர் அகப்பொருணூலோர்.

குறிப்பு : இவ்வாறு கொள்ளாமல், இச்சூத்திரத்திற்கு ''முல்லைக்குரிய முதற்பொருளும் கருப்பொருளும் விரவு தலா மென'' இளம்பூரணர் கூறும் பொருள் பொருந்தாது. இதுவும் முன்னிரண்டும் இந்நூலார் திணைப் பொருள்களெனப் பொதுப் படக் கூறியதால், உரைகாரர் இதை முல்லைக்கும் முன்னிரண் டைப் பாலைக்கும் தனித்தமைத்துக் கூறுவது சூத்திரக் கருத் தாகாமை தேற்றம். மேலும், 'திணைமயக் குறுதலும்' என்னும் இவ்வியலின் முன் (12) சூத்திரத்தால் முதலொடு திணைக்குரிப் பொருள் ஐந்து மயங்குதற்கும், 'உரிப்பொருளல்லன மயங்கவும் பெறுமே' என்னும் (13) சூத்திரத்தால் ஐந்திணை இலக்கணத் திலடங்காத அகத்திற்குரிய பிற உரிப்பொருளெல்லாம் முதற் பொருளொடு மயங்குதற்கும், 'எந்நில மருங்கிற் பூவும் புள்ளும் என்னும்(19) சூத்திரத்தால் கருப்பொருள்கள் தம்முள்ளும் முதல்

உரிப்பொருள்களோடும் விரவுதற்கும், புறனடைச் சூத்திரங்கள் தனித்தனியே கூறி வைத்தாராதலால், ஈண்டு மீண்டும் முன் கூறிய முதலொடு கருப்பொருள் விரவுதலையே கூறினாரென்பது கூறலாமாதலின் அது பொருந்தாதென்க. ஐந்திணையிலடங்காப் பிற உரிப்பொருட்டுறைகள் இவ்வியலில் மேற் சுட்டினமட்டோட மையாது வேறு வருவனவுமுளவாதலின் அவற்றையமைக்க இப்புற நடை ஈண்டுக் கூறப்பட்டது.

தலைமக்களின் மனையற மாட்சியைச் செவிலி வியந்து பாராட்டல், கற்பறக்காதலால் இற்சிறப்பின்பம் தலைவன் பாராட்டல், தலைவன் வரவு கூறுவாரைத் தோழி வாழ்த்தல், அவரைத் தலைவி வாழ்த்தல், இயற்பட மொழிதல், பரத்தை தலைவி பாங்காயினார் கேட்பக் கூறல் போல்பவையும் பிறவும் முன் கூறியவற்று ளடங்காமையின், அவையமைய இப்புறனடைச் சூத்திரமின்றியமையாமை யறிக.

''பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோ
லுண்ணென் றோக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்
றரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
பரீஇ மெலிந் தொழியப் பந்த ரோடி
ஏவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி
அறிவு மொழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல் ?
கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோ றுள்ளாள் ;
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுது மறுத் துண்ணுஞ் சிறுமது கையளே.''

(நற்-110)

தலைவன் இற்சிறப்பின்பம் பாராட்டற்குச் செய்யுள் :

''விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்
அரிது பெறு சிறப்பின் புத்தேள் நாடும்
இரண்டுந் தூக்கிற் சீர்சா லாவே,
பூப்போ லுண்கண் பொன்போல் மேனி

மாண்வரி யாகக் குறுமகள்
தோள்மாறு படூஉம் வைகலோ டெமக்கே.''
(குறுந்-101)

இக் குறுந்தொகைப் பாட்டு இல்லற நடத்தும் தலைவன்தான் தன் கற்புயர் காதல் மனைவியாலெய்தும் இற்பேரின்பத்தைப் பாராட்டியது.

இனி தலைவன் வரவு கூறுவாளைத் தோழி வாழ்த்தற்குச் செய்யுள் :

''அரும்பெற லமிழ்த மார்பத மாகப்
பெரும்பெய ருலகம் பெறீஇயரோ வன்னை,
தம்மில் தமதுண் டன்ன சினைதொறும்
தீம்பழந் தூங்கும் பலவி
னோங்குமலை நாடானை வருமென் றோளே.''
(குறுந்-83 )

அவ்வயலிலாட்டியைத் தலைவி வாழ்த்தற்குச் செய்யுள் :

''அமிழ்த முண்கநம் மயலி லாட்டி,
பால்கலப் பன்ன தேக்கொக் கருந்துபு
நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை
நெல்லி யம்புளி மாந்தி யயலது
முள்ளி லம்பணை மூங்கிலிற் றூங்குங்
கழை நிவந் தோங்கிய சோலை
மலைகெழு நாடனை வருமென் றோளே.'' (குறுந்-201)

தலைவி இயற்பட மொழிதற்குச் செய்யுள் :

''இதுமற் றெவனோ, தோழி! துனியிடை
இன்னர் என்னு மன்னாக் கிளவி?
இருமருப் பெருமை யீன்றணிக் காரா
உழவன் யாத்த குழவியி னகலாது
பாற்பெய் பைம்பயி ராரு மூரன்
திருமனைப் பல்கடம் பூண்ட
பெருமுது பெண்டி ராகிய நமக்கே? (குறுந்-181)

''நிலத்தினும் பெரிதே, வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே, சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு

பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே.'' (குறுந்-2)

என்பதுமியன் மொழிதலாம்.

பரத்தை தலைவி பாங்காயினார் கேட்பக் கூறியதற்குச் செய்யுள் :

''கழனி மாத்து வளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூரன்,
எம்மிற் பெருமொழி கூறித், தம்மிற்
கையுங் காலுந் தூக்கத் தூக்கு
மாடிப் பாவை போல,

மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே.'' (குறுந்-8)

''கணைக்கோட்டு வாளை கமஞ்சூன் மடநாகு
துணர்த்தேன் கொக்கின் தீம்பழங் கதூஉந்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்க், குணாது
தண்பெரும் பௌவ மணங்குக, தோழி!
மனையோண் மடமையிற் புலக்கும்
அனையே மகிழ்நற்கியா மாயின மெனினே.''

என்னும் குறுந்தொகை (164) செய்யுள் காதற்பரத்தை தலைமகட்குப் பாங்காயினார் கேட்ப உரைத்ததாகும்.

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் கைக்கிளை பெருந்திணைகள் அகத்திணையில் கலந்து வருமாறு கூறுகின்றது.

(இ-ள்) ஐந்திணை நிலங்களில் விரவிவரும் கைக்கிளை பெருந்திணைகள் புலனெறி மரபுக்கு மாறுபடாத சிறப்புடையன வாய் அகத்திணை யொழுக்கங்களில் விரவி வரும் என்று கூறுவர் நூலோர் என்றவாறு.

விரவும் பொருள் என்பதால் தமக்கென நிலம் இல்லாமையால் எந்நிலத்தும் விரவும் பொருள் எனக்கொண்டு கைக்கிளை பெருந்திணை என்பதும் மீண்டும் விரவும் என்பதால் அவை அகன் ஐந்திணைக்கண் விரவி வரும் என்பதும் கொள்க.

கலித்தொகையில் ஏறுதழுவலாகிய கைக்கிளை முல்லைத் திணையில் அமைத்ததும் பெருந்திணைக் கருத்துகள் பிறதிணை களில் காணப்படுவதும் அறிக.

யாரு மில்லை தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதாம் மணந்த ஞான்றே (குறுந்)

இச்செய்யுள் குறிஞ்சித்திணை. தலைவன் சிறைப்புறமாகத் தலைவி தோழிக்குக் கூறியது. இச்செய்யுளை ஆய்ந்து பார்க்கின் இதன் தலைவி பெருந்திணைத் தலைவியோ என எண்ணத் தோன்றும்.

தலைவன் தன்னைப் புணர்ந்தபோது தலைவி யாரேனும் இக்களவொழுக்கத்தைப் பார்ப்பரோ என்ற எண்ணத்துடனேயே யிருந்தாள் என்பதும் அவ்வெண்ணத்தால் சுற்றுமுற்றும் பார்த்து யாரும் இல்லை என உணர்ந்தாள் என்பதும் அங்கிருந்த குருகும் ஒழுகுநீர் ஆரல் பார்ப்பதையும் தம் ஒழுக்கத்தைப் பாராததையும் கண்டாள் என்பதும் ஆகிய இச்செய்திகள் புலப்படும். எனவே, அவள் புணர்ச்சிக் காலத்தும் தான் கொள்ளும் இன்ப உணர் வினும் அச்ச உணர்வே மிகவும் கொண்டிருந்தாள் என்பதும் புலனாம். இந்நிலை அகத்திணைத் தலைவிக்கு உரியதன்று அதனால் பெருந்திணைக்குரியதாகும். இச்செய்யுள் என்றாலும் தலைவி தலைவனின் வரவு நீட்டிப்பது கண்டு அவன் சிறைப் புறத்தானாய் இருக்கும்போது தானே அவ்வாறு படைத்து மொழிந்ததாகக் கொண்டு இச்செய்யுளை அகத்தொழுக்கமாகிய குறிஞ்சித் திணையில் அமைத்தனர் புலவர். படைத்துமொழிதல் இடத்துக்கேற்பத் தோழிக்கும் தலைவிக்கும் உரியதாதலின் மரபு நிலையதாயிற்று.

இச்சூத்திரம் உரிப்பொருள் மயக்கம் கூறியது என்பர் அருணாசலம்பிள்ளை. முதற்பொருள் கருப்பொருள் மயக்கம் கூறி உரிப்பொருளல்லன மயங்கவும் பெறுமே எனக் கூறியதால் உரிப்பொருள் மயங்காது என்பது உறுதிப்படுத்தப்பட்டதாதலின் இச்சூத்திரம் உரிப்பொருள் மயக்கம் கூறியது என்பது

பொருந்ாது. அன்றியும் முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் ஆகிய செய்யுட்குரிய பொருள்கள் யாவுமே மயங்கும் எனின் புலனெறி வழக்கத்துக்கு ஓர் வரையறையில்லை என்றாகி விடும்.

**49. உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத்**
**தள்ளாதாகும் திணையுணர் வகையே (49)**

ஆ. மொ. இல.

'Ullurai Uvamam' and 'Enai Uvamam' will not fail to make clear understanding of 'Thinai' (aspects of love)

பி. இ. நா.

**நம்பி 237, இல. வி. அ. 213**

உள்ளுறை யுவமம் வெளிப்படை உவமம் என
எள்ளரும் உவமம் இருவகை யுடைத்தே.

இளம்பூரணர்

**49. உள்ளுறை உவமம்.........வகையே.**

இஃது உவம வகையான் ஐந்திணைக்கும் உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ ள்) உள்ளுறை உவமம் ஏனை உவமம் என உள்ளுறைக் கண் வரும் உவமமும் ஒழிந்த உவமமும்என இருவகையாலும், திணை உணர்வகை தள்ளாது ஆகும். திணை உணரும் வகை தப்பாதாகும் [ஏகாரம் ஈற்றசை]

உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

நச்சினார்க்கினியர்

**46. உள்ளுறை....... வகையே**

இஃது உவமவியலுள் அகத்திணைக் கைகோள் இரண்டிற்கும்'[1] பொதுவகையான் உரியதொன்று கூறுகின்றது.

---

1. களவு, கற்பு

(இ-ள்) உள்ளுறை உவமம் ஏனை உவமம் என-மேற்கூறும் உள்ளுறையுவமந்தான் ஏனைய உவமமென்று கூறும்படி உவமையும் உவமிக்கப்படும் பொருளுமாய்[2] நின்றது; திணை உணர்வகை தள்ளாது ஆகும். அகத்திணை உணர்தற்குக் கருவியாகிய உள்ளுறை உவமம் போல[3] எல்லாத் திணையையும் உணருங் கூற்றைத் தள்ளாதாய் வரும்; நல்லிசைப் புலவர் செய்யுட் செய்யின் என்றவாறு.

எனவே ஏனையோர் செய்யிற் றானுணரும் வகைத்தாய் நிற்கும் என்றவாறாம்.[4]

"விரிகதிர் மண்டிலம் வியல்விசும் பூர்தரப்
புரிதலை தளையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி
வரிவண்டு வாய்சூழும் வளங்கெழு பொய்கையுட்
டுனிசிறந் திழிதருங் கண்ணினீ ரறல்வார
வினிதமர் காதல னிறைஞ்சித்தன் னடிசேர்பு
நனிவிரைந் தளித்தலி னகுபவண் முகம்போலப்
பனியொரு திறம்வாரப் பாசடைத் தாமரைத்
தனிமலர் தளைவிடூஉந் தண்டுறை நல்லூர"

(கலி-71)

என்பது விரியுங் கதிரையுடைய இளஞாயிறு விசும்பிலே பரவா நிற்க, விடியற்காலத்தே இதழ்கண் முறுக்குண்ட தலைகள் அம்முறுக்கு நெகிழ்ந்த செவ்விப்பூவிடத்துக், கள்ளை வண்டு நுகர்ந்து விளையாடி, அதனானும் அமையாது பின்னும் நுகர்தற்கு அவ்விடத்தைச் சூழ்ந்து திரியும் அச்செல்வமிக்க பொய்கையுட், பசிய இலைகளுடனின்ற தாமரைத்தனிமலர், தனக்கு வருத்தஞ் செய்யும் பனி ஒரு கூற்றிலே வடியாநிற்கத், தான் மிகச்செவ்வியின்றி அலருந் துறையினையுடைய ஊர என்றவாறு.

---

2. உவமிக்கப்படும் பொருள் வருவிக்கப்படுவதாயும் நிற்பது எனக்கொள்க.

3. "அகத்திணை யுணர்தற்குக் கருவியாகிய உள்ளுறை யுவமம் போல" என்பது தேவையில்லாதது.

4. உவமையும் பொருளுமாய் வெளிப்படையில் நிற்கும் என்பது கருத்து. அதனால் திணையும் வெளிப்படையாம். உள்ளுறையின்பாற்படாது.

இதனுள் வைகறைக்காலத்து மனைவயிற் செல்லாது, இளைய செவ்வியையுடைய பரத்தையரைப் புணர்ந்து விளையாடி, அதனானும் அமையாது, பின்னும் அவரைப் புணர்தற்குச்சூழ்ந்து திரிகின்ற இவ்வூரிடத்தே நின்னைப் பெறாது, சுற்றத்திடத்தேயிருந்து கண்ணீர் வாராநிற்க, நீ ஒருகால் அளித்தலிற், சிறிது செவ்வி பெற்றாளாயிருக்கும்படி வைத்த தலைவியைப் போலே, எம்மையும் வைக்கின்றாயென்று, காமக்கிழத்தி உள்ளுறையுவமங் கூறினாள். துனிமிகுதலாலே பெருக்கு மாறாது வீழ்கின்ற கண்ணீர் காமத்தீயாற் சுவறி அறுதலை உடைத்தாயொழுக, அவ்வருத்தத்தைக் கண்டு விரைந்து கணவன் அருளுதலிற் சிறிது மகிழ்பவள் முகம்போல என்ற ஏனையுவமந், தாமரைமலர் பனிவாரத் தளைவிடுமென்ற உள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து நின்றது.

இஃது,

"உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக்
கெடலரு மரபி னுள்ளுறை யைந்தே"
(தொ.பொ.பொருளியல்-48)

என்ற பொருளியற் சூத்திரத்திற் சிறப்பென்ற உள்ளுறை.* இவ்வேனையுவமம் உள்ளுறையுவமத்திற்குச் சிறப்புக் கொடுத்து உள்ளுறையுவமம் போலத் திணையுணர்தலைத் தள்ளாது நின்றவாறு காண்க.

இஃது

"இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியு
முவம மருங்கிற் றோன்று மென்ப."
(தொ-பொ-உவ-28)

---

* இது சிறப்பு என்ற உள்ளுறையாகாது. உள்ளுறை என்பது உவமம் மட்டும் நிற்கப் பொருள் வருவித்துரைக்கப்படுவது இவர் காட்டிய இதில் உவமமும் பொருளும் வெளிப்படையாகவே உள்ளன. இது பற்றிய விளக்கம் 'தொல்காப்பியர் கூறும் உள்ளுறையும் இறைச்சியும்' என்னும் நூலில் காண்க.

என உவமப் போலிக்குக் கூறுதலின் அவ்விரண்டுந்[1] தோன்றி நின்றது.

"ஏனோர்க் கெல்லா மிடம்வரை வின்றே."

(தொல்-பொ-உவ-27)

என்று உவமப்போலியிற்[2] கூறுதலாற் காமக்கிழத்தியும் உள்ளுறை யுவமங் கூறினாள்.

குறிஞ்சியிலும் மருதத்திலும் நெய்தலிலும் இவ்வாறு வரும் கலிகளும்,

"யானே ஈண்டை யேனே யென்னலனே
யேனல் காவலர் கவணொடு வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலி னிவக்கும்
கானக நாடனொ டாண்டொழிந் தன்றே."[3]

(குறுந்-54)

என்னும் இக் குறுந்தொகை போல வருவனவும் இச்சூத்திரத் தான் அமைக்க பேராசிரியரும் இப்பாட்டின் 'மீனெறி தூண்டி' லென்றதனை ஏனையுவமமென்றார்.

---

1. இனிதுறு இளவியும் துனியுறு கிளவியும் 'பாசடைத் தாமரைத் தனிமலர் தளைவிடும்' என்றது இனிதுறு கிளவி. 'துளிசிறந் திழிதரும் கண்ணின் நீர் அறல் வார' என்றது துனியுறு கிளவி.

2. உவமப்போலி—உள்ளுறையுவமம்.

3. கானவர் கவணுக்கு அஞ்சி யானை கைவிட்ட பசுங் கழை உயரச்சென்று நின்றது போலி யான் (தலைவி) தலைவனின் புகழுக்கும் பெருமைக்கும் இடையூறாக இருந்து அவனைப் போகாமல் தடைசெய்யின் எனக்கு வரும் இழிவுக்கு அஞ்சி இசைய அவன் நெடுந் தொலைவில் சென்றான் ஆனான்" என்பது இதில் உள்ள உள்ளுறை. இவ்வுள்ளுறைதரும் உவமத்துக்குச் சிறப்புக் கொடுத்து நிற்கும் ஏனை உவமம் மீன்எறி தூண்டினின் நிவக்கும் நிவப்பு.

இனித் தள்ளாதென்றதனானே, "பா அலஞ்செவி" என்னும் பாலைக்கலியுட் (4) டாழிசை மூன்றும் ஏனையுவமமாய் நின்று கருப்பொருளொடு கூடிச் சிறப்பியாது தானே திணைப்பொருள் தோன்றுவித்து நிற்பன போல்வனவும், "கரை சேர் வேழங் கரும்பிற் பூக்குந் துறைகே ழூரன்" (ஐங்குறு-12) என்றார் போலக் கருப்பொருள் தானே உவமமாய் நின்று உள்ளுறைப்பொருள் தருவனவும், பிறவும் வேறுபட வருவனவும் இதனான் அமைக்க இது புறத்திற்கும் பொது[4] இதனான் உள்ளுறையுவமமும், ஏனையுவமமுமென உவமம் இரண்டேயென்பது கூறினார்.

பாரதியார்

45. உள்ளுறை........வகையே

கருத்து: இது, அகத்துறைச் செய்யுட்களில் வரும் உரிப்பொருள் எல்லாவற்றிற்கும் சிறப்பாக உரித்தாம் உவம வகை கூறுகிறது.

பொருள்: திணையுணர் வகையே-ஐந்திணை உணர்த்தும் உரிப்பொருட் பகுதிகளில்; உள்ளுறை உவமம் - உள்ளுறை உவமமானது; ஏனை உவமமெனத் தள்ளதாகும் - மற்றைய உவமத் தோற்றம்போல அருகாமல் வந்து பயிலும்:

குறிப்பு: ஈற்றேகாரம் பிரிநிலை, அகத்துறைகளுள் திணையுணர் வகையை வேறு பிரித்தலின்[1] அவ்வகையல்லாப் பிற அகப்பகுதிகளில் ஏனையுவமம் அருகாது என்பது குறிப்பு.

---

4. உள்ளுறையுவமம் புறத்துக்கு வாராது என்பதைத் 'தொல்காப்பியர் கூறும் உள்ளுறையும் இறைச்சியும்' என்னும் நூலில் காண்க.

1. இவர் திணையுணர்வகையே என்பதற்கு ஏகாரம் பிரிநிலைப்பொருள்தருமாறு உரைஎழுதவில்லை ஈற்றசைக் கேற்பவே எழுதியது காண்க. ஐந்திணையுள் அடங்கும் உரிப்பொருள் எனவும் அடங்கா உரிப்பொருள் இவர் பிரித்து உரை எழுதி வருதலினால் அவற்றுள் ஐந்திணையுள் அடங்கும் உரிப்பொருள்பற்றிய உள்ளுறை தள்ளப்படாது என்று பொருள் கொண்டு ஏனையுவமம் ஐந்திணையுள் சிறுபான்மை வரும்எனவும் ஐந்திணையுள் அடங்கா உரிப்பொருள்களில் பெரும் பான்மைவரும் எனவும் பிரித்துக் கூறுகின்றார்.

உவமம், வெளிப்படத் தோன்றும் உவமமும். உள்ளுறை உவமமுமென இருவகைத்தாம். இவற்றுள் உள்ளுறை உவமமே திணையுணரும் உரிப் பொருட் பகுதிகளைச் சிறப்பித்தற்கு உரித்தாகும். ஏனைய உவமம் அவ்வாறு அகவொழுக்க வகை களுக்குச் சிறவாதாகையால், அகத்துறைகளில் திணையுணரும் பகுதிகளுக்கு அத்துணையா ஆட்சி பெறுதலில்லை 'தள்ளா தாகும்'' என்றதனால், ஏனைஉவமம் அருகிப் பயிலும் என்பதும், உள்ளுறை உவமம் அவ்வாறன்றிப் பெருவரவிற்றாம் என்பதும் பெறப்படும்.

உள்ளுறை உவமத்தின் ஒரு பகுதியா யடங்கு மேனும், புறத்திற்கே பெரிதும் உரிமை கொள்ளும் ஏனை உவமம் போலாது அகத்திற்கே சிறந்துரிய தாதலின், இது உவம இயலிற் கூறப்பெறாது அகவொழுக்கம் கூறும் இத்திணையிற் கூறப்பட்டது. ஏனை உவமத்தை 'அகத்திணைக்குரித்தல்லாதது' எனஏனை உவமச்சூத்திரத்தின் கீழ் விரிவுரையில் நச்சினார்க் கினியர் கூறுவர். சான்றோர் செய்யுட்களில் அருகிய ஆட்சி அகத்திணையிலும் 'ஏனை உவமம்' பெறுதலின், அதனை அறவே அகத்திணைக்கு உரித்தில்லை என விலக்குதல் பொருந்தாது. இன்னும் இளம்பூரணர் உள்ளுறை உவமம் ஒழிந்த உவமம் எனஇரு வகையாலும் 'திணையுணர்வகை தப்பாதாகும் எனக் கூறுவதாலும், ஏனை உவமத்திற்கு அருகி யேனும் அகத்திணைக்கண் ஆட்சி உண்மை தெளியப்படும்.

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் உள்ளுறைவமமே திணையுணர்த்தும் ஏனை யுவமம் உணர்த்தாது என்பது கூறுகின்றது.

(இ-ள்) உள்ளுறையுவமமானது திணையுணர்த்தும் கூறு பாட்டை ஏனையுவமம் உணர்த்தாதது போலத்தான் தள்ளாது உணர்த்தும் என்றவாறு.

இதனாற் சொல்லியது உள்ளுறை உவமமே உரிப்பொருளை உணர்த்தும் என்பதும் ஏனை உவமம் உரிப்பொருளைக் கொள்ளும் தொடர்பின்றி வரும் என்பதும் ஆம்.

பாரதியார் கூறுவது பொருந்தாது ஏனை உவமம் எல்லா விடங்களிலும் அகத்தும் புறத்தும் வரையறையின்றிப் பயின்று வரும்.

பொருளைக் குறிப்பிற்காட்டுவது உள்ளுறை. பொருளும் வெளிப்படையாக அமைய வருவது ஏனையுவமம். ஏனையுவமத் திற் காணப்படும் வெளிப்படைப் பொருளே திணையுணர்த்து மாதலின் உவமம் திணையுணர்த்தத் தேவையில்லை.

**50. உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலமெனக்[1]**
**கொள்ளும் என்ப குறியறிந் தோரே[2] (50)**

ஆ. மொ. இல.

'Ullurai' will have all 'Karupporuls' except God as the place of its origin-so say the scholars well-versed in science of literature.

பி.இ.நா.

அடுத்த சூத்திரத்துக் காண்க.

## இளம்பூரணர்

**50. உள்ளுறை தெய்வம்.........தோரே.**

இஃது உள்ளுறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை-உள்ளுறையாவது கருப்பொருட்டெய்வம் ஒழிந்த பொருளை, நிலம் என கொள்ளும் என்ப குறி அறிந்தோர் - இடமாகக் கொண்டுவரும் என்று சொல்லுவர் இலக்கணம் அறிந்தோர். (50)
குறி – இலக்கணம்.

## நச்சினார்க்கினியர்

**47. உள்ளுறை......உணர்ந்தோரே.**

இது முறையே உள்ளுறையுவமங் கூறுகின்றது.

(இ-ள்) உள்ளுறை - உள்ளுறை யெனப்பட்ட உவமம்; தெய்வம் ஒழிந்ததை நிலன் எனக் கொள்ளும் என்ப-தெய்வ முதலிய கருப்பொருளுட் டெய்வத்தை ஒழித்து ஒழிந்தக் கருப் பொருள்களே தனக்குத் தோன்றும் நிலனாகக் கொண்டு புலப்படு

---

1. நிலனெனக்— நச். பாடம்

2. குறியுணர்ந்தோரே—பாடம்

மென்று கூறுப; குறி அறிந்தோரே - இலக்கணம் அறிந்தோர் என்றவாறு.

எனவே, உணவு முதலிய பற்றிய அப்பொருணிகழ்ச்சி பிறிதொன்றற்கு உவமையாகச் செய்தல் உள்ளுறையுவமமாயிற்று

''ஒன்றே னல்லே னொன்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்றுகொய் மலரு நாடனொ
டொன்றேன் றோழிமற் றென்றி னானே.''
(குறுந்-208)

இக் குறுந்தொகை பிறிந்தொன்றின் பொருட்டுப் பொருகின்ற யானையான் மிதிப்புண்ட வேங்கை நசையற உணங்காது. மலர் கொய்வார்க்கு எளிதாகி நின்று பூக்கும் நாடனென்றதனானே தலைவன் நுகருங் காரணத்தானன்றி வந்து எதிர்ப்பட்டுப் புணர்ந்து நீங்குவான் நம்மை இறந்துபாடு செய்வியாது ஆற்று வித்துப் போயினானெனவும், அதனானே நாமும் உயிர்தாங்கி யிருந்து பலரானாலும் அலைப்புண்ணா நின்றனம் வேங்கை மரம் போல எனவும், உள்ளத்தான் உவமங்கொள்ள வைத்தவாறு காண்க.

ஒழிந்தனவும் வந்துழிக் காண்க.

இனி அஃது உள்ளத்தான் உய்த்துணர வேண்டுமென மேற்கூறுகின்றார்.

பாரதியார்

46. உள்ளுறை ........உணர்ந்தோரே.

கருத்து : இது, உள்ளுறை உவமத்திற்கு நிலைக்களம் உணர்த்துகிறது.

பொருள் : உள்ளுறை-அகத்திணையிற் பயிலும் உள்ளுறை உவமம்; தெய்வம் ஒழிந்ததை நிலனெனக் கொள்ளும் - கருப் பொருள்களுள் தெய்வம் நீக்கி மற்றையவற்றைத் தனக்கு நிலைக் களனாகத் தழுவிவரும்; என்பகுயறிந்தோரே-என்று கூறுவர் ஒப்பியலறிந்தோர்.

குறிப்பு : ஈற்றேகாரம் அசை. ஒப்பியலறிந்தோர் என்னு மெழுவாய் கூறுவர் என்னும் வினைக்கேற்ப அவாய் நிலையாற் பெறப்பட்டது.

**51. உள்ளுறுத்து இதனொடு ஒத்துப் பொருள் முடிகஎன**
**உள்ளுறுத்து இறுவதை[1] உள்ளுறை உவமம் (51)**

ஆ. மொ. இல.

'Ullurai Uvamam' is that which is understood by inference from the simile given in the text.

பி. இ. நா.

**நம்பி. 238, இல. வி. அ. 214.**

அவற்றுள்
உள்ளுறை யுவமம் உய்த்துணர் வகைத்தாய்ப்
புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்.

**மாறன் அக. 123**

உணர்வதற் கரிதாம் உவமப் போலி
புணர்திறம் வினையே பொருள்மெய் உருவெனப்
பிறப்பொடும் ஐந்தாம் பெற்றித் தாகி
சிறப்புறு திணைகளின் தெய்வதம் ஒழிந்த
கருப் பொருள்களனாக் கட்டுரை பயின்று
உவமையோ டெதிருள் ளுறுத்தலுற் றயலாம்
உவமச் சொல்தொக ஒருதலை ஆகியும்
அன்பின தளவாம் அகத்திணை இருவயின்
இன்பதுன் பத்திசை திரிந்து இசையாத்
துணைவன் துணைவி தோழி செவிலி
இணைபெறும் பாங்கன் பாணன்என் றிவரால்
சொல்வகை பின்வருஉம் குறிப்புடைத் தாகும்

இளம்பூரணர்

51. உள்ளுறுத்து இதனொடு........உவமம்

இஃது உள்ளுறை உவமம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. உரைப்பதே—இளம்-பாடம்

(இ-ள்) உள்ளுறுத்து பொருள் இதனொடு ஒத்து முடிக என—(உள்ளுறுத்தப்பட்ட கருப்பொருளை) உள்ளுறுத்துக் கருதிய பொருள் இதனொடு ஒத்து முடிக என' உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்—உள்ளுறுத்துக் கூறுவதே உள்ளுறை உவமம்.

எனவே உவமையாற் கொள்ளும் வினைபயன் மெய் உருவன்றிப் பொருளுவமையாற் கொள்ளப்படுவது.

''வெறிகொள் இனச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்
குறைபடுதேன் வேட்டுங் குறுகும்—நிறைமதுச் சேர்ந்து
உண்டாடுந் தன்முகத்தே செல்வி உடையதோர்
வண்தா மரைபிரிந்த வண்டு.''

இது வண்டோரனையர் மாந்தர் எனக் கூறுதலான் உவமிக்கப்படும் பொருள் புலப்படாமையின் உள்ளுறையுவம மாயிற்று[1]. இதனுட் காவியும் தாமரையும் கூறுதலான் மருத மாயிற்று. (51)

## நச்சினார்க்கினியர்

48. உள்ளுறுத்து...........உவமம்.

இதுவும் அங்ஙனம் பிறந்த உள்ளுறையுவமத்தினைப் பொருட்கு உபகாரம்பட உவமங்கொள்ளுமாறு கூறுகின்றது.

---

1. தன்னிடத்தழகுடைய தண்ணிய தாமரையை அதனிடத் துள்ள நிறையும் தேனே உண்டு மகிழ்ந்த வண்டு வேற்று வண்டுக் கூட்டம் நீலமலரிற் படிந்தும் தேனுண்டு செல்ல அதனால் குறைந்த தேன்சுவையை விரும்பி அந்நீல மலரைச் சேரும் என்பது செய்யுட் பொருள். இதுவே உவமையாக அமைய இதன் உள்ளுறை பொருளாக, ''குறையாத அழகிய தலைவியின் பால் நலனுண்டு பிரிந்த தலைவன் பலராலும் விரும்பித் துய்க்கப்பட்ட நலன் குறைந்த பரத்தையின் நலனை விரும்பி அங்குச் செல்வான் ஆனான்'' என்பது அமைந்துளது. அணி நூலார் இதனை ஒட்டணி என்பர். இதில் உள்ள கருப்பொருள்கள் வண்டு, இன வண்டுகள் தாமரை, நீலம் என்பன.

(இ-ள்) இதனொடு ஒத்துப் பொருள் முடிகென உள்ளுறுத்து-யான் புலப்படக் கூறுகின்ற இவ்வுவமத்தோடே புலப்படக் கூறாத உவமிக்கப்படும் பொருள் ஒத்து முடிவதாகவென்று புலவன் தன் உள்ளத்தே கருதி ; உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை உவமம்—தான் அங்ஙனங் கருதும் மாத்திரையே யன்றியுங் கேட்டோர் மனத்தின் கண்ணும் அவ்வாறே நிகழ்த்துவித்து அங்ஙனம் உணர்த்துவதற்கு உறுப்பாகிய சொல்லெல்லாம் நிறையக்கொண்டு முடிவது உள்ளுறையுவமம் என்றவாறு.

இதனானே புலவன் தான் கருதியது கூறாதவழியுங் கேட்டோர் இவன் கருதிய பொருள் ஈதென்றாராய்ந்து கோடற்குக் கருவியாகிய சிலசொற் கிடப்பச் செய்தல் வேண்டுமென்பது கருத்தாயிற்று.

அது,

"வீங்குநீ ரவிழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட
ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்
டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்ற
மாங்கவை விடுந்தாற்றப் பகலல்கிக் கங்குலான்
வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்
தேங்கமழ் கதுப்பினு ளரும்பவிழ் நறுமுல்லை
பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதா மரீஇய
பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர!"
(கலி-66)

இதனுள், வீங்குநீர் பரந்தையர் சேரியாகவும், அதன்கண் அவிழ்ந்த நீலப்பூக் காமச்செல்வி நிகழும் பரத்தையராகவும் பகர்பவர் பரத்தையரைத் தேரேற்றிக் கொண்டுவரும் பாணன் முதலிய வாயில்களாகவும், அம்மலரைச் சூழ்ந்த வண்டு தலைவனாகவும் யானையின் கடாத்தை ஆண்டுறைந்த வண்டுகள் வந்தவண்டுக்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப் பரத்தையற் தமது நலத்தை அத்தலைவனை நுகர்வித்தலாகவும், கங்குலின் வண்டு முல்லையை ஊதுதல் இற்பரத்தையருடன் இரவு துயிலுறுதலாகவும், பண்டு மருவிய பொய்கையை மறத்தல் தலைவியை மறுத்தலாகவும், பொருள் தந்து ஆண்டுப் புலப்படக் கூறிய கருப்பொருள்கள் புலப்படக் கூறாத மருதத்திணைப் பொருட்கு உவமமாய்க் கேட்டோனுள்ளத்தே விளக்கி நின்றவாறு காண்க.

பிறவும் இவ்வாறு வருவன வெல்லாம் இதனான் அமைக்க. இங்ஙனங் கோடலருமை நோக்கித் 'துணிவொடு வரூஉந் துணிவினோர் கொளினே' (தொல்-பொ-உவ-23) என்றார்.

பாரதியார்

47. உள்ளுறுத்து .......உவமம்

கருத்து : இது, உள்ளுறை வுமமத்தின் இயல்பு கூறு கின்றது.

பொருள் ;- உள்ளுறுத்திதனோடு ஒத்துப் பொருள் முடிகென—வெளிப்படக் கூறும் பொருளோடு, உள்ளும் பொருளும் ஒத்து முடியுமாறு; உள்ளுறுத்திறுவதை உள்ளுறை உவமம்- உள்ளத்து ஊன்றி நுணுகி உணர அமைந்து முடிவது உள்ளுறை உவமமாகும்.

குறிப்பு:- இறுவதை என்பது, ஏற்றை என்பதுபோல, ஐயீறு பெற்று முடிந்த பெயர்.

''எற்றோ வாழி, தோழி! முற்றுபு
கறிவளர் அடுக்கத்து இரவின் முழங்கிய
மங்குன் மாமழை வீழ்ந்தெனப் பொங்குமயிர்க்
கலைதொட விழுக்கிய பூநாறு பலவுக்கனி
வரையிழி யருவு உண்டுறை தரூஉம்
குன்ற நாடன் கேண்மை
மென்தோள் சாய்த்தும் சால்பீன் றன்றே.''

(குறுந்-90)

மிளகுக்கொடி வளரும் மலையில், இரவில், இடிமுழங்கும் கார்தரு மழையில், உயிர் நிறைந்த முகக்கடுவன் விரும்ப அதன் கையகப்படாது கிளையினின்று நழுவிய மணமுள்ள பலாக்கனியை மலையருவி தக்கார் உண்ணத் தகுந்த துறையில் கொண்டு தரும் குன்ற நாடன் கேண்மை மெல்லிய தோளைச் சிறிது வருத்தினும் அமைதியை அளித்தது' என்றது வெளிப் படக் கூறும் பொருள். இதில், செல்வம் நிறைந்த அயலார் தலைவியை விரும்பி வந்தோர் வரைய வொண்ணாமல் ஊரலரை அஞ்சிச் செறித்த தலைவியைக் காவல் நிறைந்த இற் புறத்தில் இரவில் தோழி கொண்டுதர, தலைவன் உடன்

கொண்டு சென்று, அவளைத் தன் மனையில் கற்பறம் சிறக்கத் காதலால் மணந்து நன்மையைத் தந்தான் என்பது உள்ளுறுத்து ஒத்து முடிவதால். இது உள்ளுறை உவமமாமாறு காண்க.

**52 ஏனை உவமம் தான் உணர் வகைத்தே (52)**

ஆ. மொ. இல.

The other 'Uvamam' is easily understood.

பி. இ. நூ.

**நம்பி. 239, இல. வி. அ. 215**

வெளிப்படை யுவமம் வினைபயன் மெய்யுரு
வெளிப்பட நின்று விளங்குவ தாகும்.

## இளம்பூரணர்

**52. ஏனை உவமம்....... வகைத்தே**

இஃது ஏனை உவமம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஏனை உவமம்தான் உணர்வகைத்து உள்ளுறை-யொழிந்த உவமம்தான் உணரும் வகையான் வரும்.

தான் உணரும் வகையாவது, வண்ணத்தானாதல் வடிவானாதல் பயனானாதல் தொழிலானாதல் உவமிக்கப்படும் பொருளொடு எடுத்துக் கூறுதல் [ஏகாரம் ஈற்றசை]

அது வருமாறு உவமவியலுட் கூறப்படும்
இதனால் திணை உணருமாறு ;

''வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழில்
முளைநிரை முறுவல் ஒருத்தியொடு நெருநல்
குறிநீ செய்தனை யென்ப அலரே
குரவ நீள்சினை உறையும்
பருவ மாக்குயிற் கௌவையிற் பெரிதே.''

(ஐங்குறு-369)

இஃது ஊடற் பொருண்மைத்தேனும், வேனிற்காலத்து நிகழும் குயிற்குரலை உவமித்தலிற் பாலைத் திணையாயிற்று. மரவம்-குராமரம்.

"உரைத்திசிற் றோழியது புரைத்தோ அன்றே
துருக்கங் கமழும் மென்தோள்
துறப்ப என்றி இறீஇயர்என் உயிரே." [சிற்றட்டகம்]

இது துருக்கம் என உவமை கூறுதலாற் குறிஞ்சியாயிற்று.*

(52)

## நச்சினார்க்கினியர்

### 47. ஏனை......வகைத்தே.

இஃது ஒழிந்த உவமங் கூறுகின்றது.

(இ-ள்) ஒழிந்த உவமம் உள்ளத்தான் உணரவேண்டாது சொல்லிய சொற்றொடரே பற்றுக் கோடாகத் தானே உணர நிற்குங் கூறுபாட்டிற்கு என்றவாறு.

பவளம்போலும் வாய் என்றவழிப் பவளமே கூறிவாய் கூறாவிடின் உள்ளுறையுவமமாம். அவ்வாறின்றி உவமிக்கப்படும் பொருளாகிய வாயினையும் புலப்படக் கூறலின் ஏனையுவமமாயிற்று. அகத்திணைக்கு உரித்தல்லாத இதனையும் உடன் கூறினார். உவமம் இரண்டல்லதில்லையென வரையறுத்தற்கும் இதுதான் உள்ளுறை தழீஇ[1] அகத்திணைக்குப் பயம்பட்டு வருமென்றற்கும்.

## பாரதியார்

### 46. ஏனை... .....வகைத்தே

கருத்து : இஃது உள்ளுறை ஒழிந்த மற்றைய உவமத் தோற்றம் உணர்த்துகிறது.

---

* இளம்பூரணர் உரை பொருந்தாது ஏனை உவமமும் திணையுணர்த்தும் என்பதும் அதற்குக் காட்டும் உதாரணங்களும் பொருந்தா. குயில் கூவுதல் தொழிலும் துருக்கம் கமழ்தல் தொழிலும் காரணமாக அன்றிக் குயில் துருக்கம் என்னும் கருப்பொருள்களாலேயே திணையுணரப்படும்.

1. உள்ளுறைதழீஇ—உள்ளுறைக்குச் சிறப்புக் கொடுத்து

பொருள் : ஏனை உவமம் - உள்ளுறை ஒழிந்த பிறஉவமம்; தானுணர் வகைத்தே-நுணுகி உள்ளுறுத்துணர வேண்டாது. பட்டாங்கே சொல்வழிப் பொருளறியக் கிடக்கும் கூறுபாட்டை யுடைத்து.

குறிப்பு : அகத்திணைக்குச் சிறந்துரிய உள்ளுறையைக் கூறியபின், ஒப்பக்கூறல் ஒன்றென முடித்தல் தன்னின முடித்தல் என்னும்முறை பற்றி, உள்ளுறுத்துணரும் உள்ளுறை உவமம் போலாது பட்டாங்குணரும் பான்மைத்தாம் "ஏனை உவம" இயலும் உடன் கூறப்பட்டது. திணையுணர்வகை யல்லாப் பிற அகப்பகுதிகளிளெல்லாம் ஏனையுவமமும் ஒத்த வழக்குரிமை கொள்ளுதலின், அதுவுமிங்கமைய விளக்கப்பட்டது.

இனி, உருவகத்தை உள்ளுறை உவமமென மயங்கவைக்கும் நச்சினார்க்கினியர் சிறப்புரை பொருந்தாமையுமறிக. (48)

## சிவலிங்கனார்

"ஏனையுவமம் என்பது உள்ளுறுத்து இதனோடு ஒத்துப் பொருள் முடிக எனப்புலவரான் கூறப்படாது படிப்போர்க்குத் தானே வெளிப்படையாக உணரும்படிப் பொருளையும் கூட்டிமுடிக்கும் தன்மையதாகும்" என இச்சூத்திரத்துக்குப் பொருள் கொள்க.

**53. காமம் சாலா இளமையோள் வயின் ஏமம் சாலா இடும்பை எய்தி நன்மையும் தீமையும் என்றிருதிறத் தான் தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்து சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல் புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே. (53)**

## ஆ. மொ. இல.

Unreciprocated love occurs in the act of having pleasure in addressing young girl who is not matured for enjoyment, he being possessed of agoney of love, having attributing good and evil to himself to her without having any reply from her.

பி. இ. நா.

**நம்பி 241, 242**

காமஞ் சாலா இளமை யோள்வயின்
குறிப்பறி வுறாது குறுகியாங் கவளொடு
இறப்பக் கூறுவது அகப்புறக் கைக்கிளை
அதுவே,
இறைமை இல்லோர்க்கும் இழிகுலத்தோர்க்கும்
முறைமையின் உரித்தே முன்னுங் காலை

**இல.வி.அ 217** தொல்காப்பியச் சூத்திரமே.

இளம்பூரணர்

**53. காமஞ் சாலா இளமை..........குறிப்பே.**

மேல் நடுவணைந் திணைக்குரிய பொருண்மையெல்லாம் கூறினார். இது கைக்கிளையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) காமம் சாலா இளமையோள்வயின் — காமம் அமையாத இளையாள் மாட்டு, ஏமம் சாலா இடும்பை எய்தி— ஏமம் அமையாத இடும்பை எய்தி, நன்மையும் தீமையும் என்று இரு திறத்தான்—புகழ்தலும் பழித்தலுமாகிய இருதிறத்தால், தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்து—தனக்கும் அவட்கும் ஒத்தன புணர்த்து, சொல் எதிர்பெறான் சொல்லி இன்புறல்-சொல் எதிர் பெறானாய்த் தானே சொல்லி இன்புறுதல் புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பு- பொருந்தித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பு.

'பொருந்தித் தோன்றும்' என்றதனால் அகத்தொடு பொருந்துதல் கொள்க. என்னை? 'காமஞ் சாலா' என்றதனால் தலைமைக்குக் குற்றம் வாராதாயிற்று. 'புல்லித் தோன்றும்' என்ற தனால் புல்லாமற்றோன்றும் கைக்கிளையும் கொள்ளப்படும். கொள்ளப்படும். அஃதாவது காமஞ்சான்ற தலைமகள் மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி. அது களவியலுள் கூறப்படுகின்றது[1] ['என்று' என்பது எண்ணிடைச் சொல். ஏகாரம் ஈற்றசை]

---

1. களவியலிற் கூறப்படும் இயற்கைப் புணர்ச்சி முன் நிகழும் காட்சி ஐயம் தெளிவு என்பன புல்லாமைக்குக் காரணம் அங்கே சொல்லும் சொல்லியின்புறலும் இல்லாமையே.

காமம் சாலா இளமையோள்வயின் கூறியதற்குச் செய்யுள் :

ஊர்க்கால் நிவந்த பொதும்பருள் நீர்க்கால்
கொழுநிழல் ஞாழல் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவல்மிசைத் தாதொடு தாழ அகல்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்து
ஈங்கே வருவாள் இவள் யார்கொல் ஆங்கேஓர்
வல்லவன் தைஇய பாவைகொல் நல்லார்
உறுப்பெலாங் கொண்டியற்றி யாள்கொல் வெறுப்பினால்
வேண்டுருவம் கொண்டதோர் கூற்றம்கொல் ஆண்டார்
கடிதிவளைக் காவார் விடுதல் கொடியியற்
பல்கலைச் சில்பூங் கலிங்கத்தாள் ஈங்கிதோர்
நல்கூர்ந்தோர் செல்வ மகள்;
இவளைச் சொல்லாடிக் காண்பென் தகைத்து;
நல்லாய் கேள்,
ஆய்தூவி அனமென அணிமயிற் பெடையெனத்
தூதுணம் புறவெனத் துதைந்தநின் எழில்நலம்
மாதர்கொள் மான்நோக்கின் மடநல்லாய் நிற்கண்டோர்ப்
பேதுறூஉம் என்பதை அறிதியோ அறியாயோ?

நுணங்கமைத் திரள்என நுண்இழை யணையென
முழங்குநீர்ப் புணையென அமைந்தநின் தடமென்றோள்
வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய் நிற்கண்டார்
அணங்காகு மென்பதை அறிதியோ அறியாயோ?

முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையெனப்
பெயல்துளி முகிழெனப் பெருத்தநின் இளமுலை
மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய் நிற்கண்டார்
உயிர்வாங்கு மென்பதை உணர்தியோ வுணராயோ?

என ஆங்கு,
பேதுற்றாய் போலப் பிறரெவ்வம் நீயறியாய்
யாதொன்றும் வாய்வாளாது இறந்தீவாய் கேளினி
நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதர விட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க என்னா
இறையே தவறுடை யான்.''

(கலித்-குறிஞ்-20)

## நச்சினார்க்கினியர்

### 50. காமம்.........குறிப்பே

இது முன்னர் அகத்திணை ஏழென நிறீஇ, அவற்றுள் நான்கற்கு நிலங்கூறிப் பாலையும் நான்கு நிலத்தும் வருமென்று கூறி' உரிப்பொருளல்லாக் கைக்கிளை பெருந்திணையும் அந் நிலத்து மயங்கும் மயக்கமுங் கூறிக் கருப்பொருட் பகுதியும் கூறிப், பின்னும் பாலைப் பொருளாகிய பிரிவெல்லாங் கூறி, அப்பகுதியாகிய கொண்டுதலைக் கழிவின்கட் கண்ட கூற்றுப் பகுதியும் அதனோடொத்த இலக்கணம் பற்றி முல்லை முதலிய வற்றிற்கு மரபுகூறி, எல்லாத்திணைக்கும் உவமம்பற்றிப்பொருள் அறியப்படுதலின் அவ்வுவமப் பகுதியுங் கூறி, இனிக்கைக்கிளை யும் பெருந்திணையும் இப்பெற்றிய வென்பார், இச்சூத்திரத்தானே கைக்கிளைக்குச் சிறந்த பொருள் இது வென்பது உணர்த்து கின்றார்.

(இ-ள்) காமம் சாலா இளமையோள் வயின் - காமக் குறிப்பிற்கு அமைதியில்லாத இளமைப்பிராயத்தாள் ஒருத்தி கண்ணே ; ஏமஞ்சாலா இடும்பை எய்தி - ஒரு தலைவன் இவள் எனக்கு மனக்கிழத்தியாக யான் கோடல் வேண்டுமெனக் கருதி மருந்து பிறிதில்லாப் பெருந்துய ரெய்தி ; நன்மையும் தீமையும் என்று இருதிறத்தால் தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்து — தனது நன்மையும் அவளது தீங்கையு மென்கிற இரண்டு கூற்றான் மிகப்பெருக்கிய சொற்களைத் தன்னோடும் அவளோடுங் கூட்டிச்சொல்லி ; சொல் எதிர் பெறாஅன் சொல்லி இன்புறல் அச்சொல்லுதற்கு எதிர்மொழி பெறாதே பின்னுந்தானே சொல்லி இன்புறுதல் புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே — பொருந்தித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பு என்றவாறு.

அவளுந் தமருந் தீங்குசெய்தாராக அவளோடு தீங்கைப் புணர்த்துந், தான் ஏதஞ் செய்யாது தீங்குபட்டானாகத் தன்னோடு நன்மையைப் புணர்த்தும் என நிரனிறையாக உரைக்க. இருதிறத்தாற் றருக்கிய எனக்கூட்டுக.

''வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோள்
பேரெழின் மலருண்கட் பிணையெழின் மானோக்கிற்
காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற்

கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரை நுசுப்பினாய்
நேர்சிலம் பரியார்ப்ப நிரைதொடி வீசினை
யாருயிர் வௌவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள் !
உளனாவென் னுயிரையுண் டுயவுநோய் கைம்மிக
விளமையா னுணராதாய் நின்றவ றில்லானுங்
களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய் ;
நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்
மடமையா னுணராதாய் நின்றவ றில்லானு
மிடைநில்லா தெய்க்குநின் னுருவறிந் தணிந்துதம்
உடைமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய் ;
அல்லல்கூர்ந் தழிபுக வணங்காகி யடருநோய்
சொல்லினு மறியாதாய் நின்றவ றில்லானு
மொல்லையே யுயிர்வௌவு முருவறிந் தணிந்துதஞ்
செல்வத்தாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய் ;

எனவாங்கு,
ஒறுப்பின்யா னொறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் புனையிழாய்
மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவென் போல்வல்யா னீபடு பழியே.” (கலி-58)

எனத் தான் உயிர்கொடுத்தானாகத் தனது நன்மைகூறி அவளது தீங்கெல்லாங் கூறுவான் மடலேறுவேன் போலுமென்று ஐயுற்றுக் கூறியவாறு காண்க. அவளைச் சொல்லுதலே தனக்கின்பமாதலிற் சொல்லி யின்புறலென்றார். இது புல்லித் தோன்றும் கைக்கிளையெனவே காமஞ்சான்ற இளமையோள்கண் நிகழுங் கைக்கிளை இத்துணைச் சிறப்பின்றாயிற்று.[1]

அஃது, “எல்லா விஃதொத்தன்” என்னுங் குறிஞ்சிக் கலியுள்,

“இவடந்தை,
காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள்
யாதுநீ வேண்டியது ;
பேதாஅய்,
பொருள் வேண்டும் புன்கண்மை யீண்டில்லை யாழ

1. காரணம் சொல்லி யின்புறல் இல்லை.

மருளின் மடநோக்கி நின்றோழி யென்னை
யருளியல் வேண்டுவல் யான்.'' (கலி-61)

எனவரும்.

இது கைசோளிரண்டினுங் கூறத்தகாத வாய்பாட்டாற்[1] கூறலிற் கைக்கிளையென்றார். குறிப்பென்றதனாற் சொல்லியின் புறுந் தலைவன்றன் குறிப்பின் நிகழ்ந்தது புறத்தார்க்குப் புலனாகாதென்பதூஉம் அகத்து நிகழ்ச்சி அறியும் மனைவியர்க் காயின் அது புலனாமென்பதூஉங் கொள்க. அது கிழவோன் பிறள் குணம்'' (தொல்-பொ-பொரு 40) என்னும் பொருளியற் சூத்திரத்து ஓதுதும்.

காமஞ் சாலா இளமையோள் வயினெனப் பொதுப்படக் கூறிய அதனால் வினைவல பாங்காயினார் கண்ணும் இவ்விதி கொள்க. இதனைக் ''காராரப் பெய்த கடிகொள் வியன்புலத்து என்னும் (9) முல்லைக்கலியான் உணர்க. (50)

பாரதியார்

49. காமம்..... ...குறிப்பே

கருத்து ; இது அகத்திணை எழனுள் மேல் நடுவணைந் திணைக்குரிய இயல்புகள் கூறியபின் எஞ்சி நின்ற இரண்டில் கைக்கிளை இயல்பை விளக்குகிறது.

பொருள் : காமஞ்சாலா இளமையோள் வயின்-காதற் செவ்விகனியும் பருவம் வராத சிறுமி ஒருத்தியிடம்; ஏமஞ்சாலா இடும்பை எய்தி-ஒரு தலைவன் தனக்கு மருந்தும் பிறிதில்லாப் பெருந்துயராம் காதனோய் கொண்டு; நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால் தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்து-பட்டாங்குப் புகழ்தலும் (ஆற்றாமையால்) பழிப்பது போலப் புகழ்தலுமாகிய இருவகையானும் தன்பாலும் அச்சிறுமி பாலும் வீறுபெறத் தக்கன சார்த்தி; சொல்லெதிர் பெறாஅன்

---

1. கூறத்தகாதவாய்பாடு; இளமையாண் உணராதாய்'. 'நுமர்தவறு இல் என்பாய்'. மடலேறிநிறுக்குவன்', 'இவள் தந்தை விடுப்பொருள் கொடுக்கும் யாதுநீ வேண்டியது', பொருள் வேண்டும் புன்கண்மையீன் டில்லை' என்பன போல்வன

சொல்லி இன்புறல்-மறுமாற்றம் பெறாத வழியும் தன்னுணர்ச்சி தானுரைத்து மகிழ்வது; புல்லித் தோன்றும் கைக்கிளைக்குறிப்பு-பொருந்தி வெளிப்படும் கைக்கிளைத் திணையின் குறிப்பாகும்.

குறிப்பு : 'கைக்கிளை' என்பது ஒருமருங்கு பற்றிய குற்றமற்ற காதலாகும் காமச்செவ்வி அறியாச்சிறுமியிடம் தலைமகனொரு வனுக்குத் தன்னலமறந்து 'அவள் பொருட்டே வாழ்வு' எனக் கொள்ளும் காதற் பெற்றி தோன்றுங்கால், அது கைக்கிளை எனப்படும். காதலுணரும் பருவமுற்றாள் தன்னைக் காதலியாத வழிதான் அவளைக் காதலிப்பதை, ஆடவனுக்கு 'நோந்திறப்' பெருந்திணையாகக் கொள்வதல்லது செந்திறக்காதல் வகை யாகப் பாராட்டுதல் பழந்தமிழ் மரபன்று. பருவமன்மையால் தன்னைக் காதலிக்க ஒல்லாத சிறுமியாயினும், அவள் தன் காதலுக்கு உரியாளாதலின் காதலன் எனைத்து வகையானும் அவள் தலம் பேணுவதும், தன் புரைதீர் காதலால் தன்னொடும் அவளொடும் 'கொள்ளாத கூறாமல்' பெருமை பேணும் பெற்றி யனவே சார்த்திக் கூற்று நிகழ்த்துவதும், தனக்கு அவள் தந்த காதல் நோய்க்கு ''அணியிழை (காமஞ் சாலாமையின்) தானே மருந்தாக', வொல்லாமையால் அவள் அதற்கேற்ற பெற்றி மறுமாற்றம் கூறவொண்ணாளாயினும், அவள்பால் தன்னுணர் வுரைத்து மகிழ்வதும், குற்றமற்ற கைக்கிளையின் குறிகளாகும் என்பது இச்சூத்திரத்தில் வற்புறுத்தப்படுகிறது.

அத்தகைய கைக்கிளையும் ஆடவர்க்கே அமைவதன்றி மகளிர்க்குக் கூறுவது மரபன்று. மகளிர்பால் ஒரு தலைக்காம வெளிப்பாடு அவர்தம் பெண்ணீர்மைக்குப் பொருந்திய பொற் புடை நெறியாகாமையின், அதனைக் கைக்கிளையின் பாற் படுத்தாமல் பெருந்திணையில் அடக்குவதே புலனெறி வழக்கில் பண்டையோர் கொண்ட தமிழ் மரபாம்.

கைக்கிளைத் தலைவனுக்கும் அவன் காமஞ்சாலாக் காதற் சிறுமிக்கும் வீறுதர வருவனவே அவன் கூற்றாம்; அல்லாதன அவன் வாய் பிறவா, என்பதை வற்புறுத்தற்குத் 'தருக்கிய புணர்த்து' என்றுரைக்கப்பட்டது. 'தருக்கிய சிறை' என்னும் கம்பர் சொற்றொடரும் வீறு தரும் தருக்கின் பெற்றியை வலியுறுத்தல் காண்க.

பண்டைத் தமிழ்ப் புலவர் கொண்ட தூய கைக்கிளையின் பெற்றியும் பெண்மைப் பண்பும் பாராட்டாது, பிற்காலத்தில் பிறர் பெருந்திணையின் பாற்படும் புரைபடுமிழிந்த ஒரு தலைக் காமத்தைப் பெண்பாற் கைக்கிளை எனக் கொள்வாரானார். தம் புதுக்கொள்கைக்குத் தொல்காப்பியர் நூலில் இடமின்மை கண்டு வைத்தும் "புல்லித் தோன்றும் கைக்கிளை" எனலாம் "புல்லாமல் தோன்றும் கைக்கிளையும் கொள்ளப்படும்; அது காமஞ்சான்ற தலைமகள் மாட்டு நிகழும்" எனவும், அது களவியலிற் கூறப்படுவது போலவும் பழைய உரைகாரர் கூறுவர். அவரைப் பின்பற்றி நாற்கவிராச நம்பியும் தன்னகப் பொருளில் 'காமஞ் சான்ற இளமையோள் வயின்' என்றே இலக்கணம் வகுத்துக் காமஞ்சாலா இளமையோள் பால் நிகழும் தலைவனின் தூய காதலைப் பாராட்டாதொழிந்தார்

காட்சி முதலியவற்றைக் கைக்கிளை எனக் கொள்ளாமல் காமக்குறிப்பாம் ஐந்திணை உரிப்பொருள்களின்பாற் படுத்தித் தொல்காப்பியர் இவ்வகத்திணையியலிலும் களவியலிலும் கூறுத லானும், களவு இருமருங்கொத்த அன்பினைந்திணையின்பாற் பட்டடங்குதலானும், அவற்றின் வேறுபட்ட பெருந்திணையைப் போலவே கைக்கிளையும் அவற்றுள் அடங்காத வேறு திணை யாய்ப் பிரித்துக் கூறப்படுதலானும், களவியலிற் கூறப்படும் எதுவும் அன்பின் ஐந்திணையன்றிக் கைக்கிளைத் திணை ஆகாமை ஒருதலை. இச்சூத்திரத்திற் கூறப்படும் கைக்கிளை குற்றமற்ற பெற்றியதாதலின், பொருந்தாக் காமமாகிய பெருந் திணை போலாது கைக்கிளை பொருந்தும் தூய காதலாம் எனற்கே "புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே" இந்நூலார் விளங்க வைத்தார். (புல்லுதல்-பொருந்துதல்-தழுவு தலுமாம்)

"வாருறு வணரைம்பால்" என்னும் குறிஞ்சிக் கலியுள்" (58)

"உளனாஎன் உயிரைஉண் டுயவுநோய் கைம்மிக
இளமையா னுணராதாய் நின்தவ றில்லானும்
களைநரின் நோய்செயும் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்." (1)

"நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் நலியுநோய்
மடைமையான் உணராதாய் நின்தவ றில்லானும்
இடைநில்லா தெய்க்குநின் உருவறிந் தணிந்துதம்

உடைமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்." (2)

"அல்லல்கூர்ந் தழிவுற அணங்காகி அடருநோய்
சொல்லினு மறியாதாய் நின்தவ றில்லானும்
ஒல்லையே உயிர்வவ்வும் உருவறிந் தணிந்துதம்
செல்வத்தாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்." (3)

என வந்தமை காண்க. இத்தாழிசைகளுள், (1) தலைவன் தன்னை நலியும் காமநோயை 'இளமையா னுணராதாய் 'மடமையா னுணராதாய்', சொல்லினு மறியாதாய்' எனக் கூறுதலால், அவள் காமஞ் சாலா இளமையோள் என்பது அறியப் படும். (2) 'களைநரின் நோய் செயும் கவின்' எனவும், 'இடை நில்லா தெய்க்கு நின் உரு' எனவும், 'ஒல்லையே உயிர் வவ்வும் உரு' எனவும் அவளைப் புகழ்வதாலும் இக்கலியுள் சுரிதகத்தில் 'மற்றிந் நோய் பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயின், பொலங்குழாய் மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி நிறுக்குவன் போல்வல்யான்' 'நீ படுபழியே' எனப்பழிப்பதுபோல அவள் பெருமை கூறுதலாலும் நன்மையும் தீமையும் என்றிரு திறத்தாலும் தன்னொடும் அவளொடும் தலைவன் தருக்கிய புணர்த்துக் கூறுதல் காண்க. (3) இளையோள் தனக்கு மறுமாற்றம் கூறா வழியும். "நுமர்தவறில் லென்பாய்" என விளித்து அவளிடம் சொல்லெதிர் பெறாத் தலைவன் தானே சொல்லி இன்புறுதல் காண்க. (49)

54. ஏறிய மடல்திறம் இளமைதீர் திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇ
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே. (54)

ஆ. மொ. இல.

The aspects of 'Perunthinai' are four which are the act of having ridden the horse made of Palmyrastems failing in love with the aged who last youth, the last in excess which cannot be satisfied by methods of violence in securing the lady-love.

பு. இ. நா.

**நம்பி 243, 244**

"அகன்றுழிக் கலங்கல்", "மடலேறுதலொடு" என்னும் இவ்விரு சூத்திரங்களில் கூறப்படுவனவற்றுள் 'மடலேறுதல்' என்பது தவிர மற்றையன தொல்காப்பியத்துக்கு மாறுபட்டன.

**இல. வி. அ. 219** தொல்காப்பியச் சூத்திரமே.

இளம்பூரணர்

**54. ஏறிய மடல்திறம்..... குறிப்பே**

இது பெருந்திணை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஏறிய மடல் திறம் - ஏறிய மடற்றிறமும் இளமை தீர்திறம்-இளமை தீர்திறமும், தேறுதல் ஒழிந்த காமத்து மிகு திறம்-தேறுதலொழிந்த காமத்து மிடலொடு தொகைஇ - மிக்க காமத்து மிடலொடு தொகைஇ- மிக்க காமத்து மாறாய திற னொடு கூட்டி, செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பு - சொல்லப்பட்ட நான்கு திறமும் பெருந்திணைக் கருத்து.

கைக்கிளை புணராது நிகழும் என்றமையால், இது புணர்ந்த பின் நிகழும் என்று கொள்க. ஏறிய மடற்றிறம் தலை மகற்கே உரித்து. அது வருமாறு:

"எழின்மருப் பெழில்வேழ மிகுதரு கடாத்தால்
தொழின் மாறித் தலைவைத்த தோட்டிகை நிமிர்ந்தாங்கு
அறிவுநம் அறிவாய்ந்த அடக்கமும் நாணொடு
வறிதாகப் பிறரென்னை நகுபவும் நகுபுடன்
மின்னவிர் நுடக்கமுங் கனவும்போல் மெய்காட்டி
என்னெஞ்சம் என்னொடு நில்லாமை நனிவௌவித்
தன்னலங் கரந்தாளைத் தலைப்படுமா றெவன்கொலோ
மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை
அணிப்பூளை ஆவிரை யெருக்கொடு பிணித்தியாத்து
மல்லலூர் மறுகின்கண் இவட்பாடு மிஃதொத்தன்
எல்லீருங் கேட்டீமின் என்று;

படரும் பனையீன்ற மாவுஞ் சுடரிழை
நல்கியாள் நல்கி யாவை;

பொறையென் வரைத்தன்றிப் பூநுதல் ஈத்த
நிறைஅழி காமநோய் நீந்தி அறையுற்ற
உப்பியல் பாவை உறையுற் றதுபோல
உக்கு விடும்என் உயிர்;

பூளை பொலமலர் ஆவிரை வேய்வென்ற
தோளாள் எமக்கீத்த பூ;
உரித்தென் வரைத்தன்றி ஒள்ளிழை தந்த
பரிசழி பைதல்நோய் மூழ்கி எரிபரந்த
நெய்யுண் மெழுகின நிலையாது பைபயத்
தேயும் அளித்தென் னுயிர்;

இளையாரும் ஏதி லவரும்; உளையயான்
உற்ற துசாவுந் துணை;

என்றியான் பாடக் கேட்டு
அன்புறு கிளவியாள் அருளிவந் தளித்தலின்
துன்பத்தில் துணையாய மடல்இனி இவட்பெற
இன்பத்துள் இடம்படலென் றிரங்கினள் அன்புற்று
அடங்கருந் தோற்றத்து அருந்தவ முயன்றோர்தம்
உடம்பொழித்து உயருல கினிதுபெற் றாங்கே.''

(கலி-நெய்-21)

இளமை தீர்திறமாவது; இளமை நீங்கிய திறத்தின்கண் நிகழ்வது, அது மூவகைப்படும்: தலைமகன் முதியனாகித்தலைமகள் இளையளாதலும், தலைமகள் முதியளாகித் தலைமகள் இளையனாதலும், இவ்விரு வரும் இளமைப் பருவம் நீங்கியவழி அறத்தின்மேல் மனம் நிகழ்தலன்றிக் காமத்தின்மேல் மனம் நிகழ்தலும் என.

''உளைத்தவர் கூறும் உரையெல்லாம் நிற்க
முளைத்த முறுவலார்க் கெல்லாம் - விளைத்த
பழங்கள் அனைத்தாய்ப் படுகளி செய்யும்
முழங்கு புனலூரன் மூப்பு.''[1]

(புறப்-இருபாற்பெருந்திணை-14)

---

1. புனலூரன்மூப்பு முறுவலார்க்குக்களிசெய்யும்' என்பதில் புனலூரன்மூப்பு என்றது தலைவன் இளமைதீர்திறம்.

இதனுள் தலைமகன் இளமை தீர்திறம் வந்தவாறு காண்க.

"அரும்பிற்கு முண்டோ அலரது நாற்றம்
பெருந்தோள் விறலி பிணங்கல்-சுரும்போடு
அதிரும் புனலூரற்கு ஆரமிழ்தம் அன்றோ
முதிரும் முலையார் முயக்கு."[2]

(புறப்-இருபாற்பெருத்திணை-19)

இதனுள் தலைமகள் இளமை தீர் திறம் வந்தவாறு காண்க.

"ஆண்டலைக் கீன்ற பறழ்மகனே நீயெம்மை
வேண்டுவல் என்று விலக்கினை நின்போல்வார்
தீண்டப் பெறுபவோ மற்று." (கலி-மருதம்-29)

எனவும்,

"உக்கத்து மேலும் நடுஉயர்ந்து வாள்வாய
கொக்குரித்தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லினெஞ்சூன்றும் புறம்புல்லின்
அக்குளுத்துப் புல்லலும் ஆற்றேன் அருளீமோ
பக்கத்துப் புல்லச் சிறிது." (கலி-மருதம்-29)

எனவும் முறையே தலைமகன் தலைமகள் ஆவார் இருவர் இளமை தீர்திறம் வந்தவாறு காண்க.[3]

தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறமாவது, தெளிவு ஒழிந்த காமத்தின் கண்ணே மிகுதலும் என்றவாறு.

இது பெரும்பான்மை தலைமகட்கே உரித்து.

"புரிவுண்ட புணர்ச்சியுள் புல்லாரா மாத்திரை
அருகுவித் தொருவரை அகற்றலில் தெரிவார்கண்
செயநின்ற பண்ணினுள் செவிசுவை கொள்ளாது

---

2 முதிரும்முலையார் என்றது தலைவி இளமை தீர்திறம்.

3 ஆண்தலைப் புள்ளுக்கு ஏற்ற பறழ்த்தலையுடைய மகனே! என்றதால் தலைவன் இள்மை தீர்திறமும் 'கொக்குரித்தன்ன கொடுமடாய்' என்றதால் தலைவி இளமைதீர் திறமும் காண்க.

நயனின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும்
பயனின்று மன்றம்ம காமம் இவள்மன்னும்
ஒண்ணுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்
முள்நுனை தோன்றாமை முறுவல்கொண் டடக்கித்தன்
கண்ணினும் முகத்தினும் நகுபவள் பெண்ணின்றி
யாவரும் தண்குரல் கேட்க நிரைவெண்பல்
மீயுயர் தோன்ற நகாஅநக் காங்கே
பூவுயிர்த் தன்ன புகழ்சால் எழில்உண்கண்
ஆயிதழ் மல்க அழும் ;

ஓஒ ! அழிதகப் பாராதே அல்லல் குறுகினம்
காண்பாம் கனங்குழை பண்பு ;

என்று, எல்லீரும் என்செய்தீர் என்னை நகுதிரோ
நல்ல நகாஅலிர் மற்கொலோ யானுற்ற
அல்லல் உறீஇயான் மாய மலர் மார்பு
புல்லிப் புணரப் பெறின் ;

எல்லா நீ, உற்ற தெவனோமற் றென்றீரேல் எற்சிதை
செய்தான் இவன்என் உற்ற திதுவென
எய்த உரைக்கும் உரனகத் துண்டாயின்
பைதல வாகிப் பசக்குவ மன்னோவென்
நெய்தல் மலரன்ன கண் ;

கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று
நாடுவேன் கண்டனென் சிற்றிலுள் கண்டாங்கே
ஆடையான் மூஉய் அகப்படுப்பேன் சூடிய
காணான் திரிதருங் கொல்லோ மணிமிடற்று
மாண்மலர்க் கொன்றை யவன் ;

தெள்ளியேம் என்றுரைத்துத் தேராது ஒருநிலையே
வள்ளியை ஆகென நெஞ்சை வலியுறீஇ
உள்ளி வருகுவர் கொல்லோ உளைந்தியான்
எள்ளி இருக்குவேன் மற்கொலோ நள்ளிருள்
மாந்தர் கடிகொண்ட கங்குற் கனவினால்
தோன்றினன் ஆகத் தொடுத்தேன்மன் யான்தன்னைப்
பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய
கையுளே மாய்ந்தான் கரந்து.

கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி ஆயின்
அவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை ஆயின் தவிருமென் நெஞ்சத்து
உயிர் திரியா மாட்டிய தீ ;

மையில் சுடரே மலைசேர்தி நீயாயின்
பௌவநீர்த் தோன்றிப் பகல்செய்யு மாத்திரை
கைவிளக் காகத் கதிர்சில தாராய்என்
தொய்யில் சிறைத்தானை தேர்கு ;

சிதைத்தானைச் செய்வ தெவன்கொலோ எம்மை
நயந்து நலஞ்சிதைத் தான் ;

மன்றப் பனைமேல் மலைமாந் தளிரேநீ
தொன்றிவ் உலகத்துக் கேட்டும் அறிதியோ
மென்றோள் ஞெகிழ்த்தான் தகையல்லால் யான்காணேன்
நன்றுதீ தென்று பிற ;

நோயெரி ஆகச் சுடினுஞ் சுழற்றியென்
ஆயிதழ் உள்ளே கரப்பன் கரந்தாங்கே
நோயுறு வெந்நீர் தெளிப்பின் தலைக்கொண்டு
வேவ தளித்திவ் வுலகு
மெலியப் பொறுத்தேன் களைந்தீமின் சான்றீர்
நலிதருங் காமமுங் கௌவையும் என்றிவ்
வலிதின் உயிர்காவாத் தூங்கியாங் கென்னை
நலியும் விழுமம் இரண்டு ;

எனப்பாடி,

இனைந்துநொந் தழுதனள் நினைந்துநீடு உயிர்த்தனள்
எல்லையும் இரவும் கழிந்தவென் றெண்ணி எல்லிரா

நல்கிய கேள்வன் இவன்மன்ற மெல்ல
மணியுட் பரந்தநீர் போலத் துணிபாங்
கலஞ்சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து நலம்பெற்றாள்
நல்லெழின் மார்பனைச் சார்ந்து.'' (கலி-நெய்-25)

மிக்க காமத்துமிடலாவது ஐந்திணைக்கண் நிகழும் காமத்தின் மாறுபட்டு வருவது. அஃதாவது வற்புறுத்துந் துணையின்றிச்

செலவழுங்குதலும், ஆற்றாமை கூறுதலும், இழிந்திரந்து கூறுதலும், இடையூறு கிளத்தலும், அஞ்சிக்கூறுதலும், மனைவி விடுத்தலிற் பிறள்வயிற்சேறலும்; இன்னோரன்ன ஆண்பாற் கிளவியும், முன்னுறச் செப்பலும், பின்னிலை முயறலும், கணவனுள்வழி இரவுத்தலைச்சேறலும், பருவம் மயங்கலும் இன்னோரன்ன பெண்பாற்கிளவியும், குற்றிசையும்; குறுங்கலியும் இன்னோரன்ன பிறவுமாகிய ஒத்த அன்பின் மாறுபட்டு வருவன எல்லாம் கொள்ளப்படும். அவற்றுட் சில வருமாறு :

"நடுங்கி நறுநுதலாள் நன்னலம்பீர் பூப்ப
ஒடுங்கி உயங்கல் ஒழியக்—கடுங்கணை
வில்லேர் உழவர் விடரோங்கு மாமலைச்
செல்லேம் ஒழிக செலவு."

(புறப்-இருபாற்பெருந்திணை-1)

இது செலவழுங்குதல்.

"பணையாய் அறைமுழங்கு பாயருவி நாடன்
பிணையார மார்பம் பிணையத்—துணையாய்க்
கழிகாமம் உய்ப்பக் கனையிருட்கண் செல்வேன்
வழிகாண மின்னுக வான்."

(புறப்-பெருந்திணை-6)

இஃது இரவுத்தலைச்சேறல்

"பெரும்பணை மென்தோள் பிரிந்தார்எம் உள்ளி
வரும்பருவம் அன்றுகொல் ஆம்கொல்—சுரும்பிமிரும்
பூமலி கொன்றை புறவெலாம் பொன்மலரும்
மாமயிலும் ஆலும் மலை."

(புறம். இருபாற்பெருந்திணை-6)

இது பருவமயங்கல். பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க. மெய்ப்பாட்டியலுள் "இன்பத்தை வெறுத்தல்" (மெய்ப்பாடு-22) முதலாக நிகழ்பவை பொருளாக வருங்கிளவியும் இதன் பகுதி யாகக் கொள்க.

## நச்சினார்க்கினியர்

**51. ஏறிய ..........குறிப்பே**

இது முறையானே, இறுதிநின்ற பெருந்திணை யிலக்கணங் கூறுகின்றது.

(இ-ள்) ஏறிய மடற்றிறம் - மடன்மா கூறுதலன்றி மடலேறுதலும் இளமை தீர்திறம்—தலைவற்கு இளையனாகாது ஒத்த பருவத்தாளாதலும்[1] தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் - இருபத்துநான்காம் மெய்ப்பாட்டில் நிகழ்ந்து ஏழாம் அவதி முதலாக வரும் அறிவழிகுணன் உடையளாதலும் ; மிக்க காமத்து மிடலொடு தொகைஇ -காமமிகுதியானே எதிர்ப்பட்டுழி வலிதிற் புணர்ந்த இன்பத்தோடே கூட்டப்பட்டு ; (செப்பிய நான்கும்— உரை) கந்தருவத்துட்பட்டு வழீஇயிற்றாகச்[2] செப்பிய இந் நான்கும் ; பெருந்திணைக் குறிப்பே பெருந்திணைக் கருத்து என்றவாறு

மடன்மா கூறுதல் கைக்கிளையாம் மடற்றிறமென்றதனான் அதன் திறமாகிய வரைபாய்தலுங் கொள்க. இளமைதீர்திறம் என்றதனாற்றலைவன் முதிர்ச்சியும், இருவரும் முதிர்ந்த பருவத்துந் துறவின்பாற் சேறலின்றிக் காமநுகர்தலுங் கொள்க. காமத்து மிகுதிறம் என்றதனாற் சிறுது தேறப்படுதலுங் கொள்க.

இவை கந்தருவத்துட்டாஅ[4] வழீஇயின. இவற்றுள் ஏறிய மடற்றிறமுங் காமத்து மிகுதிறமும் புணர்ச்சிப்பின் நிகழ்வனவாம்,[3] இது, ''மடன்மா கூறுமிடனுமாருண்டே' (தொல்-பொ-கள-11) என்பதனால் ஏறுவலெனக் கூறிவிடாதே ஏறுதலாம்.

சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல்

---

1. ஒத்த பருவத்தளாதல் என்றாலும் காட்டிய உதாரணம் மிக்க பருவத்தளானமைக்கே உண்டு.

2. கந்தருவத்துட்பட்டு வழுவுதல்-ஒத்த அன்பினராய் ஒழுகிப்பின் வேறுபடுதல்

3. காமத்து மிகுதிறம் இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழ்வது என்பதும் மிக்க காமத்துமிடல் திடீரெனக் காம மிகுதியால் எதிர்ப்பட்ட அளவில் புணர்வது ஆதலின் முற்புணர்ச்சியில்லாதது என்பதும் இவர் கருத்துப் போலும். இளம்பூரணர் யாவுமே புணர்ச்சிப் பின்னர் நிகழ்வன என்றார்.

4. கந்தருவத்துட்படாஅ = கந்தருவத்துட்பட்டு.

சான்றவர்க் கொல்லாங் கடனானா விவ்விருந்த
சான்றீர் உமக்கொன் றறிவுறுப்பென் மான்ற
துளியிடை மின்னுற்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டியளிய ளென்
நெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டுந் துஞ்சே
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்

பிணையலங் கண்ணி மிலைந்து மணியர்ப்ப
வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தெ னெவ்வநோய்
தாங்குத றேற்றா விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவென் பாய்மோ நிறுத்து ;

யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்
றேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு ;

உய்யா வருநோய்க் குயவாகு மைய
லுறீஇயா ளீத்தவிம் மா ;
காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ
னாணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு
மாணிழை மாதரா ளேஎரெனக் காமன
தாணையால் வந்த படை ;

காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம்மா ;
அகையெரி யானாதென் னாருயி ரெஞ்சும்
வகையினா லுள்ளஞ் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட நெஞ்சு ;
அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற
நேரிழை யீத்தவிம் மா ;

ஆங்கதை,
யறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ
ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ

ருயர்நிலைப் யுலக முறீஇ யாங்கென்
றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே.'' (கலி-139)

இஃது ஏறிய மடற் றிறம்.

''உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்கலம் புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி
னக்குளுத்துப் புல்லலு மாற்றே னறாளீமோ
பக்கத்துப் புல்லல் சிறிது.'' (கலி-94)

இதனுட், கொக்குரித்தன்ன வென்பதனாற் றோல் திரைந் தமை கூறலின் இளமைதீர்[1] திறமாயிற்று.

''உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க
முளைத்த முறுவலார்க் கெல்லாம்—விளைத்த
பழங்கள் ளனைத்தாய்ப் படுகளி செய்யு
முழங்கு புனலூரன் மூப்பு''

''அரும்பிற்கு முண்டோ வலரது நாற்றம்
பெருந்தோள் விறலி பிணங்கல்—கரும்போ
டதிரும் புனலூரற் காரமிர்த மன்றோ
முதிரு முலையாண் மியக்கு.''

என்பனவும் அது.

''பிரிவுண்ட புணர்ச்சி' என்னும் (25) நெய்தற்பாட்டுக் காமத்து மிகுதிறம் இதனைப் பொருளியலுட் (42) காட்டுதும். ஆண்டோதும் இலக்கணங்களுந் தோன்ற இதனுட் டெளிந்து கூறுவனவும் ஆண்டுக் காண்க.

''ஏஎ யிஃதொத்த னாணிலன் றன்னொடு
மேவேமென் பாரையு மேவினன் கைப்பற்று
மேவினு மேவாக் கடையு மவையெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினெ னெல்லா

---

1. பெண்பாற்கு இளமை தீர்திறம்.

தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று. (கலி-92)

இது மிக்க காமத்துமிடல்.

செப்பிய நான்கெனவே செப்பாதனவாய் அத்துணைக் கந்தருவமாகக்[1] கூறுகின்ற "பின்னர் நான்கும்[2] பெருந்திணை பெறும்" (தொல்-பொ-கள-14) என்ற பெருந்திணையும் நான்கு உளதென்று உணர்க. குறிப்பென்றதனான் அந்நான்கும் பெருந்திணைக்குச் சிறந்தன வெனவும் ஈண்டுக் கூறியன கைக்கிளைக்குச் சிறந்தனவெனவுங் கொள்க.

பாரதியார்

50 ஏறிய ... .. ... ... குறிப்பே

கருத்து: இது, நிறுத்தமுறையானே, எழுதிணைகளுள் இறுதியாக எஞ்சி நின்ற பெருந்திணை இயல் கூறுகின்றது.

பொருள்: ஏறிய மடற்றிறம்—மடலேறுவேன் எனக் கூறுதலோடமையாது, தலைவன் மடலேறுதலும்; இளமை தீர்திறம் இன்பம் துய்த்தற்கு உரிய பருவம் கழிந்த பிறகு எழும் விழைச்சு விருப்பமும்[3], தேறுதலொழிந்த காமத்து மிகு திறம் தெளிய வொண்ணாமல் அறிவழிக்கும் கழி காமமும்; மிக்க காமத்து மிடலொடு தொகைஇ—கரை கடந்த காமத்தால் விரும்பாரை வலிதிற் புணரும் வன்கண்மையொடு கூட்டி; செப்பிய நான்கும் பெருந்திணைக்குறிப்பே—கூறப்பட்ட இந்த நான்கும் புரைபடுகாம இழிவொழுக்கத்தின் வகை குறிப்பனவாகும்.

குறிப்பு: திணை என்பது ஒழுக்கம். இங்குப் 'பெருந்திணை; என்பது குறிப்பால் சிறிய ஒழுக்கம் எனப் பொருள்படும். கழி காமத்தைச் சிறுமை எனக் கூறும் மரபு, "செருக்கும் சினமும்

---

1. அத்துணைக் கந்தருவம் என்ற தொடர் புரியவில்லை. அப்பெருந்திணைக் கந்தருவம் என்ற கருத்துப்போலும். அப்படியாயின் அத்திணைக் கந்தருவம் என்றிருத்தல் வேண்டும்.

2. பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம்.

3. விழைச்சு விருப்பம்—இணை விழைச்சு.

சிறுமையும்'' எனும் குறளில் காமக்குற்றத்தைச் 'சிறுமை' எனலாம் அறிக. அறிவுடை மக்கட்டன்மைக் கமையாத இப்புரை யொழுக்கத்தைப் பெரிய ஒழுக்கம் என்றது, அது ஒழுக்கத்தொடு படாதென்பது குறிக்கும் அவையல் கிளவியாகும். மங்கலமற்றதையும் இடக்கரையும் மறைத்து எதிர்மறைப் பெயரால் வழங்குவது அடிப்பட்ட தமிழ்மரபு. தாலிபெருகிற்று. விளக்கைப் பெருக்கு என்பவற்றுள் பெருமைச் சொல் மறுதலைப் பொருளில் வருவதுபோலவே, பொருந்தாக் காமத்தைப் பெருந்திணை என்பதிலும் பெருமை அடை ஒழுக்கச் சிறுமையைச் சுட்டுவதாகும். எனவே, பெருந்திணை என்பது அவையில் உரைக்க வொண்ணா இழிவொழுக்கத்தை மறைத்துக் கூறும் செய்யுள் வழக்கச் சொல்லாகும்.

பெருந்திணைவகை நான்கனுள், மடலேறுதலும் விரும்பாரை வலிந்து கூடலும் ஆடவர் மாட்டே நிகழும். மடன்மா கூறுதலும் கற்புடை மகளிர்க்குப் பொற்புடை நெறியன்மையின், மடலேறுதல் எஞ்ஞான்றும் அவர்க்கின்மை தெளியப்படும். மிக்க காமத்து மிடல் தம்மின் வலியராய ஆடவர்பால் மெல்லியலார்க்கு ஒல்லா தாகும். இளமைதீர் திறமும் தேறுதலொழிந்த காமமும் இரு பாலார்க்கும் பொதுவாகும்.

(1) ஏறிய மடற்றிறம் பெருந்திணைக் குறிப்பாதற்குச் செய்யுள் :

''மடலே காமந் தந்த தலரே
மிடைபூ வெருக்கி னலர்தந் தன்றே,
இலங்குகதிர் மழுங்கி யெல்விசும்பு படரப்
புலம்புதந் தன்றே புகன்றுசெய் மண்டில
மெல்லாந் தந்ததன் றலையும் பையென
வடந்தை துவலைக் குடம்பைப்
பெடைபுண ரன்றி லியங்குகுர லளைஇக்
கங்குலுங் கையறவு தந்தன்று,
யாங்காகு வென்கொ லளியேன் யானே?'' (நற்-152)

''நானாக நாறு நனைகுழலாள் நல்கித்தன்
பூனாக நேர்வளவும் போகாது - பூணாக
மென்றே னிரண்டாவ துண்டோ மடன்மாமே
னின்றேன் மறுகிடையே நேர்ந்து.''
(திணைமாலை நூற்றைம்பது-16)

"நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்
காமுற்றார் ஏறு மடல்." (குறள்-1133)

'எழின்மருப் பெழில்வேழம்' என்னும் நெய்தற்கலியும் (21) 'சான்றவிர் வாழியோ' என்னும் (22-ஆம்) நெய்தற்கலியும் ஏறியமடற்றிறப் பாக்களாதல் காண்க.

(2) இளமைதீர்திறம் பெருந்திணைக் குறிப்பாதற்குச் செய்யுள்:—

"மின்சாயன் மார்பன குறிநின்றேன் யானாகத்
தீரத்தறைந்த தலையுந்தன் கம்பலுங்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநம்
சேரியிற் போகா முடமுதிர் அவனாங்கே
பாராக் குறழாப் பணியாப் பொழுதன்றி
யாரிவ ணின்றீ ரெனக்கூறி பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது
தையா றம்பலந் தின்றியோ வென்றுதன்
பக்கழித்துக் கொண்டீ யெனத்தரலும். யாதொன்றும்
வாய்வாளே னிற்ப, கடிதகன்று கைம்மாறிக்
கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியா
னேனைப் பிசாசரு ளென்னை நலிதரி
னிவ்வூர்ப் பலிநீ பெறாஅமற் கொள்வேனெனப்
பலவுந் தாங்காது; வாய்பாடி நிற்ப.
முதுபார்ப்பா னஞ்சினனாத லறிந்தியா னெஞ்சா
தொருகை மணற்கொண்டு மேற்றூவக் கண்டே
கடுதரற்றிப் பூச றொடங்கினன், ஆங்கே
யொடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்க
ணிரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோ
ரேதில் குறுநரி பட்டற்றாற் காதலன்
சாட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅ
மாகுல மாகி விளைந்ததை யென்றுந்தன்
வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்[1]
வீழ்க்கை பெருங்கருங் கூத்து."

(குறிஞ்சிக்கலி-29)

---

1. என்றுந்தன் வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான் என்றதால் இளமை தீர்ந்தான் என்பதோடு வாழ்க்கையதுவாகக் கொள்ளுதலால் பல்லாண்டுகளாக அவ்வாழ்க்கையைக் கொண்டவன் என்பதாலும் அவன் இளமைதீர்திறம் பெறப்படும்.

இக்குறிஞ்சிக்கலியுள், 'தீரத்தறைந்த தலையும்' — வைகாண் முதுபகட்டின்' 'முதுபார்ப்பான்'— என வருதலால் இளமை தீர்ந்தான் ஒருவன் இணைவிழைச்சினை மேற்கொண்டான் என்பது புலனாகும்.

(3) தேறுதலொழிந்த காமத்து மிகுதிறம் பெருந்திணைக் குறிப்பாதற்குத், தன்னை விரும்பாப் பிறன் மனையாளைப் பெட்டொழுகும் பேதையான தென்னிலங்கை அரக்கன் காமக் கதை சாலும். இராவணன் தன் காமப்புரையுணர்ந்து தேறாமல் இறக்குமட்டும் உளத்ததனை வளர்த்த பெருந்திணைப் பெற் றியைக் காட்டும் கம்பர் பாட்டுமிங்குக் கருதற்குரியது.

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த திருமேனி
[மேலும் கீழும்
எள்ளிருக்கு மிடனின்றி உயிரிருக்கு மிடனாடியிழைத்த
வாறோ ?
கள்ளிருக்கு மலர்ந்த கூந்தற் சானகியை மனச்சிறையிற்
[பரந்த காதல்
உள்ளிருக்கு மெனக்கருதி உடல்புகுந்து தடவியதோ
[ஒருவன் வாளி''

(4) மிக்க காமத்து மிடல் பெருந்திணைக் குறிப்பாதற்குச் செய்யுள் :-

''என்றவ ளரசன்தன்னை நோக்கலன் இவன் கணார்வஞ்
சென்றமை குறிப்பிற்றேறிக், கூத்தெலா மிறந்த பின்றை
நின்றது மனத்திற் செற்றம், நீங்கித்தன் கோயில் புக்கான்
மன்றல மடந்தை தன்னை வலிதிற்கொண்டொலி கொடா
ரான் . (சிந்தா. காந். 685)

''தேனுடைந் தொழுகுஞ் செவ்வித் தாமரைப் போதுபுல்லி,
ஊனுடை உருவக் காக்கை இதழுகக் குடைந்திட்டாங்கு-
கானுடை மாலைதன்னைக் கட்டியங்காரன் சூழ்ந்து
தானுடை முல்லையெல்லாம் தாதுகப் பறித்திட்டானே.''
(சிந்தா. 50 காந்-686)

55. முன்னைய நான்கும் முன்னதற்கு என்ப (55)

ஆ. மொ. இல.

It is said that the former four belong to the former

இளம்பூரணர்

55. முன்னைய ... ... ... ... கென்ப

இது கைக்கிளைக்குரியதொரு மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முன்னைய நான்கும்—மேற் சொல்லப்பட்ட நான்கி னும் முந்துற்ற நிலைமை நான்கும், முன்னதற்கு என்ப—முற் கூறப்பட்ட கைக்கிளையாம் என்ப.[1]

அவையாவன: ஏறா மடற்றிறம், இளமை தீராத்திறம், தேறுதலொழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாறாகாத்திறம் என்பன.

ஏறா மடற்றிறம் வெளிப்பட இரத்தலாம் இளமை தீராத் திறம் நலம் பாராட்டலாம். தேறுதலொழிந்த காமத்து மிகாத் திறம், புணரா விரக்கமாம். மிக்க காமத்தின் மாறாகாத்திறம், நயப்புறுத்தலாம்.

இவை ஒருவாற்றான் உணர்த்தியவாறு.

"கைக்கிளை செந்திறம் பெருந்திணை நோந்திறம்
அத்திறம் இரண்டும் அகத்திணை மயங்காது
அத்திணை யானே யாத்தனர் புலவர்."

இதனானே கைக்கிளை இன்பம் பயப்ப வருமென்பதூஉம், பெருந்திணை துன்பம் பயப்ப வருமென்பதூஉம் அறிந்து கொள்க.

---

1. முன்னைய என்பதற்கு முன்உள்ள நிகழ்ச்சி எனப் பொருள் கொண்டார். ஏறிய மடற்றிறத்துக்கு முன் உள்ள நிகழ்ச்சி யாவது மடலேறாது வெளிப்பட இரத்தலாம். இப்படிப் பிறவும் கொள்க. ஏறாமடற்றிறம் முதலிய நான்கும் அகன் ஐந்திணையுள் அடங்கு வனவே யன்றிக் கைக்கிளையில் அடங்கா. யாவும் இயற்கைப் புணர்ச்சிப் பின் நிகழ்வன ஆதலின் என்க.

## நச்சினார்க்கினியர்

### 52. முன்னைய ... ... ... ... என்ப

[1]இது முன்னைய மூன்றுங் [2]கைக்கிளைக் குறிப்பே (தொல்-பொ-கள-14) எனக் களவியலுட் கூறுஞ் சிறப்பில்லாக் கைக்கிளைபோலன்றி காமஞ் சாலா இளமையோள்வயிற் கைக்கிளைபோல் இவையுஞ் சிறந்தன. எனவே, எய்தாத தெய்துவித்தது.

(இ-ள்) இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னிகழ்ந்த காட்சியும் ஐயமுந் தெரிதலும் தேறலும் என்ற குறிப்பு நான்கும் நற் காமத்துக்கு இன்றியமையாது வருதலின், முற்கூறிய சிறப்புடைக் கைக்கிளை யாதற்கு உரியவென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

களவியலுட் கூறுங் கைக்கிளை சிறப்பின்மையின் முன்னதற் குரியவெனச் சிறப்பெய்துவித்தார். களவியலுள் 'ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப' (தொல்-பொ-கள-2) என்றது முதலாக இந்நான்குங் கூறுமாறு ஆண்டுணர்க. இவை தலைவி வேட்கைக் குறிப்புத் தன்மே னிகழ்வதனைத் தலைவன் அறிதற்கு முன்னே தன் காதன்மிகுதியாற் கூறுவனவாதலிற் கைக்கிளை யாயிற்று. இவை தலைவற்கே உரிய வென்பது, 'சிறந்துழி யையஞ் சிறந்த தென்ப' (தொல்-பொ-கள-3) என்னும் சூத்திரத்திற் கூறுதும். இவையும் புணர்ச்சி நிமித்தமாய்க் குறிஞ்சியாகாவோ வெனின், காட்சிப்பின் தோன்றிய ஐயமும் ஆராய்ச்சியுந் துணிவும் நன்றெனக் கோடற்கும் அன்றெனக் கோடற்கும் பொதுவாகலின் அவை ஒருதலையாக நிமித்தமாகா; வழிநிலைக் காட்சியே[3] நிமித்தமா மென்றுணர்க.

(52)

---

2. மூன்றாவன ஆசுரம் இராக்கதம் பைசாசம் என்பன.

3. வழி நிலைக்காட்சி. தலைவியின் குறிப்பறிந்த பின்னர்க் காணும்காட்சி. வழிநிலை—பின்னிலை.

பாரதியார்

51. முன்னைய ... ... ... ... என்ப

கருத்து : இது, கைக்கிளை பெருந்திணைகள் ஆகிய இரு சூத்திரங்கட்குமுன், ஐந்திணைகளுள் அடங்காமல் திணைக்கு உரிப்பொருள்களாய் அகப்பகுதியில் வரும் பொது இயல்களாகக் கூறப்பட்ட நான்கும், கைக்கிளை பெருந்திணையாய இரண்டனுள் முன்னதாய கைக்கிளைக்கு உரியவாதல் கூறுகிறது.

பொருள் : முன்னைய நான்கும் மேல் கைக்கிளை பெருந் திணைச் சூத்திரங்கட்கு முன்னே கூறிய (1) நிகழ்ந்தது நினைத்தல் (2) நிகழ்ந்தது கூறி நிலையல் (3) மரபுநிலை திரியாது விரவும் பொருள் விரவல் (4) உள்ளுறை உவமம் திணைபுணர் வகையாதல் என்ற நான்கும் ; முன்னதற்கென்ப—கைக்கிளை பெருந்திணையாகிய இரண்டனுள் முற்கூறிய கைக்கிளைக்காம் எனக் கூறுவர் பொருள் நூற்புலவர்.

குறிப்பு : 'என்ப' என்பதற்கேற்பப் ''பொருள் நூற்புலவர்'' எனும் எழுவாய் அவாய் நிலையாற் கொள்ளப்பட்டது. ''நிகழ்ந்தது நினைத்தல் முதல்'' 'உள்ளுறை உவமம் திணை புணர் வகை' யாதல் வரை கூறப்பட்ட நான்கும் அன்பினைந் திணைகளுக்குப் பொதுவாய்த் திணைக்குரிப் பொருளாய் அமை தலால், அன்பினைந்திணைகளின் இயல்பு கூறும் பகுதிகளின் இறுதியில் அவை அடைவு பெறக் கூறப்பெற்றன. இவை நடுவணைந்திணைகளுக்குச் சிறந்தூரியவாதல் போலவே, புரை, தீர்ந்த செந்திறக் கைக்கிளையின் கண்ணும் வந்த பயிலும்; ஆனால் நோந்திறப் பொருந்தாப் பெருந்திணையின்கண் இவை ஆட்சி பெறா.

தொல்காப்பியர் நூலில் குற்றமற்ற கைக்கிளை ஒன்றே கூறப்படுகிறது. நச்சினார்க்கினியர் கைக்கிளையாகக் கருதும் தமிழ் வழக்கல்லாத தவறுடைய கூட்டமெல்லாம் பெருந்திணை யாகக்கருதலே ஆன்ற மரபாகும். குற்றமற்ற செந்திறக் கைக்கிளையில், தூய ஒருதலைக் காதலுடையாள் 'தருக்கிய புணர்த்துச் சொல்லியின்புறூஉம்' காலத்துத்தன் காதலியைப் பற்றிய முன் நிகழ்ச்சிகள் அவன் நினைதற்கு ஏதுவாதலும் பின் கூறி இன்புறப் பெறுதலும், பிற விரவும் பொருள் விரவலும்,

உள்ளுறை உவமம் ஆளுதலும், இயலியையும் இன்பமும் பயக்கும் நோந்திறப் பெருந்திணையிலோ பழிபடும் முன் நிகழ்ச்சிகளை நினைத்தலும் கூறலும் நேராமையும், நேரின் இடும்பையன்றி இன்பந்தாராமையும் வெளிப்படை. ஆதலால் அவை பெருந் திணைக்குப் பொருந்தாமை ஒருதலை. உள்ளுறை உவமமும் ஒத்த காம ஐந்திணைகளிலும் புரை தீர்ந்த கைக்கிளையிலும் சிறந்து வருதல்போல் பெருந்திணைக்கு மாட்சிப்படாமை எளிதில் தெளியப்படும். அதனால் இச்சூத்திரச் செம்பொருள் மேற் கூறியதே என்பது தேற்றம்.

இனி, இதற்குப் பழைய உரைகாரர் இருவரும் சூத்திரக் கருத்தொடு பொருந்தாது முரண்பட இருவேறு பொருள் கூறுவர். அவருரை பொருந்தாமை யாராய்வாம்.

இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் தரும் பொருளாவது :- "இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழ்ந்த காட்சியும் ஐயமும் தெரிதலும் தேறலும்' என்ற குறிப்பு நான்கும் நற்காமத்துக்கு இன்றியமையாது வருதலின் முற்கூறிய சிறப்புடைக் கைக்கிளை யாதற்குரிய என்று கூறுவர் ஆசிரியர் எ-று. இனி இதன் கீழ் நச்சினார்க்கினியர் கூறும் சில சிறப்புக் குறிப்புக்களும் ஈண்டுக் கவனிக்கத்தக்கன. அவையாவன :- "களவியலிற் கூறும் கைக்கிளை சிறப்பின்மையின் முன்னதற்குரிய எனச் சிறப்பெய்து வித்தார். களவியலுள் 'ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப' என்றது முதலாக இந்நான்கும் கூறுமாறு ஆண்டுணர்க" என்பன.

இவ்வுரைக் கருத்து இச்சூத்திரத்தால் தொல்காப்பியர் சுட்ட நினைத்ததாமா? இங்கு நச்சினார்கினியர் கூறுவது அவருக்கு உடன்பாடாமேல் ஐயமகற்றி அக்கருத்தைப் பொருத்தமாக விளக்கும் சொற்பெய்து சூத்திரிப்பர் அன்றோ? அஃதவர் கருத்தன்மையை ஈண்டும் பிற இடங்களிலும் அவர் சூத்திரச் சொற்போக்கே தெளிய விளங்குகிறது.

முதலில், ஒரே சூத்திரத்தில் ஈரிடத்தில் வரும் 'முன்' என்னும் சொல் அவ்வீரிடத்தும் ஒரேவிதமாகப் பொருள்படவேண்டும். இலக்கண நூலிற் சூத்திரச் சொற்களை எளிதில் பொருள் விளங்கு தற்கு மாறாக மயங்க அமைப்பது மரபன்று. இச்சூத்திரமுதலில்

'முன்னைய நான்கும்' என்பதில் வரும் "முன்" என்பதைக் கீழே அல்லது பின் எனும் பொருள் குறிப்பதாகக் கொண்டு இடத்தால் முன்னே களவியலிற் கூறும் காட்சி முதலிய நான்கும் எனவும், இரண்டாவதாய் "முன்னதற்கென்ப" என வருமிடத்துள்ள 'முன்' என்பதை மேலே அல்லது காலத்தால் முன்னே எனக்கொண்டு, மேற்கூறிய கைக்கிளை பெருந்திணை என்ற இரண்டனுள் கைக்கிளைக்குரிய" எனவும், நச்சினார்க்கினியர் பொருண் முடிவு செய்கின்றார். எனவே, இவ்வொரு சூத்திரத்தில் இருமுறைவரும் "முன்" என்னும் ஒரு சொல்லை - முன்னுக்குப்பின் முரணுவதான இருவேறு பொருளில் இந்நூலார் கூறியதாகக்கொள்ள நேருகிறது.

"ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே"

சூத்திரம் எனவும்,

"முதலும் முடிவும் மாறுகோ ளின்றி
— — — — — —பொருண்மை காட்டி
— — — — — — — — — —
நுண்ணிதின் விளக்களது
நூலெனப் படுவது"

எனவும் நூலுக்கும் நூலினுட் சூத்திரத்திற்கும் (செய்யுளியலில்) இலக்கணம் வகுப்பவரே, தம்மிலக்கணவிதிக்கு மாறாகத் தாமே முன்பின் முரணிப் பொருள்நனி விளங்காது கற்பவர் மயங்குமாறு இச்சூத்திரத்தைத் தமது பெருநூலில் யாத்து வைத்தார் எனக் கொள்ளுவது அவர் நூல் நோக்கிற்கும் சொற்போக்கிற்கும் பொருந்தாது. இஃகு இருமுறை வரும் "முன்" என்னும் சொல்லை ஈரிடத்தும் தெளிவான ஒருபொருள் குறியாமல் மாறான இருவேறு பொருள் படக்கூறி யாரையும் மயங்க வைக்க இந்நூலார் கருதார் என்பதொருதலை.

இனி இரண்டாவதாக, இங்கு "முன்னைய நான்கும்" என வரையறைப்பட்டவை, அடுத்து இவ்வியலில் விளக்கப் பெறாதனவாய்ப், பின்னே வெவ்வேறு பொருள் நுதலிய பல்வேறு சூத்திரமும் ஒத்தும் கடந்து வேறோர் இயலில் வேறு பொருளி டைக் கூறப்போனவற்றைக் குறிக்குமெனில் இங்கு அக்கருத்தைத் தெளிய விளக்கியிருத்தல் வேண்டும். இவ்வியலில் இச்சூத்திரம்

கற்பவரை இனிப் பின் கூறப்போகும் வேறோர் இயலில் இத் தொகையின் வகை நான்கும் கட்டப்படுமெனத் தாம் கூறாமலே எதிர்பார்க்க வைக்கவும், இடையில் வருபவற்றுள் அவை எவை எனத் துணியாமல் மயங்கவைக்கவும் கருதுவரா ? அவ்வாறு மயக்கம்தரும் கருத்தை அவருக்கேற்ற நினைப்பது உரையற மன்று. அண்மையில் வகை விரிகள் கூறப்பெற்று, எளிதில் தெளிவும் துணிவும் தருதற்கு ஏற்றவிட்த்தன்றிப் பிற இடங்களி லெல்லாம் இந்நூலார் வாளாதொகை கூறி அமைவதில்லை. தொகை தரும் இடந்தொறும் அதன் வகையும் விளக்கிச் செல்வதவர் பிறழா முறையாதல் இந்நூல் முழுவதும் காணலாம்.

அதுவேயுமன்றிப், "பின் களவியலிற் குறிக்கப்படுவதாகக் கருதும் ஒரு கைக்கிளை விலக்கி இங்குப் பெரு திணைக்கு முன் விளக்கிய வேறொரு கைக்கிளையைக் குறிப் பதற்கு 'முன்னதற்கென்ப' எனச் சிறப்பெய்துவித்தார்" என்பர் நச்சினார்க்கினியர். அதனை அடுத்துக் "களவியலில் ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப" என்றாது முதலாக இந்நான்கும் கூறுமாறு ஆண்டுணர்க" எனக்கூறி "முன்னைய நான்கும்" எனும் தொடரில் வரும் நான்கன்வகை விவரம் குறியாமல்வாளா தொகை கூறிவிடுத்தார். களவியலில் அச்சூத்திரங்களுக்கு உரைகூறுமிடத்தும் எந்நான்கும் இவையென விளக்கினாரிலர். அங்குத் தொல்காப்பியர் "காட்சி, ஐயம், தெளிவு" என மூன்றே குறிக்கக் காண்கிறோம். நச்சினார்க்கினியர் கூறுமாறு காட்சி-ஐயம் -இரண்டுந்தவிரத் தெரிதல் - தேறல்-என வேறிரண்டு கூட்டி நான்கு பகுதிகள் 'இயற்கைப் புணர்ச்சிக்கும்' தலைவன் தலைவியர் இருவரின் உள்ளவுடம்பாடு அறிய 'நாட்டம் இரண்டும் கூட்டியுரைக்கும் குறிப்புரைக்கும்' முன் நிகழ்வனவாகத் தொல்காப்பியர் கூறினாரிலர். ஆகவே களவியலில் தொல்காப்பியர் மூன்றே இன்றியமையா நற்காம முற்குறிப்பாகக் கூறினராதலால், அவற்றை இங்குக் கைக்கிளைக் குறிப்பாமெனச் சுட்ட நினைப் பின் "முன்னைய மூன்று" மென்னாது "நான்கும்" என முறை யிறந்து கூறியிரார். ஈண்டு நான்கெனத் தெளியக் கூறுதலால், இந்நான்கும் பின், களவியலிற் பேசப்படும் மூன்றல்லாத வேறாதல் வெளிப்படை. இச்சூத்திரத்துத் தொகையென் குறிக்கும் நான்கும் இவையென விளக்கப் பெறாததால், இதனோடியைந்து பொருள் தெளிதற்கு உதவுவதான நான்கன்வகை இச்சூத்திரத்தையடுத்து இவ்வகத்திணை யியலிலேயே விளக்கப் பெற்றிருக்க வேண்டு

மென்பது எளிதில் தெளியப்படும். அவற்றை அறியின், சூத்திரச் செம்பொருளும் உடனறியப் படுவதாகும்.

இவ்வுண்மைகளை உணர்ந்த இளம்பூரணர் "முன்" என்பதற்கு இச்சூத்திரத்தில் ஈரிடத்தில் காலத்தால் முற்கூறப்பட்டதையே அமைத்துக்கூறும் கடன் மேற்கொண்டார்; கொண்டு, இதற்கு முற்கூறிய பெருந்திணைப் பகுதியாகக் காட்டிய நான்கு நிலைகளில் ஒவ்வொன்றின் முன்னிலையும் இதற்கும் பெருந்திணைச் சூத்திரத்திற்கும் முற்கூறிய கைக் கிளைக்குப் பொருந்துமெனப் பொருள் கூறுவர். இவருரை "முன்" என்பதற்கு ஈரிடத்தும் ஓராங்கே நேர்பொருள் கூறும் பெற்றியளவில் குற்ற மற்றது; நான்கெனும் எண்ணுக்கும் பொருந்துவது. எனில், பெருந் திணைப் பகுதிகளே தத்தம் முன்னைய நிலைகளில் கைக்கிளை ஆதற்கமையும் என்பது ஆன்றோர் வழக்கும் சான்றோர் செய் யுளும் தழுவாத முரணாகும். அப் பெருந்திணை நிலைகள் கைக்கிளையாவ தெப்படி என்பதையும் விளக்கிலர். இவர் அவ்வாறு கூறுவது, அதற்குமுன் கூறிய நான்கு அகத்திணைப் பொதுவிலக்கணக் குறிப்புக்களுக்கும் அவற்றின் பின் கூறும் கைக் கிளை, பெருந்திணைகளுக்குமுள்ள இயலியைபும் முரணும் கருதாததால் நேர்ந்ததாகும். அதனால் இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் உரையும், நான்கென்னும் தொகைக்குரிய வகை தேறாமல் கூறியதன்றி, இச்சூத்திரக் கருத்தா காமையொருதலை.

அன்றியும், இளம்பூரணர் கூறியவாறே கொள்ளினும் பெருந்திணைப் பகுதி நான்கன் முன்னிலைகள் கைக்கிளை ஒன்றற்கே அமையுமென்னும் நியதியில்லை. அந்நிலைகள் ஒத்த காமத்திணைகளுக்கே சிறந்துரியன. ஆதலால் "முன்ன தற்கென்ப" எனுந்தொடரை இங்குச் சிறிது முற்கூறிய கைக்கிளை ஒன்றற்கே உரியது போலக் கொள்ளற்கில்லை. மடலேறாமல் 'ஏறுவேன்' எனத் தோழிக்குக்கூறி "வெளிப்பட இரத்தலே— ஏறாமடற்றிறம்" "நலம் பாராட்டலே—இளமை தீராத்திறம்" புணரா இரக்கமே–தேறுதலொழிந்த காமத்து மிகாத்திறம்." "நயப்புறுத்தலே—மிக்க காமத்து மாறாத்திறம்" என அம் முன்னிலை நான்கையும் இளம்பூரணர் இச்சூத்திரச் சிறப்புரை யில் விளக்குகிறார். வெளிப்பட இரத்தலும், நலம் பாராட்டலும், புணரா—இரக்கமும், நயப் புறுத்தலும், ஆய நான்கும் கைக் கிளையினும் ஒத்த காம ஐந்திணைகளுக்கே பெரிதும் சிறப் புரிமை உடையவாகப் பண்டைச் செய்யுள்களில் பயிலப்

பார்க்கிறோம். இந் நூலாரும் ஐந்திணைத் துறைகளை விளக்குமிடத்து இவற்றினையும் ஐந்திணைத் துறைகளோடு இயைத்துக் கூறுகின்றார். ஆகவே, இந்நான்கையும் கைக்கிளைக்குச் சிறந்துரியவாக இங்குக் கொள்வது பொருந்தாது; அது இந் நூற் கருத்துமன்று. அதனாலும் அவருரை இச்சூத்திரப் பொருளாகாது.

இனி, இவ்வியலில் மேற்கூறிய நான்கு அகத்திணைகளின் பொதுவிலக்கணங்கள், இவ்வகத்திணையியலில் விளக்கிய உரிப்பொருளான ஒத்தகாமத்திணை ஐந்திற்கே உரியனவா ? அவற்றின் பின்னர்க்கூறும் திணைகள் இரண்டிற்குந் தொடர்புடையனவா ? எனுமைய மகற்றித் தெளிப்பது இன்றியமையாததாகும். ஆகவே இச்சூத்திரத்தால் இந்நூலார் அவ்வினாக்களுக்குரிய விடை யிறுத்து விளக்கலாயினர், என்பதை இங்குத் தெளிதல் எளிது இதில் ''முன்னதற்கென்ப'' என்பது காலம் பற்றி முன்னதையே குறிப்பதாகக் கொண்டு இதற்கு முற்கூறிய திணையிரண்டனுள் பெருந்திணைக்கு முன்னதான கைக்கிளையைச்சுட்டும் என்று நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் பொருள் காணுதலால், அம்முறையே இச்சூத்திரத்தில் வரும் ''முன்னைய நான்கும்'' என்ற சொற்றொடரும் காலத்தால் இதற்கு முற்பகுதியில் கூறப்பெற்ற நான்கேயாதல் வேண்டும் என்பது தேற்றமாகும். அவ்வாறு கூறிய நான்கு குறிப்புகள் பெருந்திணை கைக்கிளைகளை விளக்கும் இரு சூத்திரங்களுக்கும் முன் கூறப்பெற்றுள. ஆதலால் அவற்றையே இங்கு ''முன்னைய நான்கும்'' என்று சுட்டினர் இந்நூலார் எனத் துணிவதே பொருத்தமாகும். அவற்றின் விவரமும் பொருத்தமும் இனி ஆராய்வோம்.

கைக்கிளை பெருந்திணைகளின் இலக்கணம் கூறும் முன்னும் அன்பினைந்திணைகளின் பொது இலக்கணப் பகுதி கூறி முடிந்த பின்னும், அவ்வைந்திணைகளுக்குப் பெருவரவினவாய் வந்துதவும் நான்கு செய்திகளைப்பற்றி விதிமுகத்தானும் விலக்கு வகையானும் இந்நூலார் விளக்கிச் சில சூத்திரம் யாத்துளர் என மேலே காட்டினோம். அவை,

1. ''நிகழ்ந்தது நினைத்தற் கேதுவாதல்'' (சூத்—43)
2. ''நிகழ்ந்தது கூறி நிலையல்'' (சூத்—44)

3. "மரபுநிலை திரியாது விரவும் பொருள் விரவல்" (சூத்-45)

4. "உள்ளுறை உவமம் ஆட்சி" (சூத்-46 முதல் 49 வரை)

என்ற நான்கும் முன் ஒத்த காமத்திணை ஐந்திற்கும் ஒத்து வழங்கும் பொது இலக்கணங்களாகக் கூறப்பெற்றன இந் நான்கிலக்கணங்களும் அன்பினைந்திணைகளுக்கு உரி வாதலேயன்றி, அவற்றின் பின்கூறிய கைக்கிளைக்கும் ஒத்த உரிமை உடையனவாகும்; பெருந்திணைக்கு அவ்வாறு அமைந்தி ல்லையா என்பதை வரையறுத்து, அச்சூத்திரம் இரண்டிற்கும் பின் புறனடையாக அக்கருத்தை விளக்க இச்சூத்திரம் எழுந்தது. இத்தொடர் பியைபுகளை நன்குணர்தற்கு இவ்வியலில் கூறும் சூத்திரத்தொகை வகைகளின் வைப்புமுறைப் பாகுபாடுகளை உய்த்துணர்தல் அவசியமாகும்.

இவ்வியலில், முதற்சூத்திரத்தால் அகத்திணை ஏழென இந்நூலார் தொகுத்து விளக்கினார். இரண்டாம் சூத்திரத்தால் அகத்திணைகள் ஏழனுள் முதலும் இறுதியும் ஆய கைக்கிளை பெருந்திணையெனக் குறித்த இரண்டும் கழித்து இடை நின்ற ஐந்தும் ஒத்தகாம உரித்திணைகள் என்றும், அவ்வைந்தின் நடுநின்ற பாலையொழிய மற்றைய நான்கும் குறிஞ்சி முதலிய நானிலங்களுக்கும் முறையே சிறப்புடையன என்றும் கூறினார். பிறகு "முதல், கரு, உரி," யெனும் மூன்றாஞ் சூத்திர முதல் 'எஞ்சியோர்க்கும்" எனும் நாற்பத்திரண்டாஞ் சூத்திரம் வரை அந்நடுவணைந்திணைகளின் பாகுபாடுகளும் அவ்வவற்றின் சிறப்பிலக்கணங்களும் வகைபெறக் கூறினார். பிறகு "நிகழ்ந்தது நினைத்தற்கு" எனும் (42-ஆம்) சூத்திர முதல் "ஏனை உவமம்" எனும் (48-ஆம்) சூத்திரம் வரை அவ்வைந்திணை களுக்கும் அமைய வந்து பயிலும் நான்கு பொது இலக்கணங் களைக்கூறி முடித்தார். பிறகு "காமஞ்சாலா" எனும் (49-ஆம்) சூத்திரத்தில் கைக்கிளையையும், அதன் பிறகு "ஏறியமடற்றி றம்" எனும் (50-ஆம்) சூத்திரத்தில் பெருந்திணையையும் விளக்கினார் அவற்றின் பின் "முன்னைய நான்கும்" என்னும் இச்சூத்திரத்தை நிற்க வைத்தார். இவற்றுள் மூன்றாம் சூத்திரத் தால் அன்பினைந்திணைகளும் முதல் கரு உரியென வகைபெற வழங்கும் எனக்கூறி, அவ்வகைகளை விளக்கப் புகுந்தவர் "புணர்தல் பிரிதல்" எனும் 14ஆம் சூத்திரத்தில் உரிப்பொருள்

களை வகுத்து, அதுமுதல் "எஞ்சியோர்க்கும்" எனும் 41 ஆம் சூத்திரம் வரை அவ்வுரிப் பொருள்களுள் ஒவ்வொன்றன் தனிச் சிறப்பிலக்கணங்களையும் அவ்வத்திணையொடு நிரலே வகைபட விளக்கினர்.

இவையெல்லாம் அன்புரித்திணைகள் ஐந்தில் ஒவ்வொன் றற்கே சிறப்புரிமையுடையனவாதல் கூறி, இவற்றின்பின் "நிகழ்ந்தது நினைத்தற்கு" என்பது (சூத்-42) முதல் "ஏனை யுவமம்" என்பது (சூத்-48) வரை ஏழு சூத்திரங்களுள் இறுதி நான்கில் உள்ளுறையுவமம் ஒன்றும், முதல் மூன்று சூத்திரங்களில் தனிவேறு மூன்றுமாக நான்கு பொது இலக்கணங்களை ஒத்த காமத்திணை ஐந்திற்கும் ஒத்த இயைபும் தொடர்பும் உடையன வாகத் தெள்ளிதிற் கொள்ள வைத்தார். இவற்றுள், முதலிரு சூத்திரங்களைப் (சூத்-43-44) பாலைக்கே உரியனபோல உரைகாரர் கூறுவது பொருத்தமற்றதாம்.

இரண்டறி கள்விருங் காத லோளே ;
.............. கான நாறவந்து
நள்ளென் கங்குல் நம்மோ ரன்னள்,
கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்து
..........................................
அமரா முகத்த ளாகித்
தம்மோ ரன்னள் வைகறை யானே". (குறுந்-312)

எனத் தலைவிபால் நிகழ்ச்சி தலைவன் தன்னுள் நினைத்தற்கு ஏதுவானதைக் கூறும் குறுந்தொகை 312 ஆம் பாட்டும்.

"அம்ம வாழி தோழி ....................
மாற்றலம் யாமென மதிப்புக் கூறி
நம்பிரிந் துறைந்தோர், மன்ற நீ
விட்டனை யோஅவ ருற்ற சூளே"

எனமுன் தலைவன் நிகழ்த்தியசூளைத் தோழி தலைவியை நினைக்கச் செய்ததைக் கூறும் ஐங்குறு நூற்றுச் (227 - ஆம்) செய்யுளும் பாலை பற்றிய அல்ல ; ஈரிடத்தும் இவை குறிஞ்சித் திணையில் "நிகழ்ந்ததைப்பின் நினைத்தற்கு ஏது" வானதையே குறித்தன. "மின்னொளிர் அவிரறல்" என்னும் குறிஞ்சிக்கலி (19-ஆம்) பாட்டும் அனையதே. இனி, "தீம்பால் கறந்த

கலமாற்றி'' என வரும் முல்லைக் கலிச் (10-ஆம்) செய்யுளும் ''கொடியவும் கோட்டவும்'' எனவரும் குறிஞ்சிக்கலிச் (18ஆம்) செய்யுளும் தலைவி ''முன்னிகழ்ந்தது கூறி நிலையலை ''உணர்த்துவன ; இவை முறையே முல்லையினும் குறிஞ்சியினும் வந்தன. இவ்வாறே இவ்விரு சூத்திரக் குறிப்புக்களும், உரைகாரர் கூறுமாறு பாலைக்குத் தனியுரிமை கொள்ளாமல், ஐந்திணை அனைத்திற்கும் வந்து பயிலும். 'மரபுநிலை திரியா மாட்சியவாகி விரவும் பொருளும் விரவுவதும்,'' ''உள்ளுறை யுவமம் பயிலுவதும்'', ஒத்த காமத்திணை ஐந்திற்கும் ஒத்த உரிமையோடொன்றிப் பயிலும் என்பதை உரைகாரரும் கூறுகின்றனர். அதனால், அவற்றிற்கு மேற்கோள்மிகையாகும். (51)

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் காமஞ்சாலா இளமையோள்வயிற் கைக்கிளையே யன்றிப் பிறிதும் ஓர் கைக்கிளை உண்டென்கின்றது.

(இ-ள்) களவொழுக்கத்தில் இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னர் நிகழும் நான்கு நிகழ்ச்சிகளும் எழுவகைத் திணைகளுள் முற்பட்டதாகிய கைக்குரிய என்ப நூலோர் என்றவாறு.

எதிர்பாரா நிலையில் ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டுக் காணுதலும், யார் என ஐயப்படுதலும், சில குறிப்புகளால் ஐயம் நீக்குதலும், கண்களின் பார்வைக்குறிப்பால் புணர்ச்சி விருப்பம் தெளிதலும் ஆகிய நான்கும் நிகழ்ந்த பின்னரே புணர்ச்சி நிகழும் ஆதலின் அக்காட்சி, ஐயம், தெரிதல், தேறல் என்னும் நான்கும் தென்பாற்படும் என்னும் ஐயம் தோன்றும் ஏன்எனின் புணர்தல் தொடர்பாகக் குறிஞ்சியொழுக்கம் தொடங்குதலின் குறிஞ்சித் திணை என்பது புணர்ச்சியையே குறித்ததாம். அதனால் அந்நான்கும் தலைவன் கண்ணவாகவே புலனெறிவழக்கம் செய்யப்படுதலின் காமஞ்சாலா இளமையோள் வயிற்கைக் கிளைபோல ஒருமருங்கு பற்றியதாகவே கொண்டு கைக்கிளையின் பாற்படுத்தல் நூலோர் துணிபாயிற்று.

கைக்கிளைமுதலா (1) என்னும் சூத்திரம் தொடங்கி இச்சூத்திரம் வரையும் வாழ்க்கைச்சுருக்கம் கூறப்பட்டது. ஒருவனும் ஒருத்தியும் ஊழ்வயத்தால் எதிர்ப்பட்டுக்கண்டு ஐயுற்றுத் தெரிந்து புணர்ச்சி விருப்புத் தெளிந்து முதலிற் புணர்ந்து பிரிந்து இருந்து இரங்கி ஊடி மீளவும் புணர்ந்து இப்படியே வாழ்க்கை நடத்தி இளமை தீர்ந்து துறவறம் காத்துப்

பயன் எய்துதல் வேண்டும் என்பது வெளிப்படையாகவும் இளமை தீர்ந்தும் புணர்ச்சி விரும்பி யொழுதல் பொருந்தா வொழுக்கமாகும். ஆதலின் அதை விடுத்துத் துறவு கொள்ளல் வேண்டும் என்பதும் குறிப்பதாகவும் கூறப்பட்டன.

**56 நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கம்**
**கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்[1]**
**உரியது ஆகும் என்மனார் புலவர் (56)**

ஆ. மொ. இல.

The poets say that the usage of poets which consists imaginary usage and the factual usage as found in day - to - day life will have 'Kali' and 'Paripadal' as the matter - forms (which are specially suitable for describing the love aspects).

**நம்பி. 2 இல. அக. 378.**

அவைதாம்
புனைந்துரை உலகியல் எனுந்திறம் இரண்டினும்
தொல்லியல் வழாமல் சொல்லப் படுமே.

## இளம்பூரணர்

**56.** நாடக வழக்கினும்...............என்மனார் புலவர்.

இதுவும் அகத்திணைக்கு இன்றியமையாத செய்யுளை வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நாடக வழக்காவது, சுவைபட வருவனவெல்லாம் ஒருங்கு வந்தனவாகத் தொகுத்து கூறுதல். அஃதாவது செல்வத்தானும், குலத்தானும் ஒழுக்கத்தானும், அன்பினானும் ஒத்தார் இருவராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப்போரு மின்றி அடுப்போருமின்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தார் எனவும், பின்னும் அவர்

---

1. பாங்கினும் - நச். பாடம்.

களவொழுக்கம் நடத்தி இலக்கண வகையான் வரைந்தெய்தினார் எனவும், பிறவும் இந்நிகரனவாகிச் சுவைபட வருவனவெல்லாம் ஒருங்கு வந்தனவாகக் கூறுதல்.

உலகியல் வழக்காவது, உலகத்தார் ஒழுகலாற்றோடு[1] ஒத்து வருவது.

பாடல் சான்ற புலன்நெறி வழக்கமாவது, இவ்விருவகை யானும் பாடல் சான்ற கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்க் கூறப்படுகின்ற அகப்பொருள்.[2]

கலியே பரிபாட்டு ஆ இரு பாவினும் உரியது ஆகும் என் மனார் புலவர் என்றது, கலியும் பரிபாடலும் என்னும் இரண்டு பாவிலும் உரிமையுடைத்தாம் என்று உரைப்பர் புலவர் என்றவாறு.

எனவே, இவை இன்றியமையாதன என்றவாறு. ஒழிந்த பாக்கள் இத்துணை அகப்பொருட்கு உரியவாய் வருதலின்றிப் புறப் பொருட்கும் உரியவாய் வருதலின் ஓதாராயினர். புறப் பொருள் உலகியல் பானன்றி வாராமையின் அது நாடக வழக்கம் அன்றாயிற்று. (56)

## நச்சினார்க்கினியர்

53. நாடக.........புலவர்

இது புலனெறி வழக்கம் இன்னதென்பதூஉம், அது நடுவணைந்திணைக்கு உரிமையுடைத்தென்பதூஉம், இன்ன செய்யுட்கு உரித்தென்பதூஉம் உணர்த்துதனுதலிற்று.

---

1. ஒழுகலாறு—நடைமுறை

2 அகப்பொருட் செய்தியாவும் புலனெறி வழக்கிலேயே பாடப்படும் என்பது இவர் கருத்து. புலனெறி வழக்கில் பாடப்படுதலால் கைக்கிளை பெருந்திணைகளும் அகப் பொருளாகும் என்பதும் இவர் கருத்து.

**(இ-ள்)** நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் - புனைந்துரைவகையானும், உலக வழக்கத்தானும்; பாடல் சான்ற புலனெறி வழக்கம் - புலவராற் பாடுதற்கமைந்த புலவராற்று வழக்கம்; கலியே பரிபாட்டு அ இருபாங்கினும் உரியது ஆகும். என்மனார் புலவர் - கலியும் பரிபாடலுமென்கின்ற அவ்விரண்டு கூற்றுச் செய்யுளிடத்தும் நடத்தற்கு உரியதாமென்று கூறுவர் புலவர் என்றவாறு

இவற்றிற்கு உரித்தெனவே, அங்ஙனம் உரித்தன்றிப் புலனெறி வழக்கம் ஒழிந்த பாட்டிற்கும்[1] வருதலும், புலனெறி வழக்கம் அல்லாத பொருள் இவ்விரண்டிற்கும் வாராமையுங் கூறிற்று. இவை[2] தேவபாணிக்கு[3] வருதலுங் கொச்சகக் கலி பொருள் வேறுபடுதலுஞ் செய்யுளியலுள் வரைந்து ஓதுதும் 'மக்கணுதலிய அகனைந்திணையு' மென (தொல்-பொ-அகத்-54) மேல்வரும் அதிகாரத்தானும், இதனை அகத்திணை யியலுள் வைத்தமையானும் அகத்திணையாகிய காமப்பொருளே புலனெறி வழக்கத்திற்குப் பொருளென் றுணர்க.

பாடல் சான்ற என்றதனாற் பாடலுள் அமைந்தவெனவே பாடலுள் அமையாதனவும் உளவென்று கொள்ளவைத்தமையிற் கைக்கிளையும் பெருந்திணையும் பெரும்பான்மையும் உலகியல் பற்றிய புலனெறி வழக்காய்ச் சிறுபான்மை வருமென்று கொள்க. செய்யுளியலுட் கூறிய முறைமையின்றி ஈண்டுக் கலியை முன்னோதியது, கலியெல்லாம் ஐந்திணைப் பொருளாய புலனெறி வழக்கிற் காமமுங், கைக்கிளை பெருந்திணையாகிய உலகியலே பற்றிய புலனெறி வழக்கிற் காமமும் பற்றி வருமென்றற்கும், பரிபாடல் தெய்வ வாழ்த்து உட்படக் காமப்பொருள் குறித்து உலகியலே பற்றி வருமென்றற்கும் என்றுணர்க

ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம் புறமென்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு நெடுந்தொகையும் புறமுங் கீழ்க்கணக்கும் மதுரைக்காஞ்சியும் பட்டினப்பாலையும் என்பன

---

1. வெண்பா ஆசிரியம் வஞ்சி.

2 கலிப்பா, பரிபாடல்.

3. தேவபாணி—கடவுட்பாட்டு.

வற்றுட் காண்க. மருட்பாத் 'தானிதுவென்னுந் தனிநிலை'[1] (தொல்-பொ-செய்-85) இன்மையின் வரைநிலையின்று,

"மனைநெடு வயலை வேழஞ் சுற்றுந்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்னும் யாமே
யல்ல னென்னுமென் றடமென் றோளே" (ஐங்குறு-11)

இதனுள் முதல் கரு வுரிப்பொருளென்ற மூன்றுங் கூறலின் நாடக வழக்குந், தலைவனைத்தலைவி கொடுமைகூறல் உலகிய லாகலின் உலகியல் வழக்கும் உடன்கூறிற்று[2]. இவ்விரண்டுங் கூடிவருதலே பாடலுட் பயின்ற புலனெறி வழக்கமெனப்படும். இவ்விரண்டினும் உலகியல் சிறத்தல் 'உயர்ந்தோர் கிளவி' (தொல்-பொ-பொரு-23) என்னும் பொருளியற் சூத்திரத்தானும் மரபியலானும் பெறுதும்.

"முளிதயிர் பிசைந்த காந்தன் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாக
ரினிதெனக் கணவ னுண்டலி
னுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே"
(குறுந்-197)

இஃது உலகியலே வந்தது.

இனி அவ்வந் நிலத்து மக்களே தலைவராய்க்கால் அவை உலகியலேயாம்.

இனி கைக்கிளையுள் அசுரமாகிய ஏறு கோடற் கைக்கிளை, காமப்பொருளாகிய புலனெறி வழக்கில் வருங்கால், முல்லை நிலத்து ஆயரும் ஆய்ச்சியருங் கந்தருவமாகிய களவொழுக்கம்

---

1. தனிநிலை இன்னபாட்டு இது எனக்கூறப்படும் தனிநிலை வெண்பாவு ஆசிரியமும் சேர்ந்தது மருட்பா ஆதலின் அதற்கெனத்தனிநிலை இல்லை.

2. சிவலிங்கனார் விளக்கம் பார்க்க.

ஒழுகி வரையுங் காலத்து, அந்நிலத்தியல்பு பற்றி ஏறுதழுவி வரைந்து கொள்வரெனப் புலனெறி வழக்காகச் செய்தல் இக் கலிக்குரித்தென்று கோடலும் பாடலுள் அமையாதன என்ற தனாற்[1] கொள்க. அது "மலிதிரையூர்ந்து" என்னும் (4) முல் லைக்கலியுள் "ஆங்கனயர்வர் தழூஉ" என்னுந் துணையும் ஏறு தழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக்கூறிப், "பாடுகம்வம்மின்" என்பதனாற்தலைவனைப் பாடுகம் வாவென் றாட்கு, அவளும் "நெற்றிச்சிவலை மகள்" "ஒருக்கு நாமாடு மகன்" என்பனவாற்றான் அலரச்சம் நீங்கினவாறும், அவன் றான் வருத்தியவாறுங் கூறிப் பாடிய பின்னர்த் தோழி,

"கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
யார்வுற் றெமர் கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூராரை யுச்சி மிதித்து" (கலி 104)

என எமர் கொடை நேர்ந்தாரெனக் கூறியவாறுங் காண்க.

இவ்வாறே இம் முல்லை அகப்பொருளோடு கலந்துவருங் கைக்கிளை பிறவுமுள ; அவையெல்லாம் இதனான் அமைத்துக் கொள்க. புனைந்துரைவகையாற் கூறுபவென்றலிற் புலவர் இல்லனவுங் கூறுபவாலோவெனின், உலகத்தோர்க்கு நன்மை பயத்தற்கு நல்லோர்க்குள்ளன வற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகு தல் அறமெனக்கருதி, அந்நல்லோர்க்குள்ளனவற்றிற் சிறிது இல்லனவுங் கூறுதலன்றி, யாண்டும் எஞ்ஞான்றும் இல்லன கூறாரென்றற்கன்றே நாடகமென்னாது வழக்கென்பாராயிற் றென்பது.

இவ்வதிகாரத்து நாடகவழக்கென்பன, புணர்ச்சி உலகிற்குப் பொதுவாயினும் மலைசார்ந்து நிகழுமென்றுங்,[2] காலம் வரைந் தும்,[3] உயர்ந்தோர் காமத்திற்குரியன[4] வரைந்தும், மெய்ப்பாடு தோன்றப் பிறவாறுங் கூறுஞ் செய்யுள் வழக்கம். இக்கருத்

---

1. பாடல்சான்ற என்றதனால் பாடலுட் சாலாதனவும் உள என்பது பெறப்பட்டமையின் அதனை, பாடலுள் அமையாதன என்றதனால்' என்றார்.
2. அத்திணை-5.
3. கூதிர்யாமம் (7) பனியெதிர்பருவம் (8).
4. பிறப்பேகுடிமை ஆண்மை முதலியன.

தானே 'முதல்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே — நுவலுங் காலை' (தொல்-பொ-அகத்-3) என்று புகுந்தார் இவ்வாசிரியர்.[5]

இப் புலநெறிவழக்கினை இல்ல தினியது, புலவரானாட்டப் பட்ட தென்னாமோவெனின், இல்லதென்று கேட்டோர்க்கு மெய்ப்பாடு பிறந்து இன்பஞ்செய்யா தாகலானும், உடன் கூறிய உலகியல் வழக்கத்தினை ஒழித்தல் வேண்டு மாகலானும், அது பொருந்தாது. அல்லதூஉம் அங்ஙனங்கொண்ட இறையனார் களவியலுள்ளும்.

"வேந்துவினை யியற்கை பார்ப்பார்க் குரித்தே"
(இறையனார்-37)

"அரச ரல்லா வேனை யோர்க்கும்
புரைவ தென்ப வோரிடத் தான"
(இறையனார்-38)

எனவும்,

"வேந்தற் குற்றுழிப் பொருட்பிணிப் பிரிவென்
றாங்கவ் விரண்டு மிழிந்தோர்க் குரிய"
(இறையனார்-39)

எனவும் நான்கு வருணமுங் கூறி, நால்வகைத் தலைமக்களை யும் உணர்த்தலின் இல்லதென்பு தொல்லாசிரியர் தமிழ் வழக்கன்றென மறுக்க, இக்கருத்தானே மேலும் 'மக்கணுதலிய வகனைந் திணையும்' (தொல்-பொ-அகத்-54) என்பர்.

பாரதியார்

52. நாடகவழ ............ புலவர்

கருத்து :- இது, உலகியல் வழக்கொடுபட்டதே புலனெறி வழக்கம் என்பதையும், அன்புத்திணைக்குச் சிறந்துரிய பாட்டு வகையையும் கூறுகிறது.

பொருள் :- நாடக வழக்கினும் - உலகியலை ஒட்டி உயர் குறிக்கோளோடு சுவைபடக் காட்டும். 'பொருநு' வகை மரபு

---

5. சிவலிங்கனார் விளக்கம் பாக்க.

களோடும்; உலகியல் வழக்கினும் - உலக மக்களின் ஒழுக லாற்றொடும்; பாடல் சான்ற புலனெறி வழக்கம் - சிறப்புறப் புலவரால் அமைக்கப்படும் அகத்திணை மரபுகள்; கலியே பரிபாட்டாயிரு பாவினும் - கலியும் பரிபாடலுமாகிய இரு பாவகைகளிலும்; உரியதாகும் - சிறப்புரிமை கொண்டு பயிலும் என்மனார் புலவர் - என்று கூறுவர் பொருள் நூற் புலவர்.

(பொருந் - நடிப்பு: ஒருவர் போல நடிப்பது)

குறிப்பு:- புலவராற் பாடப்பெற்ற அகத்துறை மரபுகள் உலகியலைத் தழுவி அமைவதே இயல்நெறியின் இன்றியமை யாக்குறிக்கோளும் பயனுமாமென்பதை இச்சூத்திரம் வற்புறுத்து கிறது. மக்கள் வாழ்க்கையொடு தொடர்பற்ற புலனெறி வழக்கம் எதுவாயினும் பயனும் சுவையும் பயவாது. அதனால் உலகியல் வழக்கொடு அகத்திணைப் புலனெறி வழக்குத்தழுவி நடக்கும் என இதிற் கூறப்பட்டது.

நாடகம் மக்கள் வாழ்க்கையே உயரிய குறிக்கோளோடு இயைத்துச் சுவைபட நடித்துக் காட்டும் நோக்கிடையதாய் உலகியலொடு ஒன்றுபட்டு ஒழுகுவதே யாமாகலின் உலகியல் வழக்கொடு நாடக வழக்கும் உடன் கூறப்பட்டது. உலகியல் வழக்கு உள்ளவாறுலகத்தார் ஒழுகலாறும் அவ்வாழ்வொழுக்கச் சிறப்பைச் சுவைபட ஆடிக்காட்டுவதே நாடக வழக்காம். ஆதலால் இவ்விரண்டும் மக்களின் வாழ்க்கையொடுபட்ட இயல்புகளையே குறிப்பனவாம். அகத்திணைப் புலனெறி வழக்கம் எல்லாம் மக்கள் வாழ்க்கையின் மெய்யியல்புகளைத் தழுவியே நடத்தல் இன்றியமையாததாதலால், அவ்வாறு புலனெறி வழக்கஞ் செய்தலே தமிழ் மரபென்பதைத் தொல் காப்பியர் இச்சூத்திரத்தால் வலியுறுத்துவர்.

இனி, பலவகைப் பாக்களில் புறத்திணைக்குச் சிறப்பன வும் புறத்திணைக்கும் அகத்திணைக்கும் பொதுவாய் வருவனவு மான வெண்பா அகவல் வஞ்சிகளினும், கலியும் கலியுறுப்புக் கொண்டு நடக்கும் பரிபாட்டுமாகிய இரண்டுமே அகத் திணைக்குச் சிறந்து பயிலும் பெற்றியன. அகத்திற்குரிய பல் வேறுணர்ச்சிகளுக்கேற்பச் செல்வி சிறந்த ஓசை வளமும், உள்ளியன உரைதற்கு வேண்டியாங்கு விரவும் துள்ளல்

தூக்குமுடையன அவ்விருபாக்களுமாதலால், பண்டைத் தமிழ்ப் புலவர் அவற்றை அகத்திணைச்சுரியவாக் கொண்டனர். அதனால் இவ்வியலில் அச்சிறப்புரிமை சுட்டப்பட்டது,

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் புலனெறி வழக்கின் இலக்கணமும் அதுவரும் பாடல்கள் இவை என்பதும் கூறுகின்றது.

(இ-ள்) நாடக வழக்கத்தையும் உலகியல் வழக்கத்தையும் சேர்த்துப் பாடுதல் அமைந்த புலனெறி வழக்கம் என்பது, கலிப்பா பரிபாடற்பா என்னும் அவ்விருவகைப் பாக்களிலும் பாடுதற்குரியதாகும் என்பர் புலவர் என்றவாறு.

நாடக வழக்கு என்பது நேர்க்குநேர் உரையாடலாக அமைவது. உலகவழக்கு என்பது ஒருவர் ஒருவரிடம் கூறுவதாக அமைவது. புலனெறிவழக்கு என்பது நேர்க்கு நேர் உரையாடலும் ஒருவர் ஒருவரிடம் கூறுவதும் ஆகிய இரண்டும் அமைவது, எனவே நாடகச் செய்யுள் உலகியற் செய்யுள் புலனெறி வழக்குச் செய்யுள் எனச் செய்யுள் மூவகைப்படும் என்றார் ஆசிரியர் என்க.

இக்காலத்துள்ள மனோன்மணீயம் விசுவநாதம் போலும் நூல்கள் நாடகச் செய்யுள் நூல்கள். அவற்றின் செய்யுள்கள் நாடகச் செய்யுள்களாம்.

ஐங்குறு நூறு அகநானூறு குறுந்தொகைச் செய்யுள்கள் உலகியற் செய்யுள்களாம்.

கலித்தொகை பரிபாடச்செய்யுள்கள் பல புலனெறி வழக்குச் செய்யுள்களாம்.

கலித்தொகையில் இம் முத்திறச் செய்யுள்களையும் காணலாம்.

'எறித்தருகதிர் தாங்கி' என்னும் பாலைக்கலிப் பாடலில் (9). உடன்போக்கில் சுரவழிச் சென்ற செவிலி அங்குவந்த ஒழுக்கத்து அந்தணரிடம்

அந்தணீர்,

என்மகள் ஒருத்தியும் பிறன்மகன் ஒருவனும்

தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர்
அன்னார் இருவரைக் காணிரோ

என்றுவினவ அதற்கு அவருள் ஒருவர்

காணேம் அல்லேம் கண்டனம் கடத்திடை
மாணெழில் அண்ணலோடு அரும்சுரம் முன்னிய
மாணிழை மகளிர் தாயர்நீர் போல்திர்
பலவுறு நறுஞ்சாந்தம் பருப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செயும்
நினையுங் கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே
..........................................................
இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா ஆறுமற் றதுவே

எனவிடையிறுத்தது நேருக்குநேர் உரையாடலாக அமைந்தது. செவிலி வினாவும் அந்தணர் விடையும் இடையில் யாதோர் இணைப்புச் சொல்லும் இன்றி நேருக்குநேர் அமைந்தன காண்க.

''கயமலருண் கண்ணாய் காணாய்' என்னும் கலிப்பாடல் (குறிஞ்சி-1) உரையாடல் பாங்கில் இன்றித் தோழி தலைவி யிடம் கூறியதாக அமைந்துள்ளது. இது உலகியல் வழக்குச் செய்யுளாம்.

'புரிவுண்ட புணர்ச்சியுள்' என்னும் நெய்தற் கலிப்பாட்டில்' (25) தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறத்தால் தலைவி ஊரவரை நோக்கிப் புலம்புவதும் ஊரவர் கூறுவதும் நேர் உரையாடல்போல் அமைந்தும், அவ்வுரையாடல்களைத் தொகுத்துக் கண்டோர் கூறியதாக முடிவுபெற்றும் இருப்பதால் அப்பாட்டு புலனெறி வழக் குச் செய்யுளாம். 'எனவாங்கு' என்பதுபோலும் தனிச் சொல் லும் சுரிதகமும் உள்ள பாடல்கள் பெரும்பாலும் புலனெறி வழக்குச் செய்யுள்களாகவே அமைந்துள்ளன. 'மலிதிரையூர்ந்து எனும் முல்லைக் கலிப்பாவிலும், (4) அவ்வாறமைந்தமைந்தமை காண்க.

நச்சினார்க்கினியர், 'மனைநெடுவயலை (ஐங்11) என்னும் பாடலைக்காட்டி அதில் ''இதனுள் முதல்கரு உரிப்பொருள்

என்ற மூன்றும் கூறலின் நாடக வழக்கும் தலைவனைத் தலைவி கொடுமை கூறல் உலகியலாகலின், உலகியல் வழக்கும் உடன் கூறிற்று. இவ்விரண்டும் கூடி வருதலே பாடலுட் பயின்ற புல னெறிவழக்கம் எனப்படும்'' என்றார் முதல் கரு உரிப்பொருள்கள் பாடலுள் வருதல் வேண்டும் என்பது, செய்யுட்குரிய அமைப்பாக இலக்கண நூலார் வகுத்ததேயன்றி நாடகத்துக்கென்று அமைத்த தன்று. நாடகவழக்கு நேருக்கு நேர் உரையாடல் நோக்கத் தன்றி முதல் கரு உரியெனும் முப்பொருள் நோக்கத்த அன்று. உரிப்பொருளின்றிச் செய்யுள் இல்லையாதலின் உரிப் பொருளை அவர் கூறியதும் பொருந்தாது. முதல்கரு உரிப் பொருள் என வகுத்தது செய்யுள் வழக்குக்காகவே.

நாடக வழக்காவது 'பொருநு' வழக்கு என்று கூறி அதாவது ஒருவர்போல நடிப்பது என விளக்கம் கூறினார் பாரதியார். நடிப்புப்பற்றிய பேச்சுக்கு இங்கு இடம் இல்லை. நாடக வழக்கு என்பது நாடக நடைமுறை. அது உரையாடலையே குறிக்கும். நடிப்பைக் குறியாது. நடிப்புமுறை இலக்கணமாகும். ஆதலின் பாரதியார் கூற்றுப் பொருந்தாது.

57. மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும் சுட்டி
ஒருவர்ப்[1] பெயர்கொளப் பெறாஅர். (57)

ஆ. மொ. இல.

In the literature of five love-aspects belonging to 'Aham' having people as objects the name of any particular person finds no place.

இளம்பூரணர்

57. மக்கள் நுதலிய...... ......பெறாஅர்.

இது, நடுவணைந்திணைக்குரியதோர் இலக்கணம் உணர்த்து தல் நுதலிற்று.

(இ-ள்) அகன் மக்கள் நுதலிய ஐந்திணையும்-அகத்திணை யுள் கைக்கிளை பெருந்திணை ஒழிந்த ஐந்திற்கும் உரியவாகிய நிலமும் காலமும் கருப்பொருமன்றி மக்களைப்பற்றி வரும்

---

1. ஒருவர்—பாடம்

புணர்தலும் பிரிதலும் இருத்தலும் இரங்கலும் ஊடலும் என்று சொல்லப்பட்ட ஐந்துபொருண்மையும், சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறார் - (அவ்வைந்திணைக் கண்ணும் தலைமகனாகப் புலனெறி வழக்கம் செய்ய வேண்டின்,) நாடன் ஊரன் சேர்ப்பன் என்னும் பொது பெயரானன்றி ஒருவர்க்கு உரித்தாகி வரும் பெயர்[1] கொள்ளப் பெறார் புலவர். (57)

## நச்சினார்க்கினியர்

54. மக்கள் ........பெறாஅர்

இது முற்கூறிய புலநெறி வழக்கிற்குச் சிறந்த ஐந்திணைக் காவதோர் வரையறை கூறுகின்றது.

(இ-ள்) மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும் - மக்களே தலைமக்களாகக் கருதுதற்குரிய நடுவணைந்திணைக் கண்ணும்; சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறார் - திணைப்பெயரால் கூறினன்றி ஒருவனையும் ஒருத்தியையும் விதந்துகூறி, அவரது இயற்பெயர் கொள்ளப்பெறார் என்றவாறு.

இது நாடக வழக்குப்பற்றி விலக்கியது. அவை வெற்பன் துறைவன் கொடிச்சி கிழத்தி யெனவரும். மக்கள் நுதலிய என்பதனானே மக்களல்லாத தேவரும் நரகருந் தலைவராகக் கூறப்படாரெனவும் அகனைந்திணையும் என்றதனானே கைக்கிளையும் பெருந்திணையுஞ் சுட்டி ஒருவர் பெயர் கொண்டுங் கொள்ளாதும் வருமெனவுங் கொள்க. அகனைந்திணையெனவே அகமென்பது நடுவுநின்ற ஐந்திணையாதலிற், கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் புறத்து நிற்றலின் அகப்புறமென்றும் பெயர் பெறுதலும் பெற்றாம்.

---

1. இயற்பெயர் நாடன் ஊடன் என்பன இயற்பெயரல்ல· நிலப்பெயரடியாக வந்தன.

இனி அவை[1] வரையறையுடைமை[2] மேலைச்சூத்திரத்தான் அறிக. "கன்று முண்ணாது கலத்தினும் படாது-நல்லான்றீம் பானிலத்துக்கவினே." இது (குறுந் - 27) வெள்ளி வீதியார் பாட்டு. "மள்ளர் குழீஇய விழவினானும் மகனே" (குறுந்-31) இது காதற்கெடுத்த ஆதிமந்தி பாட்டு. இவை தத்தம் பெயர் கூறிற் புறமாமென்றஞ்சி வாளாது கூறினார்[3]. ஆதிமந்திதன் பெயராலுங் காதலனாகிய ஆட்டனத்தி பெயராலுங் கூறிற் காஞ்சிப்பாற்படும்[5].

"ஆதி மந்திபோல
ஏதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே." (அகம்-236)

எனவும்,

"வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந் திசினால் யானே." (அகம்-147)

எனவும், அகத்திணைக்கட் சாத்துவகையான் வந்தன அன்றித் தலைமை வகையாக வந்தில என்பது.

---

1. அவை—அகன் ஐந்திணைகள்.
2. உரிப்பொருள் தலைவர் அகத்திணைகட்கு ஒருவராதலும் புறத்திணைகளுக்குத் தலைவர் பலராதலும் வரையறை என்பது இவர் அடுத்துவரும் சூத்திரவுரையில் கூறியுள் ளார். தொல்காப்பியர் அவ்வாறு கூறவில்லை. 'அளவுதல்' என்பதால் கொண்டார். "வில்லோன் காலன கழலே தொடியோள் மெல்லடி மேலவும் சிலம்பே" [ ] என்னும் பாடலில் தலைவனும் தலைவியும் உரிப்பொருள் தலைவரா்மை காண்க.
3. வெள்ளி வீதியாரும் ஆதிமந்தியும் புலவராயிருந்து தத்தம் வாழ்க்கையை அப்பாடல்களில் கூறினாராயினும் தத்தம் இயற்பெயரைச் சுட்டாமல் கூறியிருத்தலின் அவர் பாடல்கள் அகப்பாடல்களாயின.
4. காஞ்சித்திணையில் தாபதநிலைத்துறைப்பாற்பட்டுப் புறத்திணையாம்.
5. சார்த்துவகை—உவமையாக எடுத்துச் சார்த்தியவகை.

வருகின்ற (55) சூத்திரத்துப் 'பொருந்தின்' என்னும் இலேசானே இச்சார்த்துவகை கோடும். இது பெயரெனப்பட்ட கருப்பொருளாதலிற்[6] கூற்றிற்கு உரிய தோழியும் பாங்கனும் முதலிய வாயிலோரையும் பொதுப் பெயரானன்றி இயற்பெயர்த் தொடக்கத்தன கூறப்பெறாரென்று கொள்க.

உதாரணம் :-

''முகிழ்முகிழ்த் தேவர வாயினு முலையே,
யரவெயிற் றொடுக்கா மா டஞ்சுதக் கனவே
களவறி வாரா வாயினுங் கண்ணே
நுழைநுதி வேலி னோக்கரி யவ்வே
யிளைய ளாயினு மணங்குதக் கிவளே
மூளையிள நெருப்பின் முதுக்குறைந் தனளே
யதனா, னோயில ளாகுக தில்ல
சாயிறைப் பணைத்தோ ளீன்ற தாயே.''

இது சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாக் கைக்கிளை.

''ஆள்வினை முடித்த வருந்தவ முனிவன்
வேள்வி போற்றிய விராம னவனொடு
மிதிலை மூதூ ரெய்திய ஞான்றே
மதியுடம் பட்ட மடக்கட் சீதை
கடுவிசை வின்ஞா ணடியொலி கேளாக்
கேட்ட பாம்பின் வாட்ட மெய்தித்
துயிலெழுந்து மயங்கின ளதாஅன்று மயிலென
மகிழ் — — — ''

இது சுட்டி ஒருவர் பெயர் கொண்ட கைக்கிளை.[1]

இஃது அசுரமாகலின்[2], முன்னைய மூன்றுங் கைக்கிளை யென்றதனாற் கோடும். ''யாமத்து மெல்லையும்'' (நெய்தற் கலி-22) என்றது சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாப் பெருந்திணை.

---

6. பெயர் என்பது நிலமக்கள் பெயராகும். அதனால் பெயர் என்பது ஈண்டுமக்களைக் குறிக்கும் அகப்பாடலில் மக்கட் பெயர் கூறப்படாதுஎனவே தலைவன் தலைவியர் இயற்பெயரேயன்றித் தோழிபாங்கன் முதலிய அகமாந்தர் பெயரும் இயற்பெயராயின் கூறப்பெறா.

1. இராமன் சீதை எனத் தலைமக்கள் பெயர்வந்த கைக்கிளை.

2. கடுவிசைவில் நாண்ஒலியைச் சீதை கேட்டாள் என்பதால் இராமன் வில்லேற்றம் கொண்ட ஆசுரம் கூறப்பட்டது.

"பூண்டாழ் மார்பிற் பொருப்பிற் கோமான்
பாண்டியன மடமகள் பண்ணமுலைச் சாந்தம்
வேறு தொடங்கிய விசய னெஞ்சத்
தாரமு லாற்றா தை — — —
பொதியிற் சாந்த மெல்லாம் பொருதிரை
முத்தினு முழங்கழற் செந்தீப்
பொத்துவது போலும் புலம்புமுந் துறத்தே."

இது சுட்டி ஒருவர் பெயர்கொண்ட பெருந்திணை[3]

இவை சான்றோர் செய்யுளுட் பெருவரவிற்றின்மையினன்றே ிற்சூத்திரத்து முன்னும் பின்னும்[4] இவற்றை வைத்த தென்பது.

"முட்காற் காரை முதுகனி யேப்பத்
தெறிப்ப விளைந்த தீங்கட்டார
நிறுத்த வாயந் தலைச்செல வுண்டு
பச்சூன் றின்று பைந்நிணம் பெருத்த
வெச்சி வீர்ங்கை விற்புறந் திமிரிப்
புலம்புக் கனனே புல்லணற் காளை
யொருமுறை யுண்ணா வளைப் பெருநிரை
யூர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்குந்
தொடுத லோம்புமதி முதுகட் சாடி
யாதரக் கழுமிய துகளன்
காய்தலு முண்டக் கள்வெய் யோனே." (புறம்-258)

இது வெட்சித்திணை பெயர் கொள்ளாது வந்தது.

"முலைபொழி தீம்பான் மண்சேறு படுப்ப
மலர்தலை யுலக மோம்பு மென்ப
பரிசிலைத் தொண்டைப் பல்லவ னாணையின்
வெட்சித் தாயத்து வில்லே ருழவர்
பொருந்தா வடுகர் முனைச்சுரங்
கடந்து கொண்ட பல்லா னிரையே." (13)

இது வேந்துவிடு தொழிற்கண் வேந்தனைப் பெயர் கூறிற்று[5]. ஒழிந்தனவும் புறந்திணையியலுட் காண்க. (54)

---

3 பாண்டியன் மகள் விசயன் எனப்பெயர் சுட்டப்பட்டன.

4. அகன் ஐந்திணைக்கு முன்னும் அகன் ஐந்திணைக்குப் பின்னும். முன் கூறப்பட்டது கைக்கிளை - பின் கூறப் பட்டது பெருந்திணை.

5. தொண்டைப் பல்லவன் என்பது பெயர்.

பாரதியார்

### 53. மக்கள்..........பெறாஅர்

கருத்து :- இது, அன்பினைந்திணைக்குச் சிறந்த ஒரு மரபு கூறுகிறது.

பொருள் :- மக்கள் நுதலிய அகனைந்திணையும் - மக்கள் மதிக்கும் காதல் கண்ணிய நடுவணைந்திணைகளிலும் ; ஒருவர் சுட்டிப் பெயர் கொளப் பெறாஅர்—தலைமக்கள் தம்முள் யாரும் இயற்பெயர் சுட்டி அகவப்பெயர்.[1]

குறிப்பு :- காதல் கண்ணிய ஐவகை அகவொழுக்கமும் நாண் — தன்னலமறக்கும் அன்பு — காதலாற் றவறுகாணாமடம் — முதலிய சால்புகளாற் சிறந்த மக்கட் தன்மைக்கே இயைவதாக லின். "மக்கள் நுதலிய அகனைந்திணை" எனக்கூறப்பட்டது 'மக்கள் நுதலிய, என்பது மக்கள் தாம் பொருளாகக் கருதிய என விரியும். இனி, மக்கள் என்பதை, மக்கட்டன்மை கட்டுதலாகக் கொண்டு அத்தன்மை நுதலிய எனக் கொள்ளுதலும் ஒன்று.

தலைமக்கள் இருபாலோருள் எவரும் தம்பெயர்சுட்டி அக வப்பெறாராதலின், இருபாற்கு முரித்தாகிய 'ஒருவர்' என்னும் பொதுப் பெயரால் அம்மரபு கூறப்பட்டது

'சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறார்' என்பதனால் அளவளவில்லை அகவிச் சுட்டாத பிறவிடங்களில் தலை மக்கள்பெயர் கூறப்பெறுதல் தவறாகாதென்பதை, இளம்பூரணர் கொண்டபடி இதில் குறிப்பெச்சத்தாற் கொள்ளவிட்டு ஐயத்திற் கிடம் வையாமல், தொல்காப்பியர் அடுத்த சூத்திரத்தில் தெளியக்கூறுவர்[3].

---

1. அகவப்பெறார்—அழைக்கப்பெறார்.
2. உரையாடலில்
3. "சுட்டியொருவர் ........ தெரியக்கூறுவர்" — இப்பகுதி விளக்கம் இல்லை. ஒருவரையொருவர் அழைக்குமிடத் தில் சுட்டிப் பெயர் கூறப்படாது என்பதும் பிறவிடங் களில் கூறப்படும் என்பதும் இவர் கருத்து யாண்டும் சுட்டுதல் இல்லையாதலின் இது பொருந்தாது. 'இளம் பூரணர் கொண்டபடிக்குறிப்பெச்சத்தால் கொள்ளவிட்டு என்றிருப்பதுதவறு. இளம்பூரணர் உரையில் அவ் வாறில்லை.

சிலப்பதிகாரம் சிந்தாமணி போன்ற பண்டைச் செய்யுட்களில், யாண்டும் தலைமக்கள் தம்முள் இயற்பெயர் சுட்டி அகவி அவ்வளவுதல் கூறப்பெறாமையும், அவ்வாறு அளவுதல் குறியாப் பிறவிடங்களில் தலைமக்கள் பெயர் கூறப்பெறுதலும் ஈண்டுக் கருதத்தக்கன.[4]

காதலாற் கலந்தார்க்கு, "ஈருயிரென்பார் இடைதெரியார்" அவர் தம்முள் ஒருயிராக உணர்வாராதலின் அவ்வுணர்ச்சி வயப் பட்டாருள் ஒருவர் ஒருவரை தம்மில் வேறுப்பட்ட பிறர்போலப் பெயர் சுட்டியளவுதல் இருமை நீங்கிய அவர் ஒருமைக் காதலுணர்ச்சியோடு இயைவதன்று; ஆதலின் அவ்வாறு அளவுங்கால் 'என்னுயிர்' 'என் கண்' என்பன போன்ற வேறன்மையை விளக்குந்தற்கிழமைக் காதற் குறியீடுகள் கூறியளவுதலே இயல்பாகும்.

(1) "இவள்வயிற் செலினே யிவற்குடம்பு வறிதே;
இவன்வயிற் செலினே இவட்கும் அற்றே;
காக்கை யிருகணின் ஒருமணி போலக்
குன்றுகெழு நாடற்கும் கொடிச்சிக்கும்
ஒன்றுபோல் மன்னிய சென்றுவா ழுயிரே."

(2) "காணா மரபிற் றுயிரென மொழிவோர்
நாணிலர், மன்ற பொய்மொழிந் தனரே;
யாஅங் காண்டுமெம் அரும்பெற லுயிரே;
சொல்லும், ஆடும், மென்மெல இயலும்,
கணைக்கால் நுணகிய நுசப்பின்
மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே."

என்ற பழம் பாட்டுக்கள் காதலிற் கலந்தாரின் ஒருமை யுணர்ச்சியை வலியுறுத்தும்.

---

4. இப்பகுதிக்கருத்தும் பொருந்தாது. சிலப்பதிகாரம் முதலியன அதன் ஐந்திணை இலக்கியங்கள் அல்ல.

அவ்வாறு ஒன்றுபட்ட காதற்றலை மக்கள் தம்முள் வேறாயினார் போல ஒருவரையொருவர் பெயர்கூறி யளவளாவுதல் தம் காதற் செவ்விக்கியையாதாகலானும், அதுவேயுமன்றி ஒத்த அன்புக்கு இன்றியமையாத நன் மதிப்பைப் பிறர்போல் தம்முள் பெயர் சுட்டி அழைப்பது வளர்க்குமாறில்லை யாகலானும்-தலைப் படுங்கால் ஒன்றிய காதலர் தம் உளத்துவளர்காதல் கமழும் மொழிகளால் ஒருவரையொருவர் பாராட்டுவதன்றிப் பெயர் சுட்டி யளவுதல் மெய்க்காதற் குறியன்றாகலானும், அவ்வுணர்வியலுக் கேற்பப் புலனெறி வழக்கில் தலைமக்கள் ஒருவரையொருவர் அன்பொழுக்கத்தில் தம்முட் பெயர்சுட்டி அளவுதல் மரபன்றென இதில் வற்புறுத்தப்பட்டது

இதுவும் இதனையடுத்த கீழ்ச்சூத்திரமும் அகப்பகுதி அனைத் திலும் தலைமக்கள் பெயர்கூறப் பெறாமையே மரபெனக் கூறுங் குறிக்கோளுடையன போலக்கொண்டு, உரைகாரர் இவ்விரண் டிற்கும் வெவ்வேறு பொருள் கண்டனர். யாண்டும் பெயர் கூறாமையே தொல்காப்பியர் கருத்துமாமேல், "மக்கள் நுதலிய அகனைந்திணையுள், தலைவனும் தலைவியும் பெயர்கூறப் பெறார்" என்று இதனிலும், "அகத்திணை மருங்கில் வழக்கா றில்லை" என்றடுத்த பின்சூத்திரத்திலும் தெளிய விளக்கி விலக்கி யிருப்பர். 'அகத்திணை ஏழனுள்' அல்லது 'அகத்திணைமருங்கில்' என்னாது 'அகனைந்திணையும்" என்றும், 'தலைவனும் தலைவியும் பெயர் கூறப்பெறார்' அல்லது 'யாண்டும் கிழவோர் பெயர் கூறப்பெறார்' என்னாமல், "சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறார்" என்று இச்சூத்திரத்திலும் "அகத்திணை மருங்கில் வழக்காறில்லை" என்னாமல், "அகத்திணை மருங்கின் அளவுத லிலவே" என அடுத்த கீழ்ச் சூத்திரத்திலும் தொல்காப்பியர் கூறிப்போந்ததால், அவர்க்கது கருத்தன்மை தேற்றமாகும்.

(1) ஒத்தகாதற் றலைமக்கள் அன்பளவுதலில் தம்முள் பெயர் சுட்டாராகையால் 'சுட்டி ஒருவர் பெயர்கொளப்பெறார்' என்றும், (2) அவ்வாறு காதலிருவர் தம்முள் ஆதரவுபட்டு அளவுதல் கைக்கிளை பெருந்திணைகளிலின்மையால் அவ்விரண்டையும் விலக்கி, "அகனைந்திணை" என்றெண்குறித்தும், (3) பெயர் சுட்டி 'அளவுதல்' அன்புத்திணை அனைத்திலும் வழக்காறன்மை யால் "அகனைந்திணையும்" என முற்றும்மை கொடுத்தும் இங்குத் தொல்காப்பியர் கூறிய குறிப்புத் தேறற்பாற்று.

தலைமக்கள் தம்முள் அன்பளவுதலில் மட்டும் "சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறார்" எனவும், அவ்வாறு அவருள் அன்பளவு தலின் புறத்தே அகப்பகுதிகளில் ஏற்புடையிடங்களில் பெயர் கூறப்பெறுதல் கடியப்படாதெனவும், முறையே இவ்விரு சூத்தி ரங்களானும் தொல்காப்பியர் விளங்க வைத்தார்.

இனி, இதுவே தமிழ் கூறும் நல்லுலகத்து வழக்கினும் செய்யு ளினும் அடிப்பட்டு வந்த ஆன்றமரபா மென்பது, சான்றோர் செய்யுட்களானும் தமிழ் மக்கள் கையாளும் ஆன்ற வழக்கானும் தேறப்படும்.

சிலப்பதிகாரம் சிந்தாமணி இராமாயணம் போன்ற சான் றோர் செய்யுட்களில் இம்மரபாட்சி கண்டு தெளிக.

"மாசறு பொன்னே, வலம்புரி முத்தே,
காசறு விரையே, கரும்பே, தேனே
அரும்பெறற் பாவாய், ஆருயிர் மருந்தே,
பெருங்குடி வணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே என்கோ?
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ ?
யாழிடைப்பிறவா இசையே என்கோ?
தாழிருங் கூந்தல் தையால்! நின்னை"

என்று சிலப்பதிகாரத்தின் தலைநாட் கூட்டத்துக்குப் பின் தன் தலைவியொடு அளவளாவும் கோவலன் அவள் நலம் பாராட் டும் குறிஞ்சித் திணையில் தலைவி பெயர்சுட்டாமல் அளவுதல், அகனைந்திணையில் தலைமக்கள் அளவளாவுமிடத்து ஒருவர் பெயரை மற்றொருவர் சுட்டாமரபு காட்டும். அஃதல்லாவிடத்துப் பெயர் சுட்டும் வழக்குண்மையை,

"ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வானின் மகனே யாகி
வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்பச்
சூழ்கழல் மன்னா! நின்னகர் புகுந்திங்
கென்காற் சிலம்பு பகர்தல் வேண்டி நின்பால்

கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி,
கண்ணகி என்பது என்பெயரே''

எனக் கண்ணகி தென்னன் முன்கூறுதலால் அறிக. இவ்வடிகளில் தலை மக்கள் இருவர் பெயருமே கூறப்பெறுதலும் அறிக.

இனி, தமிழகத்தில் செய்யுள் வழக்கேயன்றி உலகியல் வழக்கிலும் இம்மரபுண்மை, பண்டை மரபழித்துப் பெண்டிரை யிழித்துமகிழ் பிறநாகரிகம் புகுந்த பிற்காலத்தமிழகத்திற் போலாது, அடிப்பட்ட பழந்தமிழ் மரபு பல வழுவாமற் பேணும் ஈழத்தில் இற்றை ஞான்றும் காணப்படும். நேரிற் பெயர் சுட்டாமை பெண்டிர்க்குப் போலவே ஆடவர்க்கும் உரித்தாய்க் கணவனும் மனைவி பெயர் சுட்டி அளவா வழக்கும், ஒருதலையாக இருபாலோரும் பன்மைக்குரிய இருபாற் பொதுச் சொற்களால் பேணிப் பேசித் தம்முள் அளவுதலும், தம்முள் அளவளவா இடங்களில் ஒப்ப இருபாலோரும் ஏற்புழி ஒருவர் பெயரை மற்றவர் கூறலும், ஈழத்தமிழருள் இன்றும் வழங்கக் காண்பாம். சிங்களர் முதலிய அந்நாட்டுப் பிறமக்களுள் என்றும் இம்மரபின்மையால், இது தமிழர் ஆண்டுத் தம்மொடு கொடு போய்க் கையாளும் பழமரமேயாதல் வேண்டும். (53)

**58. புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே. (54)**

ஆ.மொ.இல.

The mentioning of any particular person by name may take place in 'Puram' only which may form part of 'Ahaththinai' which will not have names directly mentioned.

## இளம்பூரணர்

**58 புறத்திணை மருங்கின் .........இலவே.**

**இஃது எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.**

(இ-ள்) புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது ஒருவர் பெயர் புறத்திணை மருங்கிற் பொருந்தினல்லது, அகத்திணை

மருங்கின் அளவுதல் இல—அகத்திணை மருங்கின் வருதல் இல்லை. (ஏகாரம் ஈற்றசை) (58)

இதனாற் சொல்லியது, ஒருவர்க்குரித்தாகி வரும் பெயர் அகத்திணை பற்றி வரும் கைக்கிளை பெருந்திணையினும் வரப் பெறாது என்பதூஉம், புறத்திணையுள் வரும் என்பதூஉம், ஆண்டும் பாடாண் பாட்டுக் காமம் பொருளாகவரின் அவ்வழி வருஉம் என்பதூஉம் கூறியவாறு. இதனான் அகப்பொருள் ஒருவரைச் சாராது பொதுப்பட வருமென்பது கொள்க.*

நச்சினார்க்கினியர்

**55. புறத்திணை......... .. இலவே.**

இது புறத்திணைக்குத் தலைவர் ஒருவராதலும் பலராதலும் உரிப்பொருட்குத் தலைவர் பலராகாமையுங் கூறலின், எய்தாத தெய்துவித்து எய்தியது விலக்கிற்று.[1]

(இ-ள்) அகத்திணை மருங்கிற் பொருந்தின் - ஒருவனையும் ஒருத்தியையும் விதந்து கூறும் இயற்பெயர் அகத்திணைக் கண்ணே வந்து பொருந்துமாயின்; புறத்திணை அளவுதல் மருங்கின் அல்லது இல-ஆண்டும் புறத்திணை கலத்தலிடத்தின் அல்லது வருதலில்லை என்றவாறு.

---

* கைக்கிளை பெருந்திணைகள் புறமாகாது அகப்புறமாதலின் அவற்றிலும் சுட்டியொருவர் பெயர் வராது என்பது இவர் கருத்து. புறத்தில்தான் காமப்பகுதி வருமிடங்களில் இயற்பெயர் சுட்டி வரலாம் என்பர்.

1\. இதுகாறும் புறத்திணை பற்றிய பேச்சு இன்மையின் புறத்திணைத் தலைவர் பலராகலாம் என்பது எய்தவில்லை. அதை இச்சூத்திரத்தான் எய்துவித்தார். இதுகாறும் அகத்திணைப்பேச்சே நிகழ்ந்து வருதலின் அகத்திணைக்குத் தலைவர் பலராகலாம் என்பது எய்தியது; பலராகார் ஒருவரேயாவர் என இச்சூத்திரம் கூறலின் எய்தியது விலக்கினார். இவர் இவ்வாறு கூறியது இவர் உரையில் எழுதியது கொண்டேயாம். சூத்திரத்தில் ஒரு குறிப்பும் இல்லை.

எனவே, புறத்திணை கருப்பொருளாயும், அதுதான் உவமமாயும் அகத்திணையுட் கலக்குமென்பதூஉம் இதனானே விரித்தாராயிற்று அளவுமெனவே ஒரு செய்யுட் கண்ணும் அப் புறத்திணையாகிய இயற்பெயர்களுஞ் சிறப்புப் பெயர்களும் ஒன்றேயன்றிப் பலவும் வருதலுங் கொள்க. ஒருவரென்பது அதிகாரப்பட்டமையின் அகத்திற்கு வரும் உரிப்பொருட்பெயர் ஒன்றுதல் கொள்க.

உதாரணம் :- "வண்டுபடத் ததைந்த" என்னும் (1) அகப் பாட்டினுள் "முருகனற்போர் நெடுவேளாவி யாங்கண்" எனவே புறத்திணைத்தலைவன் இயற்பெயர் ஒன்றே வந்தவாறும் அவன் நிலக் கருப்பொருளாய் அகத்திற்கு வந்தவாறும், உரிப் பொருட் டலைவன் ஒருவனேயானவாறுங் காண்க. "எவ்[illegible]ந்த வறுமையர் பாணர், பூவில் வறுந்தலைபோலப் புல்[illegible]" (குறுந்-19) என்பது கருப்பொருளுவமமாய் வந்தது.

"கேள்கே டூன்றவும்" என்னும் (39) அகப்பாட்டுப் புறத் திணைத் தலைவர் பலராய் அகத்திணைக்கண் அளவி வந்தது. புறத்திணைக்கண் இயற்பெயர் அளவிவரும் என்பதனானே, "முரசுகடிப்பிகுப்பவும் வால்வளை துவைப்பவும்" என்னும் (158) புறப்பாட்டு "எழுவர் மாய்ந்த பின்றை" எனப் புறத்திணைத் தலைவர் [1]பலராய் வந்தது. பிறவும் இவ்வாறு வருவன இதனான் அமைக்க.

உதாரணம்

"ஏறும் வருந்தின ஆயரும் புண்கூர்ந்தார்
நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு."

(கலி-101)

பொருந்தின் எனவே, தானுந் தன்னொடு பொருந்துவதூஉம் என இரண்டாக்கிச் சார்த்துவகையான் வரும் பெயர்க்குங்கொள்க.

---

1. புறத்திணைத் தலைவர் எழுவர் இல்லை. அப்பாடல் தலைவன் ஒருவனே ( ) அவனால் கொல்லப் பட்டவர் எழுவர் ஆதலின் அவரைப் புறத்திணைத் தலைவர் என்றால் பொருந்தாது.

நாடக வழக்கினுளது முன்னர்ச் சூத்திரத்துட் காட்டினாம். பெயர்கள் பலவாதலின் இல[2]வெனப் பன்மை கூறினார்.

(55)

பாரதியார்

**54. புறத்திணை..............இலவே**

கருத்து : இது மேலதற்கோர் புறனடையாய், எய்தாதது எய்துவித்தது.

பொருள் :- புறத்திணை மருங்கிற் பொருந்தினல்லது - (சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறுதல்) மேற்சூத்திரத்திற் கூறியாங்குத் தலைமக்கள் தம்முள் அளவளவாப் பிறவிடங் களில் ஐந்திணைப் புறனாய் அமைவதல்லால் ; அகத்திணை மருங்கில் அளவுதல் இல-அகவொழுக்கத்தில் அவர் தம்முள் அளவளவலில் இல்லை.

குறிப்பு :- "சுட்டியொருவர் பெயர்கொளப் பெறுதல்" என்னும் எழுவாய் மேற்சூத்திரத்தின்று தொடர்பு பற்றி வருவிக் கப்பட்டது இனி 'அளவுதலையே' எழுவாயாக்கி "பெயர் சுட்டி அளவுதல் இல" என முடிப்பினும் அமையும்.

அகனைந்திணையில் தலைமக்கள் தம்முள் இயற்பெயர் சுட்டி அளவளாவல் மரபன்றென முற்சூத்திரத்திற் கூறப்பட்டது. எனவே, அளவளாவல் அல்லாத அன்பினைந்திணை கூறுமிடங் களில் தலைமக்கள் பெயர்கொளப் பெறுதல் கடியப்படுமோ எனும் ஐயம் நீக்கற்கு இச்சூத்திரம் எழுந்தமையால், இது முன்னதற்குப் புறனடையாயிற்று. இவ்வாறு காதலர் தம்முள் அளவளவுதல் ஒழிந்த ஏனை அன்பினைந்திணை அகப்பகுதி களில் அவர் பெயர் சுட்டப் பெறுதலும் ஒருவர் பெயரை மற்றவர் கூறுதலும் இழுக்கன்று. இவ்வுண்மையை,

"அரிமா சுமந்த அமளிமே லானைத்
திருமா வளவனெனத் தேறேன்,—திருமார்பின்

---

2. இன்று என ஒருமையாற் கூறாது இல எனப்பன்மையாற் கூறினார்.

மானமா லென்றே தொழுதேன், தொழுதகைப்
போனவா பெய்த வளை ''

என்னும் பட்டினப் பாலைத் தலைவனின் இயற்பெயர் சுட்டும் அகத்துறை வெண்பாவும்,

''நெடுவரைச் சந்தன நெஞ்சங் குளிர்ப்பப்
படும்டும் பாம்பேர் மருங்குல் —இடுகொடி
ஓடிய மார்பன் உயர்நல் லியக்கோடன்
சூடிய கண்ணி சுடும்.''

என்னும் ஓய்மா நாட்டு நல்லியக்கோடன் இயற்பெயர் சுட்டும் பழைய வெண்பாவும் வலியுறுத்தும். இவ்விரண்டிடத்தும் தலைவி தலைவன் பெயர் கூறுதல் காண்க.

''தூஉஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்தது கொல்
பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான் கொல்?
மாஅ மிசையான்கொல்? நன்னன் நறுநுதலார்
மாஅமை யெல்லாம் பசப்பு.''

என்னும் பழைய வெண்பாவிலும் அகத்துறையில் தலைவன் பெயர்சுட்டுதல் காண்க.

இவை கைக்கிளை பாக்களாதலிற் பெயர் கூறப்பெற்றது என்பார்க்கு, பெண்பாற் கைக்கிளை பிற்காலப் பிழை வழக்காவதன்றிப் பண்டைப்புலவர் கொண்ட ஆன்ற வழக்கன்மையானும், தொல்காப்பியர் கைக்கிளையை ஆடவர்க்கே அமைத்துப்பெண்டிரின் ஒரு தலைக்காமம் முதலிய மற்றனைத்தையும் பெருந்திணையிலடக்கி யமைவாராதலானும், இப்பழைய வெண்பாக்கள் அன்பினைந்திணைத்துறையே கூறுவனவாமெனக் காட்டி மறுக்க மேலும், இதில், ''ஐந்திணைமருங்'' கென்னாது, 'அகத்திணை மருங்கில்'[1] என்றதனால், இந்நூற்பாக் கட்டளைக்குக் கைக்கிளை விலக்கின்மையாலுமவர் கூற்றுப் பொருந்தாதென்க

1 ஐந்திணை என்றால் குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்பனவற்றைக்குறிக்கும். அகத்திணை என்றால் அவற்றுடன் கைக்கிளை பெருந்திணைகளையும் குறிக்கும்.

அகநானூறு கலித்தொகை முதலிய அகத்தொகைச் செய்யுட்களில் யாண்டும் தலைமக்கள் பெயர் கூறப்படாமை கொண்டு, அகத்திணைப் பகுதி கூறும் செய்யுட்களில் இயற்பெயர்ச்சுட்டு யாண்டும் எஞ்ஞான்றும் கடியப்படுமெனக் கூறுவாருமுளர், யாரையுங் குறியாமல் அகத்துறைகளின் செவ்வியைப் புனைந்துரைப்பதையே குறிக்கோளாகக்கொண்ட தனிச்செய்யுட் டொகுதிகளில் எவர்பெயரும் சுட்டற்கிடமின்மை வெளிப்படை ; அது கொண்டு சிறப்புடையோரின் சீரிய காதல் பாடும் புலவர் தம் செய்யுட்களில் யாண்டும் தலைமக்கள் பெயரே கூறலாகாதென விலக்குதல் அமைவுடைத்தன்று ; அவ்விலக்கிற்கு முந்தியும் வழக்கும் இல்லை. பெயர்கூறும் வழக்குண்மை முன்சூத்திர உரையிற் காட்டியன கண்டுணர்க.

இனி, தக்கோர் தலைவராய் அவர் காதற் செவ்வியே பொருளாக வரும் பாட்டெல்லாம் அவர்பெயர் குறிப்பதனால் மட்டும் அகமாகாதென மறுக்குமாறில்லை. புறத்துறைப் பகுதி மிகுதியுடைய பட்டினப்பாலை காதல் கண்ணிய முடிவு ஒன்று கொண்டு அக நூலாகக் கருதப்படுங்கால், காதலொழுக்கமே பொருளாய் வரும் செய்யுளில் காதலர் பெயர் குறிக்கப்படுவதால் மட்டும் அதைப் புறமென விலக்க விதி யாதும் யாண்டும் தொல்காப்பியர் கூறவில்லை. ஆதலால் பெயர்சுட்டுதல் ஒன்று கொண்டு கோவலன்—கண்ணகி, கோவலன் — மாதவி, மணிமேகலை — உதயகுமரன், சீதை—இராமன், சீவகன்—மனைவியர் முதலியோர் காதல் கூறும் பகுதிகளெல்லாம் புறத்திணையின் பாற்படுமென்பது பொருந்தாக் கூற்றாகும்.

இனி, 'புறத்தகம்' என்றொன்றின்மையான், 'அகப்புறம்' என்றொன்றமைப்பது தொல்காப்பியர் யாண்டும் கருதாப் புதிய திணையாமாதலானும், அஃதமைவதன்று.

இச்சூத்திரத்தில், 'புறத்திணை' என்பதை மேற்சூத்திரத்திற் கூறிய அளவளவும் "அகனைந்திணைப்புறம்" என மாற்றிப் பொருள்கோடல் வேண்டும். அல்லாக்கால் அகமல்லாப்புறத்திணைக்குரியதனை மயக்கத்திற்கிடமாகத் தொல்காப்பியர் இவ்வகத்திணையியலில் மறந்து கூறினாரென அவருக்கு மற்றொன்று விரித்த குற்றம் சுமத்துவதாக முடியும். ஆதலால் அஃது அவர் கருத்தன்மை அறிக.

இனி, இங்குத் தொல்காப்பியர் புறத்திணையையே சுட்டுவ தாகக் கொள்ளின், அளவளாவிடத்து அகத்திணையுள்ளும் பெயர் சுட்டல் அமையுமென ஐயமகற்றக் கருதி, அது கூறுமிச் சூத்திரத்தில் தலைமக்கள் சுட்டிப் பெயர்கொளப்பெறுதல் புறத்திணைக்கண் கடியப்படாதென்பதையும் "ஒன்றென முடித் தல், தன்னின முடித்தல்" எனுமுத்திகளால் ஈண்டு உடன் கூறினார் என அமைத்தல் வேண்டும்.

ஆகவே, அன்பினைந்திணை மருங்கினும் தலைமக்கள் தம்முள் அளவளவுதல் கூறுமிடத்து மட்டும் ஒருவரை ஒருவர் பெயர் சுட்டல் கடியப்படும் என்பதும், அவ்வாறு அளவுதலின் புறத்து ஐந்தகத்திணைகளிலும், அவற்றின் புறம்பே கைக்கிளை பெருந்திணை என்னும் அகப்பகுதிகளிலும் புறத்திணையில் மக்களின் தூய காதல் கண்ணிய பாடாண் பகுதிக்கண்ணும், அவ்வாறு பெயர் சுட்டுதல் கடிதலில்லையென்பதும், இதுவே அவர்காலப் புலனெறி வழக்காமென்பதும் இவ்விரு சூத்திரங் களாலும் அம்மரபுகளைத் தொல்காப்பியர் விளங்க வைத்தார் என்பது தேற்றம்.

இஃது, அகனைந்திணையேயன்றி இயற்பெயர் சுட்டிக்கூறப் படாதன பிறவுமுள வென்பதும், சுட்டிக் கூறப்படுவன இவை யென்பதும் கூறுகின்றது.

(இ-ள்) புறத்திணையாகிய பாடாண்டிணையைச் சார்ந்து வரும் கைக்கிளை பெருந்திணைகளில் இயற்பெயர் பொருந்தி வரலாமல்லது அகத்திணையைச் சார்ந்து வரும் கைக்கிளை பெருந்திணைகளிலும் அவ்வியற் பெயர் கலந்து வருதல் இல்லை என்பதாம்.

அகத்திணை மருங்கினும் எனவரும் இறந்தது தழீஇய எச்ச வும்மை விகாரத்தாற்றொக்கது.

ஈண்டுமருங்கு என்பது கைக்கிளை பெருந்திணை. கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய் என்னும் முதல் நூற்பாவில் நடுவணைந்திணைக்கு முன்னும் பின்னுமாய இருமருங்கும் கைக் கிளை பெருந்திணைகள் கூறப்பட்டிருத்தலால் அவ்விரண்டனை யும் மருங்கு என ஆசிரியர் குறித்துள்ளார் மேலே.

அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும் (அகத்-53) என்னும் நூற்பாவில் இவ்விரண்டனையும் புறம் என்றதனையும் நோக்குக. மேலும்,

வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்
மரீஇய மருங்கின் உரித்தென மொழிப
(பொருளியல் நூற்பா-17)

மெய்ப்பொருள் மருங்கின் வைத்தனர் வழியே.
(புறத்-நூற்பா-32)

என்னும் நூற்பாக்களிலும் ஆசிரியர் இக்கைக்கிளை, பெருந் திணைகளை மருங்கெனக் கூறுதல் காண்க. எனவே, அகத் துறைப் பாடல்களெல்லாம் அகனைந்திணை, அகத்தைச் சார்ந்து வரும் கைக்கிளை, பெருந்திணை என மூன்று பிரிவினுள் அடங்குமென்பதும், அகனைந்திணையிலும் அகத்தைச் சார்ந்த கைக்கிளை, பெருந்திணைகளிலும் இயற்பெயர் சுட்டிக் கூறலா காதென்பதும் புறத்தைச் சார்ந்த கைக்கிளை பெருந்திணைகளில் இயற்பெயர் சுட்டிக் கூறப்படலாம் என்பதும் இவ்விரண்டு நூற் பாக்களால் ஆசிரியர் வரையறுத்துக் கூறினாரெனக் கொள்ள லாம். (54)

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் எய்தாதது எய்துவித்தலும் எய்தியது இகந்து படாமற் காத்தலும் நுதலுகிறது.

(இ-ள்) சுட்டி ஒருவர் பெயர் கூறப்படுதல் புறத்திணைச் செய்யுளில் பொருந்திவருமேயல்லது அகத்திணைச் செய்யுளில் பொருந்தி வருதல் இல்லை என்றவாறு.

'அகத்திணை மருங்கில் அளவுதல் இலவே' என்றதனால் அகத்திணை மருங்கின் அளவிவரின் அது புறத்திணையேயாம் என்பது கூறினாராகக் கொள்க.

புறத்திணைக்குப் பொருந்தும் என்பது எய்தாதது எய்து வித்தல்; அகத்திணை மருங்கின் அளவுதல் இல என்றது முன் சூத்திரத்து "அகன் ஐந்திணையுள் சுட்டியொருவர் பெயர் கொளப் பெறார்" என எய்தியதைத் தவறாமல் காத்ததாம்.

இவ்விரு சூத்திரங்களாற் சொல்லியது அகப்பாடற் செய்யுள் செய்வோர் குறிப்பிட்ட ஒருவர் பெயரால் செய்தலாகாது; பொதுப் பெயராலேயே செய்தல் வேண்டும் என்பதாம்.

அகத்திணையியல் உரைவளம் முற்றும்.

## சுருக்க விளக்கம்

அகத், அகத்திணை — அகத்திணையியல்

அகநா, அகம்—அகநானூறு

அகப் — அகப்பொருள்

அடிக்—அடிக்குறிப்பு

அத்தியூர்க்கோவை

அம்பி, அம்பிகா—அம்பிகாபதிக் கோவை

ஆசாரக்—ஆசாரக்கோவை

இ.வி.—இலக்கண விளக்கம்

இறை, இறைஅக-இறையனார் அகப்பொருள்

இறை.கள—இறையனார் களவியல்

எ.டு.—எடுத்துக்காட்டு

எ.று.—என்றவாறு

ஐங், ஐங்குறு—ஐங்குறு நூறு

ஐந்.எழு—ஐந்திணை எழுபது

ஐந். ஐம்—ஐந்திணை ஐம்பது

கப்பற்—கப்பற் கோவை

கலி, கலித்—கலித்தொகை

கல்—கல்லாடம், மயிலேறும் பெருமாள்பிள்ளை உரை

தஞ்சைவா—தஞ்சைவாணன் கோவை

தனிப்—தனிப்பாடல்

திணைமாலை—திணைமாலை நூற்றைம்பது.

திணைமொழி—திணைமொழி ஐம்பது.

திருக்கோவையார்

திருப்பதிக்கோவை

திருவருட்பா, இங்கிதமாலை

திருவாரூர்க் கோவை

திருவெங்கைக் கோவை

தொல்—தொல்காப்பியம்

அகத்—அகத்திணையியல்

(இ இளம்—இளம்பூரணம்

கள, களவு—களவியல்

கற், கற்பு—கற்பியல்

கிளவி—கிளவியாக்கம்

செய், செய்யு—செய்யுளியல்

புறத்—புறத்திணையியல்

(பே) பேர்—பேராசிரியம்

பொருள்—பொருளதிகாரம்

பொருளி—பொருளியல்

மெய்—மெய்ப்பாட்டியல்

குணநாற்பது

குறள்—திருக்குறள்

குறுந் —குறுந்தொகை

சி. பா—சிறப்புப்பாயிரம்

சிலப் - சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவை,

படர்க்கைபரவல்

கானல் வரி

சிற்றகத்தியம்

சீவகசிந்தாமணி

சூ—சூத்திரம்

செயிற்றியம்

செய், செய்யு —செய்யுளியல்

சேயொளி மருட்பா

தகடூர்—தகடூர் யாத்திரை

கா —காஞ்சி

காஞ்—காஞ்சிப்படலம்

கை —கைக்கிளைப்படலம்

தும்—தும்பைப்படலம்

பா —பாடாண்டிணை

பெருந் —பெருந்திணைப்படலம்

முல்—முல்லை

வஞ்—வஞ்சிப்படலம்

வா—வாகைப்படலம்

வெட்—வெட்சிப்படலம்

பு.வெ.நொச் —நொச்சிப்படலம்

புற, புறத் —புறத்திரட்டு

புறம்—புறநானூறு

பெரியபுராணம்

(ந), ந, நச், —நச்சினார்க்கினியம்

நம்பி, நம்பியகப்-நம்பியகப் பொருள்

நற், நற்றி —நற்றிணை

நாலடியார்

நூ நூற்பா

நெல்லைக் கோவை

பரி—பரிமேலழகர்

பரி. திரட்டு —பரிபாடல் திரட்டு

பன்னிருபடலம்

பாண்டிக்கோவை

பாரதம்

(பி.ம்) —பிறபாடம்

பு.வெ.—புறப்பொருள் வெண்பா மாலை

உழி—உழிஞைப்படலம்

கரந்தை—கரந்தைப்படலம்

பெருங்கதை

பெரும்பொருள் விளக்கம்

பெரும் பொருளகம்

பொ, பொரு, —பொருளதிகாரம்

மதுரைக்காஞ்சி

மதுரைக்கோவை

மயூரகிரிக்கோவை

மாறனகப்பொருள்

முதுமொழிக்காஞ்சி

முத்துவீரியம்

பொருளியல்

முத்தொள்ளாயிரம்

மேற்—மேற்கோள்

யா.வி—யாப்பருங்கல விருத்தி

# பிழைத் திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 13 | விளக்கப் | விளக்கம் |
| 3 | 30 | மக்கட்குரியா | மக்கட்குரிய |
| 5 | 5 | 3 | 8 |
| 5 | 18 | தாமதப் | தாபதப் |
| 5 | 27 | அகத்திணையிலானும் | அகத்திணையியலானும் |
| 6 | 21 | உரைகின்ற | உரைக்கின்ற |
| 7 | 2 | எல்லா பொருட்கும் | எல்லாப் பொருட்டும் |
| 7 | 15 | பொள் | பொருள் |
| 9 | 1 | கிளமை | கிளைமை |
| 13 | 1 | இவ்வோத்துக்கள் | இவ்வோத்துகள் |
| 13 | 15 | நடுவணைந்தினை | நடுவணைந்திணை |
| 16 | 14 | மருதம்-பெருந்திணை | மருதம்-நெய்தல்-பெருந் திணை |
| 16 | 23 | காமப் பிறக்கும் | காமம் பிறக்கும் |
| 17 | 3 | சிறப்புயையு | சிறப்பியையு |
| 17 | 10 | நானிலங்களிலங்களி லடங்காத | நானிலங்களிலடங்காத |
| 17 | 23 | ஐயந்தனியல்பும் | ஐந்தனியல்பும் |
| 19 | 16 | தோற்றமாகும் | தேற்றமாகும் |
| 20 | 21 | கூறப்பட்டன | கூறப்பட்டனர் |
| 21 | 14 | அன்பினாய் | அன்பினராய் |
| 21 | 23 | ஐந்திணை தலைவர் | ஐந்திணைத் தலைவர் |
| 21 | 24 | அன்பினாய் | அன்பினராய் |
| 25 | 24 | இருத்ததற்கும் | இருத்தற்கும் |
| 26 | 28 | போலதானும் | போலத்தானும் |
| 27 | 16 | நெய்தலென திணைக் குரிய | நெய்தலெனத் திணைக் குரிய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 31 | 18 | மொரே | மொரோ |
| 36 | 21 | புழனம் | பழனம் |
| 37 | 24 | இறந்தன | சிறந்தன |
| 42 | 15 | என்றும் | என்னும் |
| 45 | 21 | மேவிய | பேய |
| 47 | 18 | அகச்சிறப்பு | அச்சிறப்பு |
| 48 | 17 | த்ழீஇ | தழீஇ |
| 50 | 22 | மழைவளந்தவிக்குப் | மழைவளந்தருவிக்கும் |
| 54 | 9 | முல்லையொழுக்கம் முதலியவற்றால் என்பது | நீக்குதல் |
| 54 | 12 | பெரும்பான்மையாவும் | பெரும்பான்மையாகவு |
| 58 | 25 | அளவு | களவு |
| 69 | | சூ. 8 | சூ. 10 |
| 75 | 17 | இடக்கை | கிடக்கை |
| 79 | | சூ. 9 | சூ. 11 |
| 79 | 22 | 9 வைகறை விடியல் மருதம் | நீக்குதல் |
| 84 | 8 | முதிர்வேனிவிற் | முதிர்வேனிலிற் |
| 84 | 28 | நுலைக்கும் | நிலைக்கும் |
| 85 | | பின்பனிதானும் உரித்து எனமொழிப | அகத்திணையியல் |
| 85 | 9 | நடுவுநிலைத்திண் யானது | நடுவுநிலைத்திணையானது |
| 86 | 23 | அம்பனையகத்து | அம்மனையகத்து |
| 86 | 25 | மனைவி' | நீக்குதல் |
| 97 | 33 | பிரிவென | பிரிவென்பன |
| 117 | 27 | உணர்த்ததோ | உணர்த்தாதோ |
| 117 | 19 | (     ) | (15) |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 117 | 22 | சேர்ந்திருந்தாலோ | சேர்ந்திருத்தலோ |
| 124 | 27 | மயங்குதற்ச் | மயங்குதற்குச் |
| 130 | 1 | பிரியாசென்றிருத்தலும் | பிரியாதென்றிருத்தலும் |
| 138 | 13 | தேறுபல் | தேறுதல் |
| 138 | 13 | மிகுதியமும் | மிகுதிறமும் |
| 139 | 16 | மாலைக் | பாலைக் |
| 140 | 28 | தோணவந்தொலைய | தோணலந்தொலைய |
| 144 | 25 | 'பாடட் | பாடலுட் |
| 156 | 15 | எந்நிப | எந்நி |
| 157 | 18 | ஆற்லைப்பறையும் | ஆறலைப்பறையும் |
| 171 | 23 | செற்றா | செற்றார் |
| 192 | 9 | புலம்புனைக் | புலம்புமனைக் |
| 192 | 16 | நீந்தோர் | நீத்தோர் |
| 192 | 20 | கொண்கலும் | கொண்கனும் |
| 198 | 21 | அகத்திணைகு | அகத்திணைக்கு |
| 200 | 18 | பெருந்திணைப்பாற்படு | பெருந்திணைப்பாற்படும் |
| 223 | 16 | தானே சேரலும் | தானே சேறலும் |
| 224 | 1 | சிதனி | சிவணி |
| 224 | 25 | போக்கோ | போர்க்கோ |
| 224 | 29 | அந்தனர் | அந்தணர் |
| 238 | 24 | வேரென்பர் | தேவரென்பர் |
| 246 | 2 | யொழுகுபர் | யொழுகுவர் |
| 292 | 8 | வரிப்புளை | வரிப்புனை |
| 304 | 3 | பேணாடு | பேணாரு |
| 383 | 5 | இறப்பினின்று | சிறப்பினின்று |
| 383 | 13 | பிரித்துக் கூட்டு | பிரித்துக் கூட்டுக |
| 416 | 20 | இளையையோன் | இளமையோள் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 416 | 22 | புணர்த்து | புணர்த்துச் |
| 422 | 14 | தலம் | நலம் |
| 423 | 6 | எனலாம் | எனலால் |
| 423 | 25 | குறிப்பே'' | குறிப்பே'' என |
| 448 | 17 | கைக்குரிய | கைக்கிளைக்குரிய |
| 448 | 23 | தென்பாற்படும் | எதன்பாற்படும் |
| 449 | 2 | விரும்பியொழுதல் | விரும்பியொழுகுதல் |
| 464 | 28 | அதன் | அகன் |

# பயன்பெற்ற நூல்கள்

1. இலக்கண விளக்கம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1973.

2. இறையனார் அகப்பொருள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1953.

3. தமிழ்நெறி விளக்கம், (பதி.) உ. வே. சாமிநாதையர், உ.வே.சா. நூல்நிலைய வெளியீடு, சென்னை, 1947.

4. தொல்காப்பியப் பொருட்படலம், அகத்திணையியல், நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், நாவலர் புத்தக நிலையம், மதுரை, 1972 (மூன்றாம் பதிப்பு).

5. தொல்காப்பியம் - பொருளதிகாரம், இளம்பூரணம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை, 1953.

6. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - முதற்பாகம், நச்சினார்க்கினியம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1935.

7. தொன்னூல் விளக்கம், (பதி.) டாக்டர்ச.வே. சுப்பிரமணியன், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1978.

8. நம்பி அகப்பொருள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1966.

9. முத்துவீரியம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1972.

# சூத்திர முதற்குறிப்பகராதி

(எண். பக்க எண்)

# சொல் தொடர் அகராதி

(எண். பக்க எண்)

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | மு. வ. புதினங்களில் தமிழ் தமிழினம் | ... 20-00 |
| 2. | தமிழகக் கலைச் செல்வங்கள் | ... 50-00 |
| 3. | கிறித்தவமும் தமிழகமும் | ... 15-00 |
| 4. | தமிழில் அறிவியல் : அன்றும் இன்றும் | ... 25-00 |
| 5. | நாமக்கல் கவிஞர் கவிதைகள் தேசீயம் காந்தியம் | ... 16-00 |
| 6. | இதழாளர் ஆதித்தனார் | ... 26-00 |
| 7. | சமயச் சொல்லகராதி | ... 35-00 |
| 8. | தொல்காப்பியம்—உரியியல் | ... 20-00 |
| 9. | மங்கலதேவி கண்ணகி கோட்டம் | ... 15-00 |
| 10. | தமிழில் கதைப்பாடல் | ... 25-00 |
| 11. | வாத்திய மரபு | ... 20-00 |
| 12. | குத்பு. நாயகம் ஆய்வுரை | ... 15-00 |
| 13. | உ. வே சா. ஒரு தமிழ் வாழ்வு | ... 15-00 |
| 14. | தமிழ் தந்த வ. உ. சி. | ... 15-00 |
| 15. | தொல்காப்பியம் சொல்லதிகாரம்—எச்சவியல் | ... 45-00 |
| 16. | மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை | ... 15-00 |
| 17. | உலக முதன்மொழி தமிழ் | ... 12-00 |
| 18. | மகாமதிப்பாவலர் | ... 11-00 |
| 19. | பாவாணர் ஆய்வு நெறி | ... 22-00 |
| 20. | செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார் | ... 15-00 |
| 21. | மருந்து செய்முறைகள் | ... 45-00 |
| 22. | அகலமும் ஆழமும் | ... 12-00 |
| 23. | தமிழ் நாவல் (அகர வரிசை) | ... 40-00 |
| 24. | தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் | ... 35-00 |
| 25. | எண்பத்திரண்டில் தமிழ் | ... 90-00 |
| 26. | நெல்லை மாவட்ட நாட்டுப்புறத்தெய்வங்கள் | ... 15-00 |
| 27. | செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | ... 25-00 |
| 28. | விவிலியம்—திருக்குறள்—சைவசித்தாந்தம் —ஓர் ஒப்பாய்வு | ... 20-00 |
| 29. | டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | ... 10-00 |
| 30. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு | ... 10-00 |
| 31. | பாவாணரும் தனித்தமிழும் | ... 50-00 |
| 32. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்—தொகுதி 2 | ... 22-00 |
| 33. | தமிழர் இசை | ... 70-00 |
| 34. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | ... 12-00 |
| 35. | தமிழ் இலக்கியக் கொள்கை—தொகுதி 9 | ... 20-00 |
| 36. | தொல்காப்பியம்—வினையியல் | ... 20-00 |
| 37. | தன்வந்தரி குழந்தை வாகடம் | ... 14-00 |
| 38. | தொல்காப்பியம்—பெயரியல் | ... 12-00 |
| 39. | தொல்காப்பியம்—விளிமரபு | ... 6-00 |
| 40. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | ... 12-00 |
| 41. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்—தொகுதி 1 | ... 12-00 |
| 42. | உ. வே. சா சங்க இலக்கிய பதிப்புகள் | ... 10-00 |
| 43. | இஸ்லாம் வளர்த்த தமிழ் | ... 15-00 |
| 44. | திராவிட மொழி இலக்கியங்கள் | ... 35-00 |
| 45. | தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | ... 12-00 |
| 46. | Tamilnadu Bengal Cultural Relations | ... 35-00 |
| 47. | Tamil Verse in Translation | ... 40-00 |
| 48. | Education&Vocation (Heritage of the Tamils) | ... 50-00 |
| 49. | Tolkappiyam—(Phonology & Morphology) | ... 25-00 |
| 50. | Heritage of the Tamils—Temple Arts | ... 50-00 |
| 51. | Karaikkal Ammaiyar | ... 6-00 |
| 52. | A Tamil Reader Vol. 1&2 | ... 65-00 |
| 53. | பண்டைத்தமிழர் தொழில்கள் | ... 45-00 |